ஸ்ரீ

# ரமண ஞான போதம்

ஒன்பதாம் பாகம்

# உபதேச விளக்கம்

## (மூன்றும் பிரிவு)

ஸ்ரீ முருகனார்

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

ஸ்ரீ

# ரமண ஞான போதம்

## ஒன்பதாம் பாகம்

## உபதேச விளக்கம்

(மூன்றும் பிரிவு)


இயற்றியவர்

ஸ்ரீ முருகனார்



பதிப்பாளர்

ஸ்ரீ ரமண கேந்திரம்—புது தில்லி

1 9 9 6

கிடைக்குமிடம்:—

ஸ்ரீ ரமணாச்ரமம் புத்தக சாலை,
திருவண்ணாமலை-606 603, தமிழ் நாடு.

Ramana Kendra,
8, Institutional Area,
Lodi Road, New Delhi-110 003.

Sri Arunachalaramana Nilayam,
11, Sri Ramana Nagar,
Tiruvannamalai-606 603, Tamil Nadu.

Ramana Kendra,
No. 11, C. P. Ramaswami Iyer Road,
Madras-600 018.

Ramana Maharshi Centre for Learning,
40/41, II-Cross, Lower Palace Orchards,
Bangalore-560 003.

**விலை ரூ. 10**

மத்திய அரசின் உதவி பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது.

Published with the Financial Assistance from the
Government of India, Ministry of Education &
Social Welfare (Dept. of Education.)

This book has been published on the paper supplied
by the Government of India at concessional rates.

அச்சிட்டோர்:
விநாயக ஃபைன் ஆர்ட் பிரிண்டர்ஸ்,
163, வெள்ளாளத் தெரு, சென்னை-600 084.

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

## பதிப்புரை

ஸ்ரீ ரமண திருவருள், இவ்வொன்பதாம் பாகத்துடன் ஸ்ரீ முருகனாரின் 'ஸ்ரீ ரமண ஞானபோதம்' என்ற பெருநூலின் பதிப்பை நிறைவு செய்கிறது. இப்பெருநூல் உண்மையை உணர விரும்பும் தமிழறிந்த பக்குவிகளுக்கு மிகவும் உன்னத பொக்கிஷமாகும். அதுமட்டுமன்றி அனைத்தும் பாடல்வடிவில் உள்ளதால் பல நூற்றாண்டுகள் கழித்தும் படிக்கக்கூடியவர்கள் உள்ளத்தில் நல்ல தாக்கத்தையும் பொருள் திரிபின்றி 'உள்ளதை உள்ளபடி உணர' உதவும் என்பது திண்ணம்.

இத்திருவருட் கைங்கரியத்திற்கு உதவியவர்களுள் முக்கியமாக ஸ்ரீ சாது ஓம் அவர்களும் திரு. Dr. K. சுவாமிநாதனும் (ரமண கேந்திரா, டில்லி) உடலுடன் நம்மிடை இல்லையாயினும், அவர்களுடைய உண்மையான ரமண அன்பு உண்முகத்தில் ஊக்குவித்து ரமண அன்பர்களுக்கு கலங்கரை விளக்கமாக இந்நூல் வடிவில் என்றென்றும் நிலைத்து நிற்கும்.

ஸ்ரீ முருகனாரின் சீரிய நண்பர் திரு S. சீனிவாச ராவ், விநாயகா பைன் ஆர்ட் பிரிண்டர்ஸ், தனது குடும்பத்தில் ஏற்பட்ட பல்வேறு இழப்புக்களையும் பொருட்படுத்தாது தாம் 1978ம் ஆண்டு தொடங்கிய இத்திருப்பணியை 1996ம் ஆண்டு முடித்து ஸ்ரீ முருகனாரின் நட்புக்கு இலக்கணமாய்த் திகழ்கிறார். அவருடைய பணி மிகவும் பாராட்டற்குரியது.

திரு சாது ஓம் அவர்களின் தேகமறைவிற்குப்பின் இந்நூலின் ஐந்து முதல் ஒன்பது பாகங்களும் வெளிவர உதவிய அவரது அன்பர்கள் திரு. Prof. K. சுப்ரமணியன், திரு. கணேச பாஸ்கரன், திரு. கோவிந்தராஜன், திரு. N. சங்கரன், திரு. மைக்கேல் ஜேம்ஸ் ஆகியோர்க்கும் தில்லி ரமண கேந்திரத்தின் நன்றி உரித்தாகுக.

**ரமண கேந்திரம்**
புது டில்லி

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

## முன்னுரை

உபதேச விளக்கம், மூன்றும் பாகமாகிய இந்நூலோடு **'ஸ்ரீ ரமண ஞான போதம்'** என்ற இப்பெரு நூலின் பதிப்பு (ஒன்பது பாகங்கள்) ஸ்ரீ பகவான் திருவருளால் நிறைவு செய்யப்பட்டு ஸ்ரீ பகவானின் அருணாசலபிரவேச நூற்றாண்டு சமயம் சமர்ப் பிக்கப்படுகிறது.

இக்கடைசி பாகமாகிய உபதேச விளக்கம், மூன்றும் பாகத்தில் தெய்வமாலை, பாதமாலை, சரணத் திருவகவல், மற்றும் ஸ்ரீ முருகனாரின் ஆயுட்காலத்தில் இயற்றிய, ஆனால் அச்சுப் பிரதியாகாத அனைத்துப் பாக்களும், உரை நடைகளும் தரப் பட்டுள்ளன.

**பாதமாலை :**

இப்பிரிவில் சாதகனுக்குத் தேவையான பல உளவுகள், உபாயங்கள், உபதேசங்கள் சுருக்கமாக, எளிய நடையில் கிடைக்கின்றன. சிறிது பார்ப்போம்.

நாள் கோள் :

(i) நன்றுசெயற் கேற்றமிக நல்லநா ளாய்ந்தறிந்தால்
இன்றுபோ லென்றுமே யில்லையெனும் பாதம். (295)

(ii) என்றுமே யில்லாத நாளையெனும் பொய்ந்நாளை
என்றுமே விட்டறிதி யின்றை,யெனும் பாதம். (216)

(iii) காலமே நின்சொரூப மாகக் கடவதாற்
காலநினை வேயுனக்குக் காலனெனும் பாதம். (217)

உலக விவகாரங்கள் :

(i) உறவிவ் வுலகோ டுதாசீன மன்றிப்
பிறவா ரெழுகிலுறும் பீழையெனும் பாதம். (2292)

(ii) பார்வழிபோ யோடிப் பதையாதே நெஞ்சத்து
நேர்வழிநீ யோடியடை நிம்மதியென் பாதம். (452)

(iii) இன்பமுறற் கேதுவா வின்னென்றை நாடளவும்
இன்பமுனக் கின்றெனநன் றெச்சரிக்கும் பாதம்.
(1176)

(iv) வேண்டா விருப்பொடுநன் றுற்றலினு மிக்குயர்வு
வேண்டா ததனையற விட்டொழிவென் பாதம் (214)

(v) என்னென்ன யாவ ரியம்பினுமே நன்றுநன்றென்
றன்னவற்றுக் கெல்லாம் தலையசைக்கும் பாதம்.
(549)

(vi) அமைதியை யல்லா லவாவி மற்றென்றை
யமைவரக் கேட்ட வனர்த்தமென் பாதம். (436)

(vii) கருத்தமைதி யீதலே கர்த்தனரு ளன்றிப்
பொருத்துவதன் றெண்ணியதன் பூர்த்தியெனும்
பாதம் (2194)

(viii) நியதியன்றி யாது நிகழ்வதன்று மாந்த
ரயர்தியுற்று மாழ்க லவலமெனும் பாதம். (2070)

(ix) எனக்கன்றி யான்படைத்த விவ்வுலக பாரம்
நினக்கென்ன வந்த நினைப்பெனக்கேள் பாதம்.
(235)

மனம் :

(i) மனத்தைப் பொருளா மதித்துப் போராடா
தினைத்தெனவுள் ளோர்ந்திடலஃ தின்றுமென் பாதம்.
(2094)

(ii) நினைவே குறைவை நிகழ்விப்ப தாலந்
நினைவற்ற மோனமே நிறைவென்னும் பாதம். (1119)

இறை :

(i) அருள்வடிவாப் பூஜைக் கருகதையா மீசன்
குருவடிவாக் கொண்டதிருக் கோலமெனும் பாதம்.
(665)

(ii) உருவமுண் டாயினிறைக் குண்மையிலே யஃது
குருவுருவே யாநான் குறிக்கொண்ட பாதம். (2704)

(iii) இறைவனையே யன்றிமற் றேதிலரை நம்பிற்
பொறையிழந்து சிந்தை புலம்புவரென் பாதம்.
(1970)

(iv) அகநோக்கா லுன்னை யகலாமை நானுன்
புறநோக்கா லெங்ஙன் புலப்படுமென் பாதம். (600)

பொருள்குவிந்து எளிய நடையில் அமைந்துள்ள இவ்வீரடி பாதமாலை அன்பர்களுக்கு நல்ல உபதேச ரத்தினங்களாக உள்ளத்துக்கு ஒளி காட்டும்.

**சரணத் திருவகவல் :**

முன்பே ஸ்ரீ ரமண சரணப்பல்லாண்டில் வெளிவந்த இத்திருவகவல் ஸ்ரீ முருகனாரால் பின்னர் விரிவாக்கப்பட்டு தற்போது வெளியிடப்படுகிறது சிறிது பார்ப்போம்.

சரணாகதி :

எங்ஙனே யென்னை யியக்கத் திருவுளம்
அங்ஙனே யென்னை யிசைத்தாள் சரணம்
எதுநீ யருளுதி யென்பொருட் டாக
அதுவே யடியே னபீட்டஞ் சரணம். (505-508)

இறை பணி நிற்றல் :

நிகழ்வுறற் பால நிகழ்ந்திட லன்றி
நிகழ்தற்பா லல்ல நிகழவே மாட்டா
நியதிப் படியே நிகழவிட் டுன்றுள்
அயர்தியுற் றுய்த்த லறிவாஞ் சரணம். (1145-1148)

திருவடி நீழல் :

கலங்குவிக் கேபக் கருத்துள் ளளவும்
துலங்குமெவ் வின்பமுந் துன்பா வொழிதலின்
ஓடுங் கருத்தற் றுளத்தொளிர் மோனமே
நீடுந் திருவடி நீழல் சரணம். (1353-1356

உயிர் வழிபாடு ;

(i) உள்ளமே கோயி லுணர்வே யருட்பரம்
கள்ளக் கருத்தே பலிகாண் சரணம்
தூயவா னந்த சொரூபாநு பூதிதோய்
நேயமே மஞ்சன நீர்காண் சரணம். (1093-1096)

(ii) உடல்வழி பாட்டி னுயிர்வழி பாடே
கடவுளுக் காற்றக் களிப்பாஞ் சரணம்.
அறிவால் வழிபடு மன்ப ரகத்திற்
பிறவா தனைகள் பிறவா சரணம். (1099-1102)

அருணாசல சிவமே ஸ்ரீ ரமணராக மனித உருக்கொண்டு நந்திகேசுவரர் போன்று ஸ்ரீ முருகனாரைத் தன் சந்நிதியில் இருத்தி அவர் மூலம் ஆயிரக்கணக்கில் தமிழ்ப் பாக்களால் தன் சொரூப இயலை விளக்கி அன்பர்களை ஆட்கொள்ளும் அதிசயத்தை எப்படிக் கூறுவது!

"அறிவறு கிரியென அமர்தரு மம்மா
அதிசயம் இதன்செயல் அறிவரி தார்க்கும்."

'ஸ்ரீ ரமண ஞான போதம்' என்ற இப்பெருநூலை வாசித்துணரும் ரமண அன்பர்கள் ஜீவபோதம் அழிந்து ஸ்ரீ ரமண (சிவ) போதம் அடைவர் என்பது திண்ணம்.

**N. சங்கரன்**

# உள்ளுறை

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# ஸ்ரீ ரமண ஞான போதம்

## ஒன்பதாம் பாகம்

# உபதேச விளக்கம்

## மூன்றும் பிரிவு

—o—

### போதவருட்பொருள் வணக்கம்

(கொச்சகக் கலிப்பா)

1. ஒன்றான தன்னை யுருப்பெயராற் பற்பலவா
நன்று மருட்டிப்பின் னுடத் தெருட்டலுறு
தோன்றுன சத்தி சொரூபத்தி னன்னியமற்
றென்றுக வென்றுமுள வொண்பொருளை யுள்ளுவாம்.

2. தணவலுக் கேதுவாச் சார்ந்தபெருந் தஞ்ச
வுணர்வே தனக்குகந்த வூனக வுட்கொண்
டணவலுற்ற மோன வருள்வெளியாம் பாத
வுணர்வே சிறந்த வுபாசனையா வுள்ளுவாம்.

3. ஐயா றடையா தகம்புக் ககந்தேர்வார்க்
கெய்யா வறிவா விதயத் தொளிர்சொருப
மெய்யாக விஞ்சு விசுத்த வருள்வெளியாய்ப்
பொய்யாத மோனவியற் பூரணமே புந்திசெய்வாம்.

4. சென்றுசென்று நுண்ணுணுகித் தேய்ந்துதேய்ந் [தற்றுமுற்ற
வென்றிகூர் மோனவருள் விட்புலமாச் சேரகத்து
மன்றவொன்ற வுள்ளமுழு மாட்சிசேர் தன்னையன்றி
என்றுமற்றென் றற்ற வியற்பரமே யெண்ணுவாம்.

5. காண்டகுமெய் யன்பாற் கசிந்துருகு சிந்தையால்
ஈண்டலுற் றாரை இதயஞ்சேர் கண்ணேக்காற்
றாண்டுசிவா னந்தஞ் சுரக்கவாட் கொண்டுவிளங்
காண்டவன்சற் போத வருட்பதச்சீ ரெண்ணுவாம்.

6. வானேருந் தேரவொணு வாழ்வொளியா மோனநிலை
ஏனேருந் தேர வியல்வடிவா வுள்ளத்தே
நானுனென் றர்புதமெய்ஞ் ஞானவருட் சிற்பரமாந்
தானேதா னகிவொளிர் தற்பதத்தைப் பேணுவாம்.

7. பரமனருட் பாரமா யாவும் பரிப்பான்
சிரமிசை நா லே ர்சச் சிறிதுமில்லை யென்னும்
உரமதியென் னுள்ளத் துதவியநல் லாண்டான்
வரமலாப்பா தந்தலைமேல் வாழ்த்தி வணங்குவாம்.

8. கண்மணியா வென்னுட் கலந்திருந்த சுத்தவருள்
விண்மணியா வெங்கும் வியாபித்தான் பொய்யனேற்
குண்மைஞா னத்தா லுயர்வாழ் வளித்தவருள்
வண்மைசே ராண்டவன்றுள் வாழ்த்தி வணங்குவாம்.

9. பாழிலகப் பட்டுப் பரிதபித்த மோகவகத்
தாழுருவிக் காத்தவருட் சைதன் னியசொருபன்
ஊழிகளுக் கூழியா வோங்குபர வுண்மையியல்
வாழியகத் தென்றுவக்க வாழ்த்தி வணங்குவாம்.

10. ஈனச் சிறுநா யிதயத்தே யானெனும்பொய்
யூனப் பசுத்துவப்பா மூத்தையுணர் வோய்ந்தொழிய
மோனப் பழமுதலா மூண்டபரஞ் சோதியருள்
வானப் பெரும்பதமே வாழ்த்தி வணங்குவாம்.

11. ஒண்மைசே ருள்ளுணர்வா வுள்ளத் தகமகமென்
றுண்மைசேர் தற்பரமா வுள்ள சொரூபவியல்
திண்மைசேர் சுத்த சிவாநுபவம் பொங்கவருள்
வண்மைசேர் சிந்தையால் வாழ்த்தி வணங்குவாம்.

12. நின்றகுரு நாதனென் னெஞ்சத்து மெய்ஞ்ஞான
வென்றியுல கெங்கும் வியாபிக்க வீசுபுகழ்
முன்றிலை யன்றி முயங்கா வுரவுணர்வு
மன்றவெளித் தாண்டவருள் வண்பதமே வாழ்த்துவாம்.

13. விவர்த்தமாத் தோன் றுலக மெய்த்திறந்தே ராது
பவத்துழல்வெம் பாவப் படிற்றறிவு செற்றே
சிவத்துவமெய்த் தன்மை தனைப்பித்த ஞானத்
தவத்துரிய சற்குருதாட் சார்பேதேர் கிற்பாம்.

14. உலகப் புலநோக் குறுதே சொரூப
நலனிற் பழுத்தமெய்ஞ் ஞானநு பூதி
இலகக் கருத்தை யிதயத்தூ டுய்த்தோன்
மலர்சிற் பதமே வழிபட் டொழுகுவாம்.

15. மட்கவொண்ணு மாண்பிற்றாய் மாயவசற் பாசத்தாற்
றட்கவொண்ணு வீறுசால் சத்தியஞா னப்பிழம்பாய்
நிட்களமாய் நிர்க்குணமாய் நிச்சலமாய் மோனவியற்
புட்களமாப் பொங்குசிவ பூரணமே புந்திசெய்வாம்.

---

உ

சிவமயம்

# 1. தெய்வமாலை

(கண்ணிகள்)

திருச்சிற்றம்பலம்

அருணமலைச் சாரலிலன் பாகவுறை தெய்வம்
கருணைமலி ரமணகுரு கண்கண்ட தெய்வம்.

1. உயிர்தொறுமெய் யுணர்வுநவா வுற்றுளிருந் தெய்வம்
பயிர்தனிலென் கண்கவரும் பசுமையொளித் தெய்வம். (அ)

2. அரணியல்பா லன்பரைநன் காதரிக்குந் தெய்வம்
தரணியெலாந் தாங்குதயா தருமவுருத் தெய்வம். (அ)

3. தாழ்வறமெய் வாழ்வுதருந் தத்துவமாந் தெய்வம்
மாழ்குமனப் பேதைமையை மாற்றுமொளித் தெய்வம். (அ)

4. வானவெளித் தோற்றரவுக் கானவதிட் டான
மோனவெளி தன்னிலொளிர் முத்தியொளித் தெய்வம். (அ)

5. சுட்டறிவின் கற்பனையைச் சுட்டெரிக்குந் தெய்வம்
கட்டறுமெய்ஞ் ஞானவொளிக் கண்ணளவாந் தெய்வம். (அ)

6. அறிவையழித் தலமருங்கா ரணவப்பே யாட்ட
வெறியழித்து வீறிடுமெய்ஞ் ஞானவொளித் தெய்வம். (அ)

7. சொருபத்தை யாவரித்துத் தோற்றுமகங் காரக்
கருவத்து மோகமறக் கட்டழிக்குந் தெய்வம். (அ)

8. துன்பவகங் காரமறத் தொல்லையிருள் போக்கி
அன்பரகங் கோயில்கொள்பே ரானந்தத் தெய்வம். (அ)

9. பித்தகத்திற் கொண்டவர்க்குப் பேறளிக்குந் தெய்வம்
புத்தகத்திற் காணவொண்ணு வித்தகத்துத் தெய்வம்.
(அ)

10. வித்தகர்தங் கூர்விழியில் வீற்றிருந்து தன்மெய்ப்
பத்தரகத் துண்மையொளி பாலிக்குந் தெய்வம். (அ)

11. வருத்துவதாம் பாழ்ம்பிறப்பை யாற்றிடுந்தன் மாட்டுப்
பொருத்துவதாம் புந்திவளர் புரணவொளித் தெய்வம்.
(அ)

12. கதிர்மதிகள் வெட்கவுளக் கண்ணுளொளியாந் தெய்வம்
விதிமதிகள் வெட்கவொளிர் விஞ்ஞையொளித் தெய்வம்.
(அ)

13. அருள்விளக்கத் தாலகத்தே யாக்கமிகும் மோனப்
பொருள்விளக்கந் தேற்றுசிவ போதவொளித் தெய்வம்.
(அ)

14. அறிவறிந்தாங் கன்னியச்சுட் டற்றநிலைக் கண்ணே
பிறிவறுசாந் தானுபவப் பேரொளியாந் தெய்வம். (அ)

15. உணர்ந்தசிவ யோகியர்கூ றுமுவலன்புத் தெய்வம்
புணர்ந்தசிவ போகசுகம் பொங்கவளி தெய்வம். (அ)

16. குருத்துவமா வோங்குமொளிக் குன்றுருவாத் தற்றேர்
கருத்துவகை பொங்கவருட் களியுதவுந் தெய்வம். (அ)

17. சித்திரத்துச் செங்கமலம் போலுமுகத் தெய்வம்
துத்தியத்துக் கேற்றசுயஞ் சோதியுருத் தெய்வம். (அ)

18. இமையவர்துத் தியமுறையீ டேற்றருளுந் தெய்வம்
சமயமனைத் தூடுமொளிர் சமரசமெய்த் தெய்வம். (அ)

19. பழமுதலாந் தெய்வமெனைப் பண்படுத்த தெய்வம்
முழுமுதலாந் தெய்வமொரு முனிவடிவாந் தெய்வம்.(அ)

20. சொருபசுதா ரசவொளியாந் துரியமெனை யாளக்
குருவுருவாக் கொண்டதிருக் கோலமுடைத் தெய்வம்.
(அ)

21. பத்திசித்தி வாய்ப்புறவென் பங்கிலுறை தெய்வம்
புத்திமுத்தி பொங்குறவென் புந்திவளர் தெய்வம். (அ)

22. கற்புறுத்தி யாணவப்புன் காரகற்றித் தன்மெய்
வற்புறுத்தி யாண்டவருள் வலிசான்ற தெய்வம். (அ)

23. புற்கெனவென் சுட்டறிவைப் போக்கியொளி பொங்கும்
சிற்கனமாந் தெய்வமெனைத் தேற்றியமெய்த் தெய்வம்.
(அ)

24. தன்னியல்புஞ் செய்தவருட் சத்திநிபா தத்தால்
என்னியல்டா வென்னிதயத் திருந்தொளிர்மெய்த்
[தெய்வம். (அ)

25. குற்றமறக் கோதாட்டிக் குடிகொண்டென் னுள்ளத்
தற்றமறக் காத்தருள்வா லறிவொளியாந் தெய்வம். (அ)

26. பரமசிவாம் பதிதனிலென் பசுத்துவநான் முற்றக்
கரைதரவெற் கலந்தொளிருங் கல்யாணத் தெய்வம்.(அ)

27. கண்மணியாந் தெய்வமுருக் கமனியமாந் தெய்வம்
பெண்மணியா வென்னைமதிப் பெட்புறுத்த தெய்வம். (அ)

28. மந்தணமா வென்னுளத்து மன்னியெனை யாண்டு
சுந்தரமாக் காண்சொருப சோபனமாந் தெய்வம். (அ)

29. ஒருமையுணர் வென்னுளத்தூ றூற்றெழக்கை தொட்ட
அருமைரமண வாளனென யான்மகிழுந் தெய்வம். (அ)

30. காட்சியுற வென்னைக்கண் காணிக்குந் தெய்வம்
மாட்சிதரு மென்சொருப மாணிக்கத் தெய்வம். (அ)

31. ஊடுதோறுஞ் சொக்குவித்தென் னுயிர்தளிர்ப்பக் கூடிப்
பாடுதோறுஞ் சர்க்கரைத்தீம் பாகெனலாந் தெய்வம்.
(அ)

32. பாலனஞ்செய் தான்றவருட் பாக்கியஞ்செய் தென்னை
லாலனஞ்செய் தெய்வமின்ப லாவண்யத் தெய்வம். (அ)

33. பாவனையோர் சற்றுமில்லாப் பரமார்த்தத் தெய்வம்
பூவணையென் னெஞ்சகமாப் புணர்ச்சிதருந் தெய்வம்.
(அ)

34. மூலையிலே தூங்கியநான் முற்றமுற்றுத் தெய்வ
மாலையிட வந்தணைந்த மகிழ்வடிவாந் தெய்வம். (அ)

35. பட்டகட்ட மற்றுரிமைப் பதியொடுநான் வாழக்
கட்டுதிட்ட மற்றவெளி காட்டியமெய்த் தெய்வம். (அ)

36. மீட்சியறுந் தன்பதமாம் விஞ்சைவெளிக் காணி
யாட்சிதருந் தெய்வமென்ற னபரிமிதத் தெய்வம். (அ)

37. கருவா ணவப்புன் கலக்கமறக் காயும்
திருவா சகத்துத் திகழ்பொருளாந் தெய்வம். (அ)

38. பிரியா வுடையாள் பெருஞ்சித் திரத்தால்
உரிகா விபூதிவள ரோட்பமுறு தெய்வம். (அ)

39. எல்லாஞ்செய் வல்லசிவ மென்றடியர் போற்றக்
கல்லால நீழலின்மெய்க் காட்சிதருந் தெய்வம். (அ)

40. பொன்னுருப்போ லகிலமுமாப் பொங்குபர மாமத்
தன்னுருவை யென்னுருவாத் தங்குமொளித் தெய்வம்.
(அ)

41. தெய்வத் திருமாலை சிந்தித் திசைப்பாருக்
குய்வைத் தரவுளத்தே யுற்றொளிருந் தெய்வம். (அ)

42. உய்வனே யானெனவேங் குள்ளங் களிப்பவருள்
செய்வனே செய்தகுரு தெய்வமே தெய்வம். (அ)

43. அங்கமக மாகவுழுங் கன்பர்க் குறுதிமொழி
எங்குமுக மாக வியம்புமகா தெய்வம். (அ)

44. டேசலுறுந் தெய்வந்தற் பெட்டார்க் கருள்வாரி
விசலுறுந் தெய்வமிசை மிக்கபெருந் தெய்வம். (அ)

45. பாலையிலே வாடியதா பந்திரத் தண்ணருட்பூஞ்
சோலையிலே வந்தணைந்த சுகசொருபத் தெய்வம். (அ)

46. ஓலக்கங் கொண்டடியே னுள்ளத்தே யோர்மொழியா
லாலிக்குந் தெய்வம்விட் டரசாட்சித் தெய்வம். (அ)

47. பாதகமா மைக்குவசப் பட்டபெருங் கட்டமறச்
சேதனமா முண்மையுறத் தேற்றியமெய்த் தெய்வம். (அ)

48. போதிக்கு முண்மையுளத் தாதிக்கம் பெற்றுவிர
மேதக்க மோனவருள் சாதிக்குந் தெய்வம். (அ)

49. பாழ்க்கையற வென்னுயிர்தன் பாதநிழல் வாழ
வாழ்க்கைமுத லாவெனக்கு வாய்த்தபெருந் தெய்வம். (அ)

50. துன்னியமோ காணவப்புன் சூதாட்ட வாழ்க்கையறத்
தன்னியலோ டென்னியலைத் தான்பிணைத்த தெய்வம்.
(அ)

51. கஞ்சுகத்து போகமதிக் காப்பவிழக் கைந்நீவி
நெஞ்சகத்து மெய்ப்பொருளா நின்றொளிருந் தெய்வம்.
(அ)

52. வாணிகம்போ லாற்றியவென் மாயவன்மைபத்
[தன்பதத்தின்
மாணியல்பா மாற்றியின்ப மாட்சிதருந் தெய்வம். (அ)

53. விக்கினமா மைம்புலத்தின் வேட்கையற
[வென்மனத்தைச்
சிக்கெனவே தன்பதத்திற் சேர்த்தருள்செய் தெய்வம்.
(அ)

54. பண்டுகொண்ட கோண்மையுடைப் பாங்கனேன்
[றன்சொருபம்
கண்டுகொண்டு வாழவருட் கல்விதந்த தெய்வம். (அ)

55. புன்புலமா வேங்குமயர் புந்தியையுள் ளுய்த்தறியின்
நன்புலமா வோங்குறுமெய்ஞ் ஞானவெளித் தெய்வம்.
(அ)

56. வாய்க்கால் வகுத்தென் மதியைத்தன் மூலத்திற்
போக்காநின் றுண்மை புலப்படுத்த தெய்வம். (அ)

57. நோக்குக் கிலக்கியமா நோன்புக் குறும்பயனு
வாக்குக் கருங்கலனு வாய்த்தொளிருந் தெய்வம். (அ)

58. காலையிளஞ் செங்கதிர்போற் கன்னியென்னை மோனச்
சோலையிடை வந்தணைந்த சொருபவொளித் தெய்வம்.
(அ)

59. பண்ணிறைந்த பைந்தமிழ்ப்பூம் பாவையெழிற் கேற்பக்
கண்ணிறைந்த காட்சியுடைக் கட்டழகுத் தெய்வம். (அ)

60. யாய்ந்துபடா தன்பருயிர் மாட்டெறியும் பாசயமன்
சாய்ந்துபடக் காணுமதி சமர்த்தகுரு தெய்வம். (அ)

61. உடல்வளர்க்கு மூக்கைமட னுய்திபெறத் தானழகின்
குடல்விளக்கஞ் செய்தவருட் கோலவொளித் தெய்வம்.
(அ)

62. பாசுபதத் தெய்வமகப் பாசமயல் சாயவொளி
வீசுபதத் தெய்வமலை மேல்விளக்காந் தெய்வம். (அ)

63. ஆணவா வேசமய லற்றேழிஞா ஞன்மகுக
வேணவா முற்றலுற வீங்கமைதித் தெய்வம். (அ)

64. சீர்த்தியுலாஞ் சேவடியின் சிந்தையிலே தாந்தினைத்தா
ரார்த்தியிலா ராகநிறை வாக்குபர தெய்வம். (அ)

65. ஆள்வினைக்கெல் லாமடியா வாடுமகங் காரமொழி
வேள்விக்கே யாதரஞ்செய் வேதமுடித் தெய்வம். (அ)

66. உறுகலிக்கா ரூத்தையுயிர்ச் சேட்டையைக்கண் டெள்ளி
முறுவலிக்குந் தெய்வமுமு மூதறிவுத் தெய்வம். (அ)

67. இந்திரியப் புன்புலமோய்ந் தெய்ப்பினுந்தா முட்கலங்கா
தந்தரியா மித்துவத்தா லாதரிக்குந் தெய்வம். (அ)

68. மிச்சையறுந் தன்சொரூப வெள்ளவொளி யாலடியர்
கொச்சையகங் காரமதிக குற்றமொழி தெய்வம். (அ)

69. மோனவழிக் கன்றியிரு முச்சமயம் பேசலுறும்
ஏனைவழிக் காற்றவக விதயவொளித் தெய்வம். (அ)

70. வாக்கமுதத் தாலுங்கண் ணோக்கமுதத் தாலுமுளந்
தேக்கமுத ஞானதயா தருமவுருத் தெய்வம். (அ)

71. அன்னியனே போலநட மாடுபரிச் சின்னனேன்
தன்னியனு வாணவத்தைத் தான்புசிக்க தெய்வம். (அ)

72. யானென்னும் புல்லியவவ் வெண்ணமற
[வென்னுளந்தேர்
தானென்னும் மோனவுப சாந்தவுருத் தெய்வம். (அ)

73. மாலாய புன்மனத்து வாழ்க்கைவழி தூர்ந்துளத்து
வாலாய மாகவுண்மை வழிதிறந்த தெய்வம். (அ)

74. கலக்கியமோ காணவப்புன் காதைகதை யாவொழிய
இலக்கியமோ னத்தெள்வா லென்சொருபத் தெய்வம்.
(அ)

75. அருணகிரித் தாவரமே குருரமண ஜங்கமமாய்ப்
புரணவுருப் போதமுளம் புணர்த்தருளுந் தெய்வம். (அ)

76. வஞ்சமறக் கண்டதிரு வாள்விழிநோக் காலெனது
நெஞ்சமுறக் கொஞ்சுறுமெய்ந் நீதியுருந் தெய்வம். (அ)

77. கண்டதே காட்சிமனங் கொண்டதே கொள்கையென
மிண்டர்தேர் தரிசனத்தை வெள்குவிக்குந் தெய்வம்.
(அ)

78. இத்தெய்வ மத்தெய்வ மென்றலப்பும் பேச்சொழிய
மெய்த்தெய்வ மாவுளத்து மிஞ்சுபெருந் தெய்வம். (அ)

79. ஆரணத்து மெய்ப்பொருளை யன்பருளந் தேற்றுமொரே
காரணத்தால் வந்தவாநட் கற்பகமாந் தெய்வம். (அ)

80. ஞானவரை மீதகண்ட நாளோலக் கத்தமர்ந்து
மோனவருள் விழுஞ்சின் முத்திரைசேர் தெய்வம். (அ)

81. பூட்டவொணு தெங்குமொளிர் பூரணமாய்ப்
[புலஞ்சுட்டிக்
காட்டவொணு நுண்பரம காட்டையுருந் தெய்வம். (அ)

82. சித்திரமா முட்புமதீர் சிற்கனமாந் தெய்வமதி
பத்திரமாந் தன்சொருபப் பார்வைதருந் தெய்வம். (அ)

83. ஒன்றிரண்டென் றோதவொணு துன்மனிபா
[வத்தொடுங்கித்
துன்றுமனந் தேறவொளிர் சுவானுபவத் தெய்வம். (அ)

84. எண்டிசைக்கு நாயகமா யிலங்குமலைத் தாழ்வரையில்
வண்டிசைக்கு மாச்சிரம வாசமுடைத் தெய்வம். (அ)

85. பூரணநீ ராவிதயம் பொங்கிவழிந் தின்பவெள்ளம்
ஊருணிநீர் போலுலகோம் புதாரகுணத் தெய்வம். (அ)

86. பயிர்த்தொகையைக் காத்தலுறும் பைம்புயல்போல்
[வையத்
துயிர்த்தொகையைக் காத்தருள்பே ரொப்புரவுத்
[தெய்வம். (அ)

87. தடந்தவறித் தத்தளித்துத் தன்னைவழி கேட்பார்க்குக்
கடந்தபர மோனவழி காட்டுறுமெய்த் தெய்வம். (அ)

88. தன்சொருப வுண்மைநிலைச் சார்புணர்த்திச் சார்புபிற
பின்சருவா தன்பருளம் பிறங்கலுறுந் தெய்வம். (அ)

(வேறு)

89. அச்சி லாது தேர்க டாவு மற்பு தஞ்செய் தெய்வம்
விச்சி லாது நாறு செய்யும் விஞ்சை வல்ல தெய்வம். (அ)

90. தகையி லாத செம்பை மாற்றுத் தங்க மாக்குந்
[தெய்வம்.
புகையி லாது பொங்கி யோங்கு போத சோதித்
[தெய்வம். (அ)

91. பாத மூலம் பற்றி னோர்தம் பாச நாச மாக்கிப்
போத மான வுண்மை வாழ்வு பொங்கு விக்குந்
[தெய்வம். (அ)

(வேறு)

92. யாவுமொரு தன்சொரூப மென்றுணர்ந்த சாதவர்க்கு
மூவுலகு மேவலுற முடிசூட்டுந் தெய்வம். (அ)

93. கிருத்திரிம மோகமனக் கீழா லவத்தையறக்
குருத்துரும மாகவுளங் கோயில்கொண்ட தெய்வம்.
(அ)

94. இதுவகமென் றதுவகமென் றியல்வதின்றி யிதயப்
பொதுவகமா நின்றொளிர்சற் போதவொளித் தெய்வம்.
(அ)

95. காண்பாற்குந் தான்கரியாக் கதிர்விட்
[டொளிர்சொருபம்
பூண்பாக் கியமிளைந்த புந்திதந்த தெய்வம். (அ)

96. இரம்மியமாந் தேவனையா வெண்ணிடவே மற்றோர்
பிரம்மவடி வாவடியேன் பேணுபெருந் தெய்வம். (அ)

97. கவறுமோ லவசமனக் கலதியைமூ டாணவப்பேய்த்
தவறுதீர்த் தாண்ட சதாசிவமாந் தெய்வம். (அ)

98. வாதுக் கலைந்துழல்வெவ் வாதனைசேர் துட்டரைநன்
சாதுக்க ளாகவருட் சால்புதரு நந் தெய்வம். (அ)

99. ஏனிந்த மோகமயக் கென்றெனைத்தன் பாலெழுப்பி
வானிந்து போலுளந்தூன் றனந்தத் தெய்வம். (அ)

100 அட்டகா சம்புரிசிந் தாகுலஞ்செற் றன்பரகத்
திட்டகா மியநலஞ்செய் யின்புருவத் தெய்வம். (அ)

101. ஆதார பூதஞா னன்மசொரு பத்தொளிகூர்
பாதார விந்தமது பானநல்குந் தெய்வம். (அ)

102. சூலபுரத் தேயழகு சுந்தரத்து நந்தனமாய்
ஆலவா யூடுவள ரமுதமொழித் தெய்வம். (அ)

103. அகந்தைக் கொடுங்கோ லரசையடி யோடிதயத்
தகழ்ந்தே சொரூபவர சாட்சிபுரி தெய்வம். (அ)

104. மூலவுசா வானபர முத்திவழி யுய்த்தலினிஞ்
ஞாலமெலாம் போற்றுறுமெய்ஞ் ஞானகுரு தெய்வம்.
(அ)

105. பலியாத் தவங்கள் பலிக்கவருட் பார்வை
சலியாது செய்யுந் தபோநிதியாந் தெய்வம். (அ)

106. அங்கிப் பிழம்பா வயிர்சொருப ஞானவருட்
சிங்கநோக் கான்மதத்தைச் செற்றருளுந் தெய்வம்.
(அ)

107. அஞ்ஞானப் பாழை யகற்றியதன் கண்ணேக்கால்
மெய்ஞ்ஞான வாழ்க்கையிங்கு மேவுவித்த தெய்வம்.
(அ)

108. தெய்வப் பராங்கதியைத் தேற்றியென் னுள்ளத்தூ
டுய்வழிக் குற்றதுணை யானவொளித் தெய்வம். (அ)

109. பாவைக்கூத் தாகப் பயின்றவுடல் வாழ்க்கையிற்சே
ராவற் கருத்தை யகற்றியமெய்த் தெய்வம். (அ)

110. இல்லார்போல் லாரெனக்காய்ந் தெள்ளுமியல் சேருலகத்
தெல்லார் தமையுமொருங் கேற்றருளுந் தெய்வம். (அ)

111. யானென்னும் போலி யெழுச்சி யடங்கிநிற்
றூனேதா னாகத் தழைத்தொளிருந் தெய்வம். (அ)

112. உம்பருங் காணவொண்ணா தோங்கு சொருபமெனக்
கிம்பரே காணவித யந்திறந்த தெய்வம். (அ)

113. தண்டுகொண்ட தெவ்வரையுட் சாய்த்தவருளா [லடியேன்
கண்டுகொண்ட மோனவெளிக் கண்மணியாந் [தெய்வம். (அ)

114. மிக்க சொருப விகாச விலாசமே
நக்கபுன் மூரலா நண்ணுமுகத தெய்வம். (அ)

115. இதய நடு நாட்டரசா யின்பவருட் புன்னகைசேர்
மதியமுகக் காட்சிதரு மாண்புறுமெந் தெய்வம். (அ)

116. ஆபத் தணுகா தகங்காரப் பேயகற்று
நீபத் தொடையணிந்தென் னெஞ்சிலுறை தெய்வம். (அ)

117. ஆக்கங்கே டில்லா வகுதியனந் தானந்த
மோக்கங்கா னுன்சொருப மென்றுமொழி தெய்வம். (அ)

118. வியக்கத் தகுஞ்சொல் விசித்திர நூல்களின்
மயக்கமுற துளத்தென்னை மடுத்தாண்ட தெய்வம். (அ)

119. மருண்டுழல் புன்மனக் கற்பனை தேற
திரண்டற் றெளிர்மெய் யியல்பாய தெய்வம். (அ)

120. சிந்தனை மோகத் தெருமரல் வாழ்க்கையின்
பந்தனை சிந்தருட் பார்வைசேர் தெய்வம். (அ)

121. தருமோப தேசமாத் தக்கசிவ ஞானப்
பரமோப சாந்தவருட் பார்வைகிளர் தெய்வம். (அ)

122. தன்னுண்மை யானவருட் சைதன் னியசொருபத்
தென்னுண்மை காட்டியவே கான்மவுருத் தெய்வம்.
(அ)

123. அருபமா வென்னியல்பை யாக்கியகத் தான்ற
சொருபசுகந் துய்ப்பித்த சுத்தவொளித் தெய்வம். (அ)

124. ஊனவகங் காரமலத் தாழ்த்தவுயிர் பாழ்த்தலின்றி
மோனவருள் வெள்ளத்தின் மூழ்குவித்த தெய்வம். (அ)

125. மனோமயமாஞ் சீவனொரு மதுபானி போலத்
தனுதியல்சங் கிக்கவுந்தான் றனையாந் தெய்வம். (அ)

126 உலகவலஞ் சுற்றுவதா வுற்றகனுப் பல்பிறவி
விலகவிழித் தொன்றுமுத்தி மிஞ்சுமொளித் தெய்வம்.
(அ)

127. அறிவதற்குத் தன்னையலா தன்னியமொன் றின்றிச்
செறிவியத்தாஞ் சிற்பரமாத் திகழ்சொருபத் தெய்வம்.
(அ)

128. பேணு முயிர்த்தொகை பேதுரு தோர்மொழி
யானை நடாத்தி யருள்கின்ற தெய்வம். (அ)

129. அகத்துமெய் யாய்ந்தாய்ந் தடங்கினுர்க் கான்ம
மகத்துவங் காட்டு மகோன்னத தெய்வம். (அ)

130. அனுதரஞ் செய்யா தடிக்கடை நாய்க்குத்
தனுதருள் செய்த தயாளுவாந் தெய்வம். (அ)

131. நனவிலுருத் தோற்றியருண் ஞானவொளிக்
[கண்ணேக்கால்
நனவுகன வாத்துரிய நாட்டிலுய்த்த தெய்வம். (அ)

132. தங்குகரை யற்றமனக் கற்பனு சத்திவெட்கத்
தங்குதடை யற்றெருளிர்சை தன்னியமெய்த் தெய்வம்.
(அ)

133. ஒன்றுமறி யாவெற் றுணர்வா யிருக்கவுந்தான்
நன்றிதுதீ தென்றுமட ஞாலமுரை தெய்வம் (அ)

134. சரேலெனமுக் காலவினை தத்தளித்து மங்க
ஒரேநிகழ்வாத் தேற்றுபர வுண்மையொளித் தெய்வம்
(அ)

135. அத்தமன மாகக்கா ரணவப்புன் மாலவிச்சை
சுத்தமனத் தூடுதய சூரியனாந் தெய்வம். (அ)

136. அந்தகா ரக்கா ரமாவாசை யூடருளின்
மந்தகா சத்தொளிசெய் வான்மதியாந் தெய்வம் (அ)

137. தண்ணிலவா நின்ற சதாசார மோனத்தின்
கண்ணிலவா நின்றசெழுங் காதன்மணத் தெய்வம்.
(அ)

138. விருபமா முண்மை விலாசங்கூர் மோன
சொருபமே தூவுபொடிச் சொக்கான தெய்வம். (அ)

139. ஆரோ கணஞ்செய் தடியேன்புன் சாயரதம்
பாரு டுலாப்போந்த பைங்கருணைத் தெய்வம். (அ)

140. தோத்திரப்பா மாலைநான் சூட்டியது மெய்ஞ்ஞான
சாத்திரப்பா மாலையொப்பத் தானணிந்த தெய்வம்.
(அ)

141. நுனித்ததியா னத்தவர்கூர் நோக்கக்க மாலை
நனித்தடமார் பத்தணிமெய்ஞ் ஞானவுருத் தெய்வம்
(அ)

142. கொண்டலே போலவளங் கூர்ருளாற் சிற்பரவான்
மண்டலே சப்பதமெய்ம் மாண்புதருந் தெய்வம். (அ)

143. நீலியாங் கன்னி நிகழ்த்துவிளை யாடலுக்குப்
போலியாஞ் சான்றாப் புணர்தலுறு தெய்வம். (அ)

144. போக வகந்தைதீர் மோனனு பூதியின்மற்
றேகமே யாக விரண்டற்ற தெய்வம். (அ)

158. ஒத்தார்மிக் காரற் றுளத்துடனோ ருயிர்க்கு
நித்த மணாளனா நின்றொளிர்மெய்த் தெய்வம். (அ)

159. நெஞ்சிற் புதைந்திட்ட நிக்ஷேபங் காணவரு
ளஞ்சனமென் கண்ணுக் களிவித்த தெய்வம். (அ)

160. என்னுடலோ டுள்ளம்பே ரின்பாற் குளிரநான்
றன்றோடத்தோ ளாரத் தழீஇத்தொழூஉந் தெய்வம்.
(அ)

161. அருட்பரத்தை யெண்ணி யிருட்பவருக் குண்மை
தெரிப்பதற்கு வந்த சிவப்பழமாந் தெய்வம். (அ)

162. பேணியா ருள்ளம் பிழையா வழுத்துங்கூ
ராணியே போன்ற வருட்பார்வைத் தெய்வம். (அ)

163. வாலறிவே தன்சொருப வல்லியா வேட்டுநலஞ்
சாலறவாழ் வாற்றுமுப சாந்தசுகத் தெய்வம். (அ

164. மகத்துவ மிக்க வசீகர சோபை
முகத்து வெளிப்படு மூர்த்திசேர் தெய்வம் (அ)

165. இரண்டற்ற வொன்றா யிருந்தொளிரு முண்மையே
திரண்டவடி வாகத் திகழிதயத் தெய்வம். (அ)

166. நாடுவதற் கின்றி நடப்பதாத் தானேயென்
றாடுவரக் கண்டுநா னேகைவிளர் தெய்வம். (அ)

167. நிகமா கமப்பொது நிச்சய மாகத்
திகழ்மா மவுனத் தகமான தெய்வம். (அ)

168. சிற்பியா விவ்வுலகிலுஞ் சிற்பரமாங் கன்னிடத்திற்
கற்பியா நின்ற கலாநிதியாந் தெய்வம். (அ)

169. மருட்பிரகா சத்துமட மாக்களறி யொண்ணா
தருட்பிரகா சத்தா லகத்தகமாந் தெய்வம். (அ)

170. இனைத்தெனவொண் ணாத விரும்பூதா மாயை
தனைத்தழுவித் தன்சொருபந் தான்கரந்த தெய்வம்.
(அ)

171. கரந்ததா மூடமொரு கன்மாய மன்றி
யிருந்தொளிர்தன் மெய்க்குமறை வென்றமிலாத்
[தெய்வம். (அ)

172. தற்பரமாந் தன்னிலகி லெங்களுந்தாந் தோற்றலியல்
கற்பனு சத்திக் கனுப்போலாந் தெய்வம். (அ)

173. எப்போது முள்ள வியல்பாந்தன் னுண்மையே
சற்போத சாந்த சமாதியாந் தெய்வம். (அ)

174. நிச்சிந்தை யாகநினை யாதுநினை கின்றதன்றி
யெச்சிந்தை யாலுந்தா னெண்ணவொணுத்
[தெய்வம். (அ)

175. நிச்சிந்தை யாகநிகழ் நெஞ்சத் தெளிவிலே
சச்சந்த மாகவொளிர் தற்பரமாந் தெய்வம். (அ)

176. பொச்சாந் தவர்க்குப் புலவளவாப் பூரணமாய்த்
தற்சார்ந் தவர்க்குண்மை தான்றனுந் தெய்வம். (அ)

177. கற்பிதமா வன்றிவிவ காரசமு சாரமொளிர்
தற்பரமாந் தன்பரமார்த் தத்தலிலாத் தெய்வம். (அ)

178. இருப்பே விளக்கமா வேழ்ச்சிக்கே மின்றி
யிருப்பதே தன்மெய் யியல்பான தெய்வம். (அ)

179. அணுவுக் கணுவா மதிநுட்ப மாநின்றே
மகத்துக்குந் தான்மகத்தா மாட்சிசேர் தெய்வம். (அ)

180. உள்ளத் தகமகமென் றுண்மைக் கறிகுறியாத்
தெள்ளத் தெளிந்தசிவச் செம்பொருளாந் தெய்வம்.
(அ)

181. பாதார விந்தவருட் பத்தியா லென்னிதயத்
தாதார மாமெய் யறிவளித்த தெய்வம். (அ)

182. முச்சத்தி யேங்க முழு மோனமாந் தன்சொருப
சிற்சத்தி யொன்றே திளைத்தலுறுந் தெய்வம். (அ)

183. உண்மையாந் தன்னினைவென் னுள்ளச்சே யூட்டியருள்
வண்ணமையாற் காத்தசிவ மங்களமாந் தெய்வம். (அ)

184. அருளாமை யென்ப தறியாமை யாக
வருளா லுருக்கொண்ட வானந்தத் தெய்வம். (அ)

185. உள்ளமே யுண்மை யுணர்ச்சிப் பயிற்சிதருந்
தெள்ளியகல் லூரியாத் தேர்ச்சிதருந் தெய்வம் (அ)

186. கண்டவகங் காரமனக் கற்பனைதன் சிற்சொருபத்
தண்டுவதின் றனவகண் டான்மபர தெய்வம். (அ)

187. ஏனை யனைத்து மெதிர்ப்படுபுன் சாயைகளாத்
தானே தனித்தபர தத்துவமாந் தெய்வம். (அ)

188. எத்தவறு மின்றியே யெவ்வுயிர்க்குந் தானியல்பா
வொத்தவுற வானவுளத் தூண்மையொளித் தெய்வம்.
(அ)

189. ஒன்று விளங்குமுணர் வுண்மை யொளிர்பிழம்பாய்ப்
பொன்றுத சாந்தபரி பூரணமாந் தெய்வம். (அ)

190. முனைத்தவகங் காரமதி மூடத்தா லன்றி
நினைத்தலுக்க யார்க்கு நிமித்தமிலாத் தெய்வம். (அ)

191. துறக்கவொணு தான சொருபவறி வாலே
மறக்கவொணு தானவருள் வைப்பான தெய்வம். (அ)

192. சிவத்திலே யன்றித் திளைத்திடமெய்ஞ் ஞானிக்
கெவற்றிலுமோர் சற்று மிடமில்லாத் தெய்வம். (அ)

193. எதுவடிவென் றுண்மையுணர் வெய்தியவர்க் கெல்லாம்
பொதுவுடைமை யானவொரே பூரணமாந் தெய்வம்.
(அ)

194. பற்றற்ற தன்பதத்தைப் பற்றுற்ற சாதகர்க்குப்
பற்றற்ற வாழ்க்கைப் பவிசுதருந் தெய்வம். (அ)

195. இலனுகத் தன்னையிழந் தென்பெறினும் யாதோர்
நலனுமின் றுவுயர்மெய்ந் நானுன தெய்வம். (அ)

196. அகிலங் களுந்தனக் காகவன்றித் தானவ்
வகிலங்கட் கன்றுன வான்மாவாந் தெய்வம். (அ)

197. எப்பாலுந் தானே யிருந்தொளிர்வ தன்றிமற்
றப்பாலொன் றில்லா வகண்டபர தெய்வம். (அ)

198. பாதமூ லத்தைமனம் பற்றினர் பாசபந்தஞ்
சேதமுற நோக்குசிவச் சிற்பரமாந் தெய்வம். (அ)

199. தொண்டுபட்டார் கர்த்தத் துவங்கெடுக்கும் வாயிலான்
மிண்டுபட்ட பாசவினை வேரறுக்குந் தெய்வம். (அ)

200. தன்சொரூபச் சாயையா மாயையிற்சேர் தத்துவந்தாஞ்
சஞ்சலிக்கத் தான்சலியாத் தத்துவமாந் தெய்வம். (அ)

201. ஒன்றியா முண்மை யுணர்வொளியா வுற்றனைத்துந்
தோன்றுபோ லென்றுந் தொழிற்படுத்துந் தெய்வம். (அ)

202. ஒன்றாலுஞ் சற்றுந்தா னூறுபடா வுண்மையொளிக்
குன்றான மோனவருட் கோலவெளித் தெய்வம். (அ)

203. குறுக்கு நெடுக்குமாக் கோத்தகிலத் தூடு
மிறுக்கு மிறைமைசே ரேகமாந் தெய்வம். (அ)

204. எங்குளதோ வெங்கிலையோ யாமறியே மாயினுமற்
றெங்களுளத் தேயுளதா யாமறிந்த தெய்வம். (அ)

205. தெய்வப் பிறப்பாத் திகழுவடி யாருயிரைச்
செய்விப் பதுதன் செயலான தெய்வம். (அ)

206. நாவகஞ் சேர்ந்து நடப்பித்த வாணியாற்
சேவகஞ் செய்யுமுயர் சீர்மைதந்த தெய்வம். (அ)

திருச்சிற்றம்பலம்

---

சிவமயம்

# 2. பாதமாலை

## நூன்முகம்

ஸாதுஸங்கஸந்நிதியில் அவையடக்க வணக்கம் கூறியது கூறலே கொள்கையாளர்போல ஒருகாலுரைத்த பொருளே பின்னர்ப் பலகாற் பயிலப்பெறுதலன்றி, ஆன்றோர் பனுவல் களிற்போலத் திட்பநுட்பஞ் சான்ற ஆழ்ந்தகன்ற அரும் பொருள் பல தன்னிற் பெருக வமையாமலும், ஏகதேசம் ஏரலெழுத்துப்போலத் தற்செயலாக நுண்பொருள் சில ஆங் காங்கெய்திக் கிடப்பின் அவைதாமும் ஒரொழுங்குபட முன் பின்னியைபு தோற்றி முறைப்பட வியலாமலும், பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும் பத்தர் சொன்னவும் பன்னப்படுபவோ—என்பதற் கிணங்க விசித்திரமானதோ ரெதேச்சாகதி பற்றிச் செல்லினும், பரமபாவனமான பகவத் பாதஸ்வரூப ஸ்மரணத்திற்கு ஒருவா றனுகுணமாக நிற்கும் அவ்வொரே காரணத்தால், அப்பான்மையோடு செய்யும் அனுசந்தான பாராயணத்திற் கேற்றதோர் துணைக்கருவியாக, அருள்வெறியா லமைந்த இவ்வியற் பாதமாலையை அன்பு சாலறிஞரான அடியார் அங்கீகரித்துப் பாராமரிக்கக்கடவர்.

இங்ஙனம்
அடியார்க்கடியனான
**ஆக்கியோன்**

## மங்கலவாழ்த்து

(வெண்பா)

ஆபாத சூடமா வண்ணிக்குந் தன்சொருப
மாபோத மாட்சி வழங்குமால்—ஆபான
தீபாதிக் கெல்லாஞ் சிரோதீப மானகுரு
சீபாத தெய்வத் திறம்.

# நூல்

**(கண்ணிகள்)**

திருச்சிற்றம்பலம்

* அடிமுடிசா ரைக்கியமா மருணைபதும் வேதக்
கொடுமுடியின் மேற்குலவுங் குருரமணன் பாதம்.

1. வாக்குமனங் காணவொண்ணா மாட்சியுறும் பாதம்
நீக்கமற மெய்யடியார் நெஞ்சிலொளிர் பாதம். (அ)

2. தன்னறிவி னென்னறிவைத் தன்மயமாச் சார்வித்
துன்னுறுவ யாவுமொழித் துள்ளொளிர்மெய்ப் பாதம். (அ)

3. நிலைப்படக்காண் மெய்யுணர்வோர் நெஞ்சகத்தே [மோனந்
தலைப்படக்கா ணைம்பர தத்துவமாம் பாதம். (அ)

4. பாழ்வெளியிற் கற்பிதமாம் பார்வையறத் தெய்வ
வாழ்வொளியா வென்றுளத்து வைகுறுமெய்ப் பாதம். (அ)

5. கற்பனைசேர் சத்தகமுன் றற்புதமாக் காண்மெய்ப்
பொற்பனைசேர் வாலறிவா மொட்டமுடைப் பாதம். (அ)

6. அறிவறியா நின்றவகத் தாக்கமிகும் மோனக்
குறிநிறைவாய் வாக்குதிநக் கோலமுடைப் பாதம். (அ)

7. வஞ்சனைசேர் நெஞ்சனையும் மஞ்சலென வாண்டு
மிஞ்சியதன் மாட்சிதரு விஞ்சையருட் பாதம். (அ)

8. அகந்தையற விட்டவர்க்கவ் வர்ப்பணத்தா லுள்ளம்
மகிழ்ந்துபரி பூரணமா மாட்சிதரும் பாதம். (அ)

9. பண்ணிலகங் காரமனைத் தாபமிக வாடினர்க்குத்
தண்ணிலவு வெப்பமுறத் தண்ணளிபுல்செய் பாதம். (அ)

---

* பாட்டிறுதி தோறுமிது பல்லவியாய் மெய்யெடுத்துக்
காட்டுறுதி யானபதங் கற்றெழுகல் வாழ்வாம்.

10. புன்கவலை சேர்விகாரப் புந்தியின்மா ளாட்டமற
என்கவனந் தன்சொரூபத் தீர்த்தருளும் பாதம். (அ)

11. சன்னிதியா யார்வமுறத் தன்னடைந்தா ரின்னுயிர்க்கு
நன்னிதியா வுள்ளாசி நல்குறுமெய்ப் பாதம். (அ)

12. பரவெளியாந் தன்சொரூபப் பார்வையிலே யன்பரகந்
துருவெளித்தோர் ரத்துமய மோட்டுறுமெய்ப் பாதம். (அ)

13. அஞ்சலிக்கை கூப்பியமெய் யன்பாகத் தூன்றிநின்று
சஞ்சலிக்கும் புன்மனத்தைச் சாடுறுமெய்ப் பாதம். (அ)

14. பேதவாழ் வானபெரும் பேய்த்தேரை மாய்த்தொருசற்
போதவா னந்தமதுப் பொங்குமலர்ப் பாதம். (அ)

15. தன்னொளிசேர்ந் தாருணர்வு தான்பிறிதைத்
[தேறவொண்ணாப்
பொன்னொளிசேர் சிற்பரமாப் பொங்குமணிப் பாதம்.
(அ)

16. அண்ட மளாவி யகண்டபரி பூரணமாக்
கொண்ட வதீத குருத்துவஞ்சேர் பாதம். (அ)

17. காணாரே யன்றித்தற் கண்டாருங் காணவொண்ணாச்
சேணாகி நன்கனித்தேன் ஜீவனமாய் பாதம். (அ)

18. வாசிவாசி யென்பதனை வாலாய மாத்திருப்பி
வாசியா நிற்கிலருள் வாசிதரும் பாதம். (அ)

19. அருள்வண்ண மாப்படர்மெய் யன்பரகத் துண்மைப்
பொருள்வண்ண மாப்பொலியும் புண்டரிகப் பாதம்.
(அ)

20. கண்டவர்விள் ளாதுமூ கத்துவஞ்செய் பாதம்
விண்டவர்கா ணாதகலகு விந்தையொளிப் பாதம். (அ)

21. தானமுறை யாலடைவது சாரவொண்ணாப் பாதம்
மோனமுறை யாலடைந்து முற்றவொண்ணாப் பாதம். (அ)

22. ஆரியக்கூத் தாடினும்பொன் னம்பலத்தே மெய்யன்பர்
காரியத்திற் கண்ணுறுங் கூர்மையொளிப் பாதம். (அ)

23. அஞ்சுவதற் கில்லா வபயபதப் புந்திசெய்து
கொஞ்சுவதற் கேற்றசெழுங் கோமளமாம் பாதம். (அ)

24. சீரியமெய்ந் நேயரெனச் சேர்ந்துமகிழ் பூவைப்
கூரியமெய்ந் நாகரிகக் கோலநடைப் பாதம். (அ)

25. கூத்தாட வல்லவருட் கோமாளிப் பாதமெனை
யீர்த்தாள வல்லமிக வேயாளிப் பாதம். (அ)

26. சிற்கனமாந் தன்சொருப தெய்வவொளி யாலன்புள்
முக்குணமா யைக்குமுற்றுப் புள்ளிவைத்த பாதம். (அ)

27. இன்புருவா யான்யானென் றேய்ந்தொளிரவ்
[வாற்றான்மெய்
யன்புருவா வுள்ளந்தோ றுன்றுதிருப் பாதம். (அ

28. கற்பனை மாத்திரமாக் கட்டுவீ டாதியவை
அற்பனை மென்னையகக் காழ்க்கியமெய்ப் பாதம். (அ)

29. ஆர்வக் குரோதவகங் காரமம காரமறக்
கூர்வர் சிரவொளியின் கொற்ற முடைப் பாதம். (அ)

30. சேவித்து மன்பரெலாஞ் சிந்தையிலுஞ் சென்னியிலும்
மேவிக்கா மாதிகெடு விரவொளிப் பாதம். (அ)

31. அருள்விலா சத்தாலிவ் வகிலமனக் கற்பனைசே
ரிருள்விலா சங்கெடநீ டெரிக்குமொளிப் பாதம். (அ)

32. இன்றன் றெனும்பொழுதோ டிங்கங் கெனுமிடனும்
துன்றுங்கண் மத்தொடருஞ் சுட்டெரிக்கும் பாதம். (அ)

33. மிச்சையுலா மோகமற மெய்யுணர்வு நல்கலால்
இச்சையெலாந் தற்சேர்ந்தார்க் கீடேற்றும் பாதம். (அ)

34 இருளே பொருளாவென் றேங்குமனப் பேதைமையைத்
தெருள்பொருளாக் கேற்றித் தெழிக்குமொளிப் பாதம்.
(அ)

48. நினைக்கின்ற நெஞ்சத்து நினைப்பிற்கு முன்னாந்தான்
முனைக்கின்ற தானாவதன் மூலவொளிப் பாதம். (அ)

49. ஆண்டன்பர் நம்மகத்தே யறிவைமநட் டுறுமுலகின்
வீண்டம்பச் சாயமற வெளுப்பிக்கும் பாதம். (அ)

50. எங்கள்பரி தாபவிய லெய்த்தொழிய வெம்மகத்தே
கங்குல்பக லற்றொளிர்பெய்க் கண்ணுணை பாதம். (அ)

51. மிக்கசமு சாரவழல் வெஞ்சுரத்திற் பைஞ்சுனையாத்
தொக்கவுப சாந்தசுகந் துன்றுநிலைப் பாதம். (அ)

52. உருகுதியா னங்கெழுதன் னுண்மையடி யாரொடுசேர்த்
தருகதையே யற்றகய வாளனையாள் பாதம். (அ)

53. தத்தளியா நின்றமனச் சஞ்சலவாழ் வோயவருட்
சித்தொளியா வெண்ணுளஞ்சேர் சிவசொரூபப் பாதம்.
(அ)

54. சோதிக்க வேண்டு சொரூபஞா னுபவத்
தாதிக்க மோங்கவகத் தாண்டவருட் பாதம். (அ)

55. அண்மையிலு மண்மையென வான்றபர மான்மசுக
வுண்மைநிலை யுள்ளுறைப்ப வூன்றியமெய்ப் பாதம். (அ)

56. உயிர்ப்பை யடக்குமட யோகவிடர்ப் பாடொழிய
மயர்ப்பகையைச் செற்றுண்மை மாட்சியருள் பாதம்.
(அ)

57. அளப்பருமா தாரசிலை யானவகண் டாத்துவிதக்
கிளப்பருமோ ஞானுபவக் கிளரொளியாம் பாதம். (அ)

58. பேச்சல்லாப் பேச்சாகப் பிறங்குபர மோனத்து
மூச்சல்லா மூச்சாக முனைந்தியங்கும் பாதம். (அ)

59. கேளாத கேள்வியாக் காணாத காட்சியா
வேளாத வேள்வியா வீறுசுடர்ப் பாதம். (அ)

60. உலக வரங்கத் துருக்கொண்ட வேடத்து
நலம்பலவா றாக நடித்தருளும் பாதம். (அ)

61. அடையப்புக் காராதிப் பார்க்குஞா னாசார
நடைகற்பிக் கின்றமெய்ஞ் ஞானநடைப் பாதம். (அ)

62. உள்ளநன் ஞான வொளிக்கதிரா லுள்ளத்திற்
கள்ளவன் பாசமறக் காய்ந்தருள்செம் பாதம். (அ)

63. அவதரும மானஜீ வத்தருமம் பாழ்படக்காண்
சிவதருமந் தூடு செழித்தொளிர்செம் பாதம். (அ)

64. காலபா சத்தாற் கலங்குறு மென்னகத்து
மூலமோ கங்கெடுத்த முத்தியொளிப் பாதம். (அ)

65. அலையா தமைந்தமெய் யன்பரகத் தின்பவெள்ளம்
தொலையாது பொங்கித் தொடர்வுறச்செய் பாதம். (அ)

66. ஆகந் துகமா மவிச்சைசேர் சந்தாப
தாகந் தணியவுப சாந்திதரும் பாதம். (அ)

67. கல்லாப் புலையகங் காரக்கர்த் தத்துவங்கூ
ரல்லாப் பகற்றியென்னை யாண்டவருட் பாதம். (அ)

68. வண்மைசேர் சிந்தையான் மந்திர மெண்ணுவார்க்
குண்மைவாழ் வாக வுளத்தொளிரும் பாதம். (அ)

69. நண்ணு முளத்துமெய்ஞ் ஞான சொரூபமாங்
கண்ணுளார்க் கெங்குங் கலந்தொளிரும் பாதம். (அ)

70. சித்தி யனந்தஞ் சேர்ந்த சுரங்கமாத்
துத்தியஞ்செய் தான்றேர் துருவுமொளிப் பாதம். (அ)

71. சுந்தர வேடமாத் தோற்றிப் புறத்தகத்
தந்தரி யாமியா வன்பரையாள் பாதம். (அ)

72. விசாரஞா னத்தால் வெளிற்றகந்தை புற்கென்
றசாரமா வோயவொளி ரான்மவுருப் பாதம். (அ)

73. தஞ்சமென நம்பித்தற் சார்ந்தநல் லாருயிரை
அஞ்சலென நெஞ்சத்திற் கொஞ்சலுறும் பாதம். (அ)

74. குருபத்தி தானே பரபத்தி யாத்தன்
சொருபத்தி லோங்கும் பரமுத்திப் பாதம். (அ)

75. ஆசா ரியனை வருள்வடிவங் கொண்டுலவும்
பூசாரி யான பரஞ்சுடராம் பாதம். (அ)

76. ஐயந் தெளிந்த வபரோக்க ஞானத்தில்
வையம்பின் போகமுன் வந்தொளிரும் பாதம். (அ)

77. ஆவர்த் தனங்கோடி யாற்றுமெம் மந்திரத்தும்*
ஆபத் தனமா வமர்ந்தொளிரும் பாதம் (அ)

78. கண்ணுல மாகவருட் கண்ணுள ளேநிமணப்
பெண்ணுக வென்மதியைப் பெட்புறுத்த பாதம். (அ)

79. சொருபமே போதத் துலக்கமா மோன
குருபதே சத்தின் குறிக்கோளாம் பாதம். (அ)

80. பைக்கியத் துக்கநன் வைத்திய மாய்க்கொடுந்
தைத்திய மாயையைச் சாய்த்தொளிர் பாதம். (அ)

81. ஆடித்தான் பாடியகத் தடங்கிநா ளுனவே
தேடித்தான் கூடிமகிழ் திளைக்குமொளிப் பாதம். (அ)

82. பதியறி விற்பசு பாச மிரண்டும்
சிதைவுற வுண்மை திகழ்வுறும் பாதம். (அ)

83. தன்னிழப் பாமுப சாந்தியா லன்றிமற்
றென்னுழப் பாலு மியைந்திடாப் பாதம். (அ)

84. உதார சொருபத் தொளியா லுலகுக்கு
நிதானமா வுள்ளத்து நீடுறுமெய்ப் பாதம். (அ)

85. அவினசி யானஞா னுன்ம சொருபக்
கவினர் சிவலோகங் காண்பிக்கும் பாதம். (அ)

86. உண்மை யுணர்ச்சியா முள்ளத்து நீர்மையால்
வண்மைசேர் வாழ்க்கை வழங்குமும் பாதம். (அ)

87. மூடக் கருத்தையகன் மூலத்திற் போக்கநனை
நாடக் கிடைத்தசிவ ஞானவொளிப் பாதம். (அ)

---

*மந்திரத்தும் - மந்திரத்தையும் விட

88. சிற்பர மோனந் திளைப்ப மனோமயக்
கற்பனை நீக்கிக் கலந்தொளிர் பாதம். (அ)

89. பொய்யிற் கிடந்து புழுங்குமெய் யன்பர்க்கு
வையத் தருட்பிர வாகமாம் பாதம். (அ)

90. ஞானவடி வாகவக நண்ணுயிரே மாதிசய
மோனநடை யீண்டுபர முத்தியொளிப் பாதம். (அ)

91. வந்தவா றேதெனத்தன் மன்மமுறத் தேருளத்திற்
பந்தபா சங்கதையாப் பாறவொளிர் பாதம். (அ)

92. நிழற்றிரளா விந்த நிகிலமுந்தான் றோற்றி
யுழற்றிடுமா தாரபட வண்மையொளிப் பாதம். (அ)

93. ஊதார மானமன வுச்சாசங் கட்குமூ
லாதார மானவித யான்மவொளிப் பாதம். (அ)

94. மாலறிவே போல மயங்குவதா நூலறிவு
வாலறிவாந் தன்சொரூப வண்மையொளிப் பாதம். (அ)

95. ஓதப் புரோதமா வூடுருவு சூக்குமசற்
போத சொருபவொளிப் பூரணமாம் பாதம். (அ)

96. தெய்வசம் பத்துச் செழித்தமெய் யன்பர்க்குக்
கைவசக்கார் நெல்லிக் கனிரசமாம் பாதம். (அ)

97. பரிசித்தார் தம்முணர்விற் பரிசவே திக்கிணையாப்
பரசிவத்து வெள்ளமெழப் பாய்விக்கும் பாதம். (அ)

98. பேரவா வானசிவப் பேறெனக்கா ராணவப்பே
யாரவா ரந்தீ ரமைதிதரும் பாதம். (அ)

99. கடலெழுந்த காலையிளஞ் செங்கதிர்போ லென்றன்
னுடலெழுந்த பொன்மயமா மொண்பரிதிப் பாதம். (அ)

100. சிற்பரா வத்தையொளி சேரவுளத் தாணவங்கூர்
கற்பறு வத்தையிருட் கால்கடியும் பாதம் (அ)

101. வந்துவாடி வானதிரு வாணமென்ன வான்போதி
சத்துவன்போ திந்தபர தத்துவமாம் பாதம். (அ)

102. பொய்ப்பிரமா தப்புன் புலக்காட்சிக் கற்பனைதீர்
சுப்பிரதீ பத்தினூருந் தோற்றிடுமெய்ப் பாதம். (அ)

103. அல்கூர்ந்த மூடமதி யானவகங் காரவொளி
நல்கூர்ந் திடச்சுடர்பெய்ந் ஞானவுருப் பாதம். (அ)

104. புரோதயநீ ராமத்தர் புந்திசெய்யும் பூட்கையரை
விரோதயராத் தன்னொளியில் வாழவைக்கும் பாதம்.
(அ)

105. பொன்மயமாப் போந்தபல பூடணம்போல் யாவுந்தன்
சின்மயமாச் சேர்ந்தவொரே செம்பொருளாம் பாதம்.
(அ)

106. உலையாத மாட்சியுடை யுண்மையொளிச் செம்மலையை
நிலையாவென் னுள்ளே நிறுவியபொற் பாதம். (அ)

107. புத்திக்குப் புக்ககமா முத்திக்கு வாழ்வகமாச்
சித்திக்குத் தாயகமாச் சேர்ந்தசெழும் பாதம். (அ)

108. பிறப்புப் பிணிமூப்புச் சாக்கா டெனும்பேச்சுக்
குறப்பா முடலைநந்தை யொளிக்குமொளிப் பாதம். (அ)

109. நடப்பது நடக்க கிடப்பது கிடக்கநன்
கிடப்படும் புத்திதன் னிடத்தெனும் பாதம். (அ)

110. அருள்வீ தியில்வந் தபரிமித வுண்மைத்
தெருள்விசு நர்த்தனஞ்செய் சிற்பரமாம் பாதம். (அ)

111. நீக்கமிலாத் தன்சொரூப நிட்டைசேர் நெஞ்சத்தே
யூக்கமிகத் தான்குடிகொண் டோங்குதிருப் பாதம்.
(அ)

112. பேதஞ்சேர் மோகமறப் பேரவிளங் கத்துவித
போத சொரூபமாப் பொங்குதிருப் பாதம். (அ)

113. உட்டுறவோர் தம்மோ டுறவுபா ராட்டுவதாய்ச்
சுட்டறிவைச் சுட்டுச் சுடர்சொருபப் பாதம். (அ)

127. என்மூல மாக விருந்தொளிருந் தானேநான்
றன்மூல மாகவுந் தங்குறுமெய்ப் பாதம். (அ)

129. பற்பல் சமயத்தோர் பண்ணும்பல் சாதனையும்
சிற்பரமாந் தன்னைத்தாஞ் சேர்தற்காம் பாதம். (அ)

129. கன்மத் தொடர்பாங் கலக்கப்பாழ்ங் கற்பனைசே
ருன்மத்த மாக வுதறுமொளிப் பாதம். (அ)

130. துணியுற் றிடற்கோர் துவிதமில் சித்தாய்
முனிவற்ற வுண்மை முனைவடைசேர் பாதம். (அ)

131. வன்னிபோ லூற்றார் மனங்களெலாந் தன்மயமாத்
துன்னியே யோங்கச் சுடர்விடுமெய்ப் பாதம். (அ)

132. உடும்புபோ லூன வுடம்பையே பற்றி
யிடும்பைகூர் சிந்தையையெற் றின்பவொளிப் பாதம்.
(அ)

133. ஆட்சியிற் பட்டவர் மீட்சியில் வீட்டுறு
மாட்சிசே ரின்ப மடுப்பிக்கும் பாதம். (அ)

134. அடியார் பெருமைக் களவில்லை யாகப்
படிமே லவரைமிப் பாராட்டும் பாதம். (அ)

135. சிந்தா மணியாகச் சிந்திப்பார் சிந்தையிலே
சிந்தா வருட்செல்வஞ் சேர்ப்பிக்கும் பாதம். (அ)

136. அயலைக்காண் பார்வையே யான்ம சொரூபத்
தியலை மறைக்க விருந்தொளிர் பாதம். (அ)

137. பாதந் தனிலே படிந்து கிடக்கவென்
போதந் தனையுட் புகுவித்த பாதம். (அ)

1[illegible]8. இதயவெளி யூடுமே ரின்பவளித் தேனூற்
றுதயவொளி யாமென வுரோமாஞ்சப் பாதம். (அ)

139. அடிச்சோதி யாலகில மாவரித்துத் தேவர்
முடிச்சோதி மங்க முறுத்தகற்ப் பாதம். (அ)

140. பச்சோந்தி போலப்பல் வண்ணஞ்சேர் மாயையினால்
பொச்சாந்த தன்சொரூபம் போதஞ்செய் பாதம். (அ)

141. அச்சாணி யானகாந் தாசலமாத் தானகத்துற்
றச்சா டனம்போ லுலகியக்கும் பாதம். (அ)

142. அவதன்ம மான வகந்தையறு வாழ்க்கையே
சுவதன்ம மாகத் துலக்குசுடர்ப் பாதம். (அ)

143. நெஞ்சமே யொப்பி நிவேதனமாக் கொள்வதன்றி
எஞ்சியதை யொவ்வா தெதிர்மறுக்கும் பாதம். (அ)

144. ஞாலத்தை முற்ற நலியரக்க னாமகந்தை
மூலத்தை யெற்றி முழு மோனங்காண் பாதம். (அ)

145. உள்ளதே சற்று மொளியாதே யுள்ளபடி
தெள்ளிதா வோதுமிக வெள்ளையுளப் பாதம். (அ)

146. ஜீவபோ தங்கெடவே செக்கரின் பல்லதுமெய்த்
தேவபோ தச்சீர் தெரித்திடாப் பாதம். (அ)

147. அருள்வலியா லான்ற வமைதிசே ருள்ளத்
திருள்கெடவே யுண்மை யிலக்குமொளிப் பாதம். (அ)

148. ஊனுடலே நின்னுருவா வுன்னி யுணர்வுருநீ
ஏனுடலே சேர்ந்தா யெனக்கேட்கும் பாதம். (அ)

149. நானேநீ யாக நடக்கையைநன் காய்ந்தறியா
தேனோங் குதியென் றிசைத்துணர்த்தும் பாதம். (அ)

150. தத்தோ மசியார் ததிங்கணதோ மென்றகந்தை
செத்தோமாத் தன்சொருபஞ் சேர்விக்கும் பாதம். (அ)

151. அம்மா வதிசயப்பே ரானந்தந் தான்சுரக்கச்
சும்மா பொருந்திடெனச் சொன்மவுனப் பாதம். (அ)

152. யோக சமாதிநின் னுண்மைச் சொரூபமே
சாகசமா மாற்றும்பல் சாதனையென் பாதம். (அ)

153. தெள்ளியார் போலே திரிந்துழலுங் குன்றுமனக்
கள்ளியார் காணப்பல் காவதமாம் பாதம். (அ)

154. நாடப் படுவதுதன் ஞான சொரூபமெனப்
பாடப் படுவதுந்தன் பைம்புகழாம் பாதம். (அ)

155. விலகியதா வெண்ணியவென் பேதைமைக்கு
[வெட்கச்செய்
துலகியலோ டொப்ப வொழுகுவித்த பாதம். (அ)

156. ஞானக் கனிரசமா மோனக்கை வல்லியமென்
பானத்துக் கென்றே வடித்தளித்த பாதம். (அ)

157. வாழ்வுதாழ் வுக்கென் மனத்தைப் பறிகொடா
தாழ்வலியைச் செற்றிதயத் தூன்றுவித்த பாதம். (அ)

158. தனக்கேநா ளுளாச் சரிப்பித்த வாற்றுன்
மனக்கேத முற்ற மடிவித்த பாதம். (அ)

159. குலிங்கமே போலுங் குடிலனைத்தன் போதவருட்
புலிங்கவொளி யாலிதயம் பொங்குவித்த பாதம். (அ)

160. பரவுமே தக்கசிவ பத்தரக வெம்பகையைச்
சரபமே போலடர்க்குஞ் சௌரியஞ்சேர் பாதம். (அ)

161. தன்னினைவே யன்றிமற் றெந்நினைவுஞ் சாராமற்
றன்னினைவே யென்னுருவாத் தூங்குவிக்கும் பாதம்.
(அ)

162. வல்லையருட் பேரின்ப வாழ்க்கையுளத் தன்பருறத்
தொல்லையிருட் காரகந்தைச் சூர்தடியும் பாதம். (அ)

163. விக்கேபக் கோட்டை விநாசமுற வாவரண
மைக்கே வலத்தை மடிக்குமொளிப் பாதம். (அ)

164. திட்டையே யன்றியொன்றைச் சட்டைசெய்
[யாதவர்க்குப்
பட்டயவாட் போதப் பரிசளிக்கும் பாதம். (அ)

165. நல்ல விசித்திரங்காண் ஞாலத் தேவிச்சையிருட்
பொல்லாமை யென்னவிறும் பூதுகொளும் பாதம். (அ)

166. ஏந்திரமா வேழுலகுஞ் சுற்றுஞ சுழற்சிக்குக்
கேந்திரமா மூண்மைக் கிளரொளியாம் பாதம். (அ)

167. தொற்றுநோ யாகத் தொடர்தலா லேழ்பிறப்புந்
தொற்றுமகப் பற்றைத் துறத்தியெனும் பாதம். (அ)

168. தன்னிலேயிற் பேர்ந்தே தவறுடைத்தாத் தோற்றுநிழ
லின்னுலகைப் பற்றலறி வீனமெனும் பாதம். (அ)

169. அறிவுருவைப் பற்ற தயலுருவைப் பற்றல்
வெறியுருவப் பேதைமையின் விந்தையெனும் பாதம்.
(அ)

170. சுதேசமாந் தன்சிச் சொரூபதே சஞ்சேர்
விதேசவா சத்தை விலக்கென்னும் பாதம். (அ)

171. வரத்துப்போக் கற்ற வளவிறதா மூண்மைப்
பரத்திற் படிந்து பதைப்பொழியென் பாதம். (அ)

172. மோனத்தை யன்றி முடிவின்றுச் சிற்பரநல்
வானத்து நோக்கமே வாய்ப்புடைத்தென் பாதம். (அ)

173. ஐம்புலத்தின் சுட்டுக் கவகாச மற்றவொளிச்
செம்புலமா வோங்குசிற் றம்பலமாம் பாதம். (அ)

174. சிற்குறியா லத்துவிதச் செம்பொருளைத் தேற்றிமுழுத்
தற்குறியா நீடுபர தத்துவமாம் பாதம். (அ)

175. விரிப்பதிலா துள்ளதைமேன் மேற்சுருக்கி
[யோர்மையுறத்
தெரிப்பதிலே சாமர்த் தியநயஞ்சால் பாதம். (அ)

176. அண்டளிக்க லாகாப்பே ராழத்த தாயெவரும்
கண்டெடுக்க வொண்ணுக் கனகமணிப் பாதம். (அ)

177. கண்டாரைத் தன்பாலே கட்டுவது போன்றவநட்
பண்டார மானகவிப் பார்வைசேர் பாதம். (அ)

178. நெஞ்சிற் கலந்தசிவ நேயர்க் கிலங்கொளியாய்
வஞ்சிக்க லுற்றுரை வஞ்சிக்கும் பாதம். (அ)

179. அரும்பாடு பட்டுமய லார்க்கரிது தந்ராத்
துரும்பான நாயேனைத் தோய்ந்தவருட் பாதம். (அ)

180. சிவசத்தி யொன்றுபடச் சேர்ந்தமணட் பாதம்
அவசத்தி லென்னையணைந் தாண்டவருட் பாதம். (அ)

181. வீறுபடு சிற்பரத்து வீரியமா வென்னுளத்துத்
தேறபடு ஞானவொளித் தேக்கமுறும் பாதம். (அ)

182. இல்லையென்று தன்பர்க் கினிதருள்வ தாகவுளந்
தெல்லையிலாக் கண்ணென விருந்தொளிரும் பாதம். (அ)

183. பொற்புநல மிக்கவுறு பூதிநலம் பொங்கவருட்
கற்புநடை நாயேற்குக் கற்பித்த பாதம். (அ)

184. மெய்யன்பு பூண்டு விளங்கடியர் பாற்பிறர்ச்செய்
குய்யம் பதைப்பக் குலைக்குமொளிப் பாதம். (அ)

185. பன்மையெனுஞ் சொல்லும் பதைபதைப்பத்
[தன்முகத்துத்
தன்மெய் யொருமையாச் சஞ்சலங்கொல் பாதம். (அ)

186. மூலாகங் கார முடிந்தமுழு மோனமே
தோலாத சுத்த சொரூபமெனும் பாதம். (அ)

187. புத்தி தெளிந்தவெறும் போதமே யான்றபர
சித்தியென வுள்ளத்திற் சேர்த்தவருட் பாதம். (அ)

188. போதசா மாரியமே புத்துருக்கு நெய்யெனப்பல்
வேதசா ரத்தையெடுத் தீதலுடைப் பாதம். (அ)

189. விகற்பங் களைத்தோற்று விக்குமனம் வெட்க
அகற்பமாந் தன்மெய் யறிவிக்கும் பாதம். (அ)

190. வாலறிவாந் தன்சொருப மாட்சிபெற வஞ்சமண
மாலறிவைப் பொன்றவதை வைரவொளிப் பாதம். (அ)

191. நந்தினியே போலமெய்ஞ் ஞானவருட் சீரமுதம்
தந்தெனையாட் கொண்ட தயாபரமாம் பாதம். (அ)

192. ஒர்ப்பதாம் புத்திமுடங் குற்றமடப் பேதைக்கு
வேர்ப்பலா வாக விளைந்தகனிப் பாதம். (அ)

193. வரந்தருமெய்ஞ் ஞானவருள் வள்ளலாய் வாழ்க்கை
நிரந்தரமாந் தன்சொருப நேர்ந்தளித்த பாதம். (அ)

194. பத்தினிப்பெண் ணுகப் பயின்றநான் கற்புமுறை
பொய்த்தினிப்போ காதியல்பாப் பொங்குவித்த பாதம்.
(அ)

195. சிவரசமா வுள்ளத்திற் சித்தோப சாந்த
நவரசமா மேகரச நல்கியபொற் பாதம். (அ)

196. ஈடு மெடுப்புமில்பே ரின்பமதோன் மத்தமுளங்
கூடுவதா மெய்யுணர்வின் கூர்மையருள் பாதம். (அ)

197. பேதரசங் கற்பனையாப் பேர்ந்தொழிய நிர்விகற்ப
போதரச மென்னுளத்திற் பொங்கவருள் பாதம் (அ)

198. தனக்கடிமை பூண்டநான் சஞ்சலம்பின் சாரா
தெனக்குடைமெய் வைப்பா விதயமொளிர் பாதம். (அ)

199. அருட்பாட்டுப் பாடவழி யாக்கியவென் னுவை
மருட்பாட்டி னின்று மடங்குவித்த பாதம். (அ)

200. ஆரா தனையா வருட்பாட்டுப் பாடலைநன்
கேராள மாக வியல்வித்த பாதம். (அ)

201. எனக்கென்ன வேண்டுமினி யிஃதன்றி யென்ன
எனக்கின் னமுதரச வாக்கீந்த பாதம். (அ)

202. நாணுங்கோ ளிப்புன் னவையுலகை ஞானவுருக்
காணுங்கோ ளென்னவருள் காண்பிக்கும் பாதம். (அ)

203. வாழ்க்கைமூ லத்து வயங்கொளியைக் காணது
பாழ்க்கையே யாருயிர்த்தூர்ப் பாக்கியமென் பாதம். (அ)

204. வண்மைசே ருண்மை வயங்கொளியாந் தன்சொருப
நுண்மைநோக் கந்தருங்கூர் நோக்கமுடைப் பாதம்.
(அ)

205. விடுபெற வேண்டுமுயிர் மிச்சை யவிச்சையறத்
தேடியுற வேண்டுவதாஞ் சிற்பரநற் பாதம். (அ)

206. ஞானவுயிர் வேண்டு நவையனைத்துந் தங்குமொளி
சால வழங்குதயா சந்நிதிசேர் பாதம். (அ)

207. காமருபூங் கோலக் கவின்சேர் சிவசொருபத்
தூமருதெய் வீக சுந்தரஞ்சேர் பாதம். (அ)

208. போதவொளி யாலிதயம் பொங்கும் பரவெளியிற்
பேதமனப் பேயகந்தைப் பேச்சிலையாம் பாதம். (அ)

209. மூடிக் கிடந்தமூ லாவரண மோகமறச்
சாடித் திறந்துசிவ தாண்டவஞ்செய் பாதம். (அ)

210. பொய்வழியிற் புக்குழலும் புத்தியைச்செற் [றுண்முகமா
மெய்வழியிற் கூட்டியதெய் வீகவொளிப் பாதம். (அ)

211. சிதநப் படிற்றுமலச் சேர்க்கையாம் பந்தமற
முத்தப் பரசிவத்தே மூட்டுமொளிப் பாதம். (அ)

212. பொய்த்துவிதக் கற்பனைகள் பொங்குதமகங் காரந்தீ
ரத்துவித போதத் தமைதியாம் பாதம். (அ)

213. முக்குணமா மோகமன மோட்டெருமை மூச்சுமுட்டப்
புக்குணவாத் தான்புசிக்கு நிர்க்குணமாம் பாதம். (அ)

214. வேண்டா விருப்பொடுநன் றூற்றலினு மிக்குயர்வு
வேண்டா ததனையற விட்டொழிவென் பாதம். (அ)

215. செய்திடநீ நன்றென்று சிந்திக்கி லாங்கதனை
ஐதுடனே யென்றவள வாற்றுதியென் பாதம். (அ)

216. என்றுமே யில்லாத நாளையெனும் பொய்நாளை
என்றுமே விட்டறிசி யின்றையெனும் பாதம். (அ)

217. காலமே நின்சொருப மாகக் கடவதாற்
காலநினை வேயுனக்குக் காலனெனும் பாதம். (அ)

218. அதிநுட்ப மாமெய் யறிவுரைதா மெண்ணிலவா
மதியொட்ப மில்லார்க்கு வடித்துரைக்கும் பாதம். (அ)

219. தன்னை யுணர்வதே மெய்யுணர்வாச் சால்வதன்றிப்
பின்னையுணர் வெல்லாம் பிழையுணர்வென் பாதம். (அ)

220. தன்னையே தேருச் சலவறிவு மேதைபோ
லென்னையோ கண்டறிவென் றெள்ளுநகைப் பாதம். (அ)

221. அடங்கிக் கிடத்தியே லான்றமைந்து நின்சொருபந்
துடங்குலக முற்றுமுனக் குட்படுமென் பாதம். (அ)

222. வஞ்சவெளித் தோற்றமா வைகுலக மெல்லாமுன்
னெஞ்சவெளிக் குள்ளடங்கி நிற்குறுமென் பாதம். (அ)

223. ஆவாநின் மாட்சி யளப்பரிதா லோர்ந்தனையேற்
சாவாத நின்சொருபத் தத்துவமென் பாதம். (அ)

224. காண்பவைகள் யாவுமனக் கற்பனையா மங்கவவை
காண்பவனைக் கண்டு கருத்தடங்கென் பாதம். (அ)

225. சொல்லாலே மட்டுந் துலங்குவதன் றுண்மையுனைக்
கல்லாதே யுன்னுளத்திற் கல்லவென் பாதம். (அ)

226. தன்னையறி வாதலகந் தானேதா னவிளங்கப்
பின்னையகங் காரமறப் பேர்தலெனும் பாதம். (அ)

227. உனக்கென்ன கேடுகரத் தூழ்தருகூ முண்டு
தூனற்குன் சொரூபசுகத் தூக்கமெனும் பாதம். (அ)

228. தனைக்கருத லாவதுப சாந்தவறி வேயா
நினைக்கமறக் கொண்ணு நிஜசொருபப் பாதம். (அ)

229. வல்லவா றெல்லாந்தன் மாட்சியைநான் வாழ்த்தலே
நல்லவா ராதனையா நன்றுவக்கும் பாதம். (அ)

230. என்கடமை யெல்லா மிடலேதன் மாட்டெனக்கு
நன்கடமை யாக நயந்துரைத்த பாதம். (அ)

231. யானவனுக் கேற்ற கருவியெனுஞ் சிந்தனையுந்
தானகற்றிச் சும்மா சமைதியெனும் பாதம். (அ)

232. நல்லசிவ ஞானமல தில்லைபவ வன்பிணியைக்
கொல்லசியென் றுள்ளுளவு கூறுமொளிப் பாதம். (அ)

233. சிவஞான மாவதுதன் ஜீவத் துவவகந்தை
அவஞான மாகவக முணர்வென் பாதம். (அ)

234. காரங் கழன்றவகங் காரத்தின் போதமே
விரம் பொருந்துங்கூர் வித்தகமென் பாதம். (அ)

235. எனக்கன்றி யான்படைத்த விவ்வுலக பாரம்
நினக்கென்ன வந்த நினைப்பெனக்கேள் பாதம். (அ)

236. அந்த ரிபாமியெனை யாய்ந்தறிந்தா லாங்கதனுக்
கெந்த நியாயமுநிற் கில்லையெனும் பாதம். (அ)

237. நாடகத்தை விட்டகத்தே நாடகத்தை நானுனக்குக்
கேடகத்தே யின்ருக்காக் கின்றேனென் பாதம். (அ)

238. என்னருளை நாடா யிதயத்தே யென்பொறுப்பா
வுன்னிருளை யோட்டியொளி காட்டுவலென் பாதம். (அ)

239. அயர்ந்துவெம் பாழி லமிழ்ந்துபடா துள்ளத்
துயர்ந்தமெய்ஞ் ஞான வுறுதிதரும் பாதம். (அ)

240. வாழ்வுசிவ மாகவொளி வைகுறுதன் மெய்யுருவிற்
ருழ்வுதவ றுனமனச் சஞ்சலமென் பாதம். (அ)

241. ஏனையவெல் லாமிக் கிளிவரலென் றன்பருறு
மானியமாத் தன்சொருப வானளிக்கும் பாதம். (அ)

242. நீடுபரஞ் சோதியா நின்றபரந் தாமநிறை
நாடுபெறக் கூட்டுறுமெய்ஞ் ஞானவொளிப் பாதம். (அ)

243. என்னென்ன செய்யினுந்தா னன்னவெலா
[மிட்டமெனக்
கென்னுமனப் பான்மையினி தீந்தவருட் பாதம். (அ)

244. மவுனப் பாத்தை மனங்கூர்ந் துளத்துட்
கவனித் தறிதலே கல்வியெனும் பாதம். (அ)

245. அந்தமெய்க் கல்வியறி வாற்பொய் யனர்த்தமெலாஞ்
சிந்துமுப சாந்தி செழிப்புறுமென் பாதம். (அ)

246. அந்தரங்கங் களோ யறிவன்றி முப்புடியுந்
தொந்தங்கள் யாவுமுழுச் சூதென்னும் பாதம். (அ)

247. அறிவின் விலாசத் தகப்படுமவ் வெல்லாமவ்
வறிவின் சொருபமே யாவறியென் பாதம். (அ)

248. அறிவைச் சலிக்கவிடா தாணியடித் தாற்போல்
அறிவின் சொரூபத் தழித்தொழியென் பாதம். (அ)

249. அகம்படிந் தாழ்ந்த வறிவளவுக் கேற்ப
முகம்புரிந் தூறுங்கள் மோதயெனும் பாதம். (அ)

250. நெஞ்சுருவப் பெற்றேளிர்தன் னிட்டானு பூதியாற்
றன்சொருபஞ் சார்ந்தோரே சான்றோரென் பாதம். (அ)

251. சிற்பரா சத்தியருட் சீரொளியா லன்றிமனக்
கற்பனை சத்தி கடப்பரிதென் பாதம். (அ)

252. ஆவேசம் போல வருள்வாக் கெழுந்திடவென்
ஞவேறி நின்ற நறுங்கமிழ்ப்பொற் பாதம். (அ)

253. முச்சத்தி பேத முடக்கமுற யாவுமொரே
சிச்சத்தி தானச் செழித்தொளிர்பொற் பாதம். (அ)

254. ஞத்துவஞ்சேர் முப்புடிகா நட்டமாப் பொன்றவெறுஞ்
சித்துவமாந் தன்சொருப திட்டிநிறை பாதம். (அ)

255. மட்டிலாக் காமாந்த மந்தமாய்த் தீப்புலத்தில்
விட்டிலாத் துஞ்சவுயிர் விந்தையெனும் பாதம். (அ)

256. என்செயலா வெண்ணி யியற்றுபவு முண்மையிலே
தன்செயலாத் துன்றுமுழுத் தத்துவமாம் பாதம். (அ)

257. நெஞ்சிலகங் கார நினைப்பெழா தன்றுசின
வஞ்சினந்தான் கூறி வதைத்தமறப் பாதம். (அ)

258. ஊடாடு வஞ்ச வுலகியற்கூத் தாட்டத்திற்
கூடா தெனையுளத்திற் கூடுவித்த பாதம். (அ)

259. விரியாசத் திக்களிசேர் வீணரைமீப் போற்றும்
பரியாசத் தின்குறியாப் பல்லிளிக்கும் பாதம். (அ)

260. அடங்குமனப் பான்மை யமரருட்கொண் டுய்க்கும்
அடங்காமை யாரிருள்வா யாழ்த்துமெனும் பாதம். (அ)

261. பருவந்து தன்னடியர் பாழ்படா வாறு
கருவந் தலைசாயக் கண்டிக்கும் பாதம். (அ)

262. கொள்வதூ மன்றிக் கொடுப்பதூமாம் பேதமற
வுள்ளுவதே போதுமென வோதுமொளிப் பாதம். (அ)

263. ஓர்ப்புணர்வான் மெய்ப்பொருளை யோர்வித் [தடியரைமெய்ப்
பார்ப்பனராப் பண்ணுமொளிப் பார்வைசேர் பாதம். (அ)

264. சமட்டியாம் பாதம் வியட்டிமயல் சாய
வமட்டியென் போதத்தை யார்த்தழித்த பாதம். (அ)

265. எம்மட்டும் பேத மியலுமோ நின்மேறைக்கத்
தம்மட்டு நிட்டை யவசியமென் பாதம். (அ)

266. மூளையிலே முட்டுவிட மோகமற வென்னுளத்தில்
வேளையிலே விஞ்சமுத விஞ்சையொளிப் பாதம். (அ)

267. ஒராதார மாக வுலகனைத்துந் தாங்கி
நிராதார மாக நிகழ்சொருபப் பாதம். (அ)

268. நிச்சிந்தை யாகவென் நெஞ்சிற்பே ரின்பநிறை
சொச்சந்த மான சொருபவொளிப் பாதம். (அ)

269. அச்சந் தவிர்ந்தபர மாத்துவித நிட்டைதரு
சச்சந்த மானவுப சாந்தவொளிப் பாதம். (அ)

270. காணுந் துவிதமனக் காட்சியெலாங் கற்பனையா
நாணுந் தரத்ததா ஞானவொளிப் பாதம். (அ)

271. கற்பனை பேதக் கதாரசங்க ளெல்லாந்தன்
சொப்பன வத்தையிலாத் தூங்குமொளிப் பாதம். (அ)

272. துரியமெனுஞ் சொல்லே சொருபத்துத் தூங்கப்
பிரியுமனு தீதப் பிரம்மபதப் பாதம். (அ)

273. ஈங்கேயிப் போதே யிருப்பொளியைக் கண்டுளத்துத்
தூங்கே யெனப்பரிந்து சொல்கருணைப் பாதம். (அ)

274. சும்மா விருப்பதே சுத்தமெனு முண்மைநிலை
அம்மா வனுபவங்கூர்ந் தாய்ந்தறியென் பாதம். (அ)

275. நாடாது நாடுமக நாட்டமே தன்னுருவிற்
கோடாத செம்பொருளைக் கூட்டுமெனும் பாதம். (அ)

276. தன்னை நன் கோர்த்துணரத் தன்னுருவின் போதமலா
தின்னென் றிரகசிய மென்றுரைக்கும் பாதம். (அ)

277. நானு ரெனக்கணைத்தா னன்று வுசாவலன்றி
ஏனோரைக் கேட்டவா லென்பயனென் பாதம். (அ)

278. வெறும்போத மாக விளங்குறுமவ் வுண்மை
உறும்போதே யுன்னுருவா விரண்டறுமென் பாதம்.
(அ)

279. வெள்ளவரு ளாக வெளிப்படுவ தன்பருளத்
துள்ளபொரு ளாமவ் வுணர்வெளியென் பாதம். (அ)

280. ஆரம்ப சாதகரே யாயினுமெய் யன்புபட்டாற்
கூரம்பு போற்கடிதிற் குறிக்கொளருட் பாதம். (அ)

281. ஒன்றுந் தெரியா துளறுவாய் மூடனைக்கொண்
டென்றென்றும் பொன்று வியல்வழுத்தும் பாதம். (அ)

282. தேன்மடை சாலத் திறந்தா லெனவிதயத்
தான்மனோ னைந்த வாற்றெழுக்காம் பாதம். (அ)

283. வெருள்வா தனையால் விதிர்த்துயிர்க்கு மன்பர்க்
கருள்வாரி யானபர மானந்தப் பாதம். (அ)

284. நிரதிசய வின்பமா நீடுமுப சாந்தப்
பரவிஜய மானவருட் பார்வைசேர் பாதம். (அ)

285. பார்வையாந் தன்சொருபப் பண்பினு லன்பரகப்
போர்வைப் படாங்கிழியப் பொங்குமொளிப் பாதம். (அ)

286. கடுக்கென்று பல்லைக் கடித்துநமன் கவ்வின்
வெடுக்கென் றுயிரை விடுவிக்கும் பாதம். (அ)

287. சேவியமாந் தன்கழலைச் சிந்திப்பார் மேற்பாயிற்
றுவியமன் கண்பிதுங்கச் சாடுஜயப் பாதம். (அ)

288. சரணு கதியொத்த சாதனம்வே றின்றுக்
கருணு லயமாக் கவல்கமையும் பாதம். (அ)

289. வெகுண்டெழுந்து பொல்லா விலங்குந்தி தாற்று
தகண்டமா மோனவல் லாண்மைசால் பாதம். (அ)

290. விளையாட்டுப் பேச்சு மிழற்றிச்சில் லன்பர்
களையாற்றும் பிள்ளைக் களிசான்ற பாதம். (அ)

291. மறவிசூர் மெய்ப்பொருளின் வைப்பகத்தை ஞானத்
திறவுகோ லாலே திறப்பிக்கும் பாதம். (அ)

292. ஏகமெனப் பட்ட வெவற்றுக்குஞ் சார்வழியாம்
பேதமனப் பான்மை பிரிந்தசம பாதம். (அ)

293. சொந்தசொரு பத்தே துவிதமயல் சற்றுமின்றுப்
பந்தமுத்தி யென்றமற்ற பார்வைகிளர் பாதம். (அ)

294. மோகப் புணர்ப்பா முடிச்சுவிடு பட்டதுமற்
றேக சொருபமா வெங்குமொளிர் பாதம். (அ)

295. நன்றுசெயற் கேற்றமிக நல்லநா ளாய்ந்தறிந்தால்
இன்றுபோ லென்றுமே யில்லையெனும் பாதம். (அ)

296. வாய்ப்புழியோர் சற்றும் வழுக்காதே நன்றாற்றின்
யாப்புடைத்தா வாணு ளியலுமெனும் பாதம். (அ)

297. சரியையே சாதனத்தைத் தாங்கலாற் சோர்வற்
றுரியவா றுங்கதனை யோம்புதியென் பாதம். (அ)

298. அருளமுன் னிட்டே யனைத்துநீ யாற்றின்
மருளா மகந்தையற மாறுமெனும் பாதம். (அ)

299. தன்சொருபஞ் சற்றுந் தவறாத ஞாபகமே
விஞ்சைபெறு மெய்ஞ்ஞான வெற்றியெனும் பாதம். (அ)

300. விட்டுவழி யான விசாரமன்றிப் பல்வேறுங்
காட்டுவழிச் செல்வோர் கலங்குவரென் பாதம். (அ)

301. ஆகமத்தை விட்டுஞா னுன்ம சொருபத்தை
ஓர்கவனத் தோடுள் ளுசாவுதியென் பாதம். (அ)

302. ஆன்ம சமாகமமே யாகமத்தோ டாரணத்தும்
தான்மருவத் தக்கதாச் சால்புறுமென் பாதம். (அ)

303. வண்மைசேர் முத்தி வழங்குவது நானுரென்
றுண்மை யுசாவித்தன் னுட்புகலென் பாதம். (அ)

304. விசாரவழி யானவொரே மெய்வழியைப் பற்றி
உசாவியுற வேண்டுவதுன் னுண்மையெனும் பாதம்.
(அ)

305. உண்மைக் குருப்பெயரென் றென்றுமிலை
[யவ்வொளியே
துண்மை யெவற்றுமிக நுண்ணிதெனும் பாதம். (அ)

306. எத்தனைமற் றோதினுநா னெத்தனைமற் றெண்ணினுநீ
அத்தனையே யன்றி யவதியின்றென் பாதம். (அ)

307. ஓர்மையுறத் தன்மெய் யுசாவிமன மோய்தலே
சீர்மைபெறு மோர்மொழியின் செம்பொருளென்
[பாதம். (அ)

308. இரம்மியமாந் தன்சொருபத் தேமநிலை தானே
பிரம்ம சமாதியெனப் பேணுதியென் பாதம். (அ)

309. காணப் படுவிடயக் கண்கூட் டனுமிக்க
மாணுடைத்தாங் காண்பான்றன் மாட்சியெனும்
[பாதம். (அ)

310. என்று மொருபடித்தா வெஞ்சா தியல்வதுதன்
வென்றிசே ருண்மை விளக்கமெனும் பாதம். (அ)

311. உணர்வொளிசே ருண்மையுருத் தானயி னன்றி
உணர்விடய போதமே யொண்ணுதென் பாதம். (அ)

312. அத்துனைக்கண் கூடாந்தன் றன்மசொரூ பானுபவம்
மித்தையே போறலென்ன விந்தையெனும் பாதம். (அ)

313. நினைப்புமறப் பாதி நிகழ்ச்சியெலாங் காணின்
மனைப்புணர்ப்பல் லாதேதன் மாட்டிலையென் பாதம்.
(அ)

314. மனத்துருவா வுன்னை மகித்துநீ யேனை
அனைத்து விகற்பமுங்கண் டஞ்சுதியென் பாதம். (அ)

315. அறிவோ டறியாமை தாமுந்தா னல்லாத்
துறுமதிக்கே யன்றித்தன் சொந்தமன்றென் பாதம்.
(அ)

316. ஜகஜீ வனமான சஞ்சலந்தீ ரான்ம
சுகஜீ வனவாழ்க்கை தோய்வித்த பாதம். (அ)

317. அறிவாய தன்னை யறியவோ வன்றி
யறிவிக்க வோவே றறிவிலையாம் பாதம். (அ)

318. நஞ்சையமு தாக நடப்பிக்கும் பாதமென்
னெஞ்சை யருள்வெளியா நிறுத்த பாதம். (அ)

319. துன்னுமனப் புந்தியொளி தோன்றிமறை [பொய்யொளியாத்
தன்னொளியோ மிக்க சதோதயமாம் பாதம். (அ)

320. ஊக்க மொடுங்கு முபசாந்தி தன்னியல்பாத்
தேக்கமுற வாக்கும்கு திண்டிறல்சேர் பாதம். (அ)

321. பரிசோதித் துத்தன் பரிசுணரார் சித்தப்
பிரசாதத் தின்பம் பெறலரிதென் பாதம். (அ)

322. புலக்காட்சி யாறுவேறும் போதவொளிக் கண்ணு
நிலைக்காட்சி யான நிஜக்காட்சிப் பாதம். (அ)

323. இளிச்சிடுமே னைப்புலத்தை யென்னுறுவா ருள்ளே
பளிச்சிடுசற் போதப் பரஞ்சோதிப் பாதம். (அ)

324. உலகிய லை முற்றவிழுங் குண்மையொளி சேர்நன்
னிலவியலென் னெஞ்சியலா நிறுவியபொற் பாதம். (அ)

325. கடாவுறுமுன் சங்கைகளின் கண்டனமா மோனம்
நடாவுறுதன் சந்நிதியின் ஞானவொளிப் பாதம். (அ)

326. பரக்கமுத மோங்கு பரந்தாமந் தான்மிக்
கிருக்குமிட மெபென் றிலக்குமொளிப் பாதம். (அ)

327. சொந்தவியல் சேர்ந்துமனஞ் சுற்றினுமெங் [கெங்கிறுதி
வந்தடைய லாவதுதன் மாட்டேயாம் பாதம். (அ)

328. சேமக்கை காட்டக்கச் சேர்ந்தார்க் குதவுபரந்
தாமக்கை வல்லியமாத் தண்ணிழல்செய் பாதம் (அ)

329. மோனநா வாலே முழங்குமணி வாய்மொழியால்
ஞானவுப தேச நடாத்துகுரு பாதம். (அ)

330. ஊமையெழுத் தானமவு னோபதே சத்திலடி
யோமையழுத் துண்மையொளி யோங்குமுளப் பாதம். (அ)

331. அருள்சேர் சொரூபத்தா லாலிங் கனஞ்செய்
திருள்சேர் வெருள்கெடப்பே ரின்பஞ்செய் பாதம். (அ)

332. தன்னிய லொன்றே தழுத்தக்க தன்றிமற்
றென்னிய லோடு மியைபின்றென் பாதம். (அ)

333. அஞ்சனக் காரிரு ளாட்டியென் சித்தத்து
ரஞ்சன மாக ரமித்திடும் பாதம். (அ)

334. தேக்கப் படாத சிவானந்த வாரிதன்
னேக்கத் தெறுதுளத்துத் தேக்கியபொற் பாதம். (அ)

335. ஒடுக்கத்தே யூக்கமுறு முள்ளத்தே யன்றி
யடுக்கா தனுபூதி மாட்சியெனும் பாதம். (அ)

336. வெளவாலே போலு மனப்பான்மை யோடருள்சென்
றெவ்வாதே தீவிரமா வொன்றுபற்றென் பாதம். (அ)

337. அமைதியைநீ நாடி னகந்தையே யாய்ந்து
சமைதிநீ ஞான சமாதியெனும் பாதம். (அ)

338. ஆவிக் குறுதுணை ஞா னான்ம சொரூபமன்றிப்
பாவிக்கு மெல்லாமா பாசமெனும் பாதம். (அ)

339. தன்சொருப ஞானமே சாதிக்கத் தக்கதுமுன்
பின்சாருவ முண்டெனிற்பின் பேணுதியென் பாதம்.
(அ)

340. நன்றுந் தென்றயலை நாடாதே நாடகத்துத்
துன்றுமே கான்ம சொரூபமெனும் பாதம். (அ)

341. தோற்றமெலா மான்ம சொரூப விலாசமே
ஊற்றமுறத் தன்சொருப மோர்தியெனும் பாதம். (அ)

342. தன்சொருப மாகத் தழுவலா லீசனைமற்
றென்செயினும் வஞ்சிக் கொணாதென்னும் பாதம். (அ)

343. களிப்பொடுபட் டுள்ளக் கரவுசெய் யாதே
வெளிப்படையில் வாழ்ந்து விளங்குதியென் பாதம். (அ)

344. இரண்டகமுற் றெண்ணரியிலைந்* தேங்காதே தன்னிற்
றிரண்டகமொன் றாகத் திளைத்தியெனும் பாதம். (அ)

345. நிருவிகற்ப மான நிரதிசயா னந்த
வருவியிற்பன் னைந்மியன் றாடுதியென் பாதம். (அ)

346. குருவருள்பெற் றுள்ளங் குலவுறுசச் சீடர்
வெருவரலுற் றேங்க விதியிலையென் பாதம். (அ)

347. மாணிக்க மான மனத்தையே யான்மகிழுங்
காணிக்கை யாக்கக் கடவையெனும் பாதம். (அ)

348. அதனிடத்தே போலவெனக் கண்ணணிக்குங் காதல்
எதனிடத்து மில்லையென வேமாக்கும் பாதம். (அ)

349. மனப்பா லருந்தார் வழுவா வுசாவின்
முனைப்பா லருந்துசதா மோனப்பாற் பாதம். (அ)

* இனைதல் - வருந்துதல்.

350. சதாமுத்தி யான சதாசிவத்தோ டொன்று
சதாபத்தி யென்னுளத்திற் சார்வித்த பாதம். (அ)

351. மற்றோ ருணர்ச்சியை மன்ற மதித்தொழுகக்
கற்றோரே நாகரிகங் கற்றோரென் பாதம். (அ)

352. ஆட்படா தோரே யகந்தைப்பே யாசையா
லாட்பட் டுலகுக் கழுங்குவரென் பாதம். (அ)

353. அகந்தை மமதை யறப்பெற்ற வாழ்க்கை
மகிழ்ந்தவருட் பாக்கியத்து மாட்சியெனும் பாதம். (அ)

354. வெளிற்றகந்தை விந்துலகின் மேவல்தன் றேறிக்
களிற்றுமத யானைப்போர் காண்டலெனும் பாதம். (அ)

355. பொல்லா வகந்தைமதிப் போராட்ட வாழ்க்கையறக்
கொல்லா நின் றென்னகத்திற் கொஞ்சலுறும் பாதம்.
(அ)

356. சுருக்கவழி யான சொருபவிசா ரத்தில்
வெருக்கொளலின் றத்துவித மெய்ம்மையினென்
[பாதம். (அ)

357. அகத்தளைந்த வஞ்சக்கா மாதியறச் செற்றல்
மிகத்தெளிந்த ஞானவொளி வீசுமெனும் பாதம். (அ)

358. மட்புலத்து வாதனையை மட்கடித்து நின்னுளத்தே
விட்புலத்து வாதனையை வித்துதியென் பாதம். (அ)

359. அட்டாங்க யோக வடைவாலே மெய்ஞ்ஞான
நிட்டானு பூதி நிலைவருமென் பாதம். (அ)

360. வீரவருட் சார்பாலுன் வீண்கலக்கஞ் சாயமனோ
பாரமனைத் தென்மேலாப் பார்த்தியெனும் பாதம். (அ)

361. பார்வையின் பான்மையைப் பற்றியதே பந்தமுத்திச்
சீர்மையென வென்னறிவைச் சீர்ப்படுத்த பாதம். (அ)

362. வாக்குக் கொளிதந்த வண்மைபோ லென்னிதயந்
தேக்குக் கனுபூதி சேர்த்தவருட் பாதம். (அ)

363. சிக்கென நின் னுள்ளத்திற் சேர்ந்துஞா னுறுபயம்
மொக்கெனக்கண் காட்டி முடுக்குமொளிப் பாதம். (அ)

364. கற்பனையைத் தாண்டிக் கடந்த சொரூபரசத்
துப்பினையிற் றென்றென் றெனிச் சொல்லரிதாம் பாதம்.
(அ)

365. வைத்தபம நின்னிதயத் தெய்த்துவிடா தொத்தபடி
செத்தகந்தை நீநானுச் சேர்தியெனும் பாதம். (அ)

366. ஆலயமா நின்னிதயத் தன்னொடுசேர்ந் தென்சொருபத்
தேலயமா யொன்றியிருந் தின்புறுகென் பாதம். (அ)

367. வாழ்க்கைக்கு மூலமா மெய்யொளிசே ரென்சொருபத்
தாக்கைக்கு வேண்டுவதுன் னேர்மையெனும் பாதம்.
(அ)

368. காட்டிலோ வன்றி நடு நாட்டிலோ சேர்ந்திதய
விட்டமிலே யென்சொருப மேவுதியென் பாதம். (அ)

369. வஞ்சமனப் பான்மைசேர் மக்தப் பிரமத்தர்
நெஞ்சமனைத் துங்கடிந்து நீங்குமொளிப் பாதம். (அ)

370. நிட்களமாந் தன்சொருப நேசிப்பார் நெஞ்சகத்திற்
புட்களமா வோங்குமொளிப் புன்னகைசெய் பாதம். (அ)

371. கோரசமு சாரக் கொடுமையறத் தன்னிடஞ்செய்
பார சமர்ப்பணமே பக்தியமென் பாதம். (அ)

372. கர்த்தவ் வியமென்னைக் கண்மூடி யாகநீ
சித்த வியாகுலமேன் சேர்தியெனும் பாதம். (அ)

373. வஞ்சமனப் பான்மையறு வாழ்வுசிவா னாதனையா
நெஞ்ச நிமிர்ந்து நிறைந்திடெனும் பாதம். (அ)

374. தனக்கு மெனக்குஞ் சமைந்த பொருத்தம்
பனற்குவே றெருப்பிந்தப் பாரிலில்லாப் பாதம். (அ)

375. வெல்வதே கன்மமென வீங்குமகங் காரமறக்
கொல்வதே தன்கடனாக் கொண்டொழுகும் பாதம்.
(அ)

376. நாடக் கிடைத்தமெய்ஞ் ஞானவொளி கொண்டுதனைப்
பாடக் கிடைத்தவருட் பாக்கியமாம் பாதம். (அ)

377. தன்னு நவைத் தட்பிச் சரிக்கவெங்கெங் கோடினுமிக்
கென்னைவிட மாட்டேனென் றேதுரத்தும் பாதம். (அ)

378. இல்லாத பொய்யை யிகப்பத் துரப்பித்தக்
கல்லாயை போன்மவுனங் காட்டுமொளிப் பாதம். (அ)

379. சென்றுசென் றேரணுவாத் தேய்ந்துதேய்ந் [தொன்றுகக்
கொன்றுகொன் றென்னைக் குலைத்தவொளிப் பாதம்.
(அ)

380. நாடுவதிற் கூர்மையொடு நட்டவர்தஞ் சுட்டறிவைச்
சாடுவதின் மிக்கசலஞ் சாருக்கும் பாதம். (அ)

381. அத்துவிதத் தூக்கோ ரவதியாந் தன்சொருபச்
சித்துவப்பே ரின்பமெனைச் சேர்வித்த பாதம். (அ)

382. குறைகுடமாக் கொந்தளித்துக் கூத்தாடி னேனை
நிறைகுடமா நெஞ்சமையப் பூரித்த பாதம். (அ)

383. அதிநுட்ப மானபர மாகாயந் தன்னிற்
கதியொட்ப மானநிலை காட்டியபொற் பாதம். (அ)

384. சும்மா விருக்குமதி சுத்தசொரு பானுபவம்
எம்மா லறிதற் கியல்வித்த பாதம். (அ)

385. பின்னியதொந் தத்தைப் பிடர்பிடித் துந்துவதாத்
துன்னியசொந் தானுபவத் துங்கவொளிப் பாதம். (அ)

386. ஏறுக்கு மாறியற்று மெட்டனேன் செய்தபிழை
நூறுக்கு மேற்பொறுத்து நோன்றவருட் பாதம். (அ)

387. அரும்புதல்வ னைத்தன் னருட்செல்வத் துக்கு
விரும்புதலா விப்பொய் வெறியனைக்கொள் பாதம். (அ)

388. கைரவத்தின் மெல்லியதாய்ச் சுட்டறிவின் [காட்சியைக்கொல்
வைரவொளி யானமுழு வாலறிவுப் பாதம். (அ)

389. *கைரவம்போற் புன்னகைத்தாய்க் காதலர்க்குக்
[கைதவர்க்குப்
பைரவமா நின்ற பயங்கரமாம் பாதம். (அ)

390. வாழ்வகையே தென்று வதத்தாற்போன் றென்னிதயத்
தாழ்வகைதா னேதி யடங்குவித்த பாதம். (அ)

391. குடிகளாப் பல்சித்தி குற்றேவல் செய்ய
அடிகளா யெம்மையர சாட்சிபுரி பாதம். (அ)

392. பேதரச மாங்கற் பிதரசந்தீ ரேகரசத்
தாதரிச மாகவியன் றங்கொழுகும் பாதம். (அ)

393. சமாதியெனச் சாற்றுமசி சாந்தவனு பூதி
எமாதியல்பாக் கூட்டி யிலக்குமொளிப் பாதம். (அ)

394. விண்காட்சி தன்னில் விடாதூன்றி யுன்மனத்தைக்
கண்காட்சி யாவயலைக் கண்டொழிகென் பாதம். (அ)

395. விருப்புவெறுப் பற்று விளங்குமுதா சீனப்
பொருப்புமிசை யேறிப் பொருந்துதியென் பாதம். (அ)

396. பொக்கமா மைம்புலத்தைப் போற்றுதே யாங்கவற்றா
டொக்கவிளங் குன்புலத்தை யோர்தியெனும் பாதம்.
(அ)

397. முப்புடியும் வாறறிவா மூலமுந்தா மொன்றினிலொன்
றெப்படியும் மாயுமர யானையினென் பாதம். (அ)

398. ஏதிலார் குற்றமியம்பிடினும் யாதுமொரு
நீதியே பற்றி நிகழ்வதெனும் பாதம். (அ)

399. நட்டநடு வாக நடக்குமந் நீதியின்மெய்
சிட்டியினுட் பட்டவுயிர் தேர்வரிதென் பாதம். (அ)

400. உலகைத் திருத்துமுறை யோர்வதன்முன் னுன்றன்
கலகக் கருத்தைக் கடிந்தொழியென் பாதம். (அ)

401. உவப்புவர்ப்பு நீக்கியுளத் தூடமைதி காண்கை
நிவப்புடைய தெய்வநடு நீதியெனும் பாதம். (அ)

---
* கைரவம் - ஆம்பல்; கைதவர் - வஞ்சகர்.

402. உஞ்சலெனப் புன்பிறவி யூடுழலும் புன்மனத்தின்
சஞ்சலமற் றேயவுயிர் தஞ்சமடை பாதம். (அ)

403. போதவனு பூதிப் புலத்திலே தன்சொருப
மோதவனு ராகம் முளைப்பதெனும் பாதம். (அ)

404. ஏனைப் புலத்திலே யெய்தக் கிடைப்பதன்று
மோனப் புலத்திலுறு மோதமெனும் பாதம். (அ)

405. மோனரசத் தீஞ்சுவைதேர் முத்தருளஞ் சாலியன்ன
பானரசத் தோர்சுவையும் பற்றுதென் பாதம். (அ)

406. தானே பராவமுதாச் சார்ந்தவுப சாந்தமிழந்
தேனைமற் றோர்நுகர்ச்சிக் கேங்கலெனும் பாதம். (அ)

407. நிச்சயமாத் தன்சொருப நெஞ்சுறைக்கப் பெற்றவரை
இச்சையெலாம் பெற்றிடிற்போ லின்புறுத்தும் பாதம்.
(அ)

408. ஏகபா தத்தான்மூ வேழுலகத் தைந்தொழிலும்
பாகமில்சின் மாத்திரமாப் பண்ணலுறும் பாதம். (அ)

409. பொய்ந்நெறிக்கட் போகாமே மெய்ந்நெறியாப் [பொங்குமகச்
செந்நெறிக்கே யென்னைச் செலுத்தியபொற் பாதம்.
(அ)

410. அகந்தை யழிந்தாங் கனுபவமா மோனம்
முகந்தவுளத் தேநடஞ்செய் மோகனப்பொற் பாதம்.
(அ)

411. காணக் கிடைத்தார் கலக்கந் தவிர்ப்பதா
மாணப் பெருமிதஞ்செய் வண்மையொளிப் பாதம். (அ)

412. அருபமாஞ் சூக்க வனுதிமல முத்த
சொருபமா வென்னுட் சுடருமொளிப் பாதம். (அ)

413. பிட்டனு மென்மயக்கப் பேதுகடிந் தாங்குதனக்
கிட்டனு வாண்டருள்பே ரின்பவொளிப் பாதம். (அ)

414. கண்டவெலாங் கற்பனையாக் கண்டு மனக் கண்கலக்கம்
விண்டுவெறுங் கண்ணு விளங்குதியென் பாதம். (அ)

415. அறிவை யறிவா லறிந்தமையக் கல்லா
வெறியரைக்கண் டுள்ளமிக வெட்குமொளிப் பாதம். (அ)

416. நிகழ்பவெலாந் தன்சந் நிதிசத்தி யாலாப்
புகழ்மலிந்த சாந்தப் புகலிடமாம் பாதம். (அ)

417. சிட்டித் தொழிலாதிச் செய்தியெலாந் தேருமனப்
பட்டிச்சங் கற்பப் படைப்பென்னும் பாதம். (அ)

418. மோனத்து நீர்மையே முக்கியமாக் கொண்டுசிவ
ஞானத்து வாழ்வைநிலை நாட்டுதியென் பாதம். (அ)

419. வஞ்சப் புகழ்ச்சி வலைக்கணகப் பட்டுமனச்
சஞ்சலங்கொள் ளாதுணைத்தற் காத்தியெனும் பாதம். (அ)

420. பிரமபத முன்னிற் பிறிதுபடல் வஞ்சப்
பிரமாத மன்றிப் பிறிதிலையென் பாதம். (அ)

421. கலங்காத நெஞ்சக் கருத்தேகாண் முத்தி
நிலங்காவ லான நிரைச்சலெனும் பாதம். (அ)

422. முத்திப் பெருநிலநின் மோனக் கருத்திலன்றி
எத்திக் கிலுமிலையென் றேயுணர்த்தும் பாதம். (அ)

423. சரக்கறையா முத்திநிணைச் சார்வதுகா மாதி
யரக்கரைநீ யோட்டி யகற்றிடலென் பாதம். (அ)

424. தூங்கையிலே கண்ட சொரூபசுகங் கெட்டிப்போ
தேங்கையெவன் யானென் றெழுங்கருத்தென் பாதம். (அ)

425. யானென் றெழாதே யிதயத் தியல்பாகத்
தானென்றி நிற்கை தருமமெனும் பாதம். (அ)

426. ஒக்கவா றுள்ளத் தொடுங்கியநின் னேர்மையே
தக்கவா றெல்லாந் தழைப்பதெனும் பாதம். (அ)

427. என்கனு வானமத யானைக் கலக்கமறச்
சிங்கநா தத்தாற் சிதறடித்த பாதம். (அ)

428. கயிலாயக் காட்சியென் கண்ணதாக் காண
ஒயிலாக வுள்ளத் துலாவுநடைப் பாதம் (அ)

429. பாரா சரியப் பரம்பரைக்கோர் மாட்சிவரப்
பேரா சிரியனைப் பேர்ந்தவொளிப் பாதம். (அ)

430. சிவந்தியா னத்தாற் செழித்தமனங் காண்டற்
கவத்தையா தொன்றுமின் றக்கும்மொளிப் பாதம். (அ)

431. இறைவனரு ளாலே யிலங்குகவிச் செல்வத்
துறைவனு வென்னைத் துலங்நவித்த பாதம். (அ)

432. அறிவிலே தன்னை யழுத்தமா வாழ்த்துஞ்
செறிவிலே யூறுமொளித் தேறலெனும் பாதம். (அ)

433. எப்பக்கஞ் சாரினுநா னப்பக்க மெல்லாமுற்
றுப்பக்க மின்றியொளி ரிப்பக்கப் பாதம். (அ)

434 மவுனமா முண்மை மலர்ச்சியி லன்றி
எவன வுணர்ச்சிமற் றெய்ததென் பாதம். (அ)

435. மனப்பிர சாத மடுக்கலின் றுயின்
எனைப்பிர சாதமுயிர்க் கென்செயுமென் பாதம். (அ)

436. அமைதியை யல்லா லவாவிமற் றொன்றை
யமைவரக் கேட்ட லனர்த்தமென் பாதம். (அ)

437. யாதே யிழப்பினுமவ் வின்பத் தமைதியைப்
போதே கடைப்பிடித்துப் போற்றுதியென் பாதம். (அ)

438. அமைதியுற் றார்மற் றனைத்துமே யுற்றார்
அமைதியற் றாரறவே யற்றாரென் பாதம். (அ)

439. ஞானநிட் டானுபவ நாடினகந் தாமதியை
ஆனமட் டுஞ்செற் றகழ்ந்தொழியென் பாதம். (அ)

440. அகந்தையே போலவுனக் காகாப் பகையொன்
றிகந்தனிலொன் றேமற்றெங் கெங்குமின்றென் பாதம்.
(அ)

441. அப்பகையைச் செற்றங் ககழ்ந்தொழிக்குங் காறு முனக்
கெப்பழியும் பாவமும்வந் தெய்துமெனும் பாதம். (அ)

442. நன்றிப் பிறப்பிடமெய்ந் நாணுதல் போலயறந்
துன்றப் பிறப்பிடம்பொய்ச் சூதகமென் பாதம். (அ)

443. வாதத்தை விட்டு மயல்சே ரகமிதமென்
பேதத்தை விட்டுப் பிறங்குதியென் பாதம். (அ)

444. நின்னுளத்தை முன்பு நிரப்பிக்கொள் ளாதேமற்
றென்னுதவி யார்க்கியற்ற வொல்லையெனும் பாதம்.
(அ)

445. ஆண்டவனை நோக்கி யடங்குதலைத் தன்னலமென்
றீண்டவுரைப் பாரறிவுக் கேதிலரென் பாதம். (அ)

446. தம்மைத்தா முய்விக்கச் சக்தியிலார் மன்னுயிர்க்கு
செம்மையுறு சேவை செயலரிதென் பாதம். (அ)

447. தன்னலமென் றேங்குபெருந் தன்மைசா
[லர்ப்பணத்தைப்
பன்னிலது வேயகந்தைப் பாழ்மதியென் பாதம். (அ)

448. எஃதோ திருவருண்மற் றஃதே யியல்கவென
வெஃகுமனப் பான்மையே மிக்கதெனும் பாதம். (அ)

449. இந்தமனப் பான்மையே யுந்துமகங் காரமல
பந்தமறுத் தேமப் பதந்தருமென் பாதம் (அ)

450. தியாக வகந்தையாற் செத்த மனத்தை
நியோகித்து நானே நிகழ்த்துவலென் பாதம். (அ)

451. சிவதரும தத்துவத்திற் சிக்கெனவே நன்றிப்
பவகரும மோகமறப் பாற்றுகியென் பாதம். (அ)

452. பார்வழியே யோடிப் பதையாதே நெஞ்சத்து
நேர்வழிநீ யோடியடை நிம்மதியென் பாதம். (அ)

453. கடையற்ற ஞானமகங் காரஞ்சேர் பேதத்
தடையற் றொளிருமுப சாந்தமெனும் பாதம். (அ)

454. நினைப்பற்ற மெய்ஞ்ஞான நிட்டையியல் பாலே
தனைப்பற்றி யோங்குமுப சாந்தமெனும் பாதம். (அ)

455. சிற்பரமெய்ஞ் ஞான சிவானுபவத் தற்றமனம்
தற்பரமே தானுத் தழைக்குமெனும் பாதம். (அ)

456. ஒன்றுவிட் டொன்றுபற்றி யோடுமனச்
[சேட்டையைமுற்
றொன்றுவிட் டாலே குதூகலமென் பாதம். (அ)

457. மேவுபுலக் காட்சி வெறித்துமனக் கற்பனைதன்
வாழ்வுக் கொள வகுத்த மாடமெனும் பாதம். (அ)

458. பொல்லாத மாயப் புணர்ப்பாம் புலைமனத்தைக்
கொல்லாத மட்டுங் குணமிலையென் பாதம். (அ)

459. யானென்னும் புத்திமற் றெந்த வுபாதியையும்
தானென் றுறாதே தடுத்தியெனும் பாதம். (அ)

460. ஆகாயம் போன்ற வபரிமிதச் சித்துருவா
நீகாய மின்றியே நிற்றியெனும் பாதம். (அ)

461. பேரின்ப மோனப் பெருவாழ்வைப் பெட்பொடுதற்
சேரன்ப ருள்ளத்திற் சேர்த்தருளும் பாதம். (அ)

462. அனுசத்தி யோக வடைவாலே துன்றும்
மனுபுத்திக் கான்றபெரு மாட்சியெனும் பாதம். (அ)

463. கல்லாத கல்வியைநீ கற்கெனவென் னுள்ளத்திற்
சொல்லாதே சொல்லித் துலக்கியபொற் பாதம். (அ)

464. அக்கினிதா னைமற் றனைத்துமெரித் தென்னுளத்திற்
புக்கினிதா வோங்கமுத போகவருட் பாதம். (அ)

465. பாதக் கடைப்பிடியைப் பற்றுதியே யுன்னுளத்தால்
வேதக் கொடுமுடிமெய்ம் மேவுவையென் பாதம். (அ)

466. அவலோ கனத்தா லடியா ரகத்தே
சிவலோக வாழ்க்கைநலஞ் சேர்த்தருளும் பாதம். (அ)

467. நீசுமனத் தோடுதனை நேர்ந்தவடி யாரகத்தை
நீசமன மாகென்று நிட்டையருள் பாதம். (அ)

468. ஏதவிருட் கண்ணிடர்ப்பட் டேங்குறுசிந் தாகுலந்தன்
போதவருட் புன்னகையாற் போக்குமொளிப் பாதம்.
(அ)

469. அயலறிவை முற்றச் செயலறவே மாற்றி
இயலறிவா முண்மையறி வீயுமொளிப் பாதம். (அ)

470. உண்மையிலே யூன்றவிடை யூறுகத் தாமுளைக்கும்
திண்மைசேர் கற்பனையைச் செற்றெழிக்கும் பாதம்.
(அ)

471. சும்மா கிடவெனுமச் சொல்லாலென் சாதனையை
அம்மா முடித்தவரு ளாட்சிசேர் பாதம். (அ)

472. இருந்தொளிரா நின்ற வியற்கைநோக் காலே
பொருந்தொளிகாண் ஞானு பூதியெனும் பாதம்.
(அ)

473. பற்றவிட வொண்ணுப் பரமான நின்சொருபப்
பற்றைவிடா துன்னறிவாற் பற்றுதியென் பாதம். (அ)

474. யானு ரெனநின் னியல்பைநன் றுள்ளாராய்ந்
தானு ரகந்தையைவிட் டோவுதியென் பாதம். (அ)

475. பந்த மகந்தையே பற்றகந்தைத் தொற்றகன்ற
சொந்த சொரூபமே முத்தியெனும் பாதம். (அ)

476. அகந்தையைவென் றீண்ட வமைந்தவகத் தான்ம
சுகந்தருமெய்ஞ் ஞானம் முகந்தருமென் பாதம். (அ)

477. அருள்வல் லபியா மதிசயசிற் சத்தித்
தெருள்வில் லொளியிலெனைச் சிக்கவைத்த பாதம்.(அ)

478. இனியரீங் கார விசைச்சுரும்பின் மோனத்
தினியவோங் கார மிசைக்குமணிப் பாதம். (அ)

479. பல்யாக நல்காப் பரம சொரூபவருட்
கல்யாண சோபன மாங் காட்சியருள் பதாம். (அ)

480. போராட்டச் சிந்தைகெடப் பொங்கருள்சேர் [மங்களநன்
னீராட்டி வைத்த நிஜசொருபப் பாதம். (அ)

481. அலங்கோலச் சிந்தையற வானந்த மோன
நிலங்கோலித் தந்தசிவ நிட்டையுருப் பாதம். (அ)

482. எங்கோ வலைந்தவெனை யின்னருளாற் றன்பதமா
மிங்கேகொண் டுய்த்தபே ரின்பநலப் பாதம். (அ)

483. பரம்பொருளாந் தன்சொருபப் பண்பினைத்தென் றேரத்
தரும்பெருமா மோன தயாதருமப் பாதம். (அ)

484. கதுவப் படாதபுலக் சாட்சியாய் மோனப்
பொதுவிற் குனிக்குநடப் புண்ணியப்பொற் பாதம்.
(அ)

485. காமரூ பங்கொள் கருமாயப் புன்மனத்து
நாமரூ பப்புலைப்போய்ந் நாட்டமறும் பாதம். (அ)

486. கற்பனை ஞாலக் கலைகளிற்கூ ராசைமிகத்
தப்பென நன்மனத்தைத் தண்டனைசெய் பாதம். (அ)

487. எத்தொழில்கள் செய்யினுந்தா னேகாக் கிரமவற்றில்
வைத்தொழுகல் வேண்டுமெனத் தான்வகுக்கும் [பாதம். (அ)

488. மிக்க சொரூப விலாசவா வண்ணியத்திற்
சிக்கெனச்சே ராசையைமெய்த் தேகுறுத்தும் பாதம்.
(அ)

489. வீவத்தை யிலாப்பொய் யவத்தைவெருள் போக்கிச்
சிவத்தை யகத்துந் திகழ்த்துமொளிப் பாதம். (அ)

490. என்னைநான் பாவியென் றெண்ணியேங் காதுபரந்
தன்னைநா னாகச் சமைத்தவருட் பாதம். (அ)

491. அவியத்த மான வவிச்சையினின் றம்மா
புவியத் தனையும் புதுக்குபழம் பாதம். (அ)

492. அசற்கா ரியத்தையதி சாமர்த் தியமா
நிசக்கா ரியம்போ னிகழ்த்தலுறும் பாதம். (அ)

493. பேய்த்தேரை நீராப் பிரமித்த மோகமறப்
போய்த்தேற வுண்மைப் புலந்துலக்கும் பாதம். (அ)

494. காண்பான் றனதுண்மை காணாத மட்டுமயன்
மாண்பான கற்பனையின் மாட்டுமொளிப் பாதம். (அ)

495. இகத்தும் பரத்துமெங் கெங்குமென் றென்றும்
மகத்தான வுண்மை மலர்ந்தவொளிப் பாதம். (அ)

496. கூகையே போலப் பகற்குருடாய் மோகித்துப்
போகையாற் காரிருளே போலுமொளிப் பாதம். (அ)

497. அரிதியாங் காணவுமற் றுவகன்றுந் தன்னைப்
பரிதியாக் காணவருட் பார்வைதந்த பாதம். (அ)

498. சிவத்துவமே யன்றிச் செகமுழுதுந் தேசிற்
பவத்துமெங் கேகாண் படர்ந்ததெனும் பாதம். (அ)

499. பல்விகற்ப மான படர்ச்சியைத்தன் ஞானவருட்
கல்விகற்ப தாலே கடிந்தருளும் பாதம். (அ)

500. முன்னைப்புந்தி நின்றபெரு மோகவகங் கார
மனைப்புந்திக் கெட்டாத மாட்சிசேர் பாதம். (அ)

501. தூண்டித் தனதொளியிற் சொக்குவித்த லேமனத்தைப்
பாண்டித் தியப்பயனைப் பற்றுதியென் பாதம். (அ)

502. அறிவு தனதொளிக்கூ றாகவமை காறும்
பிறவித் துயரமறப் பேராதென் பாதம். (அ)

503. வெளிவிடயம் விட்டு விமுகமா யுள்ளத்
தொளியுடைய வுண்மையைக்கூர்ந் தோர்தியெனும்
[பாதம். (அ)

504. உள்ளத்துத் தன்சொரூப மோர்த்துணரப் பெற்றாலே
கள்ளத்து மோகமனக் கட்டறுமென் பாதம். (அ)

505. உட்கலங்க லுற்றநினை வோயளவுஞ் சிற்பரத்து
நிட்களங்க மான நிலை நேர்வரிதென் பாதம். (அ)

506. காணுமகங் காரக் கலாமதிதன் சந்நிதிமுன்
ஞுணமகிழ்ந் தாண்டபர ஞானரவிப் பாதம். (அ)

507. இருப்பதே தானு விதயமொளிர் ஜோதிப்
பொருப்பதே நானுப் புணர்த்தியசிற் பாதம். (அ)

508. உளதா வொளிர்தலே யோரக் கடவ
தெளிதான சச்சித்தின் சீர்மையெனும் பாதம். (அ)

509. இளம்புன் முழுவ வெழிற்கட் டழகு
தளும்புறவென் னுள்ளத்திற் சாரந்தொளிர்பொற்
[பாதம் (அ)

510 நாமசங் கீர்த்தனஞ்செய் நா நலமிக் காரகத்தே
தாமசங்கூ டாமலொளிர் சத்துவஞ்செய் பாதம். (அ)

511. ஒழுக்கங் கடைவிடா தோம்புமினென் றன்பர்க்
கொழுக்கந் தரும்பயன்மிக் கோதுமொளிப் பாதம்.
(அ)

512. அக்கரமா நிச்சலவச் சாணியா நின்றகத்தே
சக்கரமா விவ்வுலகைத் தான்சுழற்றும் பாதம். (அ)

513. தன்னிலையே யுன்னதமா மெய்ந்நிலையாச் சால்வதன்றி
யன்னியமாத் துன்னுவமெய்க் கன்னிபமென் பாதம்.
(அ)

514. புதியதாப் போந்து புணர்ந்ததே வந்தக்
கதிசொந்த மன்றுக் கழல்வுறுமென் பாதம்.
(அ)

515. கடவுணிலைக் கண்ணே கரைந்தொழிந்த சித்தம்
கடவதாச் செய்கருமங் காணுதென் பாதம். (அ)

516. கர்த்தத் துவவகங் காரமறக் கெட்டதே
கர்த்தவ் வியமொழிந்த காரணமென் பாதம். (அ)

517. தன்னியபல் வேறுவகைத் தோற்றங் களுமுனிக்கு
மன்னியசின் மாத்திரமா வைகுறுமென் பாதம். (அ)

518. ஆதார மான வறிவேநின் றெட்டத்துக்
கோர்தா ரகமா வுயிர்த்தியெனும் பாதம். (அ)

519. நோக்கமே தன்னியல்பா மோக்கமாச் சேர்ந்தமுனி
ஏக்கமே காணுப்பே ரின்பனெனும் பாதம். (அ)

520. நீசசம் பத்தைநின் னெஞ்சச்சி னின்றகற்றி
ஈசசம் பத்தைநனி யீட்டுதியென் பாதம். (அ)

521. என்சொருப மாட்சியைநன் றெண்ணியுபா
[சிக்கின்மற்
றுன்சொருப மாட்சியுளத் தோங்குறுமேன் பாதம்.
(அ)

522. நீடுவதுள் ளத்தென் நிஜசொருப மென்றறிந்து
தேடுவதே யென்பிரிய சிந்தனையென் பாதம். (அ)

523. நாடிக் கிடைத்துளத்தென் ஞானசொரு பானந்த
மாடித் திளைத்தலே யைக்கியமென் பாதம். (அ)

524 சக்கியமா வாற்று சதாபத்தி சாதனையே
யைக்கியநன் காற்றுமடை வாகவெனும் பாதம். (அ)

525. சுகத்தியலா மென்றன் சொருபானு பூதி
அகத்தியமா குக வணைந்திடலென் பாதம். (அ)

526. கூறியதை யெல்லாங் குதூகலஞ்செய் மாலையாத்
தேறி யணிந்துகொண்ட தேசிகப்பொற் பாதம். (அ)

527. சீக்கிரமாத் தானகத்தைத் தேற்றுவித்துத் தன்சொருப
பாக்கியமிக் கீந்தவருட் பண்புமிக்க பாதம். (அ)

528. இயைபொன்று மின்றியே மிக்கியைபுற் றற்போற்
றயையொன்றி யாவினொடுந் தான்சரிக்கும் பாதம். (அ)

529. ஊழிதோ றூழி யுலப்பற் றுயிர்சொருபம்
வாழியோ வாழியென யாம்வாழ்த்தும் பாதம். (அ)

530. நீடும் பரமாவென் னெஞ்சத்தே நானெனென்
றாடு சொருபச்சிற் றம்பலமாம் பாதம். (அ)

531. யானெனதென் றேனைக் கூத்தாட்டு வித்தெனக்குள்
யானகமென் றேகூத் தியற்றுநடப் பாதம். (அ)

532. இம்பரகத் தூற்றமற் றேனவற்று நோக்கமற
அம்பரத்து நாட்டமளித் தாண்டவருட் பாதம். (அ)

533. குருட்டுத் தனஞ்செய் கொழுத்தமா மோக
விருட்டைத் தெருட்டி யிலக்குமொளிப் பாதம். (அ)

534. ஒளிசான்ற வுள்ளத் துதாரநோக் காலே
வெளிசான்ற சிற்பரமா மிக்கவிழிப் பாதம். (அ)

535. அகந்தைபாபி மானமே யன்புபோல் வஞ்சித்
தகழ்ந்தொழியு நெஞ்சையடி பாதலத்தென் பாதம்.
(அ)

536. வஞ்சவபி மான வலைக்கணகப் பட்டுநீ
துஞ்சலுரு தூன்னுளத்தைச் சோதியெனும் பாதம்.
(அ)

537. மதியுள்ள மட்டே மதத்து நிகழ்ச்சி
மதிநிம் மதியா மதமறுமென் பாதம். (அ)

538. சாந்தியின் கண்ணே சமரசசன் மார்க்கவொளி
சேர்ந்திதயத் தண்மை திகழ்வுறுமென் பாதம். (அ)

539. மதம்பற்றி மூர்க்க மதம்பற்றிச் சிந்தைக்
கதம்பற்றுஞ் செய்கை கயச்செயலென் பாதம். (அ)

540. ஈசனுமெய் யன்பருமற் றிச்சதியைக் கண்டுமட
வேசைச் செயலெனவுள் வெட்குவரென் பாதம். (அ)

541. திருத்தியா லுள்ளமகிழ் சேரப்பெற் றாலே
கருத்தமைதி கூடுமெனக் கட்டுரைக்கும் பாதம். (அ)

542. அவாவளியா லொற்ற வலையுமனஞ் சற்றே
நிவாரணமாந் தெய்வ நினைப்பாலென் பாதம். (அ)

543. ஆன்றவனு பூதிசே ரான்மஞா னத்தெளிவான்
மூன்றகலத் தோன்றலுறும் மோனமெனும் பாதம்.
(அ)

544. நிட்டானு பூதி நிலையான மோனவியல்
சுட்டாது சுட்டித் துலக்குறுமெய்ப் பாதம். (அ)

545. அகந்தையறி வான வனுதியா மோகம்
இகந்தியல்வ தேமெய் யிறைநிலையென் பாதம். (அ)

546. கட்டுக்கட் டான கவலைமலை கற்பனைசே
ரிட்டுக்கட் டானபொய் யீட்டமெனும் பாதம். (அ)

547. அடங்காத சிந்தை யடங்குறிற்பல் கோடி
மடங்கான வின்பம் மடுத்திடுமென் பாதம். (அ)

548. பந்த முத்தி சிந்தைப் படைப்பென்றுற் சுட்டறிவா
லுந்தவத்தை யாவுமவற் றேரனவென் பாதம். (அ)

549. என்னென்ன யாவ ரியம்பினுமே நன்று நன்றென்
றன்னவற்றுக் கெல்லாந் தலைபசைக்கும் பாதம். (அ)

550. தன்னடியர் சிற்சிலகாற் றம்முட் சிலைப்பவுமே
துன்னியதென் னென்னவொரு சொல்லிலதாம் பாதம். (அ)

551. வேதா கமங்கள் விரித்துவிரித் தோதியுமீற்
றீதாகா தெம்மாலென் றேங்குவிக்கும் பாதம். (அ)

552. சிந்தைக் கருந்தைச் சிதறவிடா துள்ளொருக்கி
விந்தைப் புலத்தொளியை மேவுதியென் பாதம். (அ)

553. கறங்குபோற் சுற்றுங் கருத்தொடுங்க வுள்ளத்
துறங்குவோ யாய்மெய் யுணர்தியெனும் பாதம். (அ)

554. ஜகத்தே யுறக்கமுந் தன்னில் விழிப்பும்
அகத்தே பொருந்த வடங்குதியென் பாதம். (அ)

555. ஆதபத்தை நீங்கிஞா னன்மையொரு பானந்தப்
பாதபத்து நீழலைப்போய்ப் பற்றுதியென் பாதம். (அ)

556. உற்றுவிடாய் தீர்ந்த வுபசாந்தஞ் சேருளத்துப்
பற்றுவிடா தென்றும் பயிலுதியென் பாதம். (அ)

557. உள்ளதே யுள்ளமா வுள்ளத் தொளிர்தலாற்
கள்ளமன மாயைவெறுங் கற்பிதமென் பாதம். (அ)

558. கடம்படமென் றோதுங் கலைஞானங் கற்றுங்
கிடம்பமுறல் பேதை யியல்பென்னும் பாதம். (அ)

559. ஏமப் பரத்துக் கியல்வழிகா ணீடணையின்
காமக் கருத்தைக் களைதலெனும் பாதம். (அ)

560. சதசத்தா மச்சிச் சடவகந்தை நெஞ்சத்
திதசத் துருவா வியல்வதெனும் பாதம். (அ)

561. கடலிற் றுரும்பைக் கரையேறக் கொண்டுய்த்
திடலுக் குவந்தியலுங் காற்றன பாதம். (அ)

562. தாணுவாந் தன்னிலையைச் சார்ந்தாலே தன்னிதயத்
தேனுலா மோனநிலை யெய்துவதென் பாதம். (அ)

563. இரங்கத் தகாதவற்றுக் கேனிரங்கி வீணே
திரங்குதிநீ சிந்தா குலந்தவிரென் பாதம். (அ)

564. தன்னு லிரங்கத் தகுநிகழ்ச்சி யொன்றுமே
துன்னுவதன் றுன்னியலைச் சோதியெனும் பாதம். (அ)

565. நிழலைப் பொருளா நினைந்துநீ யேனோ
வழலுதிநின் னெஞ்சந்தேர்ந் தாறுதியென் பாதம். (அ)

566. சொந்தமா முன்சொருப சுத்த நினைப்பிரண்ட
னந்தரா ளத்திற்கூர்ந் தாய்ந்தறியென் பாதம். (அ)

567. ஆதார மாகவே கான்ம சொருபசச்சித்
தீதே யகண்டமா வேய்வதெனும் பாதம். (அ)

568. தனுதியல்பா மந்தச்சை தன்னியமே யுள்ளத்
தனுதியனந் தானந்த மாவதெனும் பாதம். (அ)

569. அலங்கலின் றனதன் றலம் பணத்தாற்
கலங்கலின் றுதுங் கருத்தெனும் பாதம். (அ)

570. தனைத்தவிர்த்து நானே வெனைத்தவிர்த்துத் தானே
எனைத்துமின் றாக விரண்டற்ற பாதம். (அ)

571. அத்துவித போத வருள்விலா சத்திலகுந்
செத்தொழிவ தேசொருப சித்தியெனும் பாதம். (அ)

572. பாதமே மிக்க பராங்கதியா நின்னிதயத்
தாதரமா நோக்கி யறிந்திடெனும் பாதம். (அ)

573. நாத்தி நபாதியென நாத்திகர்தூற் றுநிற்ப
ஆத்திகர்க்கு நேத்திரமா மான்மவொளிப் பாதம். (அ)

574. அயலை விளக்கு மறிவுண்மை யாந்தன்
னியலையெண் ணுமையே யேழைமையென் பாதம். (அ)

575. இரண்டறவே யுள்ளத் திருந்தொளிர்தன் னுண்மை
வெருண்டயனக் கண்ணுல் விளங்காதென் பாதம். (அ)

576. இல்லையெனக் கூறுந்தா மில்லா தொழிந்திலரென்
றெல்லவருந் தன்னுண்மை யேற்கநின்ற பாதம். (அ)

577. தொக்கசிறுத் தொண்டருளந் தோய்விக்கு நிம்மதியே
மிக்கபெருந் தெய்வ விபூதியெனும் பாதம். (அ)

578. திக்காரஞ் செய்யாதித் தீம்பனேன் றன்னகம்புக்
கக்கார மானஞா னனுபவப் பாதம். (அ)

579. என்னைநீ கொல்லுதிமற் றின்றே லகந்தையிதோ
வுன்னைநான் கொல்லுவனென் றுந்துமெனும் பாதம்.
(அ)

580. கொடுங்கோ லரசுபுரி கோரவகங் கார
மடுங்கோ ளதுநும் மடாமுனமென் பாதம். (அ)

581. இற்றொழிய நீவிரதைச் செற்றொழித்தா லல்லதொரு
சற்றுமுப சாந்தசுகம் பற்றரிதென் பாதம். (அ)

582. லாஞ்சனையற் றானுடலை லாலனஞ்செய் புன்மனத்தை
வாஞ்சனையற் றுக்கொலினே வாழ்வுறுமென் பாதம்.
(அ)

583. வாழ்வதே சாவுமகஞ் சாவதே வாழ்வுமாச்
சேர்வதொரு விந்தையிது தேர்வரிதென் பாதம். (அ)

584. அறிவமைதி யாலே யனர்த்தமறு வாழ்க்கை
செறியவுளத் தென்றன் செயலறுத்த பாதம். (அ)

585. இதத்திற்கே யன்றியதற் கின்றமையாப் போலி
யகத்திற்கும் மூலமா வான்றவொளிப் பாதம். (அ)

586. நினக்கென்ன சும்மா நிகழ்தியெனச் சொல்லி
எனக்கென்ன வோர்செயலு மின்ருக்கும் பாதம். (அ)

587. வினையோ வினையின் விளைவோ வதுசார்
நினைவோ வெனக்கறவென் னெஞ்சொளிர்பொற்
[பாதம். (அ)

588. மோனவொளி யென்றன் முகத்திற் படரவருண்
ஞானவொளி நோக்க நடாவியபொற் பாதம். (அ)

589. துள்ளிக் குதிக்குமனக் கொள்ளிவிடம் பொன்றவமு
தள்ளித் தெளித்தவருண் ஞானவொளிப் பாதம். (அ)

590. வல்லவா றெல்லாம் வழுத்துவதெல் லோருந்தன்
சொல்லவொணு தோங்குபுகழ்த் தொல்லருளாம் பாதம்.
(அ)

591. சொருபமென தென்னெனுமெய்ச் சோதனையின்
[மாருத்
துருவபத மாகவுளந் துன்றுசுடர்ப் பாதம். (அ)

592. பின்விளைவை யெண்ணிமனம் பேதுறலென்
[னின்னுளத்து
முன்னளைவ தானசுக மோனமற்றென் பாதம். (அ)

593. கதுவுறும் புன்புலக் கற்பனைக் காட்சிதீர்
பொதுவில் விளங்குசற் போதமாம் பாதம். (அ)

594. நயக்கைக் குரியதன் ஞான சொரூபம்
கயக்குற் றழுங்கலொரு காலுமின்றென் பாதம். (அ)

595. அவ்வழுங்கல் போலி யகந்தையபி மானமடங்
கவ்வுமுயிர்க் கண்கலக்கங் காணென்னும் பாதம். (அ)

596. தன்னையோ வீசனையோ தானெந் திரங்கலுயிர்
தன்னியலைத் தான்மருண்ட தப்பெனுஞ்சிற் பாதம்.
(அ)

597. பற்பலவாந் துன்பப் படர்களுக்கு மோர்மருந்து
நிச்சயமாத் தன்சொருப நிச்சயமென் பாதம். (அ)

598. உன்னைநா னென்க்க லொழிந்ததா வீணிலெனை
என்னைநீ குற்ற மியம்புதலென் பாதம். (அ)

599. என்னைநீ நோக்கினையே லென்றுமித யத்திலிருந்
துன்னைநா னெக்க லுணர்குவையென் பாதம். (அ)

600. அகநோக்கா லுன்னை யகலாமை நானும்
புறநோக்கா லெங்஼ன் புலப்படுமென் பாதம். (அ)

601. மாயா விபூதிவெறுஞ் சாயா விபூதியாம்
தோயா ததுசொருபத் தன்மையிலென் பாதம். (அ)

602. படைப்புமுத லாகப் பகுக்கப் படுமெந்
நடப்புமதன் பாலதா நண்ணுமெனும் பாதம். (அ)

603. சொல்ல வொணதபெருஞ் சூழ்ச்சியாத் துன்னுமதற்
கில்லவே யில்லையிவை யென்னுடைனும் பாதம். (அ)

604. அகந்தை மதியே யதனைமெய் யாகப்
பகர்ந்து தொடர்பு படுத்துவதென் பாதம். (அ)

605. அம்மதியும் பொல்லா வதன்கணகப் பட்டதே
நிம்மதியிற் காணுதிமெய்ந் நிச்சயமென் பாதம். (அ)

606. தன்மெய் யுணர்ந்து தழைக்குந்தன் னிட்டையே
தன்மமா மிக்கசதா சாரமெனும் பாதம். (அ)

607. தான்மருவத் தக்கபர சாயுச் சியபதமவ்
வான்ம சமாகமமே யாவறியென் பாதம். (அ)

608. ஜீவபரச் சேர்க்கை சிதாபாச நீக்கமே
யாவதெனத் தத்துவஞ்சொல் லான்மவுருப் பாதம். (அ)

609. முடிந்தபர முத்தி சொரூபமா வென்றும்
அடைந்ததே யாக வறிந்தமையென் பாதம். (அ)

610. இல்லா வியற்கைசேர் பந்தமுத்திச் சிந்தைமுத
லெல்லாம் பிரமாதத் தேய்வவெனும் பாதம். (அ)

611. மருவிக் கிடந்தபிர மாதமே நெஞ்சம்
வெருவக் கிடந்த விருத்தியுவென் பாதம். (அ)

612. எப்பாடு பட்டேனு மப்பிரமா தத்தையகழ்ந்
தப்பாலாக் கின்னமர வாழ்வுறுமென் பாதம். (அ)

613. சிலமந்தி போலே யலமந்த மாந்தர்
புலமைந்த னூடே புலம்புவரென் பாதம். (அ)

614. சுத்தியை வெள்ளியென்றுற் போலுடலே நானெனுமவ்
வத்தியா சங்கா ணலமரலென் பாதம். (அ)

615. புலங்களைப் பண்டமாப் புந்திமருண் டாவி
யலங்குமவ் வாசையுங்கா ணஃதென்னும் பாதம். (அ)

616. நெஞ்சிலுனக் கெந்த நிமித்தத்தா லுங்கலங்கி
யஞ்சலுக்கோ ரேதுவுமின் றுவறியென் பாதம். (அ)

617. நீயே யுனையன்றி நின்றன் னிஜசொருபத்
தேயே துவிதமொன்று மில்லையெனும் பாதம். (அ)

618. அனர்த்த வகந்தையெழுந் தாலனந்த மான
வனர்த்தப் பரம்பரைநீ டாங்குறுமென் பாதம். (அ)

619. அருள்விசா ராக்கினே யாத்திரத் தாலே
மருள்விலா சாகந்தை மாய்வுறுமென் பாதம். (அ)

620. விசாரமே மிக்க விடயசுக போக
மசாரமா வேட்கை யகற்றுவதென் பாதம். (அ)

821. எல்லை யிலாதபே ரின்பவெளி தன்னுருவா
நல்ல விசாரமே நல்குவதென் பாதம். (அ)

622. சாத்திரத்தி லோவன்றிச் சோத்திரத்தி லோவிலைமற்
றுத்தவிசா ரந்தன் னகத்திலெனும் பாதம். (அ)

623. ஆன்ம சமர்ப்பணஞ்செய் தத்துவித மோனத்துத்
தான்சமைத லேபரம தத்துவமென் பாதம். (அ)

624. பாதமே பாக்கியமாப் பாடிப் பரவுதலே
நேதமா நெஞ்சத்து மோதமாம் பாதம். (அ)

625. ஆண்டா னடிக்க ணகந்தைதலை சாய்ந்தழியக்
காண்டல் வணக்கக் கருத்தென்னும் பாதம். (அ)

626. அடிக்க ணகந்தை யழிந்துபட் டாங்கே
கடக்கலரு மோனக் கடலாமென் பாதம். (அ)

627. பூதிமலி தெய்வநிதி புண்ணியத்தா னண்ணுவது
போதுமெனப் பொங்கிமகிழ் புந்தியெனும் பாதம். (அ)

628. கனவிகற்ப மாநனவுங் கற்பிதங்காண் காணுங்
கனவையொப்பத் தோன்றிக் கழிதலினன் பாதம். (அ)

629. மனத்தா லயலெண் ணிமாழ்காதே நீநின்
றனைத்தானே பற்றியடை சாந்தியெனும் பாதம். (அ)

630 சாந்தியே மேதக்கோர் சாம்ராச் சியசுகமா
மாந்திக் களிக்குங்கை வல்லியமென் பாதம். (அ)

631. இப்போதே சும்மா விருந்துநீ நின்சொருப
சற்போதக் காட்சியிற்சார் சாந்தியெனும் பாதம். (அ)

632. நின்னியல்பாத் துன்று நிஜானந்த வாழ்க்கையுற
நின்னிதயத் தூன்றி நிலைத்திடெனும் பாதம். (அ)

633. சற்பனைசேர் மோகவகந் தைக்கலக்கஞ் சாயவெழும்
கற்பனைதீர் மோனவெளிக் காட்சியெனும் பாதம். (அ)

634. பூமாவாப் பொங்குசற் போத சொரூபபரந்
தாமமே யத்துவிதத் தற்பரமென் பாதம். (அ)

635. அகற்பமாத் தானொளிர்சுத் தாத்துவிதத் தெந்த
விகற்பமாங் கற்பனையும் மேவாதென் பாதம். (அ)

636. அறிவறியா நிற்கி லனுன்மவிட யத்தே
வெறியுறுமா மோகம் விளிந்திடுமென் பாதம். (அ)

637. தன்னிடத்தி லன்றியுப சாந்தத்துக் கேதுமற்
றன்னியத்தி லென்றுமின் றுவறியென் பாதம். (அ)

638. அயல்விடய சிந்தையழிந் தாலன்றி யின்றே
யியல்சொருப சாந்தமுளத் தெய்தலெனும் பாதம். (அ)

639. ஏற்பா டொருவா றியற்றிமுன் மற்றவற்றுக்
கேற்பதேற் றன்கருமமேல்வதன்றென் பாதம். (அ)

640. யாரு ரெனுங்கேள்விக் கெய்துவிடை யுள்ளத்து
நானுனே யென்மவுன ஞானமெனும் பாதம். (அ)

641. சார்ந்தவும்பின் சாரத்தாந் தக்கவுமாஞ் சங்கைகளைக்
கூர்ந்தரியுங் கோடரியாக் கொள்ளதையென் பாதம்.
(அ)

642. ஞான சொரூபமா நானுனென் றுள்ளத்து
மோனமாத் துன்றுமதே முத்தியெனும் பாதம். (அ)

643. தேர்ந்துமெய்ஞ் ஞானந் தெளிந்த சொரூபசித்தி
யார்ந்தபின் னென்றுமெய்த லாவதின்றென் பாதம்.
(அ)

644. புத்தம் புதியதுபோற் பொங்கு சொரூபசுகம்
சித்தம் பதித்தவருட் சிற்பரமாம் பாதம். (அ)

645. உன்மத்த வேகமொழித் தோங்கு சொரூபசிவ
தன்மத் தியானமுளஞ் சார்வித்த பாதம். (அ)

646. ஆன்ம சமர்ப்பணநின் னகந்தைத் தியாகமே
யானென்னும புன்மதியை யெற்றுதியென் பாதம். (அ)

647. உறுதியாத் தேற்றியுளத் துண்மைநிலை யீதென்
றறுதியா வென்னையடிக் காண்டவருட் பாதம். (அ)

648. கற்பதனு லாயபயன் கற்பனைதீ ருண்மைநிலை
நிற்பதுவே தன்னியல்பா நெஞ்சத்தென் பாதம். (அ)

649. ஏனுவீ ணேங்குதிமெய் யின்பநிலை யாங்கெனநீ
தானே சுகசொரூபஞ் சார்புளமென் பாதம். (அ)

650. உள்ளமொடு தன்சொருப மொன்றினென்று வேறல்ல
விள்ளுறுமச் சொல்லளவே வேற்றுமையென் பாதம்.
(அ)

651. உள்ளமா யுள்ளத்தே நன்சொருப முள்ளதெனத்
தெள்ளியமெய்ஞ் ஞானியர்தந் தேற்றமெனும் பாதம்.
(அ)

652. கற்பிதமா மூனவகங் காரமதி தான்கழன்ற
சிற்பதமே தன்சொருபச் செம்பொருளென் பாதம். (அ)

653. தானியொடு தானமுமாத் தானே தழைப்பதனுக்
கீனவுப மானமியல் வானமெனும் பாதம். (அ)

654. தன்பரந்த மாட்சிசேர் சத்துவமாஞ் சித்துவமே
என்பராற் றன்னிடமஃ தேயுளமென் பாதம். (அ)

655. பைத்தியத் தாற்போற் பயில்வெறும் பேச்சுக்கு
வைத்தியம் போலும் மவுனமென் பாதம். (அ)

656. முயல்வோர் மவுனமே முக்கிய மாகப்
பயிலவேண் டும்முதற் பாடமென் பாதம். (அ)

657. வஞ்சம் மலிகய நெஞ்சுக் கதிதொலை
சஞ்சலந் தீருப சாந்தமென் பாதம். (அ)

658. ஈசனைநே சிந்தபத்தி யோகமுனைப் பாலுளத்தில்
வாசனைநா சத்தை மடுத்திடெனும் பாதம். (அ)

659. இன்பமுனக் கின்னருளா லெய்துவது நின்னிதயத்
தன்பொடுசெய் யான்ம சமர்ப்பணத்தென் பாதம். (அ)

660. நேச மணைந்தசிவ நிட்டையாற் பாழ்படுவன்
பாச மினைந்தொழியப் பாற்றுதியென் பாதம். (அ)

661. குருபாத சேவைகுறிக் கொண்டவர் நெஞ்சத்தில்
வெருவாத நிட்டைதரு விஞ்சையருட் பாதம். (அ)

662. குருசொரூ பத்தையொரு கூட்டுளடைக் காதே
யருபவிபு வாகவகத் தாய்ந்தறியென் பாதம். (அ)

663. குருவடிவிற் கூருந் திருவருளே மோகத்
தெருமரலை மிக்கெளிதிற் றீர்க்குமெனும் பாதம். (அ)

664. ஒருவருமே சத்தி யுடையரலர் மோன
குருவருளின் வல்லபந்தாங் கூறவெனும் பாதம். (அ)

665. அருள்வடிவாப் பூஜைக் கருகதையா மீசன்
குருவடிவாக் கொண்டதிருக் கோலமெனும் பாதம். (அ)

666. குருவருளான் மெய்யுடைத்தன் கோலமுணர்ந் தாலே
குருசொருபங் கண்டுணரக் கூடுமெனும் பாதம். (அ)

667. தனுதுசிவ சத்திதரு சாந்தமா மோனத்
தெனுதுகுறிக் கோளிலக்கி யிட்டவொளிப் பாதம். (அ)

668. அந்தமோ னங்கா ணருந்தவர்க் காதிகுரு
சொந்தமாச் செய்த சுபோதனையென் பாதம். (அ)

669. கிரந்திவிடுத் தந்தக் கிளவியே யன்னூர்
பரந்தவிகற் பச்சிந்தை பாற்றியதென் பாதம். (அ)

670. புகன்றபல போதனையும் போக்கவொணுச் சங்கை
யகன்றதெனி லம்மோனத் தாற்றலென்னென் பாதம். (அ)

671. பரசுவத்து வாத்தனையே பற்றடியர் நெஞ்சிற்
பரசிவத்து வெள்ளமெழப் பாய்ச்சுமொளிப் பாதம். (அ)

672. சித்தி வளாகமாச் சேரத்தன் சந்நிதிச்
சத்தி விலாசஞ்சூழ் சாந்தபதப் பாதம். (அ)

673. கள்ளப் பிராணுக் கருத்தைக் கவர்ந்தின்ப
வெள்ளப் பிராணு விளங்குசிவப் பாதம். (அ)

674. காணுநின் ருற்போலக் காண்கினுஞ்சுட்
[டொன்றுமெதிர்
காணு விசுத்தவெளிக் கண்ணனை பாதம். (அ)

675. மானுடமாத் தன்னை மருட்டாநின் றேகிலர்முன்
வானுடலாத் துன்றுபர வஸ்துமயப் பாதம். (அ)

676. தன்மயமா நிற்குமுப சாந்தத்தே யல்லான்மற்
றென்மயத்து மோர்நிலைபே றில்லையெனும் பாதம். (அ)

677. ஞேயந்துக் கேயன்றி ஞாதுருஞா னங்களுக்குந்
தாயகமா நின்றபர தத்துவமாம் பாதம். (அ)

678. பரத்தோ டியைந்தசற் பாவத்தா லுண்மைத்
தரத்தவா மன்னவைபொய் தப்பிலெனும் பாதம். (அ)

679. விவகாரந் தன்னிலுமம் மெய்ப்பரத்து ஞானந்
தவரு திருக்கை சகஜமெனும் பாதம். (அ)

680. உடலகந்தை செத்நா லொழிந்தியல்பா மந்தத்
திடநிலையா ராலுமகஞ் சேர்வரிதென் பாதம். (அ)

681. அந்நிலைதா னுள்ளத் தலையுங்கா ருருயிருக்
கெந்நிலைபெற் றுலுமுத்தி யில்லையெனும் பாதம். (அ)

682. நடுவுநிலை விட்டு நழுவுறுர் நெஞ்சாற்
கடவுளே தஞ்சமாக் கண்டோரென் பாதம். (அ)

683. உபாசனையா லந்த வுபாசகனுக் கன்றி
யுபாசனு மூர்த்திக்கென் றாதியமென் பாதம். (அ)

684. எட்டாக் கடவுணிலை யெட்டப் படுவதுதன்
னிட்டானு பூதி நிகழ்ச்சியிலென் பாதம். (அ)

685. யோகமாக் கன்ம மியல்வதுநா னென்னும்புன்
மோகமறப் பெற்ற முனிக்காமென் பாதம். (அ)

686. அறிவை யறியவே யாற்றத் தகும்பன்
முறைகளிலும் மிக்க முடிவாமென் பாதம். (அ)

687. உதுக்கா ணரந்தச்சே யோங்காரத் துட்பொருளாப்
பதுக்கா துரைத்தசற் பாவமெனும் பாதம். (அ)

688. தப்பாகத் தன்சொருபந் தான்பயிற்றுங் கள்வன்மற்
றெப்பாவஞ் செய்யா னெனக்கேட்கும் பாதம். (அ)

689. முன்பே யறிதிநீ யெப்பிழைக்கும் மூலமாய்த்
தன்படிவந் தேருமை தான்கொடிதென் பாதம். (அ)

690. ஆன்ம சொருபமா வண்ணும் பிரம்மத்தைத்
தான்மரிக்கக் கோறலாந் தப்பதுவென் பாதம். (அ)

691. ஆண்மாருட் டஞ்செய் யகங்கார வஞ்சகனே
காண்மா ரணத்தொழில்செய் காதகனென் பாதம். (அ)

692. எண்ணிலவாத் தன்னுருவை யேமாற்றித்
[தான்பிழைப்பு
நண்ணுமுயிர்த் தன்மைமிக நாணுடைத்தென் பாதம்.
(அ)

693. அனியாய மாமிவ் வதிசயத்தைக் கண்டுணர்வுற்
றினியா கிலுமெய்வாழ் வேற்கைநன்றென் பாதம். (அ)

694. விச்சையான் மோக வவிச்சையற வீயினன்றி
நிச்சயமா முத்தி நிகழாதென் பாதம். (அ)

695. குருவுக்குத் தன்னை யறக்கொடுக்குஞ் சீடன்
மருவுவன்மெய்ஞ் ஞானசுப வாழ்க்கையெனும் பாதம்.
(அ)

696. உமையாளே போலநீ யோர்பாதி யீந்தால்
அமையாது ஞான மடைதற்கென் பாதம். (அ)

697. மிச்சமற விட்டாலே வியத்தித் துவவகத்தைச்
சொச்சமெய்ஞ் ஞானஞ் சுடருமெனும் பாதம். (அ)

698. அமுதபரி பூரணத்துக் கான்ம சமர்ப்பணமோ
ரிமியளவு மீடாகா தென்றறிகென் பாதம். (அ)

699. நிழலை விடுத்து நிஜச்செம் பொருளாம்
பழமுதலைப் பற்றுவியா பாரமெனும் பாதம். (அ)

700. இற்றென் றியம்பவொண் ணுவேகான்ம ஞானசுகம்
பெற்றென்றும் வாழ்திபிர மாதமற்றென் பாதம். (அ)

701. வெற்று நினைப்பளவா மேவுமகங் காரவுற
வுற்றுநீ பெற்றதென்ன வூதியமென் பாதம். (அ)

702. சொந்தசொரு பத்திலதி சுத்தனு முன்னியற்கை
மந்தமனத் தாலே மயங்கியதென் பாதம். (அ)

703. ஆசமனத் தொன்றோ வகமருடத் தாலுமந்
நீசமனப் பாவமற நீங்காதென் பாதம். (அ)

704. விவேகவிசா ரத்தால் விரிந்தாங்கே யஃது
சிவோகமெனத் தானே திகழ்வுறுமென் பாதம். (அ)

705. அகந்தையை மட்டு மகத்தினின் றோட்டி
யிகந்தொழி புத்திவே றில்லையென் பாதம். (அ)

706. உள்ள லொழிந்துநீ யுள்ளத் துனதியல்பா
வுள்ளதென் னென்றுமட்டு முய்த்துணரென் பாதம். (அ)

707. தன்னறிவே சூனியமாத் தத்தளிக்கு மோர்புருடன்
என்னறிவா னென்னறிந்து மென்பயனேன் பாதம். (அ)

708. மருவழக்காந் தன்மெய் மறப்பதனை லன்றோ
அருவழக்கி வீடுபட லாவதெனும் பாதம். (அ)

709. அறிவையே நோக்கி யமைதிபெறக் கல்லா
வெறியர்பால் வெட்கல் விவேகமெனும் பாதம். (அ)

710. விலக்கவொணு வாழ்க்கை விவகார மட்டிற்
கலக்கமுறு தாற்றிக் கழிகவெனும் பாதம். (அ)

711. சிக்குறு வாறுலகிற் சித்தமிறைக் காக்கிமிகப்
பக்குவமாக் கூத்தைப் பயிற்றுதியென் பாதம். (அ)

712. சோதனையிற் பட்டுமனஞ் சோர்ந்து துளங்குறுர்
சாதனையிற் றேர்ந்த சமர்த்தரெனும் பாதம். (அ)

713. சித்தக் கலக்கந் தெளிந்து துயிலுணர்ந்த
புத்தரே போற்றிகளாப் போற்றுகவென் பாதம். (அ)

714. அன்னவர்பா லுண்மை யறிந்துகொளத் தக்கதன்றிப்
பின்னெவர்தம் பாலும் பிழைபடுமென் பாதம். (அ)

715. நிறுத்திக்கொள் ளுன்னை நிறைசொருபத் திற்கட்
டுறுத்திக்கொள் ளாதே யுபாதியொடென் பாதம். (அ)

716. பக்குவமாச் சூக்குமசற் பாவமுறப் பெற்றமனஞ்
சிக்குவதா காதுலகச் சிக்கலிலென் பாதம். (அ)

717. பார்ப்பானுந் தன்சொருபப் பார்வையாற் கற்பனைச்சுட்
டோர்ப்பானை வாட்டி யுடற்றுதியென் பாதம். (அ)

718. உள்ளியே போல வுயிர்த்தோற்றம் பல்கூட்டுக்
கள்ளமே யன்றியுருக் காண்கலதென் பாதம். (அ)

719. நோய்ப்பால தானவுட னேக்கமறத் தன்சொருப
வாய்ப்பான வாழ்வை வளம்படுத்தென் பாதம். (அ)

720. உயிரேபோ ளுலு முசாவொன்று மட்டும்
அயராதே யென்றுங்காப் பாற்றுதியென் பாதம். (அ)

721. அவஞால மோகத் தழுந்தாதே யான்ற
சிவஞானச் செல்வச் சிறப்படையென் பாதம். (அ)

722. திருவருளைக் கொண்டுன் வெருவரலை மாற்றிப்
பருவரலோய்ந் தின்பப் பதமடையென் பாதம். (அ)

723. கடவுளையே நம்பினோர் கைவிடவோர் காலும்
படவறியா மைக்கோர் படர்கரியாம் பாதம். (அ)

724. போக்கையாங் குண்மறித்துப் புந்தியைத்தன் மூலத்திற்
சேர்க்கையாற் சொஸ்தபதஞ் சேர்தியெனும் பாதம்.
(அ)

725. மொட்டலர்ந்த வல்லி முகிழ்ப்பதுபோ லாணவப்புன்
கட்டவிழ்ந்த வுள்ளங் கவியாதென் பாதம். (அ)

726. அறிவுபர மாகவறிந் தான்றவனு பூதி
நிறைவுதரு மௌன நிலை நீடுமொளிப் பாதம். (அ)

727. விழித்திருக்கும் போது விசாரமறு தோம்பிச்
சுழுத்திலயம் பற்றுமனச் சோர்வொழியென் பாதம்
(அ)

728. நின்னொழிந்து மற்றெந் நிலையுமின்மை
[யோர்ந்துளம்பற்
றுன்னொழிந்த வற்றிலுதா சீனமெனும் பாதம். (அ)

729. சொருபமே நாட்டமாத் தூங்குமுயிர் தானே
விருபவிழி யாக விளங்குமெனும் பாதம். (அ)

730. நித்தமுந்தன் னையாது நிம்மதியை வாட்டுமன
மத்தமத யானைகளை மாட்டுவலிப் பாதம். (அ)

731. சாகசக்கா ராணவத்தைச் சாடுவதா யன்பருல
கேகசக்க ராதிபத்தி யஞ்செலுத்தும் பாதம். (அ)

732. எத்தனையோ பல்லா யிரக்கணக்கா மன்பரைமற்
றித்தரைமீ தாட்கொண் டினிதருள்செய் பாதம். (அ)

733. சொல்லாட வொட்டாத சுத்தமா மோனஙகூர்
வல்லாளப் பாதங்கை வல்லியமாம் பாதம். (அ)

734. பாழ்வர்க்க மானபசு பாசபந்தம் பாறவொளிர்
வாழ்வுக்கோ ரெல்லையாய் வைகுசுகப் பாதம். (அ)

735. வசியமாம் பாதமதே ரஞ்சிதமாய் மிக்ககவா
ரசியமாம் பாதமதி ரசமான பாதம். (அ)

736. ஆயத்த மாவுளதை யாய்ந்தறிந்து கோடலன்றி
நீயத் தனஞ்செய் நிமித்தமின்றென் பாதம். (அ)

737. வெறிகொண்டு வீணை விதண்டையிடா துள்ளாய்ந்
தறிகொன் றெழுமகத்தை யாட்டுதியென் பாதம். (அ)

738. நம்பகமுள் ளார்க்கே நவிலுமறைச் செம்பொருளை
யம்பலமாக் குற்றவதி யாச்சரியப் பாதம். (அ)

739. கண்டுகொள லன்றிக் கருதற் கிடமின்றி
மண்டுமொளி யாந்தன் மயமான பாதம். (அ)

740. ஈதலா துண்மைவே றில்லை சொருபத்தின்
மீதலாற் சிந்தை விடாதியெனும் பாதம். (அ)

741. மறித்துமறித் தோதியென் வாயலுக்கப் பெற்றும்
வெறித்தமனத் தோர்வினவல் விட்டிலரென் பாதம்.
(அ)

742. எத்துணைதா ஞானி யியம்பினுமே சாதகர்க்கு
மெய்த்துணைசொந் தான்ம விசாரமெனும் பாதம்.
(அ)

743. கர்த்தத் துவந்தாங் கழியளவு சாதனையை
நித்த நிகழ்த்தலே நீதமெனும் பாதம். (அ)

744. கர்த்தத் துவக்கழிவே யான்ம சமர்ப்பணமாச்
சித்தத் துறைப்பத் தெரித்தலுறும் பாதம். (அ)

745. செய்வன செய்து முடித்தோனு வப்பொழுதே
யுய்வனதற் கப்பா லுஞற்றிலையென் பாதம். (அ)

746. முத்திப் பதத்துமுழு மோனப்பே ரின்பவெள்ளம்
தத்திக் கரைபுரளத் தக்கதங்கென் பாதம். (அ)

747. மகிழ்ச்சிதரத் தக்கதுதன் மாணடியைச் சிந்தித்
தகச்செயலோய்ந் தாங்கே யமர்தலெனும் பாதம். (அ)

748. முத்திக்கு வாயிலன்றி முத்தி சொரூபமுமா
வர்த்திக்கும் மோனமே வாய்ப்புடைத்தென் பாதம்.
(அ)

749. நடவையா மோனத்தை நண்ணிவிடி லந்த
விடவையில்யா தோரிடரு மில்லையெனும் பாதம். (அ)

750. முத்திமக ளானவந்த மோனவணங் கன்பொடுசெய்
பத்திநகை பாசவிருள் பாற்றுமெனும் பாதம். (அ)

751. அமுதக் கடலா வருஞ்சுரத்தை யாக்கு
சமுகம் படைத்ததுப சாந்தியெனும் பாதம். (அ)

752. எப்பாடு நீபட் டெனினுமவ் வின்பமகள்
பொற்பாத சேவை பொன்போற் போற்றுதியென்
[பாதம். (அ)

753. கருணை விலாசக் கடைக்கணைக் கத்தாற்
பொருணுடு சுற்றமயல் போகுமெனும் பாதம். (அ)

754. அத்தருணி தன்னைமகிழ்ந் தாராதிக் கின்றதே
எத்தருமத் தாங்குமிக வேற்புடைத்தென் பாதம். (அ)

755. படிமிசையப் பாவையையென் பாக்கியமாக் கூட்டிக்
கடிமணம் பூட்டிவைத்த கல்யாணப் பாதம். (அ)

756. ஆவலித்த நாயேற் கனுராகப் பேரின்ப
வாழ்வளித்து முன்கவலை மாற்றியநற் பாதம். (அ)

757. தான்கொடுத்த போனவுப சாந்தத்துக் கென்னையே
யான்கொடுத்தல் கைம்மா றெனத்தெரித்த பாதம். (அ)

758. இரம்மியமா வாழுமிவ் வில்லறமே மிக்க
பிரம்ம சரியமாப் பேறுதியென் பாதம். (அ)

759. என்னை யடைந்துநினக் கென்னகுறை யென்றுமகிழ்ந்
தென்னைக்கொண் டாடு மிதக்கருணைப் பாதம். (அ)

760. கவலைநீத் தின்பமாக் காலங் கழியாய்
சவலைநீ யல்லையெனச் சாற்றியதாய்ப் பாதம். (அ)

761. அம்மாதர் சாந்தி யணங்கின்பே ரின்பநலந்
சும்மா விருந்தே சுகித்தியெனும் பாதம். (அ)

762. யானென்று மட்டு மொடாதேநீ நின்றலையை
போனா லணங்கின் முகத்தென்னும் பாதம். (அ)

763. சற்றும் முகங்கொடுத்துச் சாராளுநன் மாட்டுநீ
சற்றுநா னென்றுதலை தூக்கிலெனும் பாதம். (அ)

764 சிவலோக சித்தியுனைச் சேர்ப்பளியல் பாநீ
யவளதிகா ரத்துக் கடங்கிலெனும் பாதம். (அ)

765. மெத்தென்ற மெல்லியலை மேவி விருப்பத்தோ
டொத்தென்றும் வாழ்தி யுளத்தென்னும் பாதம். (அ)

766. யடுத்துக்கொண் டொன்று மகிழ்வுறுநும் வாழ்க்கை
எடுத்துக்காட் டாக விளிதென்னும் பாதம். (அ)

767. நீயே யவளா வவளேநீ யாகநெஞ்சத்
தேயே யொருப்பட் டியைதிரெனும் பாதம். (அ)

768. இன்பமய மானவவ் வில்லறமே நல்லறமெய்
யன்புசிவ மாக வமர்தியெனும் பாதம். (அ)

769. யான்பெற்ற சாந்தியா மேந்திழைகைப் பற்றியநீ
தான்பாமேபா க [illegible] தழைத்தியெனும் பாதம். (அ)

770. அம்மா தரசியைநின் னுருயிர்த் தோழியாப்
பொய்யறு வுள்ளம் புணர்தியெனும் பாதம். (அ)

771. சூனியமே போன்ற சுழுத்தியே தன்னியல்பா
யானனுமா லற்றிதயத் தேய்ந்தொளிர்மெய்ப் பாதம். (அ)

772. தன்னியல்பாத் தூன்றமுப சாந்தச் சுழுத்தியே
அன்னியர்கொண் டாடுதுரி யாதீதமென் பாதம். (அ)

773. பிறரே புகழினும் பெட்டுவந்தல் குற்றம்
பறைதற் புகழ்ச்சி யறப்பதரென் பாதம். (அ)

774. அத்துவித வுண்மையா மான்மசொரு பத்தையகன்
றெத்துவிதத் தோற்றமெவ்வா றெய்துமெனும் பாதம்.
(அ)

775. கண்டிருளப் பட்டுமன மேங்கினோர் தன்னுற்பின்
னுண்டருளப் பெற்றுமகிழ்ந் தார்க்குமிசைப் பாதம்.
(அ)

776. அருளனையின் வாயிலா வல்லதுமெய்ஞ் ஞானப்
பொருளியலின் காட்சி பொருந்தாதென் பாதம். (அ)

777. சுத்தபர மோனவொளிச் சொக்கமே சைவமன்றிச்
சித்தமியல் சிட்டிவகை சாத்தமெனும் பாதம். (அ)

778. சத்திவிலா சத்திற் றழைக்குமது சுத்தசிவ
முத்திவிலா சத்தின் முடிவுறுமென் பாதம். (அ)

779. மோனவொளி கண்டமனம் மூப்புமயின் கற்பனைசே
ரேனையொளிக் காட்சியைநன் றேலாதென் பாதம். (அ)

780. தன்னறிவு முற்றத் தலைப்பட் டுபசாந்தம்
மன்னுநிலை யும்பரும்பர் மாண்பதமென் பாதம். (அ)

781. எங்கெழிலென் ஞாயி றெமக்கென் றியலிறுமாப்
பங்கெழுமான் மானுபவ மற்புதமென் பாதம். (அ)

782. நீசாவ கானவந் நீர்மையிலுன் னெஞ்சத்தில்
வாசா மகோசரவவ் வாழ்வுறுமென் பாதம். (அ)

783. விளையாட விட்டுலகை வேடிக்கை பார்த்துக்
களையாறி யுள்ளங் களிசாலும் பாதம். (அ)

784. அபர்த்தவகங் காரமறிந் தான்ம சொரூபத்
துயிர்த்தெழுமவ் வாழ்க்கை யுலப்பிலதென் பாதம். (அ)

785. அமுதவாழ் வாகவறிந் தான்றோ ரடையவ்
வமிதவாழ் வேமிக் கமைவுடைத்தென் பாதம். (அ)

786. அறிவி லணைத்து மடக்கமாக் காட்டிச்
செறிவுறுத் தாண்ட சிவசொரூபப் பாதம். (அ)

787. அறிபடுமெல் லாமுயிரோ டைக்கியமா மந்த
வறிவைத் தனக்குவச மாக்கிடிலென் பாதம். (அ)

788. அறிவன்றித் தெய்வ மறிந்திலேன் மற்றஃ
துறைவதா வுள்ளத் தொடுங்கிடிலென் பாதம். (அ)

789. ஆசரிக்கத் தக்கதுஞா ஞன்மநிட்டை நெஞ்சகமே
நீசரிக்கப் பெற்று நிலைத்திடெனும் பாதம். (அ)

790. வெட்கற் கிடனு மிணைவிழைச்சின் மேல்வெறியைத்
தட்கலே சாதகர்க்குத் தக்கதெனும் பாதம். (அ)

791. புலையியல்பாத் துன்றும் புலாலூண் மறுக்கை
தலையியல்பாச் சான்றோர் தழுவுவரென் பாதம். (அ)

792. அருள்வழியிற் புக்கமெய் யன்பரையவ் வூணே
மருள்வழியின் மாற்றி மயக்கிடுமென் பாதம். (அ)

793. ஊனகந்தை யூரா துடற்றமுற் பட்டோருக்
கூனைத்தின் றான்பெருக்க வூனமெனும் பாதம். (அ)

794. தாக்கணங்கு போலத் தலைப்பட்ட சித்தத்தை
நீக்கிணங்க லின்றித்தன் னிட்டையினென் பாதம்.
(அ)

795. அதற்குவச மாகி யணைந்தனைபே லந்தோ
மதக்களியி லுன்னுயிரை மாய்த்திடுமென் பாதம். (அ)

796. சாகசத்தா லுன்னைச் சருவு மதிசமர்த்த
லாகவத்தா ளச்சித்த லங்கணியென் பாதம். (அ)

797. எச்சரிக்கை கண்டா யினிநீயப் பாதகிபே
ருச்சரிக்கை செய்யா தொதுங்குதியென் பாதம். (அ)

798. ஆலிங் கனத்தா லனைவரையுந் துஞ்சுவிக்கும்
மாலங் கணியம் மடந்தையெனும் பாதம். (அ)

799. ஏமாற்றி யாவரையு மெப்படியோ தன்வசஞ்செய்
மாய்மாலக் கள்ளிமகா வஞ்சகியென் பாதம். (அ)

800. காதகியா மோகப்பெண் காரிகைசண் டாளிபல
சாதகர்தம் வாழ்வையறச் சாய்த்தனளென் பாதம். (அ)

801. சாந்தியா முன்றன் சகதரும சாரிணியைக்
காந்தலுறும் பொல்லாக் கசடியெனும் பாதம். (அ)

802. உண்ணுட்டத் தைக்கெடுக்க லுற்றதுயா தேனுமதைக்
கண்ணுேட்ட மின்றிக் களைந்தெறியென் பாதம். (அ)

803. சூர்ப்பணகை போன்றவதி துச்சரித நூர்ந்தமனக்
கார்ப்பணிய மையலறக் காய்ந்தொழியென் பாதம்.
(அ)

804. தாடகையே போன்றகொடுந் தைத்தியப்பே யானமனத்
தாடகையா றான்றியுனை யோம்புதியென் பாதம். (அ)

805. அறிபடுவா னல்ல னறியப் படானுமலன்
அறிவே சொரூபனு மான்மாவென் பாதம். (அ)

806. புடிக்காட்சி மையலறப் போனவுப சாந்தத்
தடிக்காட்சி யானசொரு பானுபவப் பாதம். (அ)

807. சுட்டுணர்வுக் குத்தன் சொருபமெவ் வாறுபுலப்
பட்டொளிர்வ தாமோ பகர்தியெனும் பாதம். (அ)

808. சுட்டுமனப் பான்மையறச் சுட்டெரித்தா லல்லதுமற்
றெட்டுணையுந் தன்மெயுணர் வெய்தாதென் பாதம்.
(அ)

809. சாந்திதோ ணாரத் தழுவுசுக முள்ளத்து
மாந்திமற் றெல்லா மறந்தொழியென் பாதம். (அ)

810. அந்தமில் பேரின் பமென வான்றோர் வழுத்துவது
சுந்தரியா மன்னாள் சுகமேயென் பாதம். (அ)

811. அந்தரியா மன்னா ளதிரூப சௌந்தரியை
வந்தலரிய மான வசங்கரியென் பாதம். (அ)

812. சற்குணச்சால் புக்கோர் சமுத்திரமாச் சார்வாட்குத்
தக்கிணையா வுன்னைத்தந் தொக்கணையென் பாதம். (அ)

813. கைப்பிடிக்கப் பெற்றுலக் காரிகையை நின்வாழ்க்கை
வைப்பெடுக்க வூற்று வளம்படுமென் பாதம். (அ)

814. பூவையவள் பாதத்தைப் போற்றிமிகப் புந்திசெய்து
சேவைசெயக் காத்திருப்பார் சித்தர்களென் பாதம். (அ)

815. அன்னா ளருட்பார்வைக் காரே யிலர்காணு
ரன்னார் மகிழ்ச்சி யளப்பரிதென் பாதம். (அ)

816. யசமானி யாகநீ யெய்தினவ ளாதிக்கத்
தசயான கீர்த்தி யடைவையெனும் பாதம். (அ)

817. மிக்கபரி பூரணமா மேவுபிர மானந்தந்
தொக்கவுரு வானசுகு மாரியெனும் பாதம். (அ)

818. கடவுளர்தம் மின்பவுல கங்களைக்கண் ணேக்காரம்
மடவரலின் சன்னிதியில் வாழுநரென் பாதம். (அ)

819. சாந்தியோ டுற்ற சதாசரணத் தோர்க்குமற்றை
யேந்திழையார் வாழ்க்கை யிளிவரலென் பாதம். (அ)

820. விவகார மோகம் விடுபடவேண் டுங்கா
ணவிகார சாந்தி யடைதற்கென் பாதம். (அ)

821. உபாயநின் னுண்மைநிலை யோர்த்துணர்த லொன்றே
சுபாவமா வுள்ளத்துத் தோய்ந்திடற்கென் பாதம். (அ)

822. விசித்திரமா மேவு நகைத்திரள்கள் எல்லாம்
அகாசத்தொழிய வுண்ணின் றகர்ந்திடுமென் பாதம்
(அ)

823. தன்னையின்றி யொன்றுமிலைத் தத்துவசச் சிற்பரமா
மன்னியின்றென் னுள்ளத்து வாழ்சொருபப் பாதம்.
(அ)

824. அவரங்க ளான வனைன்மதத்து வங்களைப்பல்
விவரங்க ளாத்தெரிந்தும் வீணென்னும் பாதம். (அ)

825. அறிந்தடையத் தக்கதன்னா னென்ம சொரூபமன்றிப்
பிறந்தடையத் தக்கவயற் பேறிலையென் பாதம். (அ)

826. இப்பாற்கிப் பாலா விருந்தொளிர்தன் னுண்மையே
அப்பாற்கப் பாலா மதீதமெனும் பாதம். (அ)

827. தங்குமுளம் புக்கொருகாற் றன்சொருபங் காண்கலார்க்
கெங்குமுள தாநின்றே யெங்குமிலாப் பாதம். (அ)

828. எங்குத்தை நின்றகமிங் கெய்தினனென் றெண்ணுமதே
அங்குத்தைக் குன்னையடை விப்பதெனும் பாதம். (அ)

829. ஏனோர் வரலாற் றியல்பெனைத்தென்
[றோர்ந்துழல்வோய்
தானாரென் றோராமை தவறென்னும் பாதம். (அ)

830. போதகனைப் பொங்கிப் பொலியவுளம் பற்றுவோய்
சோதகனாத் தன்னை முதற் சோதியெனும் பாதம். (அ)

831. சிந்தைநீ செய்யுஞ் சிவாயநம வேயுளத்துன்
தந்தைதா யாகத் தலைப்படுமென் பாதம். (அ)

832. வாதனை மாண்ட வளந்தரு மோனமே
சாதனை மாட்சியின் சால்பென்னும் பாதம். (அ)

833. எய்துபவை யெல்லா மிகந்தொழிப வுள்ளத்தில்
வைகுவதை யோர்ந்துணர்வில் வாழ்கவெனும் பாதம்.
(அ)

834. வைகுவதே யுண்மை வரம்பில்பே ரின்பமுத்தி
உய்குவது நீயவ் வுணர்வாலென் பாதம். (அ)

835. அகந்தைப்பேய் போலவே றந்தரமாம் பேயொன்
றிகந்தொழியா தூன்றிநிற்ப தில்லையெனும் பாதம்.
(அ)

836. அந்தவக ராதிப்பே யாதிக்கத் தாலந்தோ
இந்தவுல கம்படும்பா டெண்ணரிதென் பாதம். (அ)

837. விசாரமெய்ஞ் ஞான விபூதியொன் றற்கே
பசாசமது கட்டுப் படுவதெனும் பாதம். (அ)

838. கட்டுப் படலொன்றோ காணுய்நின் கண்முன்னே
வெட்டுப்பட் டாங்கே விளிவதெனும் பாதம். (அ)

839. பத்திப் பரவசத்தாற் பாடலா மாடலாம்
முத்திக் குதவுவது மோனமெனும் பாதம். (அ)

840. மோனவுப சாந்த முகவிலா சங்காண்மெய்ஞ்
ஞானவுல் லாச நடையென்னும் பாதம். (அ)

841. தெய்வத் தியற்கை தெளிந்துள் ளமைதலே
செய்வித்தை யொன்றுமங்குச் சேர்வதின்றென் பாதம்.
(அ)

842. சுத்தமாந் தெய்வ சுபோதத்தே சொல்குறிமற்
றெத்தவா வேசநிகழ் வொன்றுமின்றென் பாதம். (அ)

843. தாமபர மாவொளிர்தன் சச்சிற் சொருபத்தே
நாமவுருக் கற்பனையெஞ் ஞான்றுமின்றென் பாதம்.
(அ)

844. சித்தமே கற்பனையாச் சிற்சொருபச் செங்கதிர்முன்
அத்தமன மாகி யவிந்திடுமென் பாதம். (அ)

845. கழிவுதான் காலதே சங்களுக் கேகந்
தழியாந் தனக்கின் றசைவென்னும் பாதம். (அ)

846. உண்மை தனைத்தன் னுடைபடுத் தோர்ந்திடிற்
றிண்மைசேர் சாந்தி திளைப்பதென் பாதம். (அ)

847. அருகந்த நிர்வாண மாதியசட் டாளமறப்
பொருகுந்த மானவகம் போதமதப் பாதம். (அ)

848. கலைகற் றுருட்டுங் கடபடவா தச்செருக்குத்
தலைகெட் டழிந்துபடத் தாக்குமதிப் பாதம். (அ)

849. கன்மம் பகையன்று கர்த்தத் துவமன்றி
வன்மமற விட்டுநீ வாழ்தியெனும் பாதம். (அ)

850. சாதகன்முன் றன்சொருபத் தத்துவஞ்சா தித்தலே
சாதனைபல் வேறின் சமரசமென் பாதம். (அ)

851. சாதனைகள் கொண்டுபிற சாதிக்குந் தன்னியலெச்
சாதனையால் யாரேசா திப்பதெனும் பாதம் (அ)

852. சுபாவசித்த மாகத் துலங்கு சொருபத்
தபாதிதத்தை நீயே னறிந்திலையென் பாதம். (அ)

853. மன்னியமோ கப்பற்றை மற்றவற்றின் மாற்றலே
தன்னியல்சா திப்பதெனச் சாற்றுவதென் பாதம். (அ)

854. சும்மா விருந்தே சுபோதமாந் தன்சொருபத்
தம்மா ரகஸியத்தை யாய்ந்தறியென் பாதம். (அ)

855. நீலநிறங் கொண்டவொரு நேரிழையைத் தன்சொருப
வாலறிவிற் கொண்டபெரு மாயமுடைப் பாதம். (அ)

856. வடவால நிழலுற வைகியொரு நால்வர்க்
கடைவாக மோனத் தறஞ்சொன்ன பாதம். (அ)

857. சிவதா யினியான சிற்பரா சத்தி
யவதார மாத்தாயை யாக்கியபொற் பாதம். (அ)

858. அங்கணர சாவிவ் வகிலமுந்தான் கற்பித்துத்
தன்கணர சாட்சிபுரி சந்நிதிசேர் பாதம். (அ)

859. ஞாலமுழு துக்குமொரு நாயகமாய் மெய்ஞ்ஞான
சீலமுறக் கற்பிக்கச் சேர்ந்தவருட் பாதம். (அ)

860. ஆச்சரிய மென்றுரைன் றவாவன்மூ டாகந்தைப்
பேய்ச்சரியை போலுமெனப் பேசுதெய்வப் பாதம். (அ)

861. அற்றம்பார்த் தாற்றுசெயல் யாவுமே யஞ்ஞாயக்
குற்றமென நீத்தல் குணமென்னும் பாதம். (அ)

862. எதிலார் தானென் றிருதிறத்து மொப்பதே
நீதியெனக் கொண்டொழுகாய் நெஞ்சத்தென் பாதம்.
(அ)

863. சித்தசுத்திச் சீர்மையே சீலத்தா யென்றுணர்ந்து
நித்தநித்தஞ் சோதிநின் னெஞ்சையெனும் பாதம்.
(அ)

864. ஏகபோ கத்துரிமை யேய்ந்துபரந் தாமத்தே
சோகமோ கந்தீர் சுகபோதப் பாதம். (அ)

865. அதிகார மிக்க வருளாண்மை யாலே
சதிகார மாயையறச் சாய்க்குமொளிப் பாதம். (அ)

866. கேதத்தி னீக்கிக் கிளர்பாத மாலையெனும்
பாதத்தொன் ளாயிரம் பாடுவித்த பாதம். (அ)

867. பாதானந் தத்துட் படிந்தவரைக் கேவலமப்
பாதானந் தப்படிவாப் பண்ணுமகிழ்ப் பாதம். (அ)

868. நெஞ்சங் கரியாக நின்றொழுகி னல்லதுமற்
றெஞ்சியவை சாதகருக் கென்செயுமென் பாதம். (அ)

869. ஒருமைசேர் பாதத் துணர்வே யுயிருக்
கருமைசேர் வாழ்க்கை யளிக்குமென் பாதம். (அ)

870. விஞ்ஞான மான விவிதஞா னங்கெடுக்கும்
மெய்ஞ்ஞான மோன விழுத்தவச்செம் பாதம். (அ)

871. உடையாள் வடிவே யுருப்பட்ட வெல்லாம்
உடையான் றனக்கோ ருருவின்றென் பாதம். (அ)

872. துல்லபமாத் துன்று சொரூபானு பூதியருள்
வல்லபத்தான் மிக்கெளிதில் வாய்க்குமெனும் பாதம்.
(அ)

873. அட்டமா மூர்த்தி யவள்வடிவே யாத்தனக்கோ
ரெட்டுணையும் மூர்த்தியில வேயிலையென் பாதம். (அ)

874. தகரச்சிற் றம்பலமே தாணுவுரு வாகும்
பகரப் படும்பிறவோ பாவனையென் பாதம். (அ)

875. அந்தச் சொரூபத் ததுவாத்தா னிற்றலன்றிச்
சிந்தைக் கவகாசஞ் சேராதென் பாதம். (அ)

876. சுட்டற் றுளிர்தன் சொரூப சுபாவமே
மட்டற்ற ஞானசுக வாழ்க்கையாம் பாதம். (அ)

877. யானென்னு மம்முதலே யிற்றொழிய வேண்டுங்காண்
மோனமே வாயிலா முத்திக்கென் பாதம். (அ)

878. அதுவுள் ளளவு மனந்த விகாதம்
பொதுளுவன புற்றீசல் போலென்னும் பாதம். (அ)

879. சிந்தைப் பரம்பரைக்கே நாயகங்காண் சிச்சடமா
மந்தயா னென்னு மகந்தையெனும் பாதம். (அ)

880. பிரம சொரூபம் பிரச்சுவ லிக்கப்
பரம கருணையுளம் பாய்ச்சுமொளிப் பாதம். (அ)

881. எளியரை மேற்சென் றெறியும் வலியார்
நெளியமேற் சென்று நெருக்குவன் பாதம். (அ)

882. ஊனமுற் றுருக் குதவியா முன்னின்று
நானென்று மார்தட்டு நாயகப் பாதம். (அ)

883. விழுமிய வேதப் பொருடன் சொரூபமாக்
கெழுமியல் சான்ற கிளரொளிப் பாதம். (அ)

884. தூராக் குழியாந் துராசையே ஜீவியத்தைத்
தீராத் தரித்திரத்துட் சேர்ப்பதெனும் பாதம். (அ)

885. துன்றுமா யாவாதஞ் சூனியமா மாயையைமெய்
யென்றலே யன்றிப்பொய் யென்றலன்றென் பாதம். (அ)

886. பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யென்றெண்ணிப்
பேய்த்தேர் முகத்தலே பேதைமையென் பாதம். (அ)

887. சாயையே மெய்யாத் தடுமாற்றஞ் செய்யுமனே
மாயையுயிர்ப் பற்றொழிய மாட்டுமொளிப் பாதம். (அ)

888. முட்டுடைத்தாச் சற்றும் முரிந்துபடா தோம்புகிநீ
கட்டுடைத்தாக் கொண்ட கடைப்பிடியென் பாதம்.
(அ)

889. மேலெழுந்த வாரியா மேற்கொள்ளா தாசரனை
காலழுந்த வுள்ளுநட் கடைப்பிடியென் பாதம். (அ)

890. துயர்நலியா வாறு சொருபசுகம் பொங்கு
முயிர்நிலையா முள்ளத் தொடுங்குதியென் பாதம். (அ)

891. வாழி சிவாத்துவித வாழ்க்கைமெய் யன்பருளத்
தூழிநீ டூழியென வாழ்த்தலுறும் பாதம். (அ)

892. பிறிதோர் முதல்போற் பிணங்கிநீ யானென்னல்
வறிதாய வீண்விதண்டா வாதமெனும் பாதம். (அ)

893. இருவே றியல்பா லியங்குமுயிர் வாழ்க்கை
மருவு மனோமயமா மாத்திரமென் பாதம். (அ)

894. பாவனையா லன்றிப் பரமார்த்தந் தன்னிலே
யாவதுமோர் பந்தமுத்தி யெய்தலின்றென் பாதம். (அ)

895. உயிர்த்தொகைபல் லாற்று ழுழன்றடையு முத்தி
மயர்த்தகையால் வந்த வழக்கென்னும் பாதம். (அ)

896. நின்றிடத்தி னின்றே நிகழ்வழக்குப் பண்டரியி
னின்றியற்றல் யாத்திரைக்கே நேரென்னும் பாதம்.
(அ)

897. சங்கற்பங் காண்டி ஜகச்சிட்டி சங்காரஞ்
சங்கற்பஞ் சாய்ந்தவுப சாந்தமெனும் பாதம். (அ)

898. இயங்குவதை நோக்கி யிருப்பதைமோ கிக்கை
மயங்குமகங் கார மடமையெனும் பாதம். (அ)

899. அருத்தமென் னொன்றுநன் காய்ந்தே விதியின்
கருத்தையறி வாயகத்திற் கண்டொழுகென் பாதம்.
(அ)

900. பொருளின்ன தென்று புலப்படக்கண் டாலே
வெருள்சேர் மருட்கை விளியுமெனும் பாதம். (அ)

901. சித்தித் திறன்களிற்செய் சிந்தை பரமார்த்த
முத்தியைத் தட்குமுட்டுக் கட்டையெனும் பாதம். (அ)

902. எத்தகவா லீசனரு ளாட்சி யியல்வதோ
அத்தகவே காணெழுக லாறென்னும் பாதம். (அ)

903. பொய்காட்டும் புன்கலக்கம் போகவருட்
[கண்ணோக்காற்
கைகாட்டி யுண்மைக் கதிகாட்டும் பாதம். (அ)

904. பரிக்கையிறை பல்லுலக பாரம்பட் டாங்கே
தரிக்கைதரை சாயா சமூகமெனும் பாதம். (அ)

905. தீண்டித் திருப்பாதஞ் சென்னியைத்தாக் காவளவும்
பாண்டித் தியமென் பயன்செயுமென் பாதம். (அ)

906. தன்னுழைப்பின் சாதனையாற் சட்டவொரு
[காலுமுயிர்
தன்னிழப்போ சாதிக்க லாவதன்றென் பாதம். (அ)

907. எங்குமென் றென்றுந்தன் னெண்ணமியல்
[வாருளத்திற்
பொங்கும்பே ரின்பவருட் பூரணமாம் பாதம். (அ)

908. கள்ளமனக் கற்பனையாங் காட்சிகளைக் காட்டுவதா
வுள்ளபொரு ளின்ப வுணர்வொளியென் பாதம். (அ)

909. தொடங்கியதன் சத்தித் தொழிலுக்குத் தானே
அடங்கினாற் போலியங்கு மாச்சரியப் பாதம். (அ)

910. ஒத்துவமில் லாவிசுத்தச் சித்துவமே தன்சொருபத்
தத்துவமா ஞான சமாதிநடைப் பாதம். (அ)

911. தள்ளுவதோ கொள்ளுவதோ சாராத வத்துவிதத்
தெள்ளுவதோ நள்ளுவதோ வெங்ஙனமென் பாதம்.
(அ)

912. சித்த விகாரத் தெருமரல்சேர் தொந்தபுந்தி
அத்துவித ஞானத் தரிதென்னும் பாதம். (அ)

913. இயல்பாக வுள்ளதே யின்பமுத்தி பந்தமோ
மயல்பாய சிந்தை மருட்சியெனும் பாதம். (அ)

914. நியாமகனு மென்னணினைவு நிற்கொழிந்தா லன்றித்
தயாமதிநின் பாலெனக்குத் தப்பாதென் பாதம். (அ)

915. என்னியல்பாத் துன்னருளைக் காண்டற் கியல்வதுநீ
என்னைமற வாதிதயத் தெண்ணிடிலென் பாதம். (அ)

916. உள்ளத் தொழியா வுணர்வுருவா மென்னைத்தேர்
துள்ளுமகங் காரமனச் சுட்டொழியென் பாதம். (அ)

917. எங்குமியல் கின்ற வெவற்றுக்குஞ் சிற்பரமாப்
பொங்கு சொரூபமே பூமியெனும் பாதம். (அ)

918. யாதுதான் றன்னை யிகந்தியங்க வல்லதுதன்
மீதுதா னெல்லாந் தழைப்பனவென் பாதம். (அ)

919. சிற்பரமாந் தன்சொருபச் சேர்க்கையே சச்சங்கம்
தற்பரமாந் தான்றணக்குத் தக்கதன்றென் பாதம்.
(அ)

920. தண்ணிழலாந் தன்னைத் தணந்தாலே தாபமெலாம்
நண்ணியழல் விப்பமன நைந்திடவென் பாதம். (அ)

921. தொடங்கிய கன்ம நுகர்ந்து தொலைப்பன்
நடுங்க லிலன்றிட ஞானியென் பாதம். (அ)

922. சொந்தஞா ஞன்ம சொருப சுகானுபவத்
தந்த நுகர்ச்சியகம் பற்றுதென் பாதம். (அ)

923. அன்னியங்கட் கன்றி யனைத்துவிகா ரங்களுமே
தன்னியல்புக் கொன்றுமில்லாத் தற்பரமாம் பாதம்.
(அ)

924. ஊனசித்தி யானவட யோகசித்திக் கன்றிமுழு
ஞானசித்திக் கொன்றுமிலை நட்டமெனும் பாதம். (அ)

925. இவறலே போலநின் னின்பங் குலைக்குந்
தவறுவே றில்லையெனச் சாற்றுதயா பாதம். (அ)

926. நீதியுற வோடே நிகழ்கருணை நெஞ்சத்திற்
போதியற மாகப் புணர்தியெனும் பாதம். (அ)

927. எங்குற்றுத் தேடினுந்தா மெய்தற்கு மிக்கரியர்
தங்குற்றங் காணுந் தகவோரென் பாதம். (அ)

928. ஆபாச மாம்பொய் யகந்தையபி மானமே
ஆவாதன் குற்றமே லாமையெனும் பாதம். (அ)

929. அகந்தைக் குறும்பை யகழ்ந்தெறிந் தாங்கே
யகந்ததும்பும் முத்தியுல காட்சியெனும் பாதம். (அ)

930. படர்வ மனக்கற் பனையெனத்தே ரன்றேற்
கடவுள் சொருபமாக் காணுதியென் பாதம். (அ)

931. தோன்றுப யாவுங் கடவுள் சொருபமேல்
ஆன்ற விருப்புவெறுப் பாங்கெவனென் பாதம். (அ)

932. எப்பா லவர்க்கு மியைந்த சொருபமே
தப்பாத சுத்தபர தத்துவமென் பாதம். (அ)

933. ஆசத்தி யாலே யடிபட்டு வீணிலெவன்
வேசற்று வாடி விடாய்த்தலெனும் பாதம். (அ)

934. மானுதி தோற்றத் வாயிலா வுள்ளவந்
நானுரென் றுள்ளத்து நாடுதியென் பாதம். (அ)

935. புத்தியே நீயாப் புலம்பாதே சற்போத
சித்தியா லுள்ளமைதி சேர்தியெனும் பாதம். (அ)

936. சேர்ந்த வமைதியைத் தேர்ந்துன் சொருபமா
ஆர்ந்தமைய வூன்றி யமுந்துதியென் பாதம். (அ)

937. உன்றன் னமைதி யொழிவதன்று நெஞ்சத்து
நின்றன் னிலையுணர்ந்து நிற்கிலெனும் பாதம். (அ)

938. சுத்தசை தன்ய சொருபமாங் கைவல்ய
முத்திதரு தக்ஷிணா மூர்த்தியாம் பாதம். (அ)

939. தன்ம சொருபமாந் தன்னியல்வாழ் வின்கண்மற்
றன்னியதன் மங்களிலா மைக்கியமென் பாதம் (அ)

940. சும்மா விருமெனுமச் சொற்பொருளாத் தான்சுடர்விட்
டெம்மா லயர்த்தற் கெளிதன்றும் பாதம் (அ)

941. இறுதிப் பிறப்பா விதுவே சொரூப
மறதிதீர்த் தாண்டகை வல்லியமாம் பாதம். (அ)

942. சிந்தை மருட்கைத் திறஞ்சேர் கணுக்களே
உந்துஜன் மங்களா வேரர்வித்த பாதம். (அ)

943. செவ்வியதா வுள்ளசச் சித்தாச் சுடர்சொருபத்
தொவ்வுவதாச் சித்தமொன்றல் யோகமெனும் பாதம். (அ)

944. காமமற விட்டுத்தற் கைதொழுவார் தம்மிதயத்
தேயமுற நின்ருளிர்பே ரின்பமலைப் பாதம். (அ

945. வாக்குமனச் சேட்டை மடங்குவதா வோங்குமதி
சூக்குமசச் சிற்சொருப சுத்தவொளிப் பாதம். (அ)

946. மூடவவி சாரப்புன் மோகத்தி னின்றுமுளைத்
தாடுவன காணனைத்து முப்புடியென் பாதம். (அ)

947. அசாரநிழ லாக்கவகை யாங்கொழிப ஞான
விசாரவொளி பட்ட விநாடியெனும் பாதம். (அ)

948. மதியொத்து நின்றபெரு மாண்புசே ரன்ப
ரிதயத்தி லின்பப் புதையலாம் பாதம். (அ)

949. ஒருமைசேர் புத்தி யுசாவோ ருளத்துட்
பிரம சொரூபப் பிறக்கமாம் பாதம். (அ)

950. விபாசகன தெய்வ விவிதங்க ளாக
உபாசகர்தம் பாவனையோ டொத்துலவும் பாதம். (அ)

951. அற்பமதி யாள ரறிந்துவப்ப மாயிகமாங்
கற்பனைசேர் பல்கலைகள் கற்பித்த பாதம். (அ)

952. அவாவறுத்தோ ராமெய் யறிஞர்க்கே நீடுந்
தவாவருட்பே ரின்பாத் தலைப்படுமொண் பாதம். (அ)

953. தியாகத்தா லன்றித் தெரிந்தடைய வொண்ணு
தியாயத்தா லோங்குசுத்த நிர்க்குணமாம் பாதம். (அ)

954. அனைத்துமே தன்னை யவாவி நிற்ற லன்றி
எனைத்துமே தானவற்றை யிச்சியாப் பாதம். (அ)

955. பற்றுள்ளத் தோரைப் பதைப்பித் துதாரஞ்சேர்
மற்றுள்ளத் தோரை மகிழ்விக்கும் பாதம். (அ)

956. புத்தியறி யாதசிறு போதே பரபோக
வித்தையறி வித்துளத்தில் விஞ்சுசுகப் பாதம். (அ)

957. அவிரோத மாக வனைத்துவிரோ தத்தும்
தவிராத சுத்த சமரசமாம் பாதம். (அ)

958. பல்லோர்தம் பாதையைப்பின் பற்றாதே சான்றபெரு
நல்லோர் நடையேநீ நண்ணுதியென் பாதம் (அ)

959. அகமும் புறமு மவற்றினிடை யூடும்
இகமும் பரமுமெங்கு மெல்லாமாம் பாதம் (அ)

960. மெத்தவரி தாகப்பல் வேற்றோர்க்குச் சிற்சிலர்க்கோ
சித்தபரி பாகத்தான் மெத்தெளிதாம் பாதம். (அ)

961. சின்னத் தனஞ்சேர் சிறுபுல் லறிவாண்மை
தன்னைப் புகழ்ந்து தருக்கலெனும் பாதம். (அ)

962. அற்புதமாத் தோற்றிவ் வவனிவெறும் பேருருவாம்
புற்புதமே போலப் புலனாளவென் பாதம். (அ)

963. காப்புழவா நின்ற கடுந்தவத்தைக் கைதவமோர்
வேர்ப்புழுவாக் கீழறுத்து வீழ்த்துறுமென் பாதம். (அ

964. புத்திபல வாகப் புகட்டலெவன் சிற்சொருப
சித்தியிலுன் னாட்டஞ் செலுத்துதியென் பாதம். (அ)

965. சூனியநிர் வாணமெனச் சொல்லுமது மற்றவற்றைச்
சூனியமாப் போக்கு சொரூபமெனும் பாதம். (அ)

966. அறப்பெறிலல் லான்மற் றயலவற்றி லாசை
உறப்பெறுவ தன்றவ் வுறுதியெனும் பாதம். (அ)

967. யானென் றெருநவ னிருந்தொளிர்வ தாலன்றோ
ஈனுலகங் கண்முன் னெதிர்வதெனும் பாதம். (அ)

968. மூலமா மந்த முதல்வன் சொரூபத்தை
ஏலவறி யாமையிற்கா ணேக்கறலென் பாதம். (அ)

969. எவ்வாறு காண்பா னியல்வனே காண்புலங்க
ளவ்வாறே யாக வமைதலினென் பாதம். (அ)

970. நின்னு லுலக நிகழ்வதல்லா லவ்வுகலந்
தன்னு லுனதுண்மை சார்வதன்றென் பாதம். (அ)

971. முப்புடியின் காட்சியறு மோகச் சுழுத்தியிலும்
எப்படியு நின்னிருப்பை யேற்பையெனும் பாதம். (அ)

972. அவ்வுண்மை தன்னைநீ யங்கீ கரியாயேல்
எவ்விதமுன் ஞானம்பின் னெய்தியதென் பாதம். (அ)

973. சிந்தைபுந்தி யற்றசெழுங் கேவலச்சித் தாதலால்
அந்தவிந்தை யாங்கவற்று லாய்வதன்றென் பாதம்.
(அ)

974. ஆங்கவற்றின் சேட்டை யடங்கிதய மோனத்தில்
வீங்குறமேற் காண்பததன் வீறெளியென் பாதம். (அ)

975. ஆக்கமிகப் பெற்றவம யத்தமைய வேண்டுவது
பாக்கியமா முள்ளப் பணிவென்னும் பாதம். (அ)

976. சிறியசுருக் கத்திற் சிறக்கக் கடவ
துறுதியுறச் சிந்தைக் குயர்ச்சியெனும் பாதம். (அ)

977. அவனிதலத் தைம்புலத்தா லாட்டுண்ணு தூன்றுய்
தவநியமத் தேசற்றுந் தாழ்வறவென் பாதம். (அ)

978. காணிக்கை யாமனத்தைக் காதலர்பால் வாங்கிச்செம்
மாணிக்க ஜோதியால் வாய்மடுக்கும் பாதம். (அ)

979. விடத்தழல்சேர் மோகவிடாய் வேட்கைதீர் சாந்தித்
தடப்புனல்வா யாடித் தணிதியெனும் பாதம். (அ)

980. உண்மையல் லால்வே றெருநகதியின் றுநயிருக்
கண்மையுறு நின்றுண்மை யாய்ந்தறியென் பாதம்.
(அ)

981. இகழ்வே புகழ்வே யிரண்டுமொரு பாங்காத்
திகழ்வதே காண்டிசம சித்தமெனும் பாதம். (அ)

982. ஒவ்வா வியலுறவோ டொட்டலினுந் தூற்றுதே
செவ்விதாத் தீர்தல் சிறப்பென்னும் பாதம். (அ)

983. இன்பதுன் பங்க ளியல்பல்ல சாந்தியே
மன்பதைக் குண்மைமகிழ் வாழ்வென்னும் பாதம்.
(அ)

984. இரம்மியமாத் துன்றமைதி யின்பமே யொப்பில்
பிரம்மசுக மாப்பெரியர் பேணுவதென் பாதம். (அ)

985. வீணிலுழன் றந்தோ வெறுவிதாங் கற்பனையைப்
பேணலெவன் மூடமதிப் பித்துலகென் பாதம். (அ)

986. அற்புதமாத் துன்றுசாந் தானுபவம் விடலெவன்
கற்பிதமாம் புன்களியைக் காதலித்தென் பாதம். (அ)

987. வருவனவந் தெய்துங்காண் வாராத வாரா
இருவுனதின் பங்கூ ரியற்கையிலென் பாதம். (அ)

988. குறுகுபரிச் சின்னக் குடிலமனக் கூத்தான்
மறுகுவர்காண் புன்மயக்க மாக்களெனும் பாதம். (அ)

989. போகங்கள் யாவுமின்பப் போலியே யுண்மைமகிழ்
பாகமிலாத் தன்சொருபப் பான்மையெனும் பாதம்.
(அ)

990. தன்னியல்யா தென்னத் தரிசித் தமையளவும்
துன்னியமுத் தாபந் தொலையாவென் பாதம். (அ)

991. உள்ளதொன் றன்றி யிரண்டில்லை யஃதுமுனை
யெள்ளியுனக் கன்னியமா வில்லையெனும் பாதம். (அ)

992. உள்ளதோ பொன்றுவதன் றுள்ளதன்று
[பொன்றுவதோ
தெள்ளியோ னிவ்வுண்மை தேர்ந்தவனென் பாதம்
(அ)

993. மித்திரபந் துக்கள் விளிவுகுறித் தாவவெனச்
சித்தமசை வஞ்ஞானச் செய்கையெனும் பாதம். (அ)

994. நெஞ்சத் தகமகமா நின்றன் சொருபமா
விஞ்சுமெனை மேவுமுயல் விந்தையெனும் பாதம். (அ)

995. கண்டா பரணத்தைக் காசினிமுற் றெங்கெங்கும்
திண்டாடித் தேடலந்தத் தேட்டமெனும் பாதம். (அ

996. கண்டந் தடவியணி காண்டலெனவுன் சொருபப்
பண்டந் தனையுளத்துட் பார்த்தறியென் பாதம். (அ)

997. என்று மடையப்பட் டுள்ளதாஞ் செம்பொருளைத்
துன்றுவது காட்சித் துணிவளவென் பாதம். (அ)

998. ஒருமையான் மெய்ஞ்ஞான யோகமே நேர்வழிமற்
றிருமையின்றால் வேறுவழி யில்லையெனும் பாதம். (அ)

999. ஊனவிடை யூறரிதா முள்ளவா றோர்த்துணர்மெய்ஞ்
ஞான விசார நடையிலெனும் பாதம். (அ)

1000. பண்டுமுத லானமயற் பந்தம் பழங்கதையாம்
கண்டுணரி லுன்சொருபக் காட்சியிலென் பாதம்.
(அ)

1001. ஆசைமய லற்றவன்பர்க் கன்றிவிட யாசைமிகு
நீசமனத் தார்க்கஃது நேர்வரிதென் பாதம். (அ)

1002. ஏனோ விரங்கி யினைதனுயிர் பேரின்ப
வானா வளர்சொருப மெய்ம்மறந்தென் பாதம். (அ)

1003. படைப்படைத்த வெய்யிலாப் பாழ்த்தசமு சாரத்
திடைப்படிந்து சிந்தை யிரங்கலென்னென் பாதம்.
(அ)

1004. நீசமனப் பான்மையா னிபடைத்துக் கொண்டதுயர்க்
கீசனே காரணன்போ லேசலென்னென் பாதம். (அ)

1005. பிறிதன்றித் தானைப் பிறங்கலிற்காணுன்சுட்
டறிவுக் கரிதாயிற் றுன்மாவென் பாதம். (அ)

1006. சுட்டற் றியல்வதேற் றுங்க சொருபமாக்
கட்டறத்தன் னைத்தானே காண்குறுமென் பாதம்.
(அ)

1007. காரணனெவ் வாறே கதிரவனிக் காசினியின்
காரியத்துக் கவ்வாறே காணுறையென் பாதம். (அ)

1008. தொண்டுபட்ட நல்லடியார் தொன்றுதொட்ட
[வல்வினையான்
மிண்டுபட்டுத் துஞ்சலற மிக்கருள்செய் பாதம். (அ)

1009. சத்திதன் சம்பந்தத் தாலன்றி யில்வுலகோ
டெத்தொடர்பு நேரேயின் றீசனுக்கென் பாதம். (அ)

1010. கண்காட்சி காண்பா ணிருப்புணர்வின்
[றின்மையாற்
கண்கூ டனைத்தினுமுற் கண்கூடாம் பாதம். (அ)

1011. தன்னறிவு நிற்க வசச்சடமேற் சுட்டறிவுந்
துன்னலுனக் கெங்ஙனே சொல்லுதியென் பாதம்.
(அ)

1012. இவ்வுலக வுண்மை யெனைத்தோ வனைத்தேமற்
றெவ்வுலக வுண்மையுமென் றேயிசைக்கும் பாதம்.
(அ)

1013. தர்க்கமறச் சாற்றத் தகுவதிம்மட் டேயென்று
சொர்க்கநர கங்குறித்துச் சொல்கடவுட் பாதம். (அ)

1014. ஜடமா முபாதியிற் றுதான் மியமாப்
படர்மா லகந்தையே பந்தமெனும் பாதம். (அ)

1015. சிச்சடத்துப் பூட்டுத் தெறிப்பவிடு விப்பதுதன்
சொச்சொருபத் துண்மைதேர் சோதனையென்
[பாதம். (அ)

1016. நீலவா னத்து நிறம்போலே நின்சொருபத்
தேலவே காண்பதுகா ணிவ்வுலகென் பாதம். (அ)

1017. நின்சொரு பத்து நிழல்போல நீடுலகிற்
புன்சிறுர் போற்றுவிதப் புந்தியென்னென் பாதம்
(அ)

1018. மருட்கனைப் போல மயங்குலக வாழ்வில்
வெருட்கலா மோய்ந்தமைதி மேவுதியென் பாதம்.
(அ

1019. உபாதியுணர் வோயவுளத் துண்மையள வாவூர்
சுபோதமே முத்தி சொரூபமெனும் பாதம். (அ)

1020. அகந்தை யழிந்தாங் ககண்டமாத் தன்மெய்
திகந்த மளாவித் திகழுமெனும் பாதம். (அ)

1021. உணர்வதன்றி யத்துவித வுண்மை புதிதாப்
புணர்வதன்று சுத்தபர போதத்தென் பாதம். (அ)

1022. ஏற்கெனவே யுள்ளதைநீ நோக்குவதே கன்மமன்றி
மாக்கனவா மற்றுமுள சாதனையென் பாதம். (அ)

1023. வேண்டிடா தெய்தியதை வேண்டுமள வாமகிழ்ச்சி
ஈண்டநீ யேற்றுடலுக் கீதியெனும் பாதம். (அ)

1024. சித்தத்தைப் பற்றித் திளைக்கும்பல் பேதசுகம்
சுத்தப் பிரம்மசுகக் கடனுரையென் பாநம். (அ)

1025. சிவச்சிற் பரமுத்த ஜீவனுக்கச் சிற்சுகநீ
டவிச்சின்ன மாமிக் கனுபவமாம் பாதம். (அ)

1026. சித்த வுபாதியறத் தீர்ந்த நிலைக்கணனு
மித்தலொஞ்ச் சிற்சுகத்து மெய்த்தெளிவாம் பாதம்.
(அ)

1027. சாந்தக் கருத்திற் றலைப்படுஞா னுன்மசுகம்
வீந்தொழியுங் கோர விருத்தியிலென் பாதம். (அ)

1028. எஞ்சலின் ருகரவி யமனங்கி வாயுமுதல்
அஞ்சியொழுங் காகவியங் காணையுடைப் பாதம். (அ)

1029. பிச்சை மருந்தாப் பிணிப்பசியைப் போக்கிமனத்
திச்சையொன் றின்றி யியங்குதியென் பாதம். (அ)

1030. மறப்பா மறைப்புமே மன்னுயிர்பா லீசற்
காப்பெருங் காருணிய மாவறியென் பாதம். (அ)

1031. மடாதுமறப் பின்றேன் மலபரி பாகம்
படாரெனவாழ் வுங்குலைந்து பாழ்படுமென் பாதம். (அ)

1032. சகல சமயவா தங்களுமொன் ரேடொன்
றிகல்பொருது மோதுண் டிறப்பவெனும் பாதம். (அ)

1033. போர்முகத்துத் தன்முற் புறங்கொடுப்ப வெம்மதமும்
தார்மிகமா மோனந் தரிப்பதெனும் பாதம். (அ)

1034. மாச்சரிய மற்று வழங்குவது மற்றவற்றோ
டாச்சரிய மோனத் தருந்திறலென் பாதம். (அ)

1035. மலைந்துபடு வீண்விதண்டா வாதமொழிந் தேலாய்
குலைந்துபடா மோனமதக் கொள்கையெனும் பாதம். (அ)

1036. தோன்றுதொட் டென்றுஞ் சுழல்புண் மனத்தியல்பே
ஒன்றைமற் றென்று வுறழ்தலெனும் பாதம். (அ)

1037. அந்த மனச்சுட் டறிவின் விகற்பமே
சிந்தை மயக்கத் தெருமரலென் பாதம். (அ)

1038. காக்கத னக்குக் கடமைமிக் குள்ளதென
வாக்குக் கொடுத்தவருள் வண்மைசேர் பாதம். (அ)

1039. வெம்பிக்கை சோர்ந்து விடாதே திருவருட்கண்
நம்பிக்கை கூர்ந்து நடத்தியெனும் பாதம். (அ)

1040. உயிர்க்குமம் மட்டா வுலகுக் குறுதி
பயக்குமெய்ஞ் ஞானியியல் பன்னரிதென் பாதம். (அ)

1041. சாதுவா நின்றே யசாதுவாப் பொய்ம்மாயைக்
கேதுவா மூடரா லேதமுறை பாதம். (அ)

1042. புறத்துறவே முற்றும் பொருளன்று மெய்யே
அகத்துறவிற் றேர்ச்சி யடைந்திடிலென் பாதம். (அ)

1043. அலங்கலில் லாதகாந் தாசலமா வுள்ளந்
துலங்குஞா னுண்ம சொரூபமாம் பாதம். (அ)

1044. ஏலமுற்று மான விருப்பொளியைப் பாதமெனல்
ஞாலமுற்றுந் தாங்கி நடத்தலினென் பாதம். (அ)

1045. உனக்காம் பொறுப்பை யொழித்துவிடி லென்பால்
எனக்கே பொறுப்பா வியற்றுவலென் பாதம். (அ)

1046. கருத்தத் துவமாங் கருத்தை விடாவளவும்
பொருத்தமா நின்பொறுப்பே போற்றுதியென் பாதம். (அ)

1047. கர்த்தவ் வியமாங் கடமை கழியாது
கர்த்தத் துவமதியுள் காறுமெனும் பாதம். (அ)

1048. அடிக்கே யகந்தை யழிந்துநிற் போர்காண்
அடுக்கலே போன்மெய் யடியரென் பாதம். (அ)

1049. சுகத்தியல்சே ரான்ம சொருபமாத் தூன்ற
அகத்திறையைக் கண்டேமெய் யன்பெழுமென்
[பாதம். (அ)

1050. ஒன்றன் றருமம்வே றென்றனுடைத் தேபோலத்
துன்றுவித்தல் காண்புத்தி தோஷமெனும் பாதம். (அ)

1051. ஒழிவிலே யுள்ள மொடுங்குவோர்க் கென்றுங்
கழிவிலாக் கைவலியங் காட்டுமெய்ப் பாதம். (அ)

1052. உலகுண்மை முற்ற வுணரலா மோர்தன்
னிலகுண்மை முற்கண் டிடிற்பின்னென் பாதம். (அ)

1053. அறிவொளி யாந்தன்மெய் யயர்ப்பதா லன்றோ
மறிவறியா மாய வலைப்படலென் பாதம். (அ)

1054. சொல்லான்மெய்ஞ் ஞானந் துலங்கப் பெறலற்பப்
புல்லாற் கடல்கடக்கும் பூட்கையெனும் பாதம். (அ)

1055. புத்திக்கு மூலசற் போதமே மெய்யுணர்வு
சித்திக்க லாற்றுந் திருவருளென் பாதம். (அ)

1056. பரசொருப மாவுட் பயில்வதே பார்க்கக்
குருசொருப மாமுற் குலவுவதாம் பாதம். (அ)

1057. இந்தத் தரும மிறைரமணற் காகென்று
சிந்தித் தறவோர் செயுந்தருமப் பாதம். (அ)

1058. அறத்துக் குரியவரும் பாத்திரமா மீசன்
றிறத்தறம்பல் கோடியாச் சேர்தருமென் பாதம். (அ)

1059. நித்திரையிற் செத்தபிண நேருடலிற் சற்றுமகம்
புத்திசெய்தோர் வாழ்ந்துமுயிர் பொன்றினரென்
[பாதம். (அ)

1060. செத்தமனத் தோர்மெய்யே ஜீவிப்போர் ஜீவிக்கும்
மத்தமனத் தோர்மெய்யே மாண்டோரென் பாதம்.
(அ)

1061. களித்த மனத்தரைக் காரணங் காட்டித்
தெளித்த லரிதிலருஞ் செய்கையெனும் பாதம். (அ)

1062. களிமயக்கஞ் சற்றுக் கழன்றதற் பின்பே
யொளிபயக்கும் வார்த்தை யுதவுவதென் பாதம். (அ)

1063. பக்குவ மின்றிப் பழாதுகா ணுள்ளத்துத்
தக்கவனு பூத சமாதியெனும் பாதம். (அ)

1064. வெட்டவெளியாக வெளுக்கு முயிர்ச் சாயந்தன்
னுட்டுருவித் தன்மெய் யுசாவிடிலென் பாதம். (அ)

1065. கல்லாமை யாலே கடைப்பட்ட மூடனேன்
பொல்லாமை தீர்த்தவருட் போதவுருப் பாதம். (அ)

1066. அவத்தை விகற்பமனத் தற்புதமாங் காலம்
விவத்தையுடைத் தல்லா விசித்திரமென் பாதம். (அ)

1067. சாயைகளைப் பல்பிரபஞ் சங்களாத் தோற்றுவிக்கும்
மாயைமன வல்லபமோ மாபெரிதென் பாதம். (அ)

1068. நிட்டையிலோ மெய்ஞ்ஞான திட்டியிலோ
[மற்றென்றன்
சுட்டியலுங் காட்சியறச் சூனியமென் பாதம். (அ)

1069. காதலிக்கத் தக்கபெருங் காட்சியே காணினுந்தான்
நீதலைப் பட்டவவை நீசமெனும் பாதம். (அ)

1070. குத்தித்தன் னிழல்சேர் குன்றையே தன்பகையா
மத்தக் களிறு மரிக்குமெனும் பாதம். (அ)

1071. வெறித்தவகங் காரமத வீண்களியர் நாளும்
மறித்துமறித் தாயிரங்கான் மாய்குவரென் பாதம். (அ)

1072. புன்செயினும் பொல்லாப் புலாலுடம்பைப்
[புண்ணியஞ்சேர்
நன்செயெனத் தன்சொருப ஞானஞ்செய் பாதம். (அ)

1073. புதைத்தே சொருபத்தைத் பொங்குங்
[குணமனத்தைச்
சிதைத்தோனே காண்குணா தீதனெனும் பாதம். (அ)

1074. வணத்தா லுயர்ந்த மனாதீத வாழ்வெக்
குணத்தாலுஞ் சற்றுங் குலைவதன்றென் பாதம். (அ)

1075. கடவதன் றாகவுநீ காரியமொன் றுற்றின்
அடைவுடைத்தா வாற்ற லமைவுடைத்தென் பாதம்.
(அ)

1076. யாங்குளா னீச னெதிர்ப்பட் டிலனென்போர்
தாங்களார் யாங்குளரென் றுங்கெதிர்கென் பாதம்.
(அ)

1077. எதிர்ந்தவித யாவாயத் தேனையவை காணா
தெதிர்ந்தொளிர்வ தாமவ் விறைவடிவென் பாதம். (அ)

1078. அருபம் புலத்துக் கறிவுக் கனுபவங்காண்
சொருபவக மாகச் சுடர்சிவமென் பாதம். (அ)

1079. தன்னொளிக்கு மூலமாந் தற்பரத்தி லவ்வொளியைப்
பின்னமறச் சேர்க்கவுளம் பேரொளிசெய் பாதம். (அ)

1080. அந்தநன் பேரொளியே யத்துவிதான் மானுபவப்
புந்தியினோன் றுனபரி பூரணமாம் பாதம். (அ)

1081. தன்மெய் யறிந்தடைந்த சாதுவர்க்கல் லாலுறுதி
யின்மையா வோங்கும்பே ரின்பவெளிப் பாதம். (அ)

1082. அத்துவித மான வறிவுண்மை யாலேமற்
றெத்துவிதக் கற்பனையு மில்சொருபப் பாதம். (அ)

1083. பிதிரா முழுமுதலாம் பிரம்மசொரு பத்தால்
அதிரா வடிகளா வான்றநிலைப் பாதம். (அ)

1084. அனாதிமுத லான தனாது சொருபத்தை
இனைதையமா வென்னா லிலக்கியபொற் பாதம். (அ)

1085. பொல்லா வுலகப் புலத்துநகை நின்மனத்திற்
புல்லாதெவ் வாற்றாலும் போற்றுதியென் பாதம். (அ)

1086. தன்னைத்தாங் காணமெய்யாத் தத்தளிக்கு
[மவ்வடியார்
தம்மைத்தான் காணமிகத் தாவிவரும் பாதம். (அ

1087. ஓரடிதாம் பேர்ந்தா லொருபதடி தானவர்க்காப்
பேருமதி தீவிரமெய்ப் பேரருட்செம் பாதம். (அ)

1088. தாழ்வைக் குறித்துநீ சட்டைசெய் யாதொழியின்
வாழ்வுதா னுகவுளம் வாய்ப்புறுமென் பாதம். (அ)

1089. சும்மா விருப்பே சொரூபசுப மங்களவாழ்
வம்மா மனுதீத மம்மகிழ்வென் பாதம். (அ)

1090. நானென்னும் புன்மதிப்பேய் நாணித் தலைசாயத்
தானென்னும் போதசிவ தாண்டவஞ்செய் பாதம்.
(அ)

1091. ஜீவபோ தப்புலச் சேட்டையற் றுலொழியத்
தேவபோ தான்மசுகஞ் சேர்வரிதென் பாதம். (அ)

1092. கள்ளவிட யப்புன் கலக்கமறச் சாய்வதுளத்
துள்ளபடி தன்மெய் யுணர்பதத்தென் பாதம். (அ)

1093. சுட்டறிவின் சேட்டைசேர் துட்டமனக் காரகந்தை
கெட்டவிடங் காண்சொருபக் கேவலமாம் பாதம். (அ)

1094. கற்பனையி லுன்றன் கருத்தை விடாதுவெறுஞ்
சொப்பனமா வோர்திபுலச் சுட்டொழிந்தென் பாதம்.
(அ)

1095. எளிதென் றிடவு மிடமற் றியல்பேயாம்
வளமைசேர் தன்சொருப மாட்சியெனும் பாதம். (அ)

1096. தொல்லைமாத் தோன்றல் சொருபமியல் பாயிருந்தும்
வல்லமைசேர் சுட்டறிவின் மாயமெனும் பாதம். (அ)

1097. இரண்டறுமத் தன்னை யெதிர்புலத்தின் சுட்டறிவால்
வெருண்டறிய லுற்றுளேதல் விந்தையெனும் பாதம்.
(அ)

1098. சாதனையா லான்மநிட்டை சாதித்தல் சந்தாப
வாதனைசேர் யாதனைதீர் வாழ்வுறவென் பாதம். (அ)

1099. எத்துணைநீ யாழ்வா யிதயத்தே கூர்த்துமதி
அந்துணையான் மானந்த மார்வையெனும் பாதம். (அ)

1100. கொந்தளிக் கின்றவதி கோரமனப் பேயகந்தைத்
தொந்தரைசற் றேனுமறத் துஞ்சுமெனும் பாதம். (அ)

1101. சும்மா விருப்பே சொரூபநிட்டை யென்றெளிதில்
எம்மா லறிதற் கியல்வித்த பாதம். (அ)

1102. முப்புடிகள் சித்த முகுரத்திற் சாயைகளாச்
செப்படிவித் தைபோற் றெரிவனவென் பாதம். (அ)

1103. பக்குவமாப் பண்ணிமெய் யன்பரைத்தன் [பார்வையான்
மிக்க வதீதமா மெய்யுணர்த்தும் பாதம். (அ)

1104. அருட்பிர போத மடைந்தமெய் யன்பர்க்
கிருட்பிர மாதமென் றென்றுமில் பாதம். (அ)

1105. இன்பவா ருக விருந்தொளிர்சோ ணசலமா
அன்பரகத் தோவா தமர்ந்தருளும் பாதம். (அ)

1106. வாழிசிவ ஞானசுக வாரிதியா வன்பருளத்
தூழியும்வற் றாதருட்பே ரூற்றெடுக்கும் பாதம். (அ)

1107. பாதமே பாத மதன்சொருப மானசுக
போதமே போதமெனப் பொங்கிதயப் பாதம். (அ)

1108. விசுத்த சொரூப விளக்கமே மெய்யாம்
அசுத்தமனக் காட்சி யபத்தமெனும் பாதம். (அ)

1109. மனத்துணர்வே மெய்யா மயங்குவோ ருண்மை
யினைத்தெனவே யோர்வரிதென் றெச்சரிக்கும் பாதம். (அ)

1110. இறைவன் றிருவடியி லேற்பித்த நன்மனத்தாற்
குறைவற்ற வின்பநிறை கூடுமெனும் பாதம். (அ)

1111. தன்சொருப மான சதோதயமாஞ் சீவியந்தந்
நெஞ்சுருவி னேர்நித்த சூரிகளென் பாதம். (அ)

1112. சேர்வரிய தானசிவ சாயுச் சியபதந்தன்
கேவலமா முண்மைக் கிளர்ச்சியெனும் பாதம். (அ)

1113. தன்னினைவே யல்லான்மற் றெந்நினைவு சாரினுமஃ
தன்னியமாம் பாவனையே யாகுமெனும் பாதம் (அ)

1114. தன்னுண்மை கண்கூடாத் தான்றுலங்கக் கண்மூடி
என்னினைந்து வீணுநீ ரேங்குதிரென் பாதம். (அ)

1115. கண்மலர்ந்து நீவிரக் கண்ணுளியே யோர்ந்திதயத்
தெண்ணிறந்த பேரொளியா வேய்திரெனும் பாதம்.
(அ)

1116. சுபோத சொருபமாந் தும்புவிட்டு நீவிர்
சிவோகமெனும் பாவனைவால் பற்றலென்னென்
[பாதம். (அ)

1117. அன்னியத்தைச் சுட்டி யலையாதே சாந்தசுக
நின்னியல்பாம் பூரணத்து நின்றிடெனும் பாதம். (அ)

1118. நிறைவேநன் னெஞ்சத்து நீர்மையாத் துன்றக்
குறைவுநினை வாலேன் குலைவதெனும் பாதம். (அ)

1119. நினைவே குறைவை நிகழ்விப்ப தாலந்
நினைவற்ற மோனமே நிறைவென்னும் பாதம். (அ)

1120. அடிமைத் திறமிறைவற் காற்றி னகந்தைக்
கொடுமைசேர் மையல் குலையுமெனும் பாதம். (அ)

1121. இன்பமே தன்சொருப மென்று விளங்கிடுமெய்
யன்புமே விட்ட வகத்திலெனும் பாதம். (அ)

1122. அறிவிற் கலவரங்க ளாரோப மன்றி
யறிவின்மெய் யாகவவை யார்ந்திலவென் பாதம். (அ)

1123. சித்தமென் கின்ற சிதாபாசச் சுட்டறிவு
மெத்த விசித்திர மா மித்தையெனும் பாதம். (அ)

1124. சுட்டறிவை மெய்யாத் துணிந்துதுளை
[வோர்சொருபங்
கெட்டறிவு மாழ்கிமனங் கேவுவரென் பாதம். (அ)

1125. எங்கெங்கு நோக்கினுநா னங்கங்குங் காண்புதுதன்
மங்கலிலாச் சிற்சொருப வானொளியாம் பாதம். (அ)

1126. ஈண்டுவது நின்னிதயத் தின்பவருள் சஞ்சலமற்
றுண்டவன்பா லாற்றுநின்மெய் யன்பளவென் பாதம்.
(அ)

1127. சுட்டற்ற போத சொருபபரி பூரணமே
மட்டற்ற வுண்மைமகிழ் வாழ்க்கையெனும் பாதம்.
(அ)

1128. சுட்டற்ற பூரணத்தைச் சூனியமோ வென்றையுற்
றிட்டதுபொய்ச் சுட்டறிவின் சூதேயென் பாதம்.
(அ)

1129. சுட்டறி வென்பது துட்ட வகந்தைமனத்
தெட்டறிவு கற்பனையின் றிட்டமெனும் பாதம். (அ)

1130. இதயமெய் யன்பருயி ரின்பவுணர் வோடே
சத்தமுறை ஜீவ சமாதியெனும் பாதம். (அ)

1131. இருவரிடை யென்றுமுள வேகான்ம பாவத்தால்
அருளொடுநன் பத்தி யனனியமென் பாதம். (அ)

1132. எனவேயவ்,
விரண்டுள் ளதனை லெதுவென் றியம்பினுமே
முரண்படலின் றென்னுமுழு மூதறிவுப் பாதம்.
(அ)

1133. நீசப்பற் றுனபே ராசைப்பேய்க் கோட்படுநெஞ்
சீசற்புற் றென்றிடும்பைக் கில்லமெனும் பாதம். (அ)

1134. கடைக்குலமாம் பாமரமக் கள்வழிவிட் டான்ற
வடைக்கலமாச் சான்றோ ரடியடையென் பாதம். (அ)

1135. நிறங்கிளர்மெய்ஞ் ஞானுன்ம நிட்டானு பூதித்
திறங்காண் சொரூபத் தெளிவென்னும் பாதம். (அ)

1136. அகந்தையகன் றான்மசொரூ பானுபவம் பொங்க
அகந்தைமூ லத்தையகத் தாய்ந்தறியென் பாதம். (அ)

1137. பாமரரென் பாருலகப் பாசவிருள் கப்புமனத்
தாமதர்யா னென்னதெனுந் தன்மையரென் பாதம்.
(அ)

1138. கடவுளியல் சான்ற கருத்தரே தேறிற்
றடவியன்சீர் சேர்சொருபச் சான்றோரென் பாதம்.
(அ)

1139. காளியகங் காரக் கதமடங்கக் காலோச்சிக்
கூளியினங் கூடக் குனிக்குநடப் பாதம். (அ)

1140. சாத்திரங்கல் கல்வி சமாதிநடைக் கேதுவா
மாத்திரமே யாக மதித்தறியென் பாதம். (அ)

1141. நுண்ணியநூ லோதி நுனித்துணர்ந்தும் புந்தியுளம்
புண்ணியத்தா லன்றிப் புகலரிதென் பாதம். (அ)

1142. உருட்டிப் புரட்டி யொழுகுமகங் காரத்
திருட்டறிவை யாரே தெருட்டுவரென் பாதம். (அ)

1143. கண்டுகொள லன்றிக் கருத்தான் மதிக்குறுவோர்
திண்டுமுண் டாடித் திகைப்பரெனும் பாதம். (அ)

1144. கற்பனைதீர் மெய்க்கடவுட் காட்சியகங் காரமனக்
கற்பனையை விட்டுக் கழிதலெனும் பாதம். (அ)

1145. அனுபூதி யாத்துன் றருமருந்தா லன்றித்
தனுபாவ நோய்மையறத் தப்பரிதென் பாதம். (அ)

1146. நானுனென் றெண்ணி நலிதலெவன் சும்மாதான்
தானுநின் ருற்சுகமே தானுமென் பாதம். (அ)

1147. நிர்விடய மாகவொளிர் நின்சொருப நிட்டையாற்
கர்வவகங் காரமயற் கட்டொழியென் பாதம். (அ)

1148. தெய்வமனப் பான்மையாஞ் சித்தத் தெளிவுடைமை
உய்வதற் கேற்ற வுபாயமெனும் பாதம். (அ)

1149. சித்தத் திரக்கமுஞ் சித்தத் துருக்கமும்
சித்தசுத்திக் கான செயல்களெனும் பாதம். (அ)

1150. இரட்டையிலே யொக்க விபலுமனப் பான்மை
அருட்டெளிவா லன்றி யமைவதன்றென் பாதம். (அ)

1151. அருட்டெளிவுக் கானவழி யன்னியத்தைச் சற்றும்
பொருட்படுத்தா தாற்றுசிவ பூசனையென் பாதம். (அ)

1152. புத்திதெளிந் தாங்கேசற் போதசொரு பானந்த
சித்திவிளை ந் துள்ளஞ் செழிப்புறுமென் பாதம். (அ)

1153. இன்பவருட் செல்வமே யெய்தப் பெறும்பயன்மெய்
யன்பர்க் கயலவற்ற லாவதின்றென் பாதம். (அ)

1154. சீரிடமா வுண்மைத் திகழ்ச்சிசே ருள்ளமே
சேரிடமா முத்திச் சிறப்பென்னும் பாதம். (அ)

1155. அடையநீ புக்க தனுதியே நின்னியல்பா
வுடைய சொருபமா வோர்ந்துணரென் பாதம். (அ)

1156. வஞ்சவெளி யாம்புன் மனத்திலுறுங் காட்சியே
பஞ்சவராம் பாழ்ம்புலத்தோர் பார்வையெனும்
[பாதம். (அ)

1157. அன்னியச்சுட் டாட்சிசே ரற்பமாம் பொய்யறிவைத்
துன்னியகஞ் சோர்ந்து சுழல்வுறுமென் பாதம். (அ)

1158. அறிவு தெளிந்தா லகிலமாம் பேதம்
பிறிவுற்றுத் தன்மயமாப் பேருமெனும் பாதம். (அ)

1159. அறிவுத் தெளிவாம்பே ரற்புதமாய்த் தன்னிற்
பிறிவுபட லற்ற பிரம்மவுருப் பாதம். (அ)

1160. விருபமாம் போத விலாசமே சுத்த
சொருபமாக் கொண்டுசுகந் துய்த்திடெனும் பாதம்.
(அ)

1161. அன்னியத்தை நாடி யலையாதே யற்புதமாந்
தன்னியற்கை கூடத் தலைப்படெனும் பாதம். (அ)

1162. துன்பங் களைநீ துரக்கத் தலைப்படலால்
இன்பமே நின்னியற்கை யென்றறியென் பாதம். (அ)

1163. பட்டிப் படிற்றுமனப் பாசாங் கறக்கொடிது
திட்டையாற் கற்பனையை நெட்டுதியென் பாதம். (அ)

1164. அருபமாச் செத்த வதிசூக் குமமனநின்
சொருபமே யாகத் துலங்குறுமென் பாதம். (அ)

1165. சித்தமே சுத்தசச் சித்தா வதன்சொருப
முய்த்துணர வல்லார்க் கொளிர்வுறுமென் பாதம். (அ)

1166. வீரவா வேசவெறி வீணர்க் குரியமூ
டாரவா ரத்தை யகற்றுதியென் பாதம். (அ)

1167. சுட்டற் றுளிர்தன் சொருபசற் போதமே
மட்டற்ற வுண்மை மகிழ்ச்சியாம் பாதம். (அ)

1168. சுத்தசிவ மான துரியவெளிக் கண்விழித்த
புத்தருளம் பொங்குசுக பூரணமாம் பாதம். (அ)

1169. வெளிவடிவா நின்று விளங்கும் பரசொருபத்
தெளிவளவே மெய்ஞ்ஞானத் தேற்றமெனும் பாதம்.
(அ)

1170. தன்னியற்கை யாகச் சமைவதுமெய் யன்புதன்மாட்
டென்னவே தன்சொருப மின்பமெனும் பாதம். (அ)

1171. எனவேபே ரின்பமுற விச்சையுளோர் தம்மெய்
யினையதென நன்றோர்ந் திடல்கடனென் பாதம். (அ)

1172. புலங்களே மெய்யாப் புலம்புவோர் புந்தி
நலங்கெழுமெய்ஞ் ஞானசுக நண்ணரிதென் பாதம்.
(அ)

1173. அறிவில் விழிப்புற் றகந்தெளிந்தா லன்றிப்
பிறிவரிது புன்பிறவிப் பேதைமையென் பாதம். (அ)

1174. செம்பொரு ளுண்மைத் திகழ்ச்சிசேர் சீரிதயத்
திம்பரே முத்தி யிலங்குறுமென் பாதம். (அ)

1175. உண்மைப் பொருளுணர்ச்சி யூக்கமுறப் [பெற்றவுளம்
வண்மைப் பெருமகிழ்ச்சி வைப்பெனுமெய்ப் பாதம்.
(அ)

1176. இன்பமுறற் கேதுவா யின்றென்றை நாடளவும்
இன்பமுனக் கின்றெனநன் றெச்சரிக்கும் பாதம்.
(அ)

1177. வெருக்கொளா நின்று வெறிந்துக் கொதித்தல்
செருக்குளார் புன்மனத்தின் சித்திரமென் பாதம்.
(அ)

1178. புல்லறிவு மற்றைப் புலங்களையே சுட்டுவதா
நல்லறிவு தற்குறியா நண்ணுவதென் பாதம். (அ)

1179. தன்விளக்க மில்லாச் சதுரப்பா டேதிலவற்
றென்விளக்கி னுலுந்தா னென்பயனென் பாதம். (அ)

1180. தற்சுட் டறிவொளியே தத்துவமெய்ஞ் ஞானமாப்
பிற்சுட் டறிவுவெறும் பேதைமையென் பாதம். (அ)

1181. அருட்பிர போத மடைந்தநல் லாருயிர்க்
கிருட்பிர மாதமென் றென்றுமில் பாதம். (அ)

1182. அருளின் சுடர்ப்பிழம் பாந்தன் சொருபமுன்
மருளும் வெருளும் மடாத்தெருட் பாதம். (அ)

1183. தாழ்வுக் கிடமறத் தற்சா ரடியர்மெய்
வாழ்வுக் கருள்வள மாட்சிதரும் பாதம் (அ)

1184. சகல கலாவல்லி யானதமிழ்த் தாயணங்கு
புகலுமிசை பூண்டொளிரும் புண்ணியப்பூம் பாதம்.
(அ)

1185. சருவசித்தி வாழ்க்கையுறத் தன்னடியர் தன்சொருப
துருவசித்தி நல்குசுயஞ் சோதியுருப் பாதம். (அ)

1186. யானென தென்னும்பொய்ம் மானபி மானமறத்
தானு விளங்குசிவ தற்பரமாம் பாதம். (அ)

1187. அளவைகளாற் சற்று மளக்கவொணுத் தன்சொருபத்
தெளிவையுளச் சாந்தியாற் சேர்த்தருளும் பாதம்.(அ)

1188. குறைவறுமெய்ஞ் ஞான குருவருளாற் சும்மா
வுறைவதுகாண் ஞானசிவ யோகமெனும் பாதம். (அ)

1189. சிந்தையறப் பெற்றெளிநஞ் சித்தோப சாந்தரைமற்
றந்தரவா னொரு மசைக்கரிதென் பாதம். (அ)

1190. நசித்த மனத்தெழுமெய்ஞ் ஞான சிவானுபவம்
விசைத்து விசும்பளவ விஞ்சுமெனும் பாதம். (அ)

1191. இன்பதுன்ப மென்னு மிரட்டையியல் கெட்டதுமெய்
யின்பமென லாக விருந்தொளிரும் பாதம். (அ)

1192. அருள்வடிவ மேற்கொண்டடியரகத் துண்மைத்
தெருள்கடவ தாகத் திகழ்த்துமொளிப் பாதம். (அ)

1193. சொந்த சொரூபவியல் சோதித் தறியளவும்
புந்தி யுறுங்கலக்கம் பொன்றறிதென் பாதம். (அ)

1194. புவிசிவம்வெவ் வேறு பொருள்களேற் புத்தர்
சிவசொருப மென்றுலகைச் செப்பலென்னென்
பாதம். (அ)

1195. அன்மயல்கெட் டான்றவதீ தான்மசொரு பானுபவச்
சின்மயமே தன்மயமாச் சேர்ந்தொளிரும் பாதம்.
(அ)

1196. சொரூபநிலை தானே சொரூப தரிசனங்காண்
சொரூபமிரண் டற்ற சுபோதத்தென் பாதம். (அ)

1197. காண்டலிற்காண் காண்டொறும்பல் காட்சிகளுங்
[காண்புலத்துக்
கீண்டுண்மை போல வெதிர்வதெனும் பாதம். (அ)

1198. சுட்டறிவை விட்டுத் துலங்குறுசற் போதநிட்டைக்
கட்டெரிவ தேகாண்மெய்க் காட்சியெனும் பாதம்.
(அ)

1199. இருளுறவு நீங்க விதயவெளிக் கண்ணே
யருளறிவாற் காண்குறுமான் மானுபவப் பாதம். (அ)

1200. உலகுமெய் யாமே லுலகறிவை மையலெனும்
சொலவு பிழைச்சொலவாத் துன்றுமெனும் பாதம்.
(அ)

1201. சுட்டறிவா லெய்துஞ் சுழற்சி விசாரங்கூர்
நிட்டையா லன்றிநிலை நிற்பரிதென் பாதம். (அ)

1202. பாச வறிவிற் பராமுகமாய்ப் பாசமின்மெய்த்
தேசமார் வாலறிவைச் சேர்தியெனும் பாதம். (அ)

1203. வேசைக்கோட் பட்டாரின் வேறல்லர் விண்புகழ்ச்சி
யாசைக்கோட் பட்ட வகந்தையரென் பாதம். (அ)

1204. கல்விப் பயனுக் கடவது வாலறிவன்
செல்வ வருட்கழலின் சிந்தையெனும் பாதம். (அ)

1205. செப்படுசச் சிட்டர் திறம்பயின்று சீர்மைசால்
பொற்புடைஞா னசாரம் போற்றுதியென் பாதம். (அ)

1206. கரப்பதுமெய்க் காட்சியைநின் காமியஞ்சேர் புத்தி
உரப்படுநிட் காம வுணர்ச்சியிலென் பாதம். (அ)

1207. அருளின் னொளியா வடியோங்க ளுள்ளத்
திருளின் னிடர்செற் றினிதாண்ட பாதம். (அ)

1208. அறிவதூஉ மின்றி யறியப் படலுமின்றி
யுறைவதா மத்துவித வுண்மையொளிப் பாதம். (அ)

1209. ஆருயிரின் வாழ்வை யருள்வெளியிற் கண்டுமகிழ்
கூருருயர்சான் றோரைமிகக் கொண்டாடும் பாதம். (அ)

1210. உணர்வுதன் னுள்ளே யொடுங்கற் குபாயமாப்
புணர்வதின்றேற் கல்விவெறும் பொக்கமெனும்
[பாதம். (அ)

1211. உத்திதமா நின்றே யொடுங்குலக முற்றுஞ்சிற்
சத்தி விலாசமாத் தானறிகென் பாதம். (அ)

1212. ஞான வரம்பான மோனமே மெய்க்காட்சி
யானவே தாந்த வரும்பொருளென் பாதம். (அ)

1213. சேதனா சேதனமாத் தேர்பவற்றுக் கெல்லாமோ
ராதனமா முண்மை யவிரொளியாம் பாதம். (அ)

1214. புடியான மூன்றன் புணர்க்கைசேர் மாயை
விடிவான சிற்சொருப விஞ்சையொளிப் பாதம். (அ)

1215. அமைவதன்றி யுள்ளத் தகமதுவாத் தீரர்
சமைவதெவன் பல்வேறு சாதனமென் பாதம். (அ)

1216. அலக்கழிந்து மாளா தகத்தகமாந் தன்மெய்
யிலக்கறிந்து பற்றியறி வின்படையென் பாதம். (அ)

1217. சாதனையுஞ் சாத்தியமுந் தன்னிலையிற் சார்தலே
யாதலாற் சும்மா வமைந்திடெனும் பாதம். (அ)

1218. அறிவா லறிவை யறிதலெனிற் சுட்டற்
றறிவுதான் றானா வமர்ந்திடலென் பாதம். (அ)

1219. சும்மா விருக்கவுனைச் சொல்லியவவ் வோர்மொழியின்
செம்மாண் பொருளதுவாத் தேர்ந்திடெனும் பாதம்.
(அ)

1220. ஆண்டுப் பொருளா வறியவே ரூன்மாவோ
ஈண்டுமனக் கற்பனையோ வின்மையினென் பாதம்.
(அ)

1221. யோகபோ கங்க ளிரண்டுபடா தொன்றுவன
தேகமோ காகந்தை தீர்பதத்தென் பாதம். (அ)

1222. ஆடியது போது மடங்கென் றகத்தியல்பா
நீடியமெய்ஞ் ஞான நிலையளித்த பாதம். (அ)

1223. தவிக்குஞ் சுரத்திற் சரிப்பவர்சந் தாபம்
அவிக்குமுப சாந்தப்பே ரார்கலியாம் பாதம். (அ)

1224. அட்டமா சித்தி யவாவாற்பல் யோகிகளை
நட்டுவத்தா லாட்டி நடிப்பிக்கும் பாதம். (அ)

1225. மோகமிக் கூர்ந்தமதி மூடருளத் தெங்ஙனமவ்
வேக சொரூப மிலங்குறுமென் பாதம். (அ)

1226. விடயங் களின்மேல் விபாமோக மேமெய்த்
தடையென் றறிந்து தணந்திடெனும் பாதம். (அ)

1227. அனர்த்தவடி வான வகங்காரம் பாவ
மனைத்துமொருங் குள்ளுறைபே ரார்கலியென் பாதம்.
(அ)

1228. நிசிந்தவகங் காரமறு நீர்மைகெழ நேர்மை
விசுத்தமுறும் பல்வகைவேள் வித்தொகையென்
[பாதம். (அ)

1229. யாப்புடைத்தாம் பேயகந்தை யின்னதென்றுள்
[ளாய்ந்தறியின்
மாப்பிளேத்தோ முன்போன் மறையுமெனும் பாதம்.
(அ)

1230. சித்த விகாரத் தெருமரல்சேர் புன்கலக்கப்
பித்தமாம் பாழ்ம்பிறவிப் பீழையெனும் பாதம். (அ)

1231. ஆன்ம சொரூப மநாதிமல முத்தமாத்
தான்மருவு சுத்த சதாசிவமாம் பாதம். (அ)

1232. எஞ்சலின் றுக விதயவிருட் காரவிச்சை
துஞ்சமேன் மேலுஞ் சுடர்சொருபப் பாதம். (அ)

1233. கற்றைகற்றை யாகக் கலேஞானங் கற்றுமகப்
பற்றறினல் லாமற் பயனிலேயென் பாதம். (அ)

1234. வேட்கை யொழிந்து விளங்குவிசி ராந்தியே
பூட்கைசேர் வேதாந்த போதமெனும் பாதம். (அ)

1235. நானென்னும் புத்தி நசித்தொழிந்த பின்னரே
தானென்னும் போதந் தலேப்படுமென் பாதம். (அ)

1236. மோகக் குருட்டுமட மூர்க்க வகந்தையே
ஆகத்தோ டாருயிரை யார்ப்பதெனும் பாதம். (அ)

1237. கூத்துக் காங்காக் குலவுறுசச் சித்தன்றிக்
கூத்தனீ யல்லே குறிக்கொளெனும் பாதம். (அ)

1238. பாதமே பற்றிப் பயில்சிந்தை யூடுமறப்
பேதம் படரா தெறிக்குமொளிப் பாதம். (அ)

1239. ஆதிக்க மானபர மார்த்தஞா னுனுபவம்
போதிக்க வுற்றசிவ போதவருட் பாதம். (அ)

1240. பொய்வல் லிருமைமும்மைப் புத்திமயல்
[போக்கியொளிர்
கைவல் லியதெய்வக் காட்சிதரும் பாதம். (அ)

1241. சித்தவியா பாரமெனப் புத்திவியா பாரமுந்தான்
மெத்த விகாதமென விட்டொழியென் பாதம். (அ)

1242. உண்டி சுருங்குதல் பண்டிக் கழகென நண்
கண்டினோர் தேற வனுட்டிக்கும் பாதம். (அ)

1243. கருத்தத் துவந்தாங் கழன்றோர் கிருத
கிருத்தியராத் தம்மிற் கிளர்வரெனும் பாதம். (அ)

1244. கருத்தவ் வியமொன்றுங் காணா ரனந்தத்
திருத்திதரு சாந்தசுகஞ் சேர்வரெனும் பாதம். (அ)

1245. சாதகராற் றன்னிழப்பே சாதிக்கத் தக்கதுகாண்
மேதகவா மோனநிலை மேவுறவென் பாதம். (அ)

1246. அன்னியப்பற் றெட்டா வகங்கார நாசமாந்
தன்னிழப்பே யான்ம சமர்ப்பணமென் பாதம். (அ)

1247. வஞ்சரா லோர்த்துணர மாட்டா தலமரச்செய்
தன்சொரு பம்பிரம்ம தத்துவமாம் பாதம். (அ)

1248. சுற்றுவட்ட மானவொரு சுழலிலாக் கேந்திரமா
வுற்றறிஞ ருள்ளந்தோ றேங்குசுடர்ப் பாதம். (அ)

1249. நன்மையெலா மன்பர்க்கு நல்குபெரு நாயகமாந்
தன்மை படைத்தலருட் சால்புநிறை பாதம். (அ)

1250. நானற் றிருக்கின்மெய்ஞ் ஞான சொருபசிவந்
தானு மனுபூதி சார்ந்திடுமென் பாதம். (அ)

1251. மன்னு சிவானுபவ மாட்சிக் கரும்பகைநா
னென்னு மகந்தை யெழுச்சியெனும் பாதம். (அ)

1252. சித்தக் கிலேசமறத் தீர்வதகங் காரமறச்
செத்துயிர்த்த தன்சொருபத் தேற்றத்தென் பாதம்.
(அ)

1253. பிறவித் தோகையைப் பிழைசேர் மனத்தின்
மறவிக் கதையா வகுத்துரைக்கும் பாதம். (அ)

1254. கற்பனா சத்திக் களஞ்சியமாம் புன்மனத்தின்
சொப்பனமா மெவ்வுலகத் தோற்றமுமென் பாதம்.
(அ)

1255. உள்ளதை யுள்ளவா றேர்த்துணர்ந்தோ ருள்ளத்தே
தெள்ளிதா முத்திநித்த சித்தமெனும் பாதம். (அ)

1256. நித்தசித்த மாக நிகழ்பொருளாஞ் சிற்பரமுன்
மத்தசித்தக் கூகையர்கண் மாழ்குறுமென் பாதம்.
(அ)

1257. வாக்குமனோ புத்தி மதித்தற் கரியவதி
சூக்குமமாந் தன்சிற் சொரூபமெனும் பாதம். (அ)

1258. எனவே யவைதா மிறைவனருட் போத
நினைவான்முற் பண்படுகை நீதமெனும் பாதம். (அ)

1259. அதிபா வனத்தன்மை யாலகத்தே யக்கால்
மதிசாந்த மாக மடுக்குமெனும் பாதம். (அ)

1260. அசாத்தியசற் போத மதிசுலப மாகும்
குசாக்கிரமாப் புத்தியுளங் கூடிலெனும் பாதம். (அ)

1261. எரியநுண் பட்டைமிகப் பாரியதிண் பாரையாற்
கூரிழையிட் டொன்றுவித்தல் கூடாதென் பாதம்.
(அ)

1262. சபரிமதங் கண்ணப்ப சாதுமத மாமெய்
யபரிமித பத்திக் ககப்படுநற் பாதம். (அ)

1263. கழிபெருந் தீனியர் கண்டுளம் வெட்க
இழிவறிந் துண்ணு மியல்புடைப் பாதம். (அ)

1264. ஈனோருக் கேற்பவெளிக் கீங்கொழுகா நின்றேமற்
றுன்மசம பாவத்தா லாங்கொளிரும் பாதம்.
(அ)

1265. உண்மையே தானு வொளிர்தலினவ் வொத்தசம
வண்மைசேர் பாவமென்றும் மாறலிலாப் பாதம். (அ)

1266. மோகவகங் கார முயற்சிசே ருன்மத்த
வேகமொழிந் துள்ளமைதி மேவுதியென் பாதம். (அ)

1267. இயல்பாக வுள்ளத் திருந்தொளிர்தன் னுண்மை
மயல்பாய் மனத்தான் மறைவதெனும் பாதம். (அ)

1268. மறதிக் கிடனு மயலகந்தை சாய்ந்த
வுறுதிசேர் தேற்றமே மெய்யுணர்வென் பாதம். (அ)

1269. அந்தமத்தி யான வனைத்தையுந் தாங்குவதா
முந்துவத்து வானமுழு மொய்ம்புடைமெய்ப் பாதம்.
(அ)

1270. சாதனையி லூன்றுங்காற் சஞ்சலஞ்செய் விக்கேபம்
வாதனையா லுந்து வழக்கென்னும் பாதம். (அ)

1271. ஆண்டபரா சத்தி யருள்வலியைப் பற்றிலற
மாண்டொழியுஞ் சஞ்சலஞ்செய் வாதனையென்
[பாதம். (அ)

1272. அனுபவிக ளாமெய் யறிஞருரை யுள்ளத்
துனுபவர்கட் குண்மை யொளிதருமென் பாதம். (அ)

1273. கடந்தநிலை கண்டார் கடவுளரின் மேம்பட்
டடர்ந்தபரந் தாமவர சாள்வரெனும் பாதம். (அ)

1274. ஒன்று முணர்ச்சிசே ருண்மை யொளிபரப்புங்
குன்றுமெய் யன்பருளங் கோயில்கொண்ட பாதம்.
(அ)

1275. விபரீத ஞான விலக்கமே வீட்டுக்
குபயோக மாமெய் யுணர்ச்சியெனும் பாதம். (அ)

1276. அந்தமெய்ஞ் ஞான மடையப் படுவதன்று
சொந்த சொரூபமாத் துன்றுவதென் பாதம். (அ)

1277. உள்ளத்தே யுற்றபா மூத்தைமலக் காரகந்தைக்
கள்ளத்தே காணகிலக் கற்பனையென் பாதம். (அ)

1278. அழுக்குறுத் தூயமெய் யன்பரகத் தென்றும்
இழுக்குறு தோங்கும்பே ரின்பவெளிப் பாதம். (அ)

1279. தன்பே ரருளாற் றழைத்தசிவ பத்தரகத்
தன்பே சிவமா வனுபவங்கூர் பாதம். அ)

1280. யானற்ற பெற்றிமற் றெப்பெற்றி யப்பெற்றி
தானிற்கு மோன சகஜநிலைப் பாதம். (அ)

1281. களைப்ப வழிச்செலக் கற்பியா துள்ளந்
திளைப்பத்தா னேபதியாச் சேர்த்தருளும் பாதம். (அ)

1282. பொங்குபரி பூரணசற் போத சொரூபமாத்
தங்குவதே நானற்ற தன்னிலையாம் பாதம். (அ)

1283. சாமா னியபோத சத்தையிலே செத்தமனம்
பூமாவே யாவுயிர்த்துப் பொங்குவதாம் பாதம். (அ)

1284. அயர்வறத்தா மோர்த்தபர மார்த்தஞா னத்தால்
உயர்வறத்தா னோங்கியுளத் துள்வெளியாம் பாதம். (அ)

1285. உளம்வெளி யாக வுணர்ந்த வுளத்திற்
களந்துன் றவிச்சையிருள் கப்பரிதென் பாதம். (அ)

1286. உள்ளத்தே யுள்ளமா வுற்றெளிருந் தன்சொருப
வெள்ளத்தே னுண்டமை மேவார் வித்தகரென் பாதம். (அ)

1287. சித்தமலம் போகவருட் சீர்மையாற் றூய்தாக்கிப்
புத்தமுத போதம் புகட்டுமொளிப் பாதம். (அ)

1288. வாழ்க்கைநல னோங்குறத்தன் மாணடியா ருள்ளத்து
தாழ்க்கையற நல்குதயா தன்மவொளிப் பாதம். (அ)

1289. தஞ்சாவூர் வாழ்க்கையே தஞ்சமெனச் சாரடியார்
எஞ்சாப்பே ரின்பமுளத் தெய்தவருள் பாதம். (அ)

1290. அகந்தைமதி நீத்தோரே நீத்தார்மற் றல்லார்
இகந்தவெது நீப்பினுமென் னீத்தாரென் பாதம். (அ)

1291. ஆண்டவருட் சால்பைநா னுரைத்தோ
[டெண்ணியெண்ணி
ஈண்டுவகை கூர விதயமொளிர் பாதம். (அ)

1292. ஆன்ம சொரூபஞா னனுபவத் துக்குவழி
யானென்னும் புன்மதியை யெற்றலெனும் பாதம். (அ)

1293. தியாகத்தாற் சேர்வதன்றிச் சாவாமை மற்றெவ்
வியோகத்தா லும்பெற் றிடலரிதென் பாதம். (அ)

1294. அகந்தையே யாவுமா மாதலா லந்த
வகந்தையொழி வாலன்றி யின்றுறுழிவென் பாதம்
(அ)

1295. அனுபவிக்க வேதகுநூ லானதிரு வாசகத்தீம்
பனுவலுரை கல்வியின்மேற் பட்டதெனும் பாதம். (அ)

1296. கூர்த்த சிவானுபவக் கோல வவாச்சியத்தை
வார்த்தையாற் சொல்லுமணி வாசகப்பொற் பாதம்.
(அ)

1297. மாலா மவிச்சையற மாற்றி மதாலசஞ்செய்
தோலாத சுத்த சுவானுபவப் பாதம். (அ)

1298. அருட்சிற் பரவெளியே யந்தமிலாக் கண்ணு
மருட்சிப் புலவழக்கை மாற்றுமொளிப் பாதம். (அ)

1299. ஊத்தையுட லாலென் னுயிர்த்தூய்மை பாழ்படா
தோர்த்துணரக் காட்டியவென் னுண்மையுருப்
[பாதம். (அ)

1300. வெட்டவெளி யாக விழுங்கியென் னுருயிரைக்
கொட்டமடிக் கின்ற குதூகலப்பொற் பாதம். (அ)

1301. வாரா வரத்தாக வந்துகுடி கொண்டிதயத்
தூராண்மை செய்யு முதாரவருட் பாதம். (அ)

1302. தன்கழற்க ணேயியல்பா வென்கருத்து முற்றுமுறப்
பொங்கருத்தி கூர்வித்த புண்ணியப்பொற் பாதம். (அ)

1303. மயக்கிறுதி யாக மடிந்திடவென் னுள்ளத்
துயிர்க்குறுதி யாமெய் யுணர்வுருவப் பாதம். (அ)

1304. அறிவு நிலைப்பட் டமைந்தாலே யன்றி
மறவிசேர் வன்பிறவி மாறலின்றென் பாதம். (அ)

1305. அகந்தையே பாவ மனைத்துமா நின்றுங்
ககந்தையழி வெல்லா வறங்களுமென் பாதம். (அ)

1306. நவநாத் திகக்கொள்கை நாடெங்கிலும் பரவி
யவமாக் கிடாமலரு ளாத்திகப்பொற் பாதம். (அ)

1307. கண்மயமாக் காட்சியைத்தாங் காண்போர்
[கலக்கமற
விண்மயமா நின்று விளங்குவரென் பாதம். (அ)

1308. விடயங்க ளெல்லாம் வெறுந்தெரிவு மாத்திரமாப்
புடியின் கலக்கமறல் போதமெனும் பாதம். (அ)

1309. ஆண்டா னருட்பதவாழ் வன்றிமெய்
[யன்பரொன்றை
வேண்டா துளத்துமகிழ் விஞ்சுமொளிப் பாதம். (அ)

1310. பொருளாக்க மென்றும் பொருட்டன்று நெஞ்சத்
தருளாக்க மிக்கமெய் யன்பர்க்கென் பாதம். (அ)

1311. அருள்வாழி வாழிமெய் யன்பரினம் வாழிசிவப்
பொருள்வாழி வாழிசிவ போகமென்றும் வாழி. (அ)

1312. அகந்தைமதி நாட்ட மறக்கொடிய நஞ்சென்
றிகந்தொழியி லன்றிநெஞ்சத் தின்பமின்றென்
[பாதம். (அ)

1313. நுணுக்கத் தெரிவா நுழைபுலத்து நோக்கமே
யணுக்கத்தொண் டாக வறிவுறுத்தும் பாதம். (அ)

1314. ஏழைத் தொழும்பர்க் கிரங்கி யருள்சுரக்கும்
மாழைப்பொன் னம்பலத்து மாணிக்கப் பாதம். (அ)

1315. வாலறிவன் றாளை வழுத்தித் தொழுமனத்து
மாலறிவின் மோகமற மாயுமெனும் பாதம். (அ)

1316. பச்சைமரத் தாணி பதித்தாற்போற் றன்சொருப
நிச்சயமென் னெஞ்சகத்து நிற்பித்த பாதம். (அ)

1317. கண்காணி தன்னையுளங் கண்டறிந்தா லன்றிநிறை
விண்காணி யாட்சிநிலை மேவரிதென் பாதம். (அ)

1318. நினைப்புமறப் பற்று நிகழ்சொருப போத
முனைப்புமிகப் பெற்றவுளம் மோனமெனும் பாதம்.
(அ)

1319. தள்ளவோ கொள்ளவோ சற்றுமொண்ணு தெவ்விதத்தும்.
விள்ளரிய தன்சொருப மெய்ம்மையொளிப் பாதம். (அ)

1320. நிட்டையிலே யூன்றி நிலைத்தொழுகு மெய்ஞ்ஞான
திட்டியிலே யாவுமென்றுஞ் சின்மயமென் பாதம். (அ)

1321. அகந்தைமல வாதனைகெட் டாலகில மாகத்
திகழ்ந்தனவாஞ் சிட்டிவெறுந் திட்டியெனும் பாதம். (அ)

1322. மறப்பு நினைப்பா மடுத்த மனங்கெட்
டறப்புணர்ந்த சாந்தவறி வான்மாவென் பாதம். (அ)

1323. சிவசொருப மாக்குருவைச் சிந்தித்து வந்தித்
தவசமுறு முள்ளத் தருள்சுரக்கும் பாதம். (அ)

1324. அதன்பொருளா வான்ற வடிகளே ளுக்கச்
சிதம்பரங்கை காட்டித்தாஞ் சேர்ந்திடிலென் பாதம் (அ)

1325. கருவா தனைதீர் கடவுளனு பூதித்
திருவா சகந்தெய்வத் தேன்கடலென் பாதம். (அ)

1326. குறிகுணந்தீ ரொன்றைக் குறிப்புரையா மோனத்
தறிவுறுந்தெய் வீகர்க் கனுபவமெய்ப் பாதம். (அ)

1327. பணைச்சபல் வேதம் படிப்பினுமெய்ஞ் ஞான
வுணர்ச்சியா லன்றிப் புணர்ச்சியின்றென் பாதம். (அ)

1328. அருட்பரத்து வாழ்வையகந் தேறியமெய் யன்பர்
மருட்புலத்து மையலற மாற்றினரென் பாதம். (அ)

1329. அடிகளின் பாதமே யட்சயவாழ் வாகக்
குடிகளா மெங்கள் குறைதீர்த்த பாதம். (அ)

1330. கோலா கலமாங் குதூகலமெய்ஞ் ஞானவருட்
கோலோச்சி யெம்முயிரைக் கோதாட்டும் பாதம். (அ)

1331. உண்மை யுணர்வி லொழிந்துமெய் யன்பொழுக்க
வண்மைசேர் வாழ்க்கை வழங்கரிதென் பாதம். (அ)

1332. வல்லசுர வூத்தைமுடை வாதனைசூர் மையலைமாய்
நல்லசிவ ஞானநறுந் தெய்வமணப் பாதம். (அ)

1333. நிந்தனைசேர் மாலகந்தை நீசமனத் தாலுயிரைப்
பந்தனைசெய் பாசமறப் பார்க்குமொளிப் பாதம். (அ)

1334. தொக்குணவா வுக்கபரி சுத்தசிவத் தொண்டர்நெஞ்சில்
நிர்க்குணமா வெங்கு நிறைந்தவொளிப் பாதம். (அ)

1335. நீடுசிவ ஞானநிலை நின்றசிவ நிட்டருளத்
தூடுபரந் தாமவொளி யூருலகப் பாதம். (அ)

1336. மார்த்தாண்ட மண்டலமா மையிருள்செற்
[றென்னுளத்தைக்
கூர்த்தாண்ட ஞான குருவருட்செம் பாதம். (அ)

1337. வாழையடி வாழையென வந்தவடி யாரொடுசேர்த்
தேழையடி யேனையுளத் தீர்த்தாண்ட பாதம். (அ)

1338. நெற்றிக்கண் ணாக நிமிர்ந்தஞா னக்கினியாற்
செற்றுக்கண் ணில்லியைச்செந் தீவிழித்த பாதம்.
(அ)

1339. அறிவுக் கறிவா வனைத்துயிர்தம் மாட்டும்
பிறிவற் றௌிர்சற் பிரம்மமாம் பாதம். (அ)

1340. அறிவின் சொருபத்தை யாய்ந்தறியா வாற்றாற்
பிறிதுபோன் மெய்ப்பொருளைப் பேணலெனும் பாதம்.
(அ)

1341. பசித்துப் புசிக்கிற் பயனா மதன்முற்
புசிக்குமுண வாருயிர்க்குப் பொல்லாங்கென் பாதம்.
(அ)

1342. யானெனுமவ் வெண்ணமுத லெங்குநின்றுற்
[பத்தியோ
தானெனுமவ் வுள்ளமாஞ் சற்போதப் பாதம். (அ)

1343. ஊனப் புலவகந்தை யொக்கவொழிந் தாருளத்து
மோனப் பரவெளியா முத்தியொளிப் பாதம். (அ)

1344. கிரந்திமுடிச் சிக்கலறக் கெட்டவிடத் தன்றிப்
பரந்தவெளி யானவொளிப் பார்வையின்றென் பாதம். (அ)

1345. முத்திப் பரத்தை முழு மோனமே துய்ப்பதன்றிப்
புத்திவியா பாரமதைப் போக்குவதென் பாதம். (அ)

1346. சத்தியல்சித் தாதலாற் சர்க்கரைபோ லன்றிமகிழ்
சுத்தசிவ போக சுவானுபவப் பாதம். (அ)

1347. தன்கலவி யின்பநலந் தப்பிடிலென் குற்றமன்றித்
தன்குறையல் லாதபெருந் தண்ணருட்செம் பாதம். (அ)

1348. அன்புருவத் தன்பதத்தென் னுருயிரைத் தன்மயமா
அம்புவிலே யாலியெனத் தான்கரைத்த பாதம். (அ)

1349. கெழுமலுறும் பேரின்பக் கேளெனவே தன்மாட்
டுழுவலன்பு பூண்டே னுயிர்க்குரிமைப் பாதம். (அ)

1350. தன்னருளா லன்றித்தன் சார்பறிந்தே [யுய்ந்ததுநான்
என்னறிவா லன்றென் றியானறிந்த பாதம். (அ)

1351. உண்மையுணர் வாலுள் ளுரம்படுநெஞ் [சொட்பங்கூர்
திண்மையுறு சிற்பரமாச் சேர்வதெனும் பாதம். (அ)

1352. துலங்குஞா னுன்ம சொரூபவெளி தானாய்
நிலங்குளுக்கா தார நிராதாரப் பாதம். (அ)

1353. புந்திச்சுட் டான புலங்கதுவா வுண்மையொளிர்
சந்தச்சிற் றம்பலமே தன்னுருவாம் பாதம். (அ)

1354. நம்பிக்கை மட்டா நடக்குமனே பாவனையைத்
தம்பிக்கச் செய்துளத்துட் டான்சுடர்மெய்ப் பாதம். (அ)

1355. சிற்பரமாந் தன்சொருப தேசத்திற் சஞ்சரிப்போர்
விற்பனர்மற் றல்லார் வெறியரெனும் பாதம். (அ)

1356. கற்பனு சிந்தனையின் காட்சிசேர் ஜாக்கிரமாஞ்
சொப்பனு வத்தையைத்தூ ரத்துரத்தும் பாதம். (அ)

1357. அறிவொளியை நாடார் பிறவொளியை நம்பிப்
பொறிவழிச்சே ராதர் புழுங்குவரென் பாதம். (அ)

1358. வஞ்சப் படிற்றுமன வாழ்க்கைபின் னெஞ்சைவன்
னஞ்சமெனப் பற்றி நலியுமெனும் பாதம். (அ)

1359. உள்ளத் துயிரினுமிக் கோம்பக் கடவதாம்
தெள்ளியமெய்ஞ் ஞானசுப சீலமெனும் பாதம். (அ)

1360. பிள்ளைமதி போற்கலங்கும் பேதமதி முற்றமுழுக்
கள்ளமதி யானவெறுங் கற்பனையென் பாதம். (அ)

1361. அறிவிற் கலங்கா தமைந்த வுளத்தவ்
வறிவே முடிந்தமுடி வாவதெனும் பாதம். (அ)

1362. அறிவிற் பிறிதை யவாவலே தன்னை
வெறியிற் புகுத்திவெருள் விப்பதெனும் பாதம். (அ)

1363. புந்திசெயி லுண்மைப் பொருளைத் தனிற்பிறிதாப்
புந்திசெயு மவ்வறிவு பொய்கொலெனும் பாதம். (அ)

1364. உணர்வுதா னுண்மையே யுண்மையைத்தா னேரப்
புணர்வதெவன் புத்திப் புடைபெயர்வென் பாதம்.
(அ)

1365. எவ்வெவை யெவ்வெவ ரெண்ணின ரவ்வவர்க்
கவ்வவை யன்பி னளித்தருள் பாதம். (அ)

1366. கண்ணு ரமுதக் கடலா விதயவெளிக்
கண்ணே நிறைந்தவருட் கண்மணியாம் பாதம். (அ)

1367. தன்சொருப மாகத் தழைத்தவருட் சிற்பரத்தே
என்சொருப மோர்வித் திலக்கியபொற் பாதம். (அ)

1368. குருபதே சத்தின் குலாவொளியா லான்ம
சொருபமொன் றே யாகத் துலக்கியபொற் பாதம். (அ)

1369. உபாதிநீ ருண்மையா வுள்ளத்தி லோங்கு
சுபோத சொருப சுகானுபவப் பாதம். (அ)

1370. நிட்டையுரு வாக நிமிர்சொருப ஞானவெற்றிப்
பட்டமெற் கீந்தவருட் பார்வைகிளர் பாதம். (அ)

1371. உள்ளத்தே யென்னை யொடுக்கியாட் கொண்டுபெரு
வள்ளற் றிறத்தின் வரம்பான பாதம் (அ)

1372. அண்டங்க ளெல்லா மணுக்களா வவ்வணுக்க
ளண்டங்க ளாமோ ரதிசயமாம் பாதம். (அ)

1373. தன்சொருப வாலறிவாற் றன்மயமா வேற்றுமையை
வஞ்சினந்தான் கூறி வதைக்குமொளிப் பாதம். (அ)

1374. இன்பப் பதத்தோ டியைபன்றி நின்னுயிர்க்குத்
துன்பவுல கத்துத் தொடர்பெவனென் பாதம். (அ)

1375. அகந்தைமதி முற்ற வகன்றோ ரதன்மே
லிகந்தொழியத் தான்கடவ தென்னுளதென் பாதம்.
(அ)

1376. பேறுகளின் மிக்க பெரும்பேறுந் தன்னிழப்பின்
வீறுபெற்றூர் வேட்டடைய வேறின்றென் பாதம். (அ)

1377. எந்நினைவும் பற்று திருந்கொளிர்த லேயுளத்துத்
தன்னியல்பா மோன சமாதியெனும் பாதம். (அ)

1378. நிமித்தமெத னுலு நினைப்பெழா துள்ளத்
தமிழ்த்தலே தன்னையரு ளாற்றலெனும் பாதம். (அ)

1379. வெல்கழல்சே ரன்பருற மெய்ஞ்ஞான குஞ்சரமூர்
செல்வப் பவிசுதரு சித்தாந்தப் பாதம். (அ)

1380. என்றுமறப் பற்றுளிர்பே ரின்ப வுணர்ச்சியாத்
துன்றுமகத் தான சொருபவொளிப் பாதம். (அ)

1381. குருமூர்த்தி யான குலாஞான சித்தப்
பரமேட்டி யாகப் படர்ந்தவருட் பாதம். (அ)

1382. கடவுளை நிந் திக்கவொரு காரணமின் றுகத்
தடவருள்சந் திக்கநிறை சாந்தபதப் பாதம். (அ)

1383. தம்பரமன் றன சதோதயமெய்ஞ் ஞானவருள்
சம்பிரம மாவடியர் தம்முளஞ்செய் பாதம். (அ)

1384. பாத சொரூபம் பரவெளியாக் கண்டசிவ
போதருளம் பொங்குமனு போகவொளிப் பாதம். (அ)

1385. அசைபடக் கூட்டத் தகப்படுத்திக் கொண்டு
விசைபட் டுழலகந்தை வீண்மயலென் பாதம். (அ)

1386. சுட்டுணர்விற் சுட்டும் புலம்போலத் தன்சொருபம்
பெட்டுணரப் புக்கழுங்கல் பேதைமையென் பாதம்.
(அ)

1387. ஒளிவெளியாத் தம்மையுளத் தோர்ந்துநிரம் பாமே
இளிவுடல்யா னென்றழுங்க லேழைமையென் பாதம்.
(அ)

1388. எதுதானே தானதுவா வின்பதிட்டை சேரா
திதுநா னதுநானென் றெண்ணலென்னென் பாதம்.
(அ)

1389. சிவசமய வாழ்க்கையுளஞ் சேர்ந்தசிவ பத்தி
கவசமென வாருயிரைக் காக்குமெனும் பாதம். (அ)

1390. உள்ளத்தி லன்றி யுறுதிதருந் தெய்வநிதி
எள்ளத் தனையுமுயிர்க் கில்லையெனும் பாதம். (அ)

1391. சங்கநிதி யாதியாச் சாற்றும்பல் வேறுநிதி
பங்கமா மந்தநிதிப் பார்வையிலென் பாதம். (அ)

1392. சொந்த சொரூபமாத் துன்றுவது தன்னியல்பா
அந்தநிதி யாக்க மளப்பரிதென் பாதம். (அ)

1393. உள்ளவா றேர்த்துணர்ந்தா ருண்மையிற் றமதுவாத்
தெள்ளிதா மின்பநிலை சேர்வரெனும் பாதம். (அ)

1394. ஊக்கமொடு தன்மெய் யுசாவலே யுள்ளத்து
நீக்கமறு பாத நினைப்பெனுமெய்ப் பாதம். (அ)

1395. அறிவுவடி வான வருள்வெளியா முள்ளத்
துறைவதா வுன்னை யொடுக்குதியென் பாதம். (அ)

1396. அகந்தை யறிவே யகிலவித் தாக
வகந்தனி லேய்வ தநாதியெனும் பாதம். (அ)

1397. அருள்விளக்க மாகவகத் தான்ற சொரூபப்
பொருள்விளக்கம் பூமாவாப் பொங்குவதாம் பாதம். (அ)

1398. கரந்தவலங் கோலமலக் காயவகங் காரம்
பொருந்துமனங் கோத்தைபடப் புன்மைடெனும்
[பாதம். (அ)

1399. இருந்தொளிர்தன் னுண்மை யியல்பாலே யன்றே
பொருந்துவது காண்முப் புடியுலகென் பாதம். (அ)

1400. பந்தசமு சாரமொரு பாழ்ங்கனவாப் பாறவியல்
சொந்தவொளி துன்று சொரூபவெளிப் பாதம். (அ)

1401. மோனவொளி யாலகத்து முப்புடியின் கற்பனைசே
ருனகந்தை ஞானமற வூன்றியபொற் பாதம். (அ)

7402. பராற்பர மாகப் பயின்றுளத் தென்னே
டிராப்பக லாக விசைந்தொளிர் பாதம். (அ)

1403. யான்றனை நீங்க வியர்வதன் றுவுளந்
தான்றண வாத சகஜமாம் பாதம். (அ)

1404. நிரந்தர மான நிகழ்ச்சிசேர் ஞான
விருந்தென வென்னுள் விளைந்தருள் பாதம். (அ)

1405. அவசமா வென்னை யகத்தி லணைந்தொளிர்
சிவசிவ ஞான சிதம்பர பாதம். (அ)

1406. மருட்பிர மாத மனத்தனை ஞான
வருட்பிர வாகத் தமிழ்த்திய பாதம். (அ)

1407. அத்தாணி மண்டபத் தான்ற வருட்கொலு
வித்தார மாக விழித்தருள் பாதம். (அ)

1408. சிதம்பரமெய்க் காட்சியைக்கண் சென்றவிட
[மெல்லாம்
நிதம்பரவக் காட்டியவென் னெஞ்சவொளிப் பாதம்.
(அ)

1409. வெருவரற்கொள் சுட்டறிவா வீங்குயினர யுண்ட
திருவருட்கண் ணைசிவ சிற்பரமாம் பாதம். (அ)

1410. ஆனியாம் புன்மை யகந்தையாற் றன்சொருப
ஞானியா வின்பநிலை நண்ணுவனென் பாதம். (அ)

1411. சுருங்குபரிச் சின்ன சுபாவவகங் காரம்
ஒருங்குநிரப் பல்ல வழுக்குமெனும் பாதம். (அ)

1412. சிக்கெனப் பற்றினர் சிந்தையிற்பே ரின்பமாத்
தொக்குநிற் கின்ற சொருபசிவப் பாதம். (அ)

1413. அளவிலாத் தன்மெய் யருட்டிறத்தா லென்னைக்
களவிலே தான்கலந்த கண்மணியாம் பாதம். (அ)

1414. என்னைக் கரந்ததனுக் கீடா விதயத்துத்
தன்னை வெளிப்படுத்த சாந்தவொளிப் பாதம். (அ)

1415. கொண்டாட்ட மான குதூகலமுண் டாகவுயிர்த்
திண்டாட்டக் கண்கலக்கந் தீர்த்தவருட் பாதம். (அ)

1416. நிகழ்சகஜ மாந்தன் னினைப்பே யெனக்குப்
புகழ்தருவ தானசிவ புண்ணியமாம் பாதம். (அ)

1417. தண்ணிலா வாகந் தழைத்தவுப சாந்தவுளத்
தெண்ணிலா வின்பமெனக் கீந்தவருட் பாதம். (அ)

1418. புட்களமா வென்னுளத்துட் பூரிக்கும் வாயிலா
நிட்களமா வெங்கு நிறைந்தவொளிப் பாதம். (அ)

1419. பாதத்தை யன்றிப் படிவே றறியாதென்
போதத்தை யுண்டசிவ போதவருட் பாதம். (அ)

1420. பெட்டகமாக் கொண்டிந்தப் பேயனே னுள்ளத்தை
வெட்டவெளி யாகவொளி வீசுமணிப் பாதம். (அ)

1421. ஏழைத் தொழும்ப ரிதயத்து மாற்றுயர்ந்த
மாழைப் பெருநிதியின் வைப்பான பாதம். (அ)

1422. குறையிலா ஞான நிறைவான வின்ப
வுறையுளா நின்ற வுபசாந்தப் பாதம். (அ)

1423. மருண்டுபடு மத்த மனக்களியர் தன்னி
லிரண்டுபடு வேற்றுமைகண் டென்குநகைப் பாதம்.
(அ)

1424. அத்துவித ஞான வனுபவத்தோர் தம்மகந்தை
பொய்த்தொழியக் கண்டபரி பூரணமெய்ப் பாதம்.
(அ)

1425. போற்றுமெய் யன்பர்தம் புந்தியிலுண் டானமயல்
வேற்றுமையைச் செற்றுளத்து வீங்குமொளிப் பாதம்.
(அ)

1426. சச்சித்தாந் தன்சொருப மிச்சித்தார் மற்றனைத்தும்
துச்சமென நீப்பிற் சுவானுபவப் பாதம். (அ)

1427. வள்ளியோ ராக வழங்குநர்யா னென்னலைமுற்
றுள்ளியோ ராக வொழிந்தவரென் பாதம். (அ)

1428. வஞ்சமனப் பான்மையற மாற்றியநல் வாழ்க்கைசேர்
நெஞ்சமுற நீதிநிலை நிற்குமெனும் பாதம். (அ)

1429. ஈசனிடம் புந்தியைமுற் றேற்பித் தவன்சொருப
நேசமுற நிற்றலே நிட்டையெனும் பாதம். (அ)

1430. நெஞ்சமுற வொன்றி நினைந்தமெய் யன்பிலுறக்
கொஞ்சலுறு மின்பநடக் கோலஞ்சேர் பாதம். (அ)

1431. ஒழுக்கமுறு முள்ளத் துபாசன யோகப்
பழக்கமே தெய்வப் பணியெனுமெய்ப் பாதம். (அ)

1432. முயற்சியுற மூட்டும் முனைப்பா மகந்தைப்
பயிற்சியறு வாழ்க்கைபர பத்தியெனும் பாதம். (அ)

1433. அணுக்கத்தொண் டான வருட்பரி வாரத்
திணக்கிக்கொண் டெம்மிதயத் தின்பியற்றும் பாதம்.
(அ)

1434. கழிவிலா ஞானக் கருணையைக் காட்டுந்
தொழிலிற் றுரந்தரமாந் துங்கவிழிப் பாதம். (அ)

1435. தன்னடியென் கண்ணுத் தரித்தலா லெப்புலத்தும்
முன்னடியாத் தானே முளைத்தொளிர்மெய்ப் பாதம்.
(அ)

1436. மான்றபுன் மாக்கள் வழிமறந்து மெய்யுணர்ந்த
சான்றவர்தம் பக்கலுறத் தக்கதெனும் பாதம். (அ)

1437. உறவா வுயிருக் குறுதிதரும் மிக்க
வறவோ ரினத்தை யடைந்திடிவென் பாதம். (அ)

1438. யாது மினிப்புதிதா வெய்தக் கடவதன்று
பேதுதீர் போதமே பேறெனுமெய்ப் பாதம். (அ)

1439. உள்ளவா றோர்த்துணர்ந்தா லுண்மையாந் [தன்சொருபம்
தெள்ளிதா முத்திநித்த சித்தமெனும் பாதம். (அ)

1440. எண்ணமொரு சற்று மிலாதொளிர்மெய் [யின்பநிட்டை
வண்ணமுற வென்னுளத்து வைகுமொளிப் பாதம்.

1441. நினைப்பற்று நிற்றலே நிட்டையா வென்றும்
தனைப்பற்றி நின்ற சதாமவுனப் பாதம். (அ)

1442. நீக்கமிலாப் பேரின்ப நிட்டையென் னெஞ்சகத்துத்
தாக்குவதாத் தானியன்ற சாந்தவொளிப் பாதம். (அ)

1443. பேதமனப் பேயகந்தைப் பேழ்வாயின் மையலைச்சாய்
போதசொரூ பாத்துவிதப் பூன்றவொளிப் பாதம். (அ)

1444. உணர்வே புணர்வா வுணர்த்தி மறப்பாற்
றணவாது நான்றன்னைச் சார்வித்த பாதம். (அ)

1445. பிரமாத மற்றுப் பிறங்கு சொரூப
குருபாத மாகக் குலவுதிருப் பாதம். (அ)

1446. அகந்தை யறலேஞா ருன்மநிட்டை யாகத்
திகழ்ந்தசிவ பத்தித் தெளிவெனுமெய்ப் பாதம். (அ)

1447. அறிவுத் தெளிவை யகன்று லுயிருக்
குறவுமற் றெங்கிலுமே யுள்ளதன்றென் பாதம். (அ

1448. சிவத்தை மறந்து தன் சித்தங் கலங்கி
யவத்தைகளை நாட லுணர்த்தமெனும் பாதம். (அ)

1449. மறதியா லுன்னை மயக்கு மகந்தை
உறுதிக்கு மாறு வுலைக்குமெனும் பாதம். (அ)

1450. சுலபமாத் தன்சொருப சுத்தவெளி காட்டி
யுலகநாட் டத்தை யொழிவித்த பாதம். (அ)

1451. உண்மையா ந் தன்னை யொழிதலாற் காண்டியுணர்
வொண்மையின் றுவுலகத் தோடலெனும் பாதம். (அ)

1452. கண்கூட் டினும்பெருங் கண்கூடாந் தன்சொருப
விண்கூட்டு வெட்ட வெறுவெளியாம் பாதம். (அ)

1453. ஏட்டுச் சுரையன்றி யின்னடிசிற் பேரின்ப
வீட்டுச் சுரைக்காய் விழைந்தளித்த பாதம். (அ)

1454. துன்பவெருட் சுட்டறிவாத் துன்றுமனக் கற்பனைதீ
ரின்பவருட் கண்ணு விருந்தொளிர்மெய்ப் பாதம்.
(அ)

1455. நீதனையா ரர்ய்ந்துநிலை நிற்றலே மேதக்க
சாதனையாக் கொண்டொழுகத் தக்கதெனும் பாதம்.
(அ)

1456. எதுவெனினுங் கேட்டோர்க் கியம்புமுப தேசம்
பொதுவிலன்றிச் சற்றும் புரிதலிலாப் பாதம். (அ)

1457. அகந்தையாற் பேத மறிபடுத லன்றி
இகந்த வகந்தைமுகத் தேதிலின்றென் பாதம். (அ)

1458. மயல்சேர் மனத்தான் மடுத்தசமு சாரத்
தியல்கெடுவ தம்மனங்கெட் டிற்றுழியென் பாதம்.
(அ)

1459. அகத்துமடுத் தோய்ந்த வகந்தை சொருப
மகத்துவமுற் றோங்கு மகோததியென் பாதம். (அ)

1460. அகந்தை யகன்றவுயி ரான்றபெரு வானத்
திகந்தங் கடந்து திகழுமெனும் பாதம். (அ)

1461. இறலுறுபொய்த் தேகத் திசையகந்தை யேதான்
மறலிதனக் கூறை மரணமெனும் பாதம். (அ)

1462. சாவா மருந்தாகத் தாவா வியல்பினது
நீவா நிஜசொருப நிச்சயமென் பாதம். (அ)

1463. உள்ளதாந் தன்சொருபத் தொன்று முணர்ச்சியே
தெள்ளிதாந் தெய்வ சிவத்துவமென் பாதம். (அ)

1464. இயல்பான தன்சொருப வின்பமே ஜீவச்
செயல்போன மோனசுகத் தேற்றமெனும் பாதம். (அ)

1465. அத்தக நிற்கு மமைதிசே ருள்ளத்து
வித்தக ஞான விளைவதாம் பாதம். (அ)

1466. குணக்கேட ரான குடிலமனப் பேய
ரிணக்கே யறக்கடிதற் கேற்றதெனும் பாதம். (அ)

1467. புல்லியராஞ் சஞ்சலப்புன் பூரியர்தங் கேண்மையே
யல்லல்களுக் கெல்லா மடிப்படையென் பாதம். (அ)

1468. அசுத்த வகந்தையே யான்மசொரு பத்திற்
பசுத்துவமா லாங்குருட்டுப் பார்வையெனும் பாதம்.
(அ)

1469. பார்வையிற்றன் னுண்மையைமுற் பாராதே
[புன்புலச்சுட்
டோர்வதிற்கா ணூத்தையுணர் வூனமெனும் பாதம்.
(அ)

1470. கண்ணுறுவ யாவையுமெக் கண்மயமவ் வந்தமிலா
விண்ணுருவ வுண்மையொளிக் கண்ணுருவப் பாதம்.
(அ)

1471. களம்வகுத்துக் கொண்டு கருணைவிளை யாட்டென்
னுளமுகத்துச் செய்யு முதராவொளிப் பாதம். (அ)

1472. உன்றன் சொரூப மொழிந்துநின் புந்தியா
லொன்றையு முள்ளத் துசாவலெனும் பாதம். (அ)

1473. அற்ப ரகந்தை யறிவுக்குத் தன்சொருபச்
சிற்பரமோ மெத்தமெத்தச் சேணென்னும் பாதம்.
(அ)

1474. சுட்டறிவாம் புந்திச் சுழற்சித் தெருமரல்
உட்டுறவா லன்றி யொழிவரிதென் பாதம். (அ)

1475. நிட்டையிலே யூன்றி நிஜசொருபந் தேறினன்றிச்
சிட்டியிலே பட்டுத் திகைப்பையெனும் பாதம். (அ)

1476. நண்ணுறுமெய்ஞ் ஞானவிழி நாட்டத்தா லன்றியுளங்
கண்ணுவதன் றுண்மையுருக் காட்சியெனும் பாதம். (அ)

1477. தெய்வத் திருவருளாற் சித்தமலக் கட்டறுத்துச்
சைவப் பரவெளிவீட் டுய்வுதரும் பாதம். (அ)

1478 அறிவிலே யாவு மடக்கமா மோன
நிறைவதே யின்ப நிலையமெனும் பாதம். (அ)

1479. செம்மையே யாய சிவபதத்து வாழ்க்கையெனக்
கிம்மையே யீண்டவுளத் தீந்தவருட் பாதம். (அ)

1480. அறிவு நிரம்பப் பெறுத லகத்தே
யறிவான் றனைத்தேர்ந் தறிவுழியென் பாதம். (அ)

1481. பெருமாயப் புன்பிறவிப் பீடைக்கு நானென்
கருமாயப் பாழ்ங்கருத்தே காரணமென் பாதம். (அ)

1482. உள்ளந் தனிலே யுறப்பதிக்கி லன்றிமனக்
கள்ளந் தனிலுண்மை கரக்குமெனும் பாதம். (அ)

1483. அன்பில் விளைந்த வமுதமா மோனப்பே
ரின்பவொளி சான்ற விதயவெளிப் பாதம். (அ)

1484. அருட்குவச மானமெய் யன்ப ரகந்தை
மருட்குவச மாக மயங்கலரென் பாதம். (அ)

1485. சாவைநினைந் தஞ்சித்தற் சார்ந்தார்க் ககந்தைமயற்
சாவையிகந் தோங்கமர வாழ்வுதரும் பாதம். (அ)

1486. என்னொளியுந் தன்னினுமற் றேதிலா வின்றியே
தன்னொளியி னுலகத்துத் தான்சுடர்மெய்ப் பாதம்
(அ)

1487. உள்ளத் தமைதிசே ரோகை விளக்குமொளி
வெள்ளப் பரசிவமா விஞ்சுநடப் பாதம். (அ)

1488. பேரின்ப வெள்ளப் பெருக்கெடுப்ப தாகவுளஞ்
சேரன்பி லென்னைத் திளைப்பித்த பாதம். (அ)

1489. மாட்சியளப் பின்றியே மற்றார்க் கடியார்குக்
காட்சியெளி தானவருட் கண்ணேக்கப் பாதம். (அ)

1490. தஞ்சமளித் தன்பருப சாந்தமுற வேண்டியவர்
நெஞ்சமளி யாயோக நித்திரைகொள் பாதம். (அ)

1491. நெக்குநெக் குள்ளுருக நேயரைத்தன் பாலிழுத்துச்
சொக்குவிக் கின்றவதி சுந்தரமாம் பாதம். (அ)

1492. அஞ்சிடலென் பேதைமைதன் ஞன்மசொரு
[பத்தினுமற்
றெஞ்சியதொன் றென்றுமிலாத் தன்மையிலென்
[பாதம். (அ)

1493. முழங்குதிட மோன முரசெறிந்து மிக்கு
வழங்குசிவ ஞானவருள் வண்மைசேர் பாதம். (அ)

1494. கலையிலே யெத்துணைதாங் கற்கினுமென் னுண்மை
நிலையிலே நிற்கறியா நெஞ்சரெனும் பாதம். (அ)

1495. வென்றுநின் றிவ்வுலகின் மிக்கோ ருணர்வுருவா
மொன்றைநன் றுள்ளத் துணர்ந்தவரென் பாதம்.
(அ)

1496. நியாமாய மோன நிகழ்ச்சியா லோங்குந்
தியாகசீ லத்தர் திளைத்தலுறும் பாதம். (அ)

1497. செய்வவெலா மிக்க சிவன்செயலாக் கூட்டுபர
தெய்வவொளி யாகத் திகழ்மோனப் பாதம். (அ)

1498. தேற்றுசிவ ஞானியர்தஞ் சித்தங் கரைபுரள்பே
ராற்றுவெள்ள மானபர மானந்தப் பாதம். (அ)

1499. விகற்பவிக் கேபமற மெய்யன்ப ருள்ளம்
உகப்பதா நீடுவா முண்மையொளிப் பாதம். (அ)

1500. அடியர் விரித்தமெய் யன்புவலைக் கண்ணே
படியலுற்றன் ஞரையருட் பாற்படுக்கும் பாதம். (அ)

1501. சிவசொருப மான நிகழ்ச்சியாற் றன்னி
லலசரபே தங்க ளகன்றவெளிப் பாதம். (அ)

1502. சுலபமெனச் சொல்லவுமே தப்பா மியல்பா
திலவுமதி சாமா னியசொருபப் பாதம். (அ)

1503. பிரிவும் புணர்வுமுயிர்ப் பேதைமையா லன்றித்
தெரிவளவா முண்மைத் திறத்திலின்றென் பாதம்.
(அ)

1504. யாவுமாத் தன்கழலை யெய்தியமெய் யன்பரகத்
தேவ விடம்பொருளோ டெல்லாமாம் பாதம். (அ)

1505. சென்றுசென் றன்பர் தெரிப்பவற்றுக் கெல்லாமே
நன்றுநன் றென்று தலையசைக்கும் பாதம். (அ)

1506. பாழ்க்கைமய வீண்டுலகப் பாசமறப் பற்றுநெஞ்சில்
வாழ்க்கைமுத லானவருள் வண்ணவொளிப் பாதம்.
(அ)

1507. சிந்தைகுலைந் தேங்குஞ் சிறுபுலத்தோர்
[செம்மைகெட்டுப்
புந்திநலிந் தாவி புழுங்குவரென் பாதம். (அ)

1508. சாந்தமாச் சும்மா சமைந்தே சகலரையுங்
காந்தமாத் தன்பாற் கவருமுளப் பாதம். (அ)

1509. சார்ந்ததன் னன்பரையுந் தன்போலே காந்தமாக்
கூர்ந்தவியல் கூடவருள் கூட்டுவிக்கும் பாதம். (அ)

1510. தன்மமே தன்னுருவாத் தங்கலால் யாவையுந்தன்
கன்மமாத் தாங்கல் கடப்பாடாம் பாதம். (அ)

1511. மனத்தைத் தனக்கு வழங்கல் பிறிதை
நினைத்தலறச் சும்மா நிகழ்தலெனும் பாதம். (அ)

1512. கருத்தைத் திருத்திக் கடவுட் பதத்திற்
பொருத்திலுயிர் வாழ்க்கைமுற்றும் பூரணமென்
[பாதம். (அ)

1513. உள்ளத் தொடுங்கு முணர்ச்சியே யுண்மைமகிழ்
வெள்ளத்தேக் குக்கு விரகென்னும் பாதம். (அ)

1514. விண்டர்க்க வாத விநோதமகன் றுள்ளொடுங்கி
ஈண்டிற் கருத்திதயத் தின்பநிறை பாதம். (அ)

1515. இன்பத்துக் கென்றுமே யின்றுகுறை தன்பதத்தூ
டன்பொத்து நிச்சிந்தை யாயிடிலென் பாதம். (அ)

1516. அயர்க்தலரு மான்மசொரூ பானுபவ மெய்யன்
புயிர்த்தலைவன் பாற்கற் பொழுக்கமெனும் பாதம்.
(அ)

1517. ஒருமைசே ருண்மை யுணர்ச்சியா லன்றிப்
பெருமைசேர் சாந்தபதப் பேறரிதென் பாதம். (அ)

1518. விண்மையுறு மோக விகற்பமற மாற்றியொளி
ருண்மையுணர் வாமவ் வொருமையாம் பாதம். (அ)

1519. நீதியோர் நெஞ்சத்து நீடியமால் வாதனையைப்
பேதியா நின்று பிறங்குமொளிப் பாதம். (அ)

1520. கோழைமனப் பான்மைசேர் குச்சிதப்புன்
[மாக்களார்
சூழமுடி யாதவதி துல்லபமாம் பாதம். (அ)

1521. தோழமையின் மிக்கவென் சொந்த சொரூபமா
ஆழமைபே ரின்ப வுழுவலன்புப் பாதம். (அ)

1522. நெஞ்சுறுமெய் யன்பாலே நிட்டுரமற் றென்னுயிரைக்
கொஞ்சுறுமென் கோமளமாங் கோகனதப் பாதம். (அ)

1523. கொட்புறுமென் சிந்தைமயல் கூர்விகற்பப்
[புந்தியைக்கொல்
திட்பநுட்பஞ் சேர்சொருப வொட்பமுடைப் பாதம். (அ)

1524. பம்பியபுன் மோகமற நம்பியமெய் யன்பருளம்
மொய்ம்பியல்போ தானுபவம் மூட்டுமொளிப் பாதம்.
(அ)

1525. சதாசார மோனந் தலைப்படவே கூட்டி
மதாசார வாழ்க்கையற மாற்றுவித்த பாதம். (அ)

1526. அந்தமிலாப் பெற்றி யருள்வெளியிற் கண்விழிப்பித்
தெந்தமையாட் கொள்ள வெழுந்தருளும் பாதம். (அ)

1527. அறிவைத் தெளிவித் தசலமாப் பண்ணிப்
பிறிவற்ற தன்சொருபம் பேணுவித்த பாதம். (அ)

1528. பேணிற் பிறிதாப் பிரம்ம சொருபமுனை
நாணிப் பிரிந்து நழுவுமெனும் பாதம். (அ)

1529. தேறினுந் தேரு விடினு முயிர்த்தொகையின்
வேறிலா தோன்றிநின்ற மெய்ம்மையுருப் பாதம். (அ)

1530. உள்ளமைதி யுண்மை யுணர்ச்சிக் கறிகுறிகாண்
கள்ளமயல் வாழ்க்கை கலவரமென் பாதம். (அ)

1531. சித்தமே யுன்னைச் சிறைப்படுத்திக் காயத்துன்
மத்தனு மாய மருட்டுவதென் பாதம். (அ)

1532. கருத்துமிகக் காமுறுமெய்க் காதலாற் றன்னைப்
பொருத்துமுளத் தூறுசிவ போகவொளிப் பாதம். (அ)

1533. கட்குடியன் போலக் கருத்தமைதி கெட்டுமதி
கொட்குவதென் மோகக் குழியிலெனும் பாதம் (அ)

1534. அறிவைநீ யுள்ளவா றுய்ந்துணர்ந்தா லம்மெய்
யறிவுக் கலமரலென் றென்றுமின்றென் பாதம். (அ)

1535. பனுவலினு மில்லை படிப்பவன்றன் னுண்மை
யனுபவவே தாந்த வறிவென்னும் பாதம். (அ)

1536. அறிவுதனி லூன்று தலைமனத்துக் குண்மைச்
செறிவான சுத்தசிவந் தேர்வரிதென் பாதம். (அ)

1537. அறிவுமடம் பட்ட வகந்தையோ ருண்மை
நிறைவொழிந்து நெஞ்ச மழுங்குவரென் பாதம். (அ)

1538. வாழ்க்கைவலைப் பட்டுமதி மங்குமகங் காரவுயிர்
பாழ்க்கையன்றி யென்செயத்தான் வல்லதெனும்
[பாதம். (அ)

1539. அருள்விளக்க மின்றி மருள்விலக்கலன் னின்று
தெருள்வதற்கென் செய்வர்சிறு ஜீவரெனும் பாதம்.
(அ)

1540. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்றுவிடப் பாரகத்தென் பாதம் (அ)

1541. பற்றற்ருன் பற்றினையற் பற்றறலு மந்நிலையே
பற்றற்ருன் பற்றுமறப் பற்றரவாம் பாதம். (அ)

1542. சித்த விகாரச் சிறுபுலத்து மோகமறிற்
புத்தமுத போகவனு பூதிதரும் பாதம். (அ)

1543. புத்தியினென் ருகப் பொருந்துபரி பூரணத்து
நித்தியநன் மங்களமா நீடுமொளிப் பாதம். (அ)

1544. கற்பனைமாந் தர்க்குக் கடவுளாய்க் கற்பனைதீர்
தப்பறுமெய்ஞ் ஞானிக்குத் தன்சொருபப் பாதம். (அ)

1545. நிராலம்ப மாகி நிகிலங் களுக்கு
மொராலம்ப மாகவொளி ருண்மையொளிப் பாதம்.
(அ)

1546. மாலுறவு சற்றும் மடாது மனுதீத
வாலறிவே தன்வடிவா வைகுறுமெய்ப் பாதம். (அ)

1547. மோனவொளி கண்டார் முயற்சிசேர் மோகவலை
யான வுலகியற்பற் றற்றவரென் பாதம். (அ)

1548. அசாரமா மைம்புலத்து டாசை சொருப
விசாரமில் லாதவவி வேகமெனும் பாதம். (அ)

1549. நெஞ்சகத்துச் சேர்ந்து நிலைத்தாலே யன்றிமனச்
சஞ்சலத்தைச் சாய்த்தமைதி சார்வரிதென் பாதம்.
(அ)

1550. நீடுசிவா னந்த நிஜானுபவ வாழ்க்கையுளங்
கூடுவதா லன்றிக்கை கூடரிதென் பாதம். (அ)

1551. கடமையிலே கண்ணுங் கருத்துமா நெஞ்சத்
திடமுறவே செய்தவத்தைச் செய்தொழுகென் பாதம்.
(அ)

1552. மயக்கறிவு மங்கி மடிந்திடத்தன் னன்ப
ருயிர்க்குறுதி யாமெய் யுணர்வொளியாம் பாதம். (அ)

1553. முழுமுதலா மோன முயக்கிடைநான் சாவக்
கெழுமுதலா வென்னைக் கிறிசெய்த பாதம். (அ)

1554. உருவெளித்தோற் றத்தி லுழன்றேனைத் தன்சிற்
பரவெளித்தேற் றத்திற் படிவித்த பாதம். (அ)

1555. உடல்வடிவோ டொட்டி யொழுகுமகங் காரங்
கெடவகத்துத் தன்சொருபக் கேழ்கிளர்மெய்ப் பாதம்.
(அ)

1556. பொன்னடியென் னுள்ளும் புறம்பும் பொறித்தென்னைத்
தன்னடியே னாகத் தடுத்தாண்ட பாதம். (அ)

1557. கள்ளமாம் பொய்யகந்தைக் காட்சியிலெட் டாதசிவ
வெள்ளமா மோன விசுத்தவெளிப் பாதம். (அ)

1558. வியட்டிநோக் கத்துமயல் விட்டே யகண்ட
சமட்டிநோக் கத்தினுப சாந்திரும் பாதம். (அ)

1559. குருபதே சத்தாற் குறிக்கொள்ளத் தக்க
சொரூபமெய்ஞ் ஞானசுக சோபனமாம் பாதம். (அ)

1560. சொருபமாந் தன்மையாற் சும்மா விருந்தே
தெருள்வதா கின்றவருட் சிற்பரமாம் பாதம். (அ)

1561. தொன்றுதொட் டென்னைத் தொடர்ந்தாண்டென் [னுள்ளத்து
நின்றவருட் சிற்பரமெய்ந் நேயநிலைப் பாதம். (அ)

1562. ஓர்மைசே ருள்ளத் துறுதிசேர் மெய்யுணர்ச்சி
நீர்மைசே ரின்ப நிறைவான பாதம். (அ)

1563. இடங்கெடவென் னெஞ்சில்லே றெண்ணத்துக் [கின்பத்
தடங்கடலா வோங்குமுப சாந்தவொளிப் பாதம். (அ)

1564. தாணுவாந் தன்கழலின் சார்பா யெவைவற்றிற்
பூணவாச் செற்றவருட் பூரணமாம் பாதம். (அ)

1565. மணிவா சகமே மறைவா சகமாத்
துணிவா வதன்பொருளைத் தோய்வித்த பாதம். (அ)

1566. சுத்தப் பரவெளிமாத் தோய்ந்தவுளத் தூறுசிவ
பத்திப்பா கான பரமசுகப் பாதம். (அ)

1567. அன்பரகத் தான்றவகண் டானுபவ சாந்தபதம்
என்பரமல் லாதுள் ளியல்வித்த பாதம். (அ)

1568. நீந்தவரி தான நெடும்பிறவிப் பாழ்ங்கடலைக்
காந்திவறள் வித்தவழற் கண்ணுதலாம் பாதம். (அ)

1569. தலைப்படுமெய் வீரத் தறுகண்மை யூனப்
புலப்பகையைச் சுட்டுப் பொடித்தலெனும் பாதம்.
(அ)

1570. வஞ்சமிலார் நெஞ்சமே மன்னுதிருக் கோயிலாக்
கொஞ்சுமகிழ் சான்றவருட் கோலவொளிப் பாதம்.
(அ)

1571. சீர்மைசேர் தன்னகத்துட் சேர்தலே நுட்பமதிக்
கூர்மையா மன்றியொன்றைத் தேர்தலன்றென்
[பாதம். (அ)

1572. முற்றுள்ள மான முழுத்துறவுக் கெனைச்சிறிதும்
பற்றுள்ள மானவுலோ பம்பகையென் பாதம். (அ)

1573. துட்டமனச் சேட்டையறத் துஞ்சுமுளந்
[தோய்வதுகாண்
சுட்டறிவுக் கெட்டாத் துரியமெனும் பாதம். (அ)

1574. தட்டறுமெய்ஞ் ஞான சமாதிசுகத் துப்புரவு
சுட்டறிவு கெட்டவகந் துன்றுவதென் பாதம். (அ)

1575. போவன போக வருபவெலாந் தாம்வருக
சோபனமா மொன்று சொரூபமெனும் பாதம். (அ)

1576. நீடுவதாந் தன்சொருப நிட்டையே யன்றிமனங்
கூடுவதா மற்றெதுவுங் குற்றமெனும் பாதம். (அ)

1577. யாதுதான் கற்கினுமென் பேதமறத் தன்சொருப
மூதுணர்வா மோனவொளி முற்றளவென் பாதம்.
(அ)

1578. கறைப்படுவ தானவகங் காரமனக் காட்சி
சிறைப்படுபுன் போகத் தியக்கமெனும் பாதம். (அ)

1579. கூறுபடு பேதவியல் கூடுமறி வுள்ளத்து
மாறுபடு மோக மயக்கமெனும் பாதம். (அ)

1580. நம்பனைவிட் டுன நரத்துதிசெய் புன்புலமை
பம்புமன மையற் பரத்தைமையென் பாதம். (அ)

1581. வாழ்முதலாம் பூரணமெய் வாழ்க்கைமறந்
[தாணவப்பொய்ப்
பாழ்முதலை வாய்ப்படலென் பாவமெனும் பாதம். (அ)

1582. நிகழ்ச்சியா முண்மையைத்தந் நெஞ்சுறைப்பத்
[தேரூர்
மகிழ்ச்சியான் மற்றவற்றின் மாழ்குவரென் பாதம்.
(அ)

1583. உதாசின மாவுலகத் தூடொழுக லாலே
சதாமோன மான சமாதிநடைப் பாதம். (அ)

1584. பேதவிவ காரப் பிரமாதஞ் சற்றுமில்சற்
போதசொரு பானுபவப் பூரணமாம் பாதம். (அ)

1585. பூவலயத் தோடு பொருந்தினுற் போலியன்றே
கேவலஞா னனுபவக் கேழ்கிளர்மெய்ப் பாதம். (அ)

1586. அருந்தமிழா லான்ற வரும்பதச்சீ ரென்னல்
விருந்தமிழ்தம் போல மிழற்றுவித்த பாதம். (அ)

1587. கையறவு கொண்டு கருத்தழுங்கா தென்னுயிர்க்கு
மெய்யுறவா கின்ற விழுப்பொருளாம் பாதம். (அ)

1588. கூடுவதாக் கொஞ்சிக் குலாவல்போற் சிந்தைபுலந்
தூடுவதுந் தன்னேடா வோருறவாம் பாதம். (அ)

1589. வஞ்சவெளி யாக மறைபட்டே யென்னுளத்து
விஞ்சைவெளி யாக வெளிப்பட்ட பாதம். (அ)

1590. மருட்பிரமா தப்புன் மனத்தாபம் மாற
வருட்பிரவா கத்தி லமிழ்த்தியநற் பாதம். (அ)

1591. அஞ்சுவதாத் தன்னை யடைக்கலம்புக் கேனகத்தே
கொஞ்சுவதாக் கூடிக் குலாவபயப் பாதம் (அ)

1592. தொன்றுவரு மோகத் தொடர்புதரு தோல்விதீர்
வென்றிதரு மெய்ஞ்ஞான வீறுளிசேர் பாதம். (அ)

1593. வேசையினும் பொல்லா வெறும்புகழ்ச்சி மீதுமனத்
தாசையுறின் மீளா வடிமையெனும் பாதம். (அ)

1594. கீர்த்தியின்மே லாசைக் கொழுமலைத்துன் மெய்யடியர்
சீர்த்தியின்மா ருகத் தெரிந்தொழிகென் பாதம். (அ)

1595. வெருவுடைய சிந்த வியாகுலத்தைச் செற்று
நிருவிடய மாகநிகழ் நெஞ்சவொளிப் பாதம். (அ)

1596. சாந்தவொளி யானவருட் சார்பைமுன் னிட்டிதயத்
தேய்ந்தடையத் தக்கபே ரின்பநிலைப் பாதம். (அ)

1597. அருட்சிற் பரவிசும்பா வன்பரகத் தூடு
மருட்கற் பனையனைத்தும் மாற்றுமொளிப் பாதம். (அ)

1598. எட்டிபோற் கைப்பச்சிற் றின்பமெல்லாம்
[பாகுவெல்லக்
கட்டிபோ லன்பர் கருத்தினிக்கும் பாதம். (அ)

1599. அண்ணலுக்கா ளாக வடைந்தமெய் யன்பரகத்
தெண்ணலுக்கா காதபே ரின்பவியற் பாதம். (அ)

1600. தன்னினைவே சாலத் தலையாய சாதனமா
மன்னியபே ரன்பரே மாதவரென் பாதம். (அ)

1601. நிட்டானு பூதி நிகழ்ச்சி யகந்தையறக்
கெட்டாலே யன்றிக் கிளர்வரிதென் பாதம். (அ)

1602. அத்துவித மோன வதீதமா வையுணர்வு
செத்தவித யத்தே சிறக்குமொளிப் பாதம். (அ)

1603. மறதிதீர் தன்சொருப வாழ்க்கையன்றி யார்க்கும்
உறுதிவே றின்று வறுதியிடும் பாதம். (அ)

1604. நிலைத்தமெய் யின்ப நிறைந்திருப்ப நெஞ்சிற்
சலித்தலகங் காரத் தவறென்னும் பாதம். (அ)

1605. ஆன்றோங் கருட்சுடரா வண்ணா மலைவடிவிற்
றுன்றோன்றி யானபெருந் தாணுவாம் பாதம். (அ)

1606. உடலுலக வாழ்க்கை யுணர்வேசச் சிந்தாந்
திடசொருப வாழ்வைச் சிதைப்பதெனும் பாதம். (அ)

1607. ஞான நடை யன்றிமற் றேனை நடை யாவுமனத்
தூன நடை யாகவுளத் தோர்வித்த பாதம். (அ)

1608. நினைப்பற் றறிவா நிகழ்வே சொரூபந்
தனைப்பற்று ஞான சமாதியெனும் பாதம். (அ)

1609. மிகப்பே துறவால் வெருள்வதாங் கோர
வகப்பேயின் கோளை யறக்கடியும் பாதம். (அ)

1610. உயக்கத்துக் கேதுவா வுள்ளத்து நீடு
மயக்கத்தை மாற்றுமொளி வாழ்வான பாதம். (அ)

1611. நரசிங்கம் போன்றமெய்ஞ் ஞானகுரு வாகத்
தரைமங் களம்பொருந்தச் சார்ந்ததிருப் பாதம் (அ)

1612. நாட்டத்தி னின்று நழுவும் பிரமாத
மூட்டத்தை யோட்டியொளி காட்டுமுனி பாதம் (அ)

1613. வஞ்சமறு முண்மையொளி வாழ்க்கைசேர் [மெய்யன்பர்
நெஞ்சநிறை வானமகிழ் நீர்மைசால் பாதம். (அ)

1614. தேகபுத்தி யானதடை தீர்ந்தொழியிற் றன்னியல்பா
வேகபத்தி நெஞ்சத் தியல்வுறுமென் பாதம். (அ)

1615. ஆட்டியலைக் கின்ற வகந்தைமதிப் பேயையற
வாட்டிவதைக் கின்றவருள் வல்லாண்மைப் பாதம். (அ)

1616. மோனமுறு வாழ்வே முதன்மைபெறு வாழ்வாக
வூனமறு முண்மை யுபதேசப் பாதம். (அ)

1617. முத்தியா மோன முழுமுதலை முட்டறத்தன்
புத்தியாற் பேணலே போதமெனும் பாதம். (அ)

1618. வாட்டமறப் பற்றி மகிழ்ந்திருக்கு மெய்யன்பர்
கூட்டமுறி லின்பநிலை கூடுமெனும் பாதம். (அ)

1619. நினக்கேன் கவலை நிகிலபரந் தாங்க
லெனக்கே பொறுப்பா விருக்கையிலென் பாதம். (அ)

1620. அருள்வள்ள லாகமெய் யன்பரகத் தின்பப்
பொருள்கொள்ளை யாகப் பொழிமேகப் பாதம். (அ)

1621. தத்துவ ஞான தரிசனம் மிக்ககூத்த
சத்துவத்தா வன்றியுளஞ் சார்வரிதென் பாதம். (அ)

1622. கருவா ணவப்பாழ்ங் கலிகடிந்த தெய்வ
நிருவாண ஞான நிறைவான பாதம். (அ)

1623. குரக்குமனச் சேட்டை குலைந்தவுளத் தின்பஞ்
சுரக்குமா றேங்குபரி சுத்தவொளிப் பாதம். (அ)

1624. உணர்வு முயிர்ப்பு மொடுங்கி யுளத்திற்
புணர்வதே போதசிவ போகமெனும் பாதம். (அ)

1625. வீணவா வாக விளியாதென் வேணவா
மாணவாய்ப் புற்றவருள் வைப்பான பாதம். (அ)

1626. ஈதா விதயத் திலங்கு சொரூபமா
வேதா கமத்து விளக்கமாம் பாதம். (அ)

1627. முக்கியமா மோனவொளி முற்றினு ருள்ளத்துந்
தொக்கியல் கின்ற சொரூபமாம் பாதம். (அ)

1628. கடையா மெனக்குக் கருணைபா லித்த
வுடையா னடிகளா வோங்குமொளிப் பாதம். (அ)

1629. நடையா லரியமெய்ஞ் ஞான விசாரத்
திடையா தெளிதிலுளத் தீர்த்தவருட் பாதம். (அ)

1630. மிகப்பலவா நீடு விகற்பமனத் தோற்றத்
தகப்படுவோர் பாசவலைப் பட்டவரென் பாதம். (அ)

1631. கடந்தொளிர்தன் மெய்யுருவைக் கற்பனையி னூடே
படர்ந்தமனத் தாலெங்ஙன் பற்றுவதென் பாதம். (அ)

1632. அன்புசிவ மாமெய் யனுபவங்கூ ரவ்விதயத்
தென்பசைவ தத்தன் னியல்புவிட்டென் பாதம். (அ)

1633. அறிவுதெளிந் தான்ற வனுபூதி நெஞ்சிற்
செறிவுதரு மின்பவளச் செவ்வமெனும் பாதம். (அ)

1634. உளவனு வுண்மை யுணர்த்தியுளத் தின்ப
வளவனு வானரசில் வைத்தவருட் பாதம். (அ)

1635. அடியாதே மொட்டை யடித்தென் மனத்தைத்
தடிவான மோன தயாதருமப் பாதம். (அ)

1636. வேறு படாத விழுப்பொருளாந் தன்சொருபப்
பேறுபிர மாதப் பிறிவென்னும் பாதம். (அ)

1637. ஊறுபடாத் தன்மெய் யுணர்ச்சியே யொட்பமிகத்
தேறுபடு சாந்த சிவத்துவமென் பாதம். (அ)

1638. சுத்தசச் சித்தே தொழுது வழிபடலுக்
கொத்தமெய்த் தெய்வ முயிர்த்தொகைக்கென் பாதம்.
(அ)

1639. அறிவே பொருளா வமைதிபெற லன்றிப்
பிறவே பொருள்போற் பிணங்கலென்னென் பாதம்.
(அ)

1640. சும்மா விருக்கச் சுடர்சொரு பானுபவச்
செம்மா ணடிநிழலிற் சேர்ப்பித்த பாதம். (அ)

1641. ஊனமொன் றில்லா வொருமைசேர் சுத்தபர
மோனமே தாரகமா முற்றுவித்த பாதம். (அ)

1642. வானவொளி யூடுபர மோனவொளி காட்டிமட
வீனவெளி யேனிதயத் தின்புருவாம் பாதம். (அ)

1643. மனமே குறைவடிவா மாதலா லந்த
மனமுன் ளளவுநிறை வாய்ப்பரிதென் பாதம். (அ)

1644. உண்மைவாழ் வாவ துளந்தன் னுணர்வுருவா
முண்மையே பற்றி யுயிர்ப்புறலென் பாதம். (அ)

1645. மாச்சரியத் தாலே மனங்கோதிக்கு மாக்களியல்
பேய்ச்சரியை யன்றிப் பிறிதன்றென் பாதம். (அ)

1646. சாந்தத் தமைதியே சாதுக்கள் சென்னியா
லேந்தத் தகும்பொற் கிரீடமெனும் பாதம். (அ)

1647. நீர்மைசே ரந்த நிமித்தத்தாற் பேரின்பச்
சீர்மைசேர் வாழ்க்கைநலஞ் சேர்வரெனும் பாதம்.
(அ)

1648. தொந்தவிவ காரச் சுழற்சிசேர் சிந்தையிலாச்
சொந்தசிவ ஞான சொரூபவொளிப் பாதம். (அ)

1649. நோற்று விளங்குமறி வாற்றலான் மெய்யுணர்ந்தோர்
கூற்று மடங்கக் குதிப்பரெனும் பாதம். (அ)

1650. உறவுகோ லாநட் டுசாக்கயிரு வுள்ளம்
முறுகவாங் கிக்கடைய முன்னிற்கும் பாதம். (அ)

1651. உடைபட்ட வாணவஞ்சே ருள்ளத்தே சற்றுந்
தடையற்ற சத்தியாந் தான்கிளர்மெய்ப் பாதம். (அ)

1652. உள்ளமே தூயதிரு வுண்ணுழி யாவுறைவாற்
கள்ளமனர் தாங்குறுகிக் காணவொண்ணுப் பாதம்.
(அ)

1653. பாதமே பற்றிப் பரவுதலல் லாலடியேன்
போதத்துக் கியாதோர் புலமுமில்லாப் பாதம். (அ)

1654. உகண்டெழூஉ மாணவத்தோ டொன்றுதே யுள்ளத்
தகண்டமா நீடுண்மை யாமறிவுப் பாதம். (அ)

1655. உணவு தொழிற்பா டுறக்கம் மிதமா
வணவலோ ராற்று லறுதியிடேன் பாதம். (அ)

1656. சக்கர வர்த்திதிரு மக்களாத் தன்னன்ப
ரொக்க ரமித்தற் குரியரெனும் பாதம். (அ)

1657. பொருட்செல்வ வாழ்க்கை பொருளன்று தெய்வ
வருட்செல்வ வாழ்க்கைமலி யன்பர்க்கென் பாதம்.
(அ)

1658. அலமென்னும் புத்தியே யான்றவருட் செல்வர்க்
கிலமென்னுஞ் சிந்தையிலா வேமாப்பென் பாதம்.
(அ)

1659. பற்றற்ற வாழ்வே பரமான யோகமாக்
கற்றெழுக நல்லோர் கடவரெனும் பாதம். (அ)

1660. படமாடக் கோயிற் பரமனிலும் பேணுய்
நடமாடக கோயில்வாழ் ஞானியையென் பாதம். (அ)

1661. தாழ்க்கையிலா தன்பொடுதன் றுள்சேர்ந்தார்
[பாக்கியஞ்சேர்
வாழ்க்கையிலே மிக்க வரோதயரென் பாதம். (அ)

1662. ஆண்டா னடிநினைவா லன்பரகக் காரிருள்சாய்ந்
தீண்டே பரமுத்தி யெய்துமெனும் பாதம். (அ)

1663. அருட்பாத சிந்தையா லன்பரகத் தீண்டும்
மருட்பாச பந்தமறு மாட்சியெனும் பாதம். (அ)

1664. களைந்தகங் காரமனக் கற்பனைவிட் டுள்ளத்
தளைந்துநின் மெய்யை யனுபவியென் பாதம். (அ)

1665. மற்றொன்றைக் கண்டித்துன் மாட்சிகுலை யாதகத்திற்
கற்றொன்றை யோம்பிக் கடைப்பிடியென் பாதம். (அ)

1666. நுமக்கு மெனக்குமுண் டானதொந்த நோக்கம்
இமைக்கும் பொழுதுமிடை யீடரிதென் பாதம். (அ)

1667. கண்டாலு முட்டுமற்றுக் கேட்டாலு முட்டகந்தைச்
சண்டா ளனைத்தீண்டத் தக்கதன்றென் பாதம். (அ)

1668. நல்ல வுபாயமெய்ஞ் ஞான விசாரமொழிந்
தில்லைபே ரின்பநிலை யெய்துதற்கென் பாதம். (அ)

1669. அடைவாகத் தன்பதத்தை யாய்ந்தறியக் கல்லாக்
கடையாயார் கற்றுமற்றென் கண்டனரென் பாதம்.
(அ)

1670. காண்பானுந் தன்சொரூபக் காட்சியே மாட்சியன்றி
காண்பானுற் காண்படுவ கண்மயலென் பாதம். (அ)

1671. அறிவானுந் தன்மெய் யறிவே யயற்சுட்
டறிவான புத்திக் கவதியெனும் பாதம். (அ)

1672. உண்மையே யன்றி யொழிந்தபிற கற்பனைக்குத்
திண்மைசேர் வண்முடிவு சேர்தலின்றென் பாதம்.
(அ)

1673. கனுமயக்கக் காட்சியுறக் கந்தெளிந்து காணு
நனுவுணர்வா லன்றி நசிப்பரிதென் பாதம். (அ)

1674. நீசமனப் பைத்தியமா நீடுமகங் காரவுயிர்
பாசமயற் பாழிலகப் பட்டிறுமென் பாதம். (அ)

1675. மூடுசதி யானமதி மோகமற வன்பருள்ளே
நீடுசிவ ஞான நிறைவொளியாம் பாதம். (அ)

1676. வஞ்சமன மாக்கள் கரந்தொழுக லன்றியருள்
விஞ்சையர்தம் வாழ்க்கை வெளிப்படையென் பாதம்.
(அ)

1677. சிந்தை நிகழ்ச்சி திருவடியின் பாலியல்பா
நந்தலே சீர்பாத ஞானமெனும் பாதம். (அ)

1678. காரணனு னென்னுங் கருத்தோ டதுபற்றிச்
சேருமயல் வாதனையுஞ் செத்தமையென் பாதம். (அ)

1679. பேதபுத்தி மாளப் பெறுதலே நீளச்செய்
சாதகத்தி னெய்துசித்திச் சால்பெனுமெய்ப் பாதம்.
(அ)

1680. உறங்கலே போன்ற வுளத்தின்கட் சிந்தை
கறங்குபோற் றுன்கலங்கல் வாதனையென் பாதம். (அ)

1681. வாதனையை மாய்க்க வகைதேரு மன்னுயிரே
யாதனைதான் மீக்கூர்ந் தினைவதெனும் பாதம். (அ)

1682. வாசனு நாச மடுப்பினன்றி முத்திநிலே
ஈசனு லுங்கொடுத்த லேய்வதன்றென் பாதம். (அ)

1683. கரணமூன் றுலுங் கடைப்பிடிக்கி லன்பை
இரணநின் னின்னுயிர்க்கென் றென்றுமின்றென்
[பாதம். (அ)

1684. காலதே சங்களாக் காணப் படுவதுண்மை
வாலறிவாந் தன்சொருப மாத்திரமென் பாதம். (அ)

1685. நீடு தனது நிஜசொருபந் தேறலதை
மூடுபுடி மோகமற வீடலெனும் பாதம். (அ)

1686. கற்பனையா மோகக் கருந்துவெளிப் பட்டுருத்த
சொப்பனமாச் சாக்கிரமுஞ் சோர்ந்தொழியென்
[பாதம். (அ)

1687. விண்டா னெழுந்து வெறிப்படுமூ டாணவந்தான்
மாண்டொழித லேமுடிந்த மாண்பயனென் பாதம்.
(அ)

1688. தானதுவா வோங்கு சதாமோன ஞானசுக
மானதவா விக்கண் மடுப்பிக்கும் பாதம். (அ)

1689. ஒன்றிரண்டென் றேது முபயமத முங்கடந்து
வென்றிகண்ட மோன விசுத்தவெளிப் பாதம். (அ)

1690. தனையடைந்த ஞானத் தபோதனர்தம் பாதத்
தெனையடைவித் தாண்டபே ரின்பவொளிப் பாதம்.
(அ)

1691. மனுவத்தை யானகுறை மாய்ந்தவியல் பாலே
அனுசத்தி யோக வடைவான பாதம். அ)

1692. நிட்கா மியகன்ம நேயர்தந் நெஞ்ச முடைந்
துட்கா துறுதிசே ருக்கமளி பாதம். (அ)

1693. உண்மைநோக் காலிவ் வுலகைவென் றோங்குமொளி
வண்மைசே ரன்பரே மன்னவரென் பாதம். (அ)

1694. கவனமாத் தன்னைக் கடைப்பிடிப்பா ருள்ளே
மவுனவொளி கூட்டும் மனோமணியாம் பாதம் (அ)

1695. நன்மைசேர் வாழ்வேமெய்ந் நாகரிக வாழ்வாகத்
தன்மையொளிச் சால்புபெறத் தான்வளர்க்கும்
[பாதம். (அ)

1696. வாசனை மாண்ட மனத்தியல்பாப் பொங்குசிவ
பூசனையாற் றன்னடியைப் போற்றுவித்த பாதம். (அ)

1697. அறிவைக் கலங்கவிடா தான்ம சொரூப
வுறவு கலக்கவைத்த வுண்மையொளிப் பாதம். (அ)

1698. கலங்கலோ மெய்யன்று கற்பனைகாண் மெய்யாத்
துலங்குபர மார்த்த சொரூபத்தென் பாதம். (அ)

1699. சிவசொருப மாகத் திகழ்சிற் பரத்தின்
அவசரபே தங்கா ணகிலமுமென் பாதம். (அ)

1700. விவத்தையில் லாத வவத்தையை வேண்டித்
தவத்தை யிழக்கை தவறென்னும் பாதம். (அ)

1701. பெத்தனு னென்னுமதிப் பித்தஜீ வத்துவமில்
சுத்தனா னென்ம சொரூபவொளிப் பாதம். (அ)

1702. தன்சொருப மன்றித் தருமமன்று ஞானமென்றென்
னெஞ்சுருவத் தன்சொருப நிற்பித்த பாதம். (அ

1703. அறிவே சொருபமா மத்துவித வுண்மைச்
செறிவதே முத்திச் சிறப்பெனுமெய்ப் பாதம். (அ)

1704. ஆன்றபெரி யோரை யடைந்துகா ணன்புநலஞ்
சான்றநடை யூடுலகு சார்தலெனும் பாதம். (அ)

1705. செவ்விதா முண்மைத் திகழ்ச்சிசால் சிட்டரியல்
பொவ்விடநின் வாழ்வொழுக்க மோம்புதியென்
[பாதம். (அ)

1706. எல்லாஞ்செய் வல்ல விறைவ னருட்பதத்தைப்
புல்லாதோ ருள்ளம் பொலிவரிதென் பாதம். (அ)

1707. சனுதன மானமெய்த் தத்துவம் யானே
டெனுதுமற் றுள்ள வியல்பென்னும் பாதம். (அ)

1708. ஒருமைக் குரிய பெரியோ ருலகத்
திருமைக்கு மின்றி யமையாரென் பாதம். (அ)

1709. ஆணவமோ கத்தை யகழ்ந்தனா னென்மநிட்டர்
மாண வரோதயரா வாழ்வரெனும் பாதம். (அ)

1710. விசுத்தமெய்ஞ் ஞான விசாரத்தே நில்லாப்
பசுத்துவமூ டாணவமோர் பாழெனுமெய்ப் பாதம்.
(அ)

1711. பாதவொளி பட்டவுளம் பார்வைதெளிந்
[தொன்றுசுத்த
போதவெளி யானசிவ பூரணமாம் பாதம். (அ)

1712. நிட்களமாத் தன்னை நினைந்துருத நேயருளம்
யுட்களமா வோங்குசுக பூரணமாம் பாதம். (அ)

1713. பரசொருப மாகியருட் பார்வைசேர் ஞான
குருவுருவா வன்பரையாட் கொள்ளவந்த பாதம். (அ)

1714. துறவறத்து மாட்சி சொருபத்தை நெஞ்சா
லிறுகிறுகப் பற்றி யிருத்தலெனும் பாதம். (அ)

1715. அறிவுருத்தன் கண்ணே யகிலமாம் பேதம்
பிறிவறக்கற் பித்த பிரம்மவுருப் பாதம். (அ)

1716. அறிவை யறிந்தவ் வறிவை நழுவா
துறைவதே முத்திக் குபாயமெனும் பாதம். (அ)

1717. ஆனகர ணங்க ளனைத்துந் தொழிற்படினும்
மோனநழு வாதமுழு முத்தியுருப் பாதம். (அ)

1718. கலைகற்ற லாற்கருத்திற் காண்பயனென் மோன
நிலைநிற்ற லாலன்றி நெஞ்சினிலென் பாதம். (அ)

1719. கள்ளமனப் பேயகந்தைக் கற்பனையிற் சூழலிற்பட்
டுள்ளமதி கெட்டவெனக் குய்திதந்த பாதம். (அ)

1720. நினைப்பற்ற வுண்மை நிகழ்ச்சிவடி வாக
முனைப்புற்ற ஞானமே மோனமெனும் பாதம். (அ)

1721. உண்மை யுறவுகலப் புற்று ருளத்திலருள்
வண்மைசே ரின்ப மகிழ்வுதரும் பாதம். (அ)

1722. தானிங் குயிர்த்துச் சரித்தல் பரமார்த்த
ஞானங் கருதுமன்பர் நன்மைக்காம் பாதம். (அ)

1723. நாட்டந் துவிதத்து நண்ணு தவிச்சையைமுற்
றோட்டந்து சாய வுடற்றுமொளிப் பாதம். (அ)

1724. ஞான விளக்கமே நம்பனருட் பாதவொளி
ஏனைவிளக் கங்களதற் கேதிலவென் பாதம். (அ)

1725. ஏனையவை மெய்யா வெதிரிட்டு நம்புவோர்
ஊனுடல பாசபந்தத் துள்ளவரென் பாதம். (அ)

1726. அடிப்படையா முண்மைஞா னனுபவ மொன்றே
கடைப்பிடியாக் கொள்ளக் கடவதெனும் பாதம். (அ)

1727. அச்சாணி யானவான் மானுபவ மோனமே
உச்சாணி யான வுயர்நலமென் பாதம். (அ)

1728 அறிவை மயங்கவிடா தான்ம சொரூபத்
துறைவதா லொட்பமுற வோம்புதியென் பாதம். (அ)

1729. கற்பனையா முட்புடியின் காட்சிகளைச் சிற்பரமாந்
தற்பரமாத் தாங்குறுமா தாரசிலைப் பாதம். (அ)

1730. சீரார்ந்த சுத்தத் தெளிவா மறிவையன்றி
யாரா தனைக்குரித்தாந் தெய்வமின்றென் பாதம். (அ)

1731. வஞ்சமனப் பேயகந்தை மாயவாழ் வோயவென்
னெஞ்சமனைந் தஞ்சலென நின்றவருட் பாதம். (அ)

1732. ஒருமைசே ருண்மையுளத் துய்த்துணரப் பெற்றோர்
அருமைபா ராட்டியனந் தாதரஞ்செய் பாதம். (அ)

1733. புல்லசுர சம்பத்துப் பொன்றினர் தம்மகத்து
நல்லசிவ மாகவொளிர் ஞானசுகப் பாதம். (அ)

1734. தோற்றுபுல மையற் றுவிதபே தங்களறத்
தேற்றுமொளிக் கேவலசச் சித்துருவாம் பாதம். (அ)

1735. புத்திதனை மாற்றிப் புலத்தினின்று தன்சொருப
முத்திவள ருள்ளத்தே முற்றுவித்த பாதம். (அ)

1736. அல்லல் விளைக்கு மகந்தைமூ டாணவத்தைக்
கொல்லலன்றித் தெய்வநிந்தை கூறலென்னென்
[பாதம். (அ)

1737. வாழநா னென்றும் மகிழ்குன்று தாருயிர்த்
தோழனு வுள்ளமைதி துன்றுவித்த பாதம். (அ)

1738. கடவதா முண்மைக் கடைப்பிடிசே ருள்ளத்
தடர்வதாக் கற்பனையை யன்றுமொளிப் பாதம். (அ)

1739. நெஞ்சக் கிழியினூ நீடு நினைந்தெழுசி
விஞ்சையந ளன்னை விபக்தமொளிப் பாதம். (அ)

1740. மாணருட்பே ராட்சிதரு வாழ்க்கைநல மோங்கவுளத்
தாணவப்பே யாட்ட மறக்குலைத்த பாதம். (அ)

1741. என்பயக்கு மேனுாவர் நிச்சையறு மெய்யடியர்க்
கன்பளிப்பாத் தன்மெய் யருளளிக்கும் பாதம். (அ)

1742. பொல்லாங் ககன்றசிவ போதவருள் வாழ்க்கைமகிழ்
நல்லாங் கெனதுளத்து நல்கியபொற் பாதம். (அ)

1743. இன்பநிறை வாந்தன் னியற்கைநிலை தேர்ந்தமையிற்
றுன்பநினை வெங்ஙனங்குத் துன்றுமெனும் பாதம்.
(அ)

1744. சொந்தமெய்ஞ் ஞான சொரூபானு பூதியின்கட்
பந்தமொடு முத்திமனப் பான்மையின்றென் பாதம்.
(அ)

1745. இளிவரலுக் கேதுவா வீண்டிக் கிடந்த
வளவிலாப் பாவ மறக்கெடுத்த பாதம். (அ)

1746. முருட்டுமர மொப்ப முரண்பட்ட சிந்தைக்
குருட்டுமட வேணைத் தெருட்டியபொற் பாதம். (அ)

1747. நேர்மை நிறைந்தொழுகு நெஞ்சத்தே நீர்மைசா
லோர்மைசேர் சாந்தி யுறலியல்பென் பாதம். (அ)

1748. உள்ளக் கிழியி னுருவெழுதித் தன்னடியர்
கொள்ளக் கிடைத்த குதூகலமாம் பாதம். (அ)

1749. எதிர்புலங்கண் டேங்கி யியல்கெட்டுச் சிந்தை
பிதிர்தலெவன் றன்சொருபம் பேதுற்றென் பாதம்.
(அ)

1750. பிழைபடா வுண்மையைப் பேதுற்றுப் புந்தி
நழுவலே கூற்று நடப்பதெனும் பாதம். (அ)

1751. வஞ்சம் பொதிந்தகரு மாயமனப் பூசனையைக்
கொஞ்சமுந்தா னேற்காமனங் கூசுமொளிப் பாதம்.
(அ)

1752. அலந்துவரு மன்பரகத் தான்றவாநட் சோதி
மலர்ந்துவிரி பூரணநன் மங்களமாம் பாதம். (அ)

1753. உறுதியுற வுண்மைநிலை யுள்குறுமெய் யன்பர்
மறதியொழி ஞானவருள் வாழ்வொளியாம் பாதம். (அ)

1754. மெய்ம்மையைநெஞ் சார விரும்பியுணர்ந் தாலந்த
மெய்ம்மையே தம்மைவிடு விக்குமெனும் பாதம். (அ)

1755. தாழ்வசைவு தூன்றுமனச் சஞ்சலங்கெட் டன்புமிக்க
வாழ்வுசிவ மாகவருள் வண்மையொளிப் பாதம். (அ)

1756. ஆனந்த மான வடிப்படையா முண்மையைத்தேர்ந்
தூனந் துடற்பிறவி யோயுமெனும் பாதம். (அ)

1757. ஏமமிகு வைகலுயிர்க் கெய்தவடி யாருளத்திற்
காம வெகுளிமயக் கங்கடியும் பாதம். (அ)

1758. கொக்குப்போற் குந்திக் குருவருளே நாட்டமாத்
தொக்கவுளத் துண்மை துலக்குமொளிப் பாதம். (அ)

1759. சிந்தனை சத்தியையுட் செற்றாலே யன்றித்தன்
சொந்தஞா னானுபவந் துய்ப்பரிதென் பாதம். (அ)

1760. வெருண்டு படாத விசாரத் தெளிவூ
டிரண்டற்ற வொன்று விருந்தொளிர்மெய்ப் பாதம்.
(அ)

1761. கனவு நனவிற் கழிதலே போல
நனவுமெய்ஞ்ஞா னத்து நழுவுமெனும் பாதம். (அ)

1762. அறிவுவடி வாக வமைந்தமெய் யன்பே
நிறைவுறுமெய்ஞ் ஞானசிவ நேசமெனும் பாதம். (அ)

1763. குருட்டுமதி யானவலங் கோலமனப் பேயைத்
தெருட்டுமதி சாமர்த் தியபோதப் பாதம். (அ)

1764. அழுதழுது நெக்குருகு மன்பரகத் தென்றும்
பழுதறுமெய்ஞ் ஞானவருட் பார்வைகிளர் பாதம்.
(அ)

1765. சிவாயநம வென்றகத்துச் சிந்தித் திருப்போர்க்
கபாயமொரு காலுமிலை யாகவருள் பாதம். (அ)

1766. நமவென் பதன்கருத்து நானற்றுத் தானா
வமைவதென் றுண்மை யறிவுறுத்தும் பாதம். (அ)

1767. அறிவுத் தெளிவா மமைதியே யின்பச்
செறிவான வாழ்க்கைச் செழிப்பமெனும் பாதம். (அ)

1768. நீடுமூ யின்ப நிறைபதத்தில் வாழ்வருளத்
தூடோங்கு முண்மை யுணர்வோரென் பாதம். (அ)

1769. உய்த்துணர்வாற் றன்னியல்பா வுள்ளத் தனுபவமா
மெய்த்தெளிவே சுத்த விழுத்தியெனும் பாதம். (அ)

1770. உன்னுளே யுன்னைநீ யுன்னு லுசாவினன்றித்
துன்னரிது சொந்த சொரூபமெனும் பாதம். (அ)

1771. நீடியமெய்ஞ் ஞான நிஜானுபவந் தன்பதத்தோ
டூடியபொய்ப் புன்புலத்தோர்க் கொண்ணாதென்
[பாதம். (அ)

1772. அறிவா லயலை யவாவா நிலையே
பிறியாது தன்சொருபம் பேணலெனும் பாதம். (அ)

1773. அகமிதமென் றுகா வபின்னவறி வன்றித்
தொகைமுதலா மான்ம சொருபமின்றென் பாதம்.
(அ)

1774. நடப்புறுதன் னுண்மையே நல்லசிவ மாகக்
கடைப்பிடிக்கத் தக்கபெருங் கண்மணியென் பாதம்.
(அ)

1775. கலைவல் லபத்தாலே கற்கவொணாத் தன்மெய்ந்
நிலைவல் லபம்பெறவென் னெஞ்சிலுறை பாதம். (அ)

1776. நேசானு சாரியாய் நின்றிடுமா றுதெனைஞா
னுசானுத் தன்னுண்மை யாய்வித்த பாதம். (அ)

1777. வறட்டுத் துறவை மறுத்துமெய்ஞ் ஞானத்
திறத்துத் துறவியல்பாச் சேர்வித்த பாதம். (அ)

1778. பேணியவர் நெஞ்சிற் பிரம்மசொரு பானுபவக்
காணியர சாட்சிக்கை வல்லியமாம் பாதம். (அ)

1779. தஞ்சக் கருத்துச் சமைந்தமெய் யன்பரது
நெஞ்சக் கலக்கமற நீக்குமொளிப் பாதம். (அ)

1780. உள்ளும் புறமுமொருங் கொத்தசிவ நேசருள்ளே
கள்ளமற்ற மெய்ப்பொருளாக் காட்சிதரும் பாதம்.
(அ)

1781. மறுதலையா மற்றை யனைத்துமறுத் தொன்று
வுறுதலையா மத்துவித வுண்மையொளிப் பாதம். (அ)

1782. ஊழிக்கூத் தாடி யுலகைமுடித் தூளைவாய்க்
கூளிக்கூ ணுகக் கொடுத்துவக்கும் பாதம். (அ)

1783. மந்தணமார் விந்தைசேர் மாயிகன்போ லற்புதமா
மைந்தொழிலுங் கற்பனையா லாற்றுசச்சிற் பாதம். (அ)

1784. பேதமனப் பான்மை பிறவாத் தெளிவேசற்
போதயெனத் துன்றுபரி பூரணமென் பாதம். (அ)

1785. உருவ வழிபா டுடலைநா னென்னுங்
கருவவகங் காரமறக் காயுமெனும் பாதம். (அ)

1786. நானென்னும் புத்தி நழுவினன்றிச் சிற்சொருபந்
தானென்னும் போதந் தழைப்பரிதென் பாதம். (அ)

1787. கதுவுமகங் காரமறக் கண்டவருக் கெல்லாம்
பொதுவுடைமை யாவொளிர்சற் போதவுருப் பாதம். (அ)

1788. ஓராதா ரென்று முணர்வரிதா வுள்ளத்திற்
பேராதே துன்றும் பிரம்மவுருப் பாதம். (அ)

1789. விரியுலக முற்றுமிவ் வெள்ளையே யுள்ளம்
அரியணையா வீற்றிருந் தாட்சிசெய்யும் பாதம். (அ)

1790. தம்பிரா னெவ்வுயிர்க்குந் தாய்தந்தை யென்னினுமற்
றெம்பிரா னுவிதயத் தென்னுடைமர் பாதம். (அ)

1791. அன்பரது நெஞ்சத் தருட்புலமை மாட்சிசே
ரின்பவியல் வாழ்க்கையினி தீத்துவக்கும் பாதம். (அ)

1792. வாலறிவா நீடு வழங்கு சொருபத்தின்
பாலுறவே சுத்தசிவ பாக்கியமென் பாதம். (அ)

1793. தன்சொருப மாகத் தழைத்தொளிர்மெய் [யன்பென்னும்
விஞ்சையா லெவ்வுலகும் வென்றுகொண்ட பாதம். (அ)

1794. தூவென் றிகழாதே துச்சாரி யேனைக்கண்
டாவென் றிரங்கி யருள்சுரந்த பாதம். (அ)

1795. விருப்புயர்தன் பத்திதரு மெய்ஞ்ஞான நோக்கில்
உருப்பெயரெல் லாந்தன் னுருப்பெயராம் பாதம்.
(அ)

1796. ஆதரஞ்செய் கின்றமெய் யன்பரகத் தான்றவருட்
பூதரமா வோங்குசுக பூரணமாம் பாதம். (அ)

1797. நினைவுதடு மாறியென் னெஞ்சமுங்கா வாறு
முனைவனுரு வாவுளத்து மோனமெளி பாதம். (அ)

1798. சிவஞான நிட்டைகிளர் சித்தோப சாந்தத்
தவஞால வாழ்க்கைமய லண்மரிதென் பாதம். (அ)

1799. ஊத்தைமல பாண்ட வுடல்வடிவாம் பேயகந்தைக்
கூத்தமர வாழ்வைக் குலைக்குமெனும் பாதம். (அ)

1800. இயல்சொருப மானபே ரின்பநிலை நீங்கி
யயல்சருவி மாழ்க லகந்தையெனும் பாதம். (அ)

1801. நஞ்சமுதம் பூசி நடக்குநவ நாகரிக
வஞ்சவியல் வாழ்க்கையினின் றுஞ்சொழியேன்
[பாதம். (அ)

1802. மாயமா மந்தவிட வாழ்க்கையையுட் கொண்டவுயிர்
நோயினுற் சிந்தைநொந்து நொந்துமெனும் பாதம்.
(அ)

1803. சாட்சியாத் துன்றுசுத்த சைதன் னியத்தைமறுத்
தாட்சிசெயு மெல்லா மபத்தமெனும் பாதம். (அ)

1804. நின்சொருப மாக நிகழ்வா லறிவைமறந்
தென்செயினு மஃதுநினக் கென்செயுமென் பாதம்.
(அ)

1805. அறிவையரு ளாதிக்கத் தாட்சிசெயக் கல்லார்
குறிகுணங்க ளாலே குலைவரெனும் பாதம். (அ)

1806. மோன சொரூப முகத்தாற் கடைக்கணித்து
மானவரை வானவரா மாற்றுமொளிப் பாதம். (அ)

1807. எல்லைகளுக் கெல்லாம்பே ரெல்லையா
[யொன்றுமெல்லா
மில்லதுவாத் தன்மயமா வுள்ளதுமாம் பாதம். (அ)

1808. கண்ணுக்குக் கண்ணைக் கருத்திலுறை மோனவருள்
விண்ணிற் குடிபுகுந்து விந்தையொளிப் பாதம். (அ)

1809. வீடுபெற நின்ற விசுத்தமெய் யன்பருளத்
தூடுருவி நீடுசிவ யோகவொளிப் பாதம். (அ)

1810. பாதமொரு காலும் பரிச்சின்ன மன்றுவெறும்
போதவுரு வானபரி பூரணமென் பாதம். (அ)

1811. ஏதத்துக் கேதுவா மேதிலவை காணுர்தந்
பாதவொளி யுள்ளமுறப் பாய்ந்தவரென் பாதம். (அ)

1812. அகராதி மீக்கூர்ந் தலங்கோல மாகத்
தகரா தெனைமச்சீர்க் தங்குசவித்த பாதம். (அ)

1813. மருட்டலுறு மோக விரட்டையைப்பொய் யென்னுங்
கருத்தே கலக்கத்தின் காரணமென் பாதம். (அ)

1814. உள்ளக் கருப்பொருளை யுள்ளவா றோர்த்துணரின்
வெள்ளக் கலக்கமற விள்ளுமெனும் பாதம். (அ)

1815. நிட்டையிலே நெஞ்சியல்பா நின்றவர்தம்
[முன்றிலடைந்
தட்டமா சித்திவிளை யாடுமெனும் பாதம். (அ)

1816. சுவர்று மவற்றையரைக் கண்ணெடுக்கும் பாரார்
சிவத்தி லொடுங்கித் திளைப்பவரென் பாதம். (அ)

1817. மோனப் புணரிக்கீழ் மூழ்கினர் பேரின்ப
வானப் பரங்கிரிமேல் வைகுவரென் பாதம். (அ)

1818. பேரின்ப மோனவெளிப் பித்தா முத்தநளம்
சாரன்பை முற்றுமற்றக் கொள்ளைகொண்ட பாதம்.
(அ)

1819. மறதியா லுன்சொருப வாழ்வுகுலைந் தேங்கா
துறுதியா வுண்மையில்வே றென்றுதியென் பாதம்.
(அ)

1820. நங்கூர மாகநின் னெட்டமகம் பாய்ச்சியருட்
சங்கூதி யிவ்வுலகிற் சஞ்சரியென் பாதம். (அ)

1821. சொரூபநிலை யூடுசுகந் துய்த்தலன்றிப் புந்தி
வெருவுலக மீதுனக்கு வேட்கையென்னென் பாதம். (அ)

1822. தொழும்பரா வுள்ளீர் துடுக்கா மகந்தை
யழிம்புவிட் டுள்ளத் தடங்குதிரென் பாதம். (அ)

1823. செத்தா ரமரநிலை சேர்ந்தா ருடலகந்தை
வித்தார மாக்கள் விளிந்தாரென் பாதம். (அ)

1824. என்னுளத்தே மோன மியல்பாகத் தன்னடிக்கீழ்
மன்னுவதா வாண்டவருள் வண்மையொளிப் பாதம். (அ)

1825. அகமித மாகக் கவர்படும் பேத
வகைமதி யற்றுளீர் வாலறிவுப் பாதம். (அ)

1826. தன்வடிவு சாமா னியவறிவு சுட்டறிவு
தன்வடிவிற் பொன்னணிபோற் கற்பிதமென் பாதம். (அ)

1827. சித்த விகற்பத் தெருமரல்சேர் யோகசித்தி
பொய்த்தவியத் துன்றுசிவ போதவொளிப் பாதம். (அ)

1828. விகற்பத்திற் புத்தி விரவாது தன்மெய்
யுகப்பத் திளைப்பிக்கு முண்மையொளிப் பாதம். (அ)

1829. நிழல்வடிவே தானு நினைந்தவுயி ருண்மைக்
கழல்வடிவை விட்டுக் கலங்குமெனும் பாதம். (அ)

1830. அருளன்னை வாயிலா வன்றியில்லை யார்க்கும்
பொருளுண்மை யானசிவ போதமெனும் பாதம். (அ)

1831. மோனத்தி னின்று முளைக்கபுடி மும்மையுமம்
மோனத் தொடுங்கினெழும் மோதமெனும் பாதம். (அ)

1832. உள்ளத்தி லாழ வொடுங்கொடுங்கப் பேரின்ப
வெள்ளத்தி னீர்மைமேல் மேலெழுமென் பாதம். (அ)

1833. சித்தப் பரப்பைக் கடந்து சிவசொரூப
முத்திப் பதந்தொடுங்கல் மோனமெனும் பாதம். (அ)

1834. சிந்தை யலையாற் றெழிக்கப் படாதுளத்தே
நிந்தையற மூழ்கி நிலைத்திடெனும் பாதம். (அ)

1835. பரமனது நாமரு பங்களையுட் பற்றி
வரமிலா தின்னவற்றை மாற்றுதியென் பாதம். (அ)

1836. ஜீவனது திட்டியா லன்றியவை சிற்சொருப
தேவனுமை யுள்ளபடி சேர்ந்திலவென் பாதம். (அ)

1837. தானே தனக்குடைமை தானே தனக்குடையோ
னுலே சாந்தி யமைவதெனும் பாதம். (அ)

1838. உடைமையோ வன்றி யுடையானோ வேறு
வடையளவுஞ் சிந்தை யமைவரிதென் பாதம். (அ)

1839. வாலறிவாத் தன்னுள் வளர்சிவமே மிக்கவனு
கூலஞ்செய் ஞான குருவடிவென் பாதம். (அ)

1840. அளைந்ததன் னுள்ளக் கிடக்கைமற் றோரா
லளந்தறிய வொண்ணுமிக் காழமுடைப் பாதம். (அ)

1841. வினைப்பற்று நீங்கி விளங்குசிவ போதம்
முனைப்புறவென் னுள்ளத்து மூண்டவருட் பாதம்.
(அ)

1842. குணைப்பற்றி நிர்குணப சாந்தநிலை யான்மற்
றெனைப்பற்று நீங்கவியல் வீடதுவாம் பாதம். (அ)

1843. நினைப்புங் கடந்து நிறைசொருபத் தாலென்
மனைப்புன் குறையை மறுகதொளிர்மெய்ப் பாதம். (அ)

1844. சிவசத்தி யான்மெய் தெளியாத சித்த
வவசத்தை நம்ப லனர்த்தமெனும் பாதம். (அ)

1845. சுத்தசச் சித்தின் சுபாவ விலாசங்காண்
சித்தந்தேர் சேதன சேதனமென் பாதம். (அ)

1846. பற்பல சமயப் பனுவல் களுக்குமெய்ச்
சிற்பரச் செம்பொருளை மீதேற்றமெனும் பாதம். (அ)

1847. ஞான சொருபமா நண்ணுந்தம் மெய்யைமறந்
தேனைவடி வெண்ணுவோ ரேதிலரென் பாதம். (அ)

1848. சூக்குமசச் சிற்சொருபஞ் சோதனைசெய் வாரகத்துத்
தேக்கமனு தீதமாச் சேர்ந்தொளிர்மெய்ப் பாதம். (அ)

1849. அழுக்காறு தன்னை யடுத்தோ ரகத்தைப்
புழுக்காநின் றுள்ளமைதி போக்குமெனும் பாதம்.
(அ)

1850. வெளிக்குவெளி யாக விரிந்துநுட் பத்தா
லொளிக்கொளியா வென்றன் னுளத்தொளிர்மெய்ப்
[பாதம். (அ)

1851. உதாரகுண சீல வுறுதியாற் பொய்யென்
றுதாசீன மாவுலகை யோர்ந்தொதுக்கென் பாதம்.
(அ)

1852. தியாகமதி யாலே திருமிவிடி னுள்ளத்
தியோகமதி லேசி லியல்வருமென் பாதம். (அ)

1853. மருட்புலச் சேட்டையற மாய்தலே தெய்வ
வருட்பணிசெய் வோருக் கருகதையென் பாதம். (அ)

1854. இதுவதுவே யாக வியல்சொருப நிட்டை
புதுவதுபோ லென்னுளத்துட் பொங்குவித்த பாதம்.
(அ)

1855. அஞ்சலிரென் றன்பர்க் கபயநல்கிக் காலூன்றி
நெஞ்சிலொருங் கேநிமிர்ந்து நின்றொளிர்மெய்ப்
[பாதம். (அ)

1856. கற்பனையா லுள்ளங் கலங்காது சுத்தான்ம
தற்பரஞா னுனுபவ சாந்தியருள் பாதம். (அ)

1857. ஊறுபடு பாழ்ம்பொய் யுடலே சொரூபமா
மாறுபடு வாழ்வே மரணமெனும் பாதம். (அ)

1858. அகந்தையான் மோகித் தழியா தகத்தே
முகந்த சொரூப முழுமுதலாம் பாதம். (அ)

1859. மெய்ஞ்ஞான சீலவொளி மிக்கவருட் பாதமே
பொய்ஞ்ஞால வாழ்விருளைப் போக்குவதென் பாதம்.
(அ)

1860. அறிவிற் கடையே னகத்தே புகத்தான்
செறிவித் தொளிபெருக்கி யாண்டதிருப் பாதம் (அ)

1861. பேயோட்டி யந்தகப்புன் பேய்விளைத்த வெம்பிறவி
நோயோட்டு தன்கடைக்கண் ணேக்கஞ்சால் பாதம். (அ)

1862. அந்தர வானே ரதிசயிக்கத் தக்கசிவ
சுந்தர மான சுபோதவொளிப் பாதம். (அ)

1863. நன்றுசிவ ஞானவொளி நாற்றிசையும் வீசியுளந்
துன்றுசவி யொன்று சொரூபமணிப் பாதம். (அ)

1864. நானுறவு கொண்டுவப்ப நல்வினையா வென்னுளத்தே
யூனுறவு செற்றெளிர்பெய்ஞ் ஞானரவிப் பாதம். (அ)

1865. காணுதுங் கண்டாற்போற் கன்மப் பயனெஞ்சா
தூணுக வவ்வவ் வுயிர்க்கூட்டும் பாதம். (அ)

1866. தன்னைக் கரப்பதா வெண்ணு சமர்த்தருளத்
தன்னவர்தம் பேதைமைகண் டாடுநகைப் பாதம்.
(அ)

1867. வேண்டினும் வேண்டா விடினு முறற்பால
தீண்டா தொழியாவென் றீண்டவுரை பாதம். (அ)

1868. மவுனப் பதத்து மலர்ச்சியே யுண்மை
யவளமா வாழ்க்கைப்பே ரின்பமாம் பாதம். (அ)

1869. ததியர்தம் பாலே சதாரமிப்ப தான
வதீதமா மோன வரும்பதமாம் பாதம். (அ)

1870. விலாசஞ்சேர் காட்சி விசித்திரமெல் லாந்தன்
னுலாசசிற் சத்தி யுருநிழலாம் பாதம். (அ)

1871. இகம்பர மென்னு மிரண்டினி லொன்றே
யகம்படிவ தாப்பகுத் தாய்ந்துகொளென் பாதம். (அ)

1872. இரண்டு மொருங்கே யிதயத்து நில்லா
முரண்படுவ கூட்டுறவு மோகமெனும் பாதம். (அ)

1873. ஒன்றுடம் பென்றை பொலிப்பதா லன்னவற்று
ளொன்றுமற் றொன்றிலே கற்பிதமென் பாதம். (அ)

1874. தித்திக்கும் பாதச் செழுங்கனிவிட் டெட்டிக்காய்க்
கெத்திக்கும் பேதையர்போ யேங்குவரென் பாதம்.
(அ)

1875. அருள்வடி வாம்பே ரமுதக் கடலா
விருள்வளர் துன்ப மிலாவொளிப் பாதம். (அ)

1876. வஞ்சவெளி யாகவருள் வண்மையினிற் கவ்வியெனைக்
கொஞ்சுமொளி சான்றசிவக் கோலநகைப் பாதம்.
(அ)

1877. இரண்டற்ற வொற்றுமைப்பா டென்றுமியல் பாகத்
திரண்டுற்ற வாழ்க்கைநலந் தேற்றுமொளிப் பாதம்.
(அ)

1878. மயற்பிணிக்கு ஞான மருத்துவன்மற் றோர்க்கவ்
வியற்பிணியைத் தன்பா லிறுத்தவனென் பாதம். (அ)

1879. மற்றோர் பிணிக்கு மருத்துவஞ்செய் யப்புகுமுற்
செற்றுநின் னையறப்பின் சேர்திபெறும் பாதம்.
(அ)

1880. அரைகுறை யாம்புல் லறிவா லன்ர்த்தம்
பெருகுறுவர் மத்தசித்தப் பேதையரென் பாதம். (அ)

1881. தன்பிணியை நாடித் தவிர்க்கறியான் மற்றொருவர்
வன்பிணியை யெங்ஙனந்தான் மாற்றுவனென்
[பாதம். (அ)

1882. நண்ணக் கடவதுமெய்ஞ் ஞான சொரூபசித்தி
பண்ணற் குரித்துசிவ பத்தியெனும் பாதம். (அ)

1883. ஒருமைசேர் வாழ்க்கை யுணர்ச்சியா லுள்ளத்
திருமைசேர் சிந்தைமய லெற்றுமொளிப் பாதம். (அ)

1884. பாதமா மோனப் பரவெளிசே ருள்ளத்திற்
பேதமா லீண்டுமனப் பேயசத்தாம் பாதம். (அ)

1885. பாவகத்துக் கெட்டாப் பர மும்பர்க் கென்புன்சொற்
பாவகத்துஞ் சேரப் படிந்தவருட் பாதம். (அ)

1886. வெருள்வதாத் துள்ளுமட வீணசுந்தை பாழ்பட்
டிருள்வதா வாருயிரை மூடுமெனும் பாதம். (அ)

1887. அரசிருக்கை யாகமகிழ்ந் தாட்சிசெய்ய நம்மைப்
பரசிவைக்குத் தன்னருட் பார்வைதந்த பாதம். (அ)

1888. சுத்தமாம் போகமே சொச்சொருப முத்திசுகம்
பெத்தமாம் பீழைமுழுப் பேதைமையென் பாதம்.
(அ)

1889. பாவனு தீதசற் பாவமாந் தன்பதப்பே
ராவமேவார் மற்றென் றவாவலரென் பாதம். (அ)

1890. ஐயுணர்வின் புன்குறும்பா மாணவத்தைச்
[சாய்த்தலே
மெய்யுணர்வாந் தன்னரசின் வெற்றியெனும் பாதம்.
(அ)

1891. உடலுணர்வே யன்றி யுடற்சிரும் பந்தம்
உடலுருவிற் றன்றென் றுணர்ச்சிதந்த பாதம். (அ)

1892. அறிவின் மய்மா வறிவிலே தோன்றி
யுறைவனவே யூன வுடலுலகென் பாதம். (அ)

1893. அறிவொளியா லன்றி யசத்தாம் புலனு
வறிபடுவ வான வகிலமுமென் பாதம். (அ)

1894. பிண்டமின்றி யண்டம் பிழைத்தலாற் காண்குறு
தண்டமப் பிண்டத் தயபமன்றென் பாதம். (அ)

1895. காணப் படுமுலகு காணுமனக் திற்பிறிதா
மாணப் பெறுசத்தை மாயமெனும் பாதம். (அ)

1896. வான்பதத் துக்கு வழிகாட்டி யாவுளத்து
நானென் கருத்து நடாவியநற் பாதம். (அ)

1897. தாதைகளுக் கெல்லாமுன் மூதாதை யாமுளத்துப்
பாதைகளுக் கெல்லா முடிப்பதமாம் பாதம். (அ)

1898. அதீனமா யாவு மகத்தடங்க லாலே
யதீதமா வோங்கு மபரிமிதப் பாதம். (அ)

1899. இளங்கோயி லாமென் னிதயமே பேரா
வளங்கோயி லாக வதிந்தவநட் பாதம். (அ)

1900. கருதாரை வஞ்சித்துக் கண்ணுறுமெய் யன்பர்க்
கொருதாரை யாகவுளத் தூறமுதப் பாதம். (அ)

1901. அடைக்கலம்புக் காருக் கருந்துணையாத் தெம்மேற்
படைக்கலமாச் சென்று படைவெட்டும் பாதம். (அ)

1902. உள்ளத் துரனோ டுடல்வலியுஞ் சேர்பருவத்
துள்ளுசிவ யோகமே யூன்றுவதென் பாதம். (அ)

1903. எளியஜந் துக்க ளிடத்துமீப் பொங்கு
மளியமைந் தான்ற வருள்வடிவுப் பாதம். (அ)

1904. வெகுண்டுபிர மாத மிருத்தியுவைச் செற்ற
வகண்டவெளி யானவருட் சிற்பரமாம் பாதம். (அ)

1905. வேதாந்த ஞான விசாரமனத் தாமரையின்
போதாந்த மோனப் பொகுட்டிலுறை பாதம். (அ)

1906. சொரூபந் துலங்கல் சொரூபமே சித்தாத்
திரோதமறு சோந்தத் திகழ்ச்சியின்னென் பாதம். (அ)

1907. அறிவையறிந் தான்ற வனுபவமா மோன
வுறவையுவந் தன்பர்க் குதவுதயா பாதம். (அ)

1908. விஞ்சைக் கருணை விலாசமுறத் தன்னடியர்
நெஞ்சத் தியல்பா நிகழ்சொருபப் பாதம். (அ)

1909. அறிவொளி யானவே கான்ம சொருப
நிறைவொளி யான நிஜானுபவப் பாதம். (அ)

1910. யானிதுவென் றேரு மிரண்டறலே முற்றமுழு
ஞானவனு பூதி நலனென்னும் பாதம். (அ)

1911. உண்மையிலே புத்தி யுறைக்கினன்றி யானென்னுந்
திண்மைசேர் புன்செருக்குத் தேய்வரிதென் பாதம்.
(அ)

1912. சாந்தி ரசானுபவ சக்தி யருதுபொங்கக்
கேந்திரமா யூற்றுக் கிணறான பாதம். (அ)

1913. விழிப்பை விழுத்துயிலா விட்டலே மீதூர்ந்
தழிப்பதா மோக வனந்தலையென் பாதம். (அ)

1914. அன்புபடு நெஞ்சத் தருநட்பரமெய்ஞ் ஞானப்பே
ரின்பவடி வாக வியல்சொருபப் பாதம். (அ)

1915. இன்றியமை யாத வியற்கைசேர் செய்தொழிலே
யன்றிமற் றெல்லா மறலறிவென் பாதம். (அ)

1916. எங்குமிருக் கின்ற வியல்பினுமிக் கன்புமிக்க
சங்கமிருக் கின்ற சதாசிவமாம் பாதம். (அ)

1917. கேட்கக்கேட் கக்கேட்கக் கேள்விதெவிட் டாமலுளம்
வேட்கவிளை யாட்டா விளம்புமுரைப் பாதம். (அ)

1918. ஞானவெற்றி யல்லதுமற் றேனைவெற்றி புன்மையல்சே
ரூனவெற்றி யாமெய் யுணர்வளிக்க பாதம். (அ)

1919. விள்ளரும்பே ரின்ப விளையுள்சேர் நாட்டரசா
வுள்ளமே வென்றுகொளற் கொத்ததெனும் பாதம்.
(அ)

1920. ஏதமின் றுனபே ரின்பநிலை நல்குசிவ
போதமே தன்சொருபப் பொங்கருளாம் பாதம். (அ)

1921. மீதவொளி யெல்லாமே மிச்சையொளி யாவொழியப்
பாதவொளி யுண்மைப் பரவொளியாம் பாதம். (அ)

1922. அருள்பொதிந்த நோக்கா லடியரது நெஞ்சத்
திருள்பொதிந்த மோக விடர்கடியும் பாதம். (அ)

1923. திருக்கடைக்கண் ணேக்காற் சிவசொருப ஞான
வருட்கருவூ லத்தையன்பர்க் கள்ளியிறை பாதம். (அ)

1924. அதனை யறித லதுதானு நிற்றல்
அதனாலே சுட்டற் றமைந்தொளிரென் பாதம். (அ)

1925. தத்துவா தீதமாத் தான்விளங்கு கேவலசச்
சித்துவமா மிக்கசிவச் செம்பொருளாம் பாதம்.
(அ)

1926. அறிவே வடிவா வமைந்தவுயிர் மாயக்
குறிகுணங்கண் டேமை குலைவதெனும் பாதம். (அ)

1927. தாழ்வறுமெய் யன்பு தலைப்படக்காண் கிற்பதுயிர்
வாழ்வுசிவ மாக மலர்ந்துழியென் பாதம். (அ)

1928. மாயா விலாச வகைகளா மைம்புலமுஞ்
சாயா சமூகமாத் தாங்குகதிர்ப் பாதம். (அ)

1929. வைகு முயிர்ப்புன் மகிமங்கப் பொங்குகதிர்
செய்யு மனுதீதச் சிற்கனமாம் பாதம். (அ)

1930. உண்மைஞா னத்துக் கொழிந்தவற்றே டெள்ளவும்
உண்மையின் மாலுபா டுறுவநன்றென் பாதம். (அ)

1931. தன்னினைவா லன்றித் தனிப்பரத்து மெய்யுணர்ச்சி
மன்னுவது நானெனும்புன் மாலறிசென் பாதம். (அ)

1932. அறிவுநூ லாற்சே ரரும்பயன்மற் றுண்மை
யறியுமவாக் கொண்டவுயிர்க் கன்றியின்றென்
[பாதம். (அ)

1933. விந்தைசேர் மாயா விலாச விகற்பஞ்சே
ரந்தவிவ காரத் தபேதமரும் பாதம். (அ)

1934. கற்பனையிற் சிந்தை கடுகாமற் காத்தகந்தை
யுற்பவமா மூலத் தொடுக்குமுரப் பாதம். (அ)

1935. மருளின் மனங்கவன்று மாணமயா முள்ளத்
தருளின் கருவூல மானவொளிப் பாதம். (அ)

1936. போத சொரூபமாப் பொங்கு மகண்டவெளிப்
பாதமே யெம்முயிர்க்குப் பார்வையாம் பாதம். (அ)

1937. மனோவியா பார வசப்படுவா ருண்மை
மனோரதப் பூர்த்திமகிழ் வாய்ப்பரிதென் பாதம். (அ)

1938. அறிவைத் தெளிவா வமைதிபெறக் காணுமுசாத்
துறையில் வெறித்துமதி சோர்வெவனென் பாதம்.
(அ)

1939. துய்த்தகே துய்த்தநே துய்க்கும் புலநுகர்ச்சி
கைத்தொழிகிற் போர்க்கேமெய்க் காட்சியெனும்
[பாதம். (அ)

1940. மருள்வல் லபங்கெட மாய்ந்ததுதன் னன்பர்
அருள்வல் லபங்கா ணபரிமிதப் பாதம். (அ)

1941. ஏகமாந் தன்மெய் யியைந்தே யுபசாந்த
போகவாழ் வுள்ளமுறப் பொங்குவதென் பாதம். (அ)

1942. உள்ளங் கலந்த வுறவா லுபசாந்த
வெள்ளந் திளைப்ப விளைவிக்கும் பாதம். (அ)

1943. சாந்தி விளங்குமனத் தட்பமே சிந்தையறச்
சார்ந்திலங்கு மோன சமாதியெனும் பாதம். (அ)

1944. சொற்றல்வாக் காலே சொரூபஞ் சிறுதுரும்பைப்
பற்றிக் கடல்கடக்கும் பான்மையெனும் பாதம் (அ)

1945. அருள்விளக்கத் தாலே யடைந்தமெய்க் காட்சி
மருள்விகற்பச் சிந்தையற மாற்றுமெனும் பாதம். (அ)

1946. சுகவியல்பாத் துன்று சொரூபவிஞ் ஞானத்
தகவியல்பா மோன சமாதிநடைப் பாதம். (அ)

1947. புதுவதன்றி யென்றுமொரே பூரணமாய்த்
[தன்னின்மற்
றெதுவுமிலா வுண்மை யியல்வடிவாம் பாதம். (அ)

1948. ஒருபடித்தென் றேதவொணு துறுவிவகா ரத்திற்
பொருவிகற்பத் தன்மை புலப்படுத்தும் பாதம். (அ)

1949. மீக்குயர்வா ஞேர்க்கும் மிளிர்தன் னருட்கடைக்கண்
ஞேக்கமே மிக்கபே ராக்கமாம் பாதம். (அ)

1950. மோகம் முனிந்த முனிவனருட் பேறுபெற்ருர்
சோகமறு முத்திசுகந் தோய்வரெனும் பாதம். (அ)

1951. அல்லல்களுக் கெல்லா மடிப்படைநா னென்றுடலைப்
புல்லுமல வாதனைசேர் புத்தியெனும் பாதம். (அ)

1952. அனுபவவே தாந்த வறிவாலே யன்றித்
தனுகரண வாழ்க்கைமயல் சாய்தலின்றென் பாதம்.
(அ)

1953. உணர்வுதித்த மூலத் தொடுங்கலுறி னீண்டே
புணர்வதுசற் போதபரி பூரணமென் பாதம். (அ)

1954. சிற்பரமா வோங்கு சிவசொருப சந்நிதியிற்
றற்பரஞா னண்டம தரிசனமாம் பாதம். (அ)

1955. வாழ்வைக் குலைத்து மயக்கியமூ லாவரணத்
தாழ்வைத் தகர்த்தமர வாழ்வுதந்த பாதம். (அ)

1956. கருத்தற்ற வுள்ளக் களிதருமெய்ஞ் ஞானந்
திருத்தூற்ற செல்வச் சிவமணியாம் பாதம். (அ)

1957. தராசத்தி யாவகிலந் தாங்குவது தன்சிற்
பராசத்தி யாகப் பளிச்சிடுமெய்ப் பாதம். (அ)

1958. குற்றம் பொறுக்குங் குணப்பே ரருட்கடலாச்
சிற்றம் பலத்தியலுந் தெய்வநடப் பாதம். (அ)

1959. அவத்தமா மோக வகந்தையகன் றோர்க்கு
சுவத்தமா மோன சொரூபசுகப் பாதம். (அ)

1960. வேட்கைதீர் சாந்தி விளைவேதன் முத்திசுகப்
பூட்கையா வுள்ளம் புலப்படுத்தும் பாதம். (அ)

1961. நலமியல் சத்துவ ஞானுறு பூதிப்
புலமையில் வல்ல பொலந்தமிழ்ப் பாதம். (அ)

1962. வேடமேற் பூண்டுதன் மெய்ம்மை கரந்துவிளை
யாடு சிவப்பிழம்பா மானந்தப் பாதம். (அ)

1963. பரமோப சாந்தம் படர்சொருப ஞான
தருமோப தேசவொளி தங்குமணிப் பாதம். (அ)

1964. காலதே சங்க ளெலாவற் றிலுங்கலந்தே
காலதே சந்தீர் கடவுளொளிப் பாதம். (அ)

1965. தன்னிழலைக் கண்டே தடுமாறு கின்றதுயி
ரென்னவிப ரீத மெனவியக்கும் பாதம் (அ)

1966. அதனுக்குக் காரணந்தன் மன்மைசொரு பத்தை
இதமுறத்தே ருத வியல்பென்னும் பாதம். (அ)

1967. பற்பல் லுணர்ச்சி வகைகளுந்தன் சாந்தரசத்
தற்பமும் பின்னமல்ல வாய்ந்திடிலென் பாதம். (அ)

1968. நிகழ்ச்சியே யுள்ளதுமற் றங்க நிகழ்வை
யிகழ்ச்சிசெய் தேய்பவதற் கேதிலலென் பாதம். (அ)

1969. அறிவே பரமா வமைவதன்றி யல்லாப்
பொறிபுலமோ யாயப் புரட்டென்னும் பாதம். (அ)

1970. இறைவனையே யன்றிமற் றேதிலரை நம்பிற்
பொறையிழந்து சிந்தை புலம்புவரென் பாதம். (அ)

1971. சிவனார் திருத்தொண்டர் சீரார் புராண
மிவரிடையோர் வேற்றுமையின் றென்றுணர்த்தும்
[பாதம். (அ)

1972. உள்ளன் பிலாதா ருடையாற் கொருகோடி
வெள்ளம் பணிசெயினும் விபலமெனும் பாதம். (அ)

1973. பணியின் பயனப் பணியினனை யன்புத்
துணையெனவே மெய்யன்பின் மாட்சிசொலும் பாதம்.
(அ)

1974. இரண்டறுதன் னுண்மை யியல்புணர்ந்தா லன்றி
மருண்டுபடு மோகபயம் மாறலின்றென் பாதம். (அ)

1975. மானமரி யாதை மகிதலத்திற் பேணினுமஃ
தூனமுள தாகவுளத் தோர்த்தொழியென் பாதம்.
(அ)

1976. யாதே பெறினு மிழப்பினுநின் சித்தத்து
மீதே யமைதியையே மூன்றுதியென் பாதம். (அ)

1977. பரசிவத்து வாழ்க்கை படைத்தமனப் பான்மைக்
கரசிருக்கை மாட்சிதுரும் பாவகற்றும் பாதம். (அ)

1978. பாவனைக் கெட்டாப் பரமா வடியமுளம்
பூவனையாப் புக்குறையும் புங்கவொளிப் பாதம். (அ)

1979. கண்டறிந்தோர் வாய்ப்படமெய் கேட்டறித
[லன்றிக்கண்
கண்டறியுஞ் செந்நெறியாங் கண்டிலமென் பாதம்.
(அ)

1980. எனவே யறிஞரைநல் லீச சொரூப
நினைவா லுறுதிபட நேர்ந்தொழுகென் பாதம். (அ)

1981. சலவருக் கான தவற்று விகற்பக்
கலவரக் காட்சியறக் கண்டிக்கும் பாதம். (அ)

1982. உலைந்தோற் றத்துங் குநிலைவிடுத் தாற்போற்
கலகமனைத் தாற்கற்பிக் கப்படுமெய்ப் பாதம். (அ)

1983. இருளடைந்த வுள்ளத் தியல்ஜீவ போத
வெருளுடைந்து சாய வெகுண்டுதெறும் பாதம் (அ)

1984. கன்மபந் தங்கெடக் கர்த்தத் துவங்கெடுத்
துன்பனீ பாவ முதவுறுமெய்ப் பாதம். (அ)

1985. அருட்பரை யான வபின்னசிற் சத்தியின்
விருப்புறு மைக்கிய வீடருள் பாதம். (அ)

1986. சகத்தியல் பான சொருபமா நாட்ட
மகத்தியல் புத்தர்க் கனுபவப் பாதம். (அ)

1987. ஆரம்ப சாதகர்க் காக்கமீக் கூரவவர்
கூரன்பின் மிக்கவருள் கூர்தலுடைப் பாதம். (அ)

1988. அறிவுத் தெளிவா மமைதியின் சால்பே
செறிவுற்ற வின்பமுத்திச் சீர்மையெனும் பாதம். (அ)

1989. நின்னெஞ்ச மேமுதற்கண் ணின்வழித்தன்
[ருவொழிந்த
பின்னெஞ்சி னேர்பிணக்கைப் பேசலென்னென்
[பாதம். (அ)

1990. நின்மனத்து விக்கேப நீக்குதிநீ யாவுமொரே
சின்மயமாத் தேர்ஞான திட்டியினென் பாதம். (அ)

1991. இன்புற்ற வன்பரிடத் தேனேதா னெவ்வொருகால்
வன்புற்று லொப்ப மயக்குமியற் பாதம். (அ)

1992. வாழ்த்துமடி யார்மகிழ வாழிதிருப் பாதமென
வாழ்த்துமடி யார்க்குமகிழ் வாழ்வருளும் பாதம். (அ)

1993. தோன்றுநிற் கின்றவெலாந் தோற்றுவித்து
[மிக்கபெருஞ்
சான்றநிற் கின்றவதி சாதுரியப் பாதம். (அ)

1994. ஏகஞா னனுபவ ராசியந்தேர்ந் தார்மொழியை
மூகமா முட்டுபெரு மோனவலிப் பாதம். (அ)

1995. களிக்காட்சி யானமனக் கற்பனைதீர் சுத்த
வெளிக்காட்சி யானவருள் விஞ்சையொளிப் பாதம்.
(அ)

1996. அறிவறி யாமை யயல்விடயத் தன்றி
யறிவுருவாந் தன்மோட் டசங்கதமாம் பாதம். (அ)

1997. பாதவொளி யாற்பரவப் பெற்றமெய் யன்பருளம்
போத சுகவடிவாப் பொங்குமெனும் பாதம். (அ)

1998. அங்கலாய்ப் பாலுயிருக் காம்பயனென் சித்தத்து
வெங்கலா மோய்தல் விவேகமெனும் பாதம். (அ)

1999. தம்பரமல் லாதயே ரின்பவுப சாந்தமெய்
யன்பருண வன்னு ரகஞ்சுரக்கும் பாதம். (அ)

2000. யார்க்குந் தரிசனத்துக் கெத்தடையு மின்றியருள்
வாக்குதவ நானோர் வரங்கேட்கும் பாதம். (அ)

2001. தரிசனத்துக் குற்ற தடைவிலக்கித் தானே
கரிசனத்தோ டன்பரைக் காக்கவல்ல பாதம். (அ)

2002. கூர்தலருள் சற்றுமே குற்றமிலார்க் கேலருள்யாம்
சேர்தலெவ னென்றடியர் சிந்தனைகூர் பாதம். (அ)

2003. அல்லாப் பகற்றலோ டன்பர்பா லீண்டுமனப்
பொல்லாப்பும் போக்கிப் புரந்தருளும் பாதம். (அ)

2004. கலகமனப் பான்மை கடிந்துகலி நீக்கி
யுலகுயிருக் குண்மையொளி யோகைதரும் பாதம்.
(அ)

2005. வஞ்சமலி சஞ்சலப்புன் மாந்தர்கடு மாறவன்பர்
நெஞ்சமலி யுண்மை நிறைவொளியாம் பாதம். (அ)

2006. பிழைந்தலுயிர்த் தன்மை பிழைபொறுத்தன் புள்ளந்
தழைத்தலே மிக்கதெய்வத் தன்மையெனும் பாதம்.
(அ)

2007. எல்லோரு மின்புற் றிருக்க நினைக்குமன
நல்லோருக் கெல்லா நலமுஞ்செய் பாதம். (அ)

2008. திருவருட்குப் பாத்திரமாச் சிந்திப்போர் மற்றை
யொருவருக்குந் தீங்குமனத் துன்னலரென் பாதம்.
(அ)

2009. சஞ்சலமற் றேங்குமுப சாந்தசதா நிட்டையிலே
தஞ்சமடைந் தோரையுய்த்துக் கொஞ்சலுறும்.
[பாதம். (அ)

2010. குருத்துவ போதம் பொருத்துவ தான
பரத்துவஞ் சால்சொரூ பக்திருப் பாதம். (அ)

2011. இயற்கையழ காகவெங் கெங்குங் கலந்து
மயற்கைதீர் சிற்பரமா மன்னுமொளிப் பாதம். (அ)

2012. பாதவொளி பற்றப் படாவுலகப் பாழியற்கை
நீதமொன் றில்லாவுன் மாதமெனும் பாதம். (அ)

2013. வேரிற் பழுக்து வெடித்தபலாப் போலத்தன்
றூரிற் பழுத்தொழுகு சுத்தரசப் பாதம். (அ)

2014. எம்மணிக்கு மேற்பட் டிலங்கு மனோன்மணிப்பே
ரம்மணிக்கு வாய்த்த வசிட்டவசப் பாதம். (அ)

2015. பாதாள லிங்கவிருட் பாழிபரந் தாமமாத்
தூய்தாகத் தோய்ந்ததவத் தொல்புகழ்சேர் பாதம்.
(அ)

2016. தருமோப தேசவொளி தாக்குமக நோக்கப்
பரமோப சாந்தவெளிப் பார்வையருள் பாதம். (அ)

2017. சமரமதச் சண்டனடல் சாடித்தன் னன்பர்க்
கமரத் துவநல் கருளமுதப் பாதம். (அ)

2018. மதுரப்பா கானமணி வாசகத்தின் சாரம்
சதுரப்பா டாக வடித்தளித்த பாதம். (அ)

2019. ஞானக் கினிப்பிழம்பா நானென் பதன்பொருளா
வூனக்க மின்றி யொளிர்சொருப் பாதம். (அ)

2020. தம்மியல்கண் டான்ற சமாதிசுகந் துய்க்கின்றோர்
பொய்ம்மயல்கொண் டைம்புலப்பின் போகலரென்
[பாதம். (அ)

2021. மனத்தைப் பறிகொடுத்தோர் மற்றெவ் வளவு
கனதனத்தைப் பெற்றுமென்கொல் காண்பயனென்
[பாதம். (அ)

2022. ஏகமாந் தன்சொருப யோகமா யைத்திறத்தான்
மோகமுற மூவுலகும் மூடுமொளிப் பாதம். (அ)

2023. சரண்புக்கார் தேறவதி சாமா னியமாய்
முரண்பட்டார் தம்மைமதி மோகஞ்செய் பாதம். (அ)

2024. பாதமே நம்பினோ ரேதமுறு வானுசற்
போத சொருபமாப் பொங்குமுளப் பாதம். (அ)

2025. நலஞ்சாதிப் போர்வன் சலஞ்சாதிப் பாரேல்
நலஞ்சா தனையகத்து நாணநகும் பாதம். (அ)

2026. விழுத்தவக் குன்று விளங்குமெய்ஞ் ஞான
வழுத்தமிக் கான்றபே ரடிகளாம் பாதம். (அ)

2027. உற்பத்தி நாச முபாதியிலாத் தன்சொருபச்
சிற்பரத்துக் கென்றுமின்றச் சேர்ந்தொளிர்மெய்ப்
[பாதம். (அ)

2028. அன்புபா ராட்டியுல கின்பமுற லாயிருக்க
வன்புசா தித்துமனம் மாழ்கவென்னென் பாதம். (அ)

2029. இருள்வளர் கற்பனை யென்றுமில் போத
வருள்வெளி யான வகண்டமாம் பாதம். (அ)

2030. அறிவுறுபே தந்துன் றகிலநிகழ்ச் சிக்கும்
கிறியறுமெய்ஞ் ஞானவொளிக் கேவலமாம் பாதம்.
(அ)

2031. அனர்த்தப் பரம்பரைக் காணிவே ரான
மனப்பிரமா தந்தடியும் மௌனவொளிப் பாதம். (அ)

2032. கேவலசச் சித்தாக் கிளர்தன் சொருபசுக
வாழ்விலியல் பாகவளர் மாமவுனப் பாதம். (அ)

2033. கணக்கு வழக்கைக் கடந்த பதத்தோ
டிணக்கமுறக் கூட்டு மியலறிவாம் பாதம். (அ)

2034. மருளின் கலக்கமற மாய்க்குந் திறல்சே
ரருளென் பதுவா லறிவொளியென் பாதம். (அ)

2035. விரவுபற் பல்வகை வேட்கையி டேறப்
பரவுவார்க் காற்றப் பயன்செயும் பாதம். (அ)

2036. ஓங்குவ தாக வுபசாந்த வாழ்க்கையுளத்
தேங்குமெய் யன்பர்க் கினிதருள் பாதம். (அ)

2037. உணர்ச்சிசே ருண்மை யுறுதிகூ ரன்பின்
புணர்ச்சியா லன்றியுளம் பொங்கரிதென் பாதம். (அ)

2038 பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளர் மனங்கலங்கி மாழ்குவரென் பாதம். (அ)

2039. ஐம்புலக் காட்சிக் கதீதமா முண்மையுணர்
விம்பரகத் தெய்திடு ரும்பரெனும் பாதம். (அ)

2040. யோகமாக் கன்ம மியற்றவல் லோர்க்கலான்
மோகமாக் கன்மம் முடியுமெனும் பாதம். (அ)

2041. ஊதார மாயையொழிந் தொன்றலுயி ருண்மைநிலை
ஆதார தத்துவமுள் ளாய்ந்திடிலென் பாதம். (அ)

2042. தத்துவமோர்ந் துள்ளத்துத் தாமதுவா நிற்றலே
மெய்த்தவமா நல்லறிஞர் மேவுகவென் பாதம். (அ)

2043. மிக்கசிவ ஞான விபூதியா லன்பருறத்
தொக்கவுப சாந்தகுகப் புக்ககமாம் பாதம். (அ)

2044. அமைந்துதெளிந் தான்றவறி வாமுண்மை தேர்ந்து
சமைந்தவுப சாந்தநிலை தத்துவமென் பாதம். (அ)

2045. சுத்தவியன் ஞான சொரூபநிலை மன்னுயிர்க்குக்
கர்த்தவிய மான கடைப்பிடியென் பாதம். (அ)

2046. நாத்திகப்பொய்ம் மையலற நம்புறுமெய் யன்பருளத்
தாத்திகமெய் வாழ்க்கையொளி யானவருட் பாதம்.
(அ)

2047. தானேதா னென்றுணரச் சச்சித்தாந் தன்னொளிவிட்
டேனோதா னின்னே ரொளியுனக்கென் பாதம். (அ)

2048. அறிவறியா நின்றவ் வறிவா மகத்திற்
பிறிவறியா வின்பப் பெருக்கெடுக்கும் பாதம். (அ)

2049. வளங்குலவு மன்பர் மனத்துமயல் செற்று
விளங்குறுமெய்ஞ் ஞான விபூதிவெளிப் பாதம். (அ)

2050. சாதனையா ரென்செயினுந் தம்முருயா
[தென்றுளந்தேர்
சோதனையா லன்றிச் சுடர்வரிதாம் பாதம். (அ)

2051. நானெனும்புன் கார்கரப்ப நண்ணுமொளித்
[தற்பரமே
தானெனும்பூன் ருன்ம தரிசனமாம் பாதம். (அ)

2052. அறிவு கலங்கா தமுத்தமாக் காக்குங்
குறிவளர் தெய்வவருட் கோலவொளிப் பாதம். (அ)

2053. சுட்டுபுல மற்றுச் சுடர்கே வலறிவாய்
எட்டுருவி னுள்ளுமிய லேகவுருப் பாதம். (அ)

2054. ஆதிகுரு வான வநாதிசிவன் காண்மவுன
நீதிகுலை யாது நிகழ்ந்துமொளிப் பாதம். (அ)

2055. அகத்திருளை நீக்குபர மான்மவொளி யாலிச்
சகத்துயிர்கட் கெல்லாமோர் சற்குருவாம் பாதம். (அ)

2056. நடுவுநிலை யாவதுமெய்ஞ் ஞானசொரு பான்ம
திடவுணர்ச்சி யாலிதயஞ் சேர்ந்துறைவென் பாதம்.
(அ)

2057. பிறிவறியா மோனப் பெருமலையா வுட்கூர்த்
தறிவறியா நின்று ரறிவிலுறை பாதம். (அ)

2058. அறிவறிதன் மெய்யுணர்வி னன்னியமன் ருென்றே
அறிவினுமவ் வுண்மையய லன்மையினென் பாதம்.
(அ)

2059. மோக மறத்தெளிந்த மோனத்தி லன்றியுயிர்க்
கேகமயந் தன்னே டியல்வரிதாம் பாதம். (அ)

2060. தன்கணு லன்றித் தரிசிக் கொணுவருட்பே
ரங்கணு லெங்கு மகல்விசும்பாம் பாதம். (அ)

2061. அருள்வெளி யானபர மார்த்த சொருபத்
திருள்வளர் பரதமனத் தேதமெனும் பாதம். (அ)

2062. முனிக்கடவு ளாகி முகந்துமனத் தாரு
நினைக்கவொணு மோன நிகழ்சொருபப் பாதம். (அ)

2063. எச்சவைக்கு மிக்கவருட் சிற்சவையி லொன்றுபட்ட
வச்சிவையோ டாற்று மசலநடப் பாதம் (அ)

2064. மருண்ஞால வாழ்க்கையினின் றன்பரைவீ டேற்ற
வருணஞான நாடகமிக் காற்றுநிலைப் பாதம். (அ)

2065. பயன்மர முன்னூர்ப் பழுத்தாலே போல
நயன்மலிந்து பொங்குறுமெய்ஞ் ஞானவருட் பாதம்.
(அ)

2066. ஊருணி நீர்நிறைந்தா லொப்ப வுயிர்த்தொகைக்குக்
காருணிய வாழ்க்கைக் களியூட்டும் பாதம். (அ)

2067. ஏனிந்த மோகத் திரங்கலெனப் பேசும்பே
ரானந்த மாமெய் யறிவுருவாம் பாதம். (அ)

2068. நித்தியமல் லாதபுல நீழலா மிவ்வுலகு
சத்தியமென் கின்றதென்ன சாகசமென் பாதம். (அ)

2069. அழுக்கையழுக் காற்போ லசுத்தப்புன் மாயைதனை
விழுக்கதிர்நன் மாயையால் வெளுப்பிக்கும் பாதம்.
(அ)

2070. நியதியன்றி யாது நிகழ்வதன்று மாந்த
ரயர்தியுற்று மாழ்க லவலமெனும் பாதம். (அ)

2071. தொக்க வுபாதியொடு தோய்வுற்றே சிற்கனமா
மிக்க சொரூப விலாசமுடைப் பாதம். (அ)

2072. கடக்கமாட் டாத கடும்பகையைச் சாடி
யடக்கமுயிர்க் காக்க மளிக்குமெனும் பாதம். (அ)

2073. பவரோக மானமல வாதனைபா ழாகச்
சிவயோக ஞானமணஞ் சேர்கமலப் பாதம். (அ)

2074. எத்தகைய சாதனைக்கு மின்றியமை யாமையாற்
சித்தசுத்தி மிக்க சிறப்புடைத்தென் பாதம். (அ)

2075. சேட்டையறச் செத்துயிர்க்குந் தெள்ளியோ [ருள்ளமுறக்
காட்டைசே ருண்மைக் கடுவெளியாம் பாதம். (அ)

2076. துக்கக் கடலாந் துவிதமனக் கொந்தளிப்புத்
தொக்கவகங் கார நுடுக்கறக்கொல் பாதம். (அ)

2077. தன்னெருமெய் யேயுயிர்க்குத் தாரகமா கின்றதுமற்
றின்னெருமெய் யெங்குமென்று மில்லையெனும்
[பாதம். (அ)

2078. சலவோர் வெருக்கொளவே சற்குணச்சான் றோராம்
புலவோர் மகிழ்மெய்ப் புலவடிவாம் பாதம். (அ)

2079. வந்தரங்க மாகமரு மத்தலம்புக் கென்றுமன்போ
டந்தரங்க சேவைதரு மந்தரங்கப் பாதம். (அ)

2080. எண்ணமறச் சிந்தை யிதயத் துறைதலே
நண்ணரிய சுத்தசுக ஞானமெனும் பாதம். (அ)

2081. பழவா தனைகளைப் பற்றியே யுள்ளத்
தெழுவனவாஞ் சிந்தை யியல்புகளென் பாதம். (அ)

2082. எங்கெங்கு மெல்லா வவத்தையினும் யாதொன்று
தங்குவதோ வவ்வறிவே சத்தியமென் பாதம். (அ)

2083. உடலுணர்ச்சி யோய்ந்தபதத் துள்ளமுறப் பொங்கிக்
கடலினுமிக் குண்மைக் களிதுளும்பும் பாதம். (அ)

2084. வெங்காய வாதனையை விட்டினுளத் தென்றென்றும்
மங்காப்பே ரின்பமண மாட்சியருள் பாதம். (அ)

2085. பொங்காவல் கூர்சொருப போகவருட் போதமுறல்
வெங்காய மோக விருப்பறிலென் பாதம். (அ)

2086. அலந்தவருக் காகவடைந் தான்றகலை கண்ணு
நிவந்தவருட் காட்சிதரு நீள்சொருபப் பாதம். (அ)

2087. குருவருள்வாழ் வாகக் குலவுசுப ஞான
சொருபவனு பூதிச் சுடர்வெளியாம் பாதம். (அ)

2088. முப்பொருளு மொன்றா முடிந்தமுழு மோனவருட்
சிற்பரமா வோங்கு சிவசொருபப் பாதம். (அ)

2089. ஒத்ததன் றுகி யுயிர்நலத்துக் கூறுசெய்யும்
மெத்தப் படித்தவெறு மேதையெனும் பாதம். (அ)

2090 ஏலனஞ் செய்யா திழிந்தஜஞ் துக்களை
லாலனஞ் செய்துபரி பாலனஞ்செய் பாதம். (அ)

2091. ஈனருக் கேற்பதோ ரெண்பதத்தா லிந்நிலத்தே
தீன தயாளுவாச் சேர்ந்தவருட் பாதம். (அ)

2092. கற்றலொடு கேட்டல் கருதலொடு தேறலான்
முற்றுசிவ நிட்டையே மோனமெனும் பாதம். (அ)

2093. மனமற்ற தன்னியல்பான் மாபெருங்கூட் டத்தும்
இனமற்ற வேகாந்த வேகான்ம பாதம். (அ)

2094. மனத்தைப் பொருளா மதித்துப்போ ராடா
தினைத்தெனவுள் ளோர்த்திடலஃ தின்றுமென் பாதம்.
(அ)

2095. புவிசா ருயிர்க்குப் பொருந்துமனத் தாப
பவிசார நோக்கா லலதின்றென் பாதம். (அ)

2096. தன்சொருப மானபர சத்தியத்தை விட்டுமற்
றென்சருவ லேதி லவற்றிலெனும் பாதம். (அ)

2097. அறிவாய வுண்மையே யாகவகத் தூன்றிப்
பொறிவாயி லைந்தவித்த புண்ணியப்பொற் பாதம். (அ)

2098. அருபர மாகவிவ் வவனியை யுய்யக்
குருபர வேடமேற் கொண்டசெம் பாதம். (அ)

2099. பல்வகைப் பட்டமனோ பாவனைதீர் வாக்கியச்செஞ்
சொல்வகைப் பட்டசொரு பானுபவப் பாதம். (அ)

2100. பொன்மயமாத் துன்றும்பல் பூஷணம்போற் [றன்சொருபச்
சின்மயமா வெல்லாஞ் செழித்தொளிர்மெய்ப் பாதம்.
(அ)

2101. அடியின் முடியி லமர்வதாந் தானே
யிடையிலு முள்ளதா வியல்வதாம் பாதம். (அ)

2102. உடலுலகத் தோற்ற மொழிந்தவொளி யேயவ்
வுடலுலகத் தோற்றத்து முள்ளதாம் பாதம். (அ)

2103. பரமான தன்சொரூ பத்திலுயிர்க் கென்றும்
பிரமாத முற்றமுழுப் பேதைமையென் பாதம். (அ)

2104. உண்மையுணர் வாமெய் யுறுதியுளத் தில்லார்பொய்ம்
மண்மயலால் வாழ்விழந்து மட்குவரென் பாதம். (அ)

2105. உள்ளுநா ளுக வுதித்தொடுங்கிச் சீரழியா
துள்ளநா ளுகமெய்வாழ் வுற்றிடெனும் பாதம். (அ)

2106. உள்ளலோ கற்பனைமற் றுள்ளலறு தன்சொருப
வுள்ளமோ வாலறிவா முண்மையெனும் பாதம். (அ)

2107. மூன்றவத்தை பொய்யா முடிந்தவிடத் தோர்முதலா
வான்ற துரிய மதீதமெனும் பாதம். (அ)

2108. துரிய மதீதமாத் துன்றுதிட ஞானம்
மரியவியல் பேசுத்த மௌனமெனும் பாதம். (அ)

2109. நழுவாமெய்ஞ் ஞான நடைசான்ற மோனம்
வழுவாப்பே ரின்ப வடிவான பாதம். (அ)

2110. கடந்த பொருட்கொரு காரணங் கற்பித்
திடைந்து கருத்திட ரேற்பதென் பாதம் (அ)

2111. செயற்கைவாழ் வோங்கநிதஞ் சிங்கியடிக் கின்றோ
ரியற்கைவாழ் வுண்மைநிறை வெண்ணிலரேன்
[பாதம். (அ)

2112. சுத்தமனத் தூடு சுபாவ சொருபமா
வத்தமன மற்றொளிர்ஞா ஞன்மரவிப் பாதம். (அ)

2113. ஆருயிர்நா ஞரெனவுள் ளாழ்ந்திடநா ஞனென்றே
சீருயர்வா ருவொளிர்மெய்ச் சிவசொருபப் பாதம்.
(அ)

2114. சும்மா விருப்பதன்றிச் சொந்தசொரூ பத்தையகத்
தெம்மா தவத்தா லெய்துவதென் பாதம். (அ)

2115. பேதமது போன்றடையப் பேண்முயற்சி தானதுவாம்
போதமதி தூரமாப் போக்குமெனும் பாதம். (அ)

2116. விடாதபெரும் பேயாப் பிடித்தென் மனத்தைக்
கெடாத்தன் மயமாக் கெடுத்தவருட் பாதம். (அ)

2117. கேள்விகிளர் தன்சொருபக் கேவலமெய்க் காட்சியே
வேள்விகளின் மிக்கபெரு வேள்வியெனும் பாதம். (அ)

2118. உதாரமிக் கோங்கு முதாசீன சாது
சதாரமிக் கின்ற சதாசிவமாம் பாதம். (அ)

2119. தானெனக் காற்றியமெய்த் தண்ணருளுள்
[குந்தொறுமென்
னூனெக் குருக வுணர்ச்சிதந்த பாதம். (அ)

2120. நிக்கேப மாக நிஜசொருபம் பிரமாத
விக்கேபத் தாலனர்த்தம் மேவுமெனும் பாதம். (அ)

2121. குருவடிவின் மேவியருட் கோலவொளி பாய்ச்சித்
திருவடியின் மாட்சியகந் தேற்றியபொற் பாதம். (அ)

2122. சிற்பரமெய் வாழ்வுளத்துத் தப்பறவென் றுந்நினைத்தல்
சற்பனைதீ ருண்மைத் தவப்பயனெனல் பாதம். (அ)

2123. நிரந்தரமெய்ந் நேய நிகழ்ச்சிசேர் நெஞ்சத்
தரந்தைதீ ரின்ப வருட்கடலாம் பாதம். (அ)

2124. அன்பரகத் தென்றுப்பே ரின்பமே யன்றிமயற்
றுன்பமின் றாகச் சுடர்தெளிவாம் பாதம். (அ)

2125. எம்மாத் திரமுமனத் தேங்கலின்றும் யாவுமொரே
சின்மாத் திரமாத் தெரிந்திடுலென் பாதம். (அ)

2126. வந்தவுயர் நோக்க மறந்தயற்கண் மோகமுறல்
மந்தமதி யாளரூழ் மாயமெனும் பாதம். (அ)

2127. அகந்தையாம் போலி யறிவழிந்தா லன்றி
முகந்திடவொண் ணாத முழுமுதலாம் பாதம். (அ)

2128. தனதுசொரூ பானுபவஞ் சார்ந்ததேல் யானே
டெனதென்னும் புன்மயக்க மிற்றெனும் பாதம். (அ)

2129. அசரீரி யாவுணர்ஞா னன்மானு பூதி
சசரீரி யாஞ்சீவன் முத்தியெனும் பாதம். (அ)

2130. அறிவுசாத் தானேமெய் யாரா தனையவ்
வறிவே சிவசொருப மாகலினென் பாதம். (அ)

2131. அரங்கமா விங்குவந் தாடிச்செல் கின்றோர்
இரங்கலறி வில்லா வேழைமையென் பாதம். (அ)

2132. தன்சொருப மன்றிமற் றெஞ்சியவற் றெண்ணந்தன்
னெஞ்சகமின் றுன நிறைவொளியாம் பாதம். (அ)

2133. கற்பூர வாசங் கமழ்வதாய்க் கண்கவர்மெய்ப்
பொற்பூ ரவாச்சியமாம் போகவருட் பாதம். (அ)

2134. மோனத் தெளிவிலே மூழ்கி யதன்மயமா
நானற் றெழுவான ஞானமுத்திப் பாதம். (அ)

2135. உளத்துத்தா னொன்றி யுறைதலாற் சிந்தைக்
களத்துக்குச் சற்றுமவ காசமின்றும் பாதம். (அ)

2136. சித்தமே சத்தியாச் சித்தே சிவமாக
வொத்தமாண் பாலுளத்தோம் புண்மையறப் பாதம்.
(அ)

2137. சித்தையுல் லங்கனஞ்செய் சித்தந் தெருமரலான்
மித்தையுல கத்தில் வெருளுமெனும் பாதம். (அ)

2138. அகத்திற் பதியையடர்த் தைம்புலங்க ளான
சுகத்திற் படர்சித்தந் தூர்த்தையெனும் பாதம். (அ)

2139. படிந்து கிடத்தல் பரபத்தி யாகத்
தடிந்தென் மனத்தைத் தழைத்தவருட் பாதம். (அ)

2140. அபாயங்க ளெல்லா மறக்கடிந் தோட்டு
முபாயமாச் சான்றோ ருளங்கொளும் பாதம். (அ)

2141. அவனுக் கயலா வவளில்லை யாங்கே
யவளுக் கயலா வவனுமின்றும் பாதம். (அ

2142. அவனை யவளை யகலப் பிரித்தல்
தவறுடைத்தென் றெச்சரித்துத் தத்துவஞ்சொல்
[பாதம். (அ)

2143. சத்தி சொருபஞ் சிவமே யெனத்தெரிந்
துத்தம சற்கதி யுறுவதென் பாதம். (அ)

2144. தானதுவாச் சிந்தையறச் சார்தலன்றி மந்திரம்போல்
யானதுவென் றெண்ணி யிளைத்தலென்னேன் பாதம்.
(அ)

2145. கற்பனையா மூனைக் கருத்திலன்றித் தன்சொருபச்
சிற்பரத்திற் பேதமென்றுஞ் சேர்தலிலாப் பாதம்.
(அ)

2146. தவப்பய ஞான சகஜ நிலைக்கட்
சிவப்பழ மான செழுஞ்சுவைப் பாதம். (அ)

2147. இழக்கவோ வன்றிமற் றெய்தவோ வொண்ணு
தழுத்தமாத் துன்றுநிஜ வான்மவுருப் பாதம். (அ)

2148. சிந்தையை மாற்றுந் திறங்காண் பிரமாத
நிந்தையை மாற்றுமொரே நேர்வழியென் பாதம்.
(அ)

2149. என்புக ழேனு மியம்ப வெனக்கின்றித்
தன்புகழே தந்தவருட் சால்புமிக்க பாதம். (அ)

2150. தன்புகழ்யான் சாற்றத் தகுதியிலே னுகவுமென்
புன்மதியாற் றன்மகிமை போற்றுவித்த பாதம். (அ)

2151. உள்ளதாந் தன்னை யுதறி மறதியாற்
கள்ளமாஞ் சிந்தை கலங்குமெனும் பாதம். (அ)

2152. விஞ்சறுமெய்ஞ் ஞான வியன்சொருபந் தேறினு
ரஞ்சமற்றென் றின்று வழிவிக்கும் பாதம். (அ)

2153. சிவசிவவென் றன்புமயச் சிந்தனைசேர்ந் தாருக்
கவசியமற் றென்றுமின்று வாங்கொளிர்மெய்ப் பாதம்.
(அ)

2154. கடவுளறி வாமோனக் காட்சியறி வொன்றே
விடயவறி விற்காண்பல் வேற்றுமையென் பாதம்.(அ)

2155. அன்னிய சிந்தை யணுவுமிலா தென்னகத்துத்
துன்னியதன் சிற்சொருபஞ் சோபனமாம் பாதம்.
(அ)

2156. பரமார்த்த ஞானம் புருடார்த்த மான
தருமார்த்த காமுமுத்தித் தத்துவமென் பாதம். (அ)

2157. உயத்தக்க மாட்சியால் யோகசித்த ராலு
நயத்தக்க தானமெய்ஞ் ஞானசித்திப் பாதம். (அ)

2158. சிவத்தியல்பாச் சிந்தை செழித்தொளிர நெஞ்சிற்
றவத்தியல்பா யூன்றித் தரித்தவருட் பாதம். (அ)

2159. பேயோட்டு மான்ம விசாரவருட் பேரொளியாய்
நாயோட்டு மந்திரத்து நாயகமாம் பாதம். (அ)

2160. வரத்தொடுபோக் கென்ப மனத்தினிட மன்றி
யிருத்தலுணர் வாந்தன் னிடமிலையாம் பாதம். (அ)

2161. மெய்க்காட்சி மெய்யறிவு மெய்யாகை தன்னுருமெய்
யெய்க்கா ததுவா விருத்தலெனும் பாதம். (அ)

2162. தன்மயமாத் தங்கித் தடத்தமுருப் புன்மதியைப்
பன்மயமாங் கற்பனையின் பாடுழற்றும் பாதம். (அ)

2163. அந்தண ருண்மைஞா னனுபவஞ் சேருளமுஞ்
சிந்தைசேர் தண்ணருளுஞ் சேர்ந்தவரென் பாதம்.
(அ)

2164. வெற்றிசேர் தன்னரசு வீற்றிருக்கை யாகவுளம்
பற்றிநின் றுண்மையருட் பாலனஞ்செய் பாதம். (அ)

2165. ஏமருதன் சிற்சொருபம் யான்யா னெனவொளிர்ந்தே
பாமரர்தங் காட்சியிலோர் பாழ்புரையும் பாதம். (அ)

2166. ஒட்டலுக் குண்மையின்மற் றென்றுமிலாக்
[கேவலமாத்
தெட்டுசிவ சாம்ராச் சியசொருபப் பாதம். (அ)

2167. உண்மையாந் தன்சொருப முள்ளத் தனுபவங்கூர்
திண்மையா லன்பர் தினைப்பவருள் பாதம். (அ)

2168. மயக்கமாந் தூக்க மடுத்தலா லன்றித்
துயக்கு நணுக்கனுத் தோற்றமின்றென் பாதம். (அ)

2169. சும்மா விருக்கையே யம்மா விருக்கையென்
றெம்மா லனுபவிக்க லேய்ந்தசிவ பாதம். (அ)

2170. சிவத்திலே சத்தித் திளைப்பெனைச் சச்சித்
துவத்திலென் சித்தந் துளைப்பித்த பாதம். (அ)

2171. சிமயமா மோனத்திற் சின்மாத் திரமா
வமைவுடைத்தா முற்று மறிவித்த பாதம். (அ)

2172. நரத்துதிபா ராட்டி நலிதலென்ன பாவம்
பரத்துதிசெய் பான்மைகெட்டுப் பண்டிதரென்
[பாதம். (அ)

2173. பிறவிதரு மோகம் பிறிவுபட நானென்
றறிவுளறி வாகச் செறிவுதரும் பாதம். (அ)

2174. நலம்பலவு நண்ணுசிவ ஞானசுகம் பொங்கக்
குலம்பெறுமெய் யன்பரிணங் கூட்டியபொற் பாதம்.
(அ)

2175. பாலொடுதேன் போன்மதுரப் பான்மையா
[லென்னிதயச்
சால்பிலுறு மோன சதாசிவமாம் பாதம். (அ)

2176. அத்துவித மாமெய் யனுபவத்துக் கொன்றுகுறை
பத்துவித பத்தியுஞ்சோ பானமெனும் பாதம். (அ)

2177. வதுவைச் சடங்கே மணந்தருமெய் யின்பாக்
கதுவுமனப் பான்மையே கன்னிமையென் பாதம்.
(அ)

2178. பேதமனப் பான்மையறப் பேர்ந்தவுளத் தேயொளிசற்
போதமவு ணன்மசுகப் பூரணமாம் பாதம். (அ)

2179. பசுத்துவமாம் பாசபந்தம் பாழ்படவென் வாழ்வில்
விசுத்தவுணர் வாவிளங்கு மெய்ப்பரமாம் பாதம். (அ)

2180. காணில நட் செஞ்சுடராத் தான்கலந்தூங்
[கண்ணறைபோல்
வீணிலவ தூறுலகர் விள்ளவுறும் பாதம் (அ)

2181. கற்பனைமட் டாகவிவ காரங் கடவநன்றித்
தற்பரந்தா னேமுடிந்த தத்துவமாம் பாதம். (அ)

2182. உளறுபடி யாச்சுட் டுலகுணர்வு மங்கத்
தெளிவுபடத் தன்சொருபந் தேற்றுதெய்வப் பாதம்.
(அ)

2183. சுத்தராம் புத்தர் சுபாவமா நாளுநுகர்
முத்தி சொரூபமா மோனவொளிப் பாதம். (அ)

2184. வானவாத் தானும் மயலின் செயலெனவே
மானவா நீசும்மா மன்னுதியென் பாதம். (அ)

2185. மூளியலங் கார முகடியாம் பேயகந்தைக்
கூளியின்கோட் பட்டவுயிர் குலையுமெனும் பாதம். (அ)

2186. உலகமெல் லாந்தன் னொளியால் வியாபித்
திலகிதய மேதன் னிருக்கையாம் பாதம். (அ)

2187. அருவா மியல்பா வகிலங் களுமூ
டுருவியவற் றாங்கு மொளிர்தருமெய்ப் பாதம். (அ)

2188. பொருவிலாக் காட்சியாற் பொங்கமகி ழன்பர்
திருவுலாப் போது நடைத் தெய்வவொளிப் பாதம்.
(அ)

2189. குறைவுகாண் கிற்றல் குடிலமனக் குற்றம்
நிறைவொளியாத் தன்வடிவு நீடலினென் பாதம். (அ)

2190. அறிவே சொரூபவாழ் வாவதன்றி யூனக்
குறிகுணஞ்சேர் வாழ்க்கைமயற் கோலமெனும் பாதம்.
(அ)

2191. உண்மையை நாடி யுழைப்போர்க் குளத்தொளியா
வுண்மயல்செற் றுன்ம வுருவிளக்கும் பாதம். (அ)

2192. சுடரொளியா மோன சொரூபசற் போதப்
படர்வெளியா வென்னிதயம் பண்ணியபொற் பாதம்.
(அ)

2193. வானவெளி யாதியசர் வங்களுஞ்சிந் மாத்திரமா
மோனவெளி யாகு முழு முத்தியொளிப் பாதம். (அ)

2194. கருத்தமைதி யீதலே கர்த்தனரு ளன்றிப்
பொருத்துவதன் றெண்ணியதன் பூர்த்தியெனும்
[பாதம். (அ)

2195. உத்தமசற் போத வொளிப்பிழம்பே யோர்வடிவாம்
சித்தபர மேட்டியாச் சேர்ந்தவருட் பாதம். (அ)

2196. பாதமே பற்றிப் பரவிடுமெய் யன்பருக்கெல்
வேதமுமின் றாகவரு ளின்பவளப் பாதம் (அ)

2197. உழுவலன் புக்குவச முற்றுடையா ளாரத்
தழுவக் குழைந்தமார்த் தவ்வியமெய்ப் பாதம். (அ)

2198. பிரிவாற்ற கில்லாப் பிராட்டிதனக் கோர்பா
லுருவாக்கித் தன்மெய் யுபகரித்த பாதம். (அ)

2199. சத்தராந் தஞ்சொருபத் தத்துவங்கண் டோராருன்
மத்தரா மாயையான் மாய்வதெனும் பாதம். (அ)

2200. ஊனசம் பந்த வுணர்வா மகந்தைதீர்
ஞானசம் பந்தர் நயக்குமுருப் பாதம். (அ)

2201. துச்சங்கம் பொல்லாத் துரகந்தைப் பற்றதுதீர்
சச்சங்கந் தான்றானுந் தன்னிருப்பென் பாதம். (அ)

2202. திருவருட்பாங் கூடு தினைக்கை தனக்கென்
றொருகருத்து மற்றொழுகு முள்ளுணர்வென் பாதம்.
(அ)

2203. சிவத்திலே யன்பு தினைக்குமகிழ் போனத்
தவத்திலே யன்றித் தழைப்பரிதாம் பாதம். (அ)

2204. தன்சொருப மானபெருஞ் சால்பா நிறைவகன்று
புன்சிறுமை தன்புலத்திற் புக்கறியாப் பாதம். (அ)

2205. தொந்தபுத்திக் கேதுவாத் துன்றகந்தைச் சூதுகாண்
பந்தமுத்திக் கற்பனைக்குற் பத்தியெனும் பாதம். (அ)

2206. தாணுவாந் தன்சொருப தத்துவமே தம்முளத்திற்
பேணுவார் காணவொரு பேதமிலாப் பாதம். (அ)

2207. தள்ளையினு மிக்க தயாளுவாய்க் கள்ளமிலாப்
பிள்ளைகள்பான் மிக்க பிரேமையுள்ள பாதம். (அ)

2208. அன்பார்ந்த வந்தி யடியாட் கடியாளாய்ப்
பொன்போன்ற மேனிமேற் புண்சுமந்த பாதம். (அ)

2209. கல்வி யறிவொழுக் கங்களான் மிக்கவருட்
செல்வமலி புண்ணியர்தஞ் சேவைமகிழ் பாதம் (அ)

2210. எடுத்த பிறப்பினிதீ டேறவெனைத் தன்பாற்
படுத்தவருட் செல்வப் பரம்பொருளாம் பாதம். (அ)

2211. கடந்ததன் மெய்மையகங் காரமுள்ள காறும்
படர்ந்தகருத் தாலெங்ஙன் பார்ப்பதெனும் பாதம்.
(அ)

2212. இரண்டற்ற தாந்தன் னியல்பான வுண்மை
யிரண்டுற்ற சுட்டறிவோ டேய்வரிதாம் பாதம். (அ)

2213. மாலுறவு போலுமற்றை வாசிவழி தன்னருளால்
வாலறிவாந் தன்வடிவந் தேர்வார்க்கென் பாதம். (அ)

2214. தனதுதியா னுபவந் தங்குதடை யின்றி
மனதிலுறக் காண்டலருள் வாழ்க்கையெனும் பாதம்.
(அ)

2215. சிவத்திலே சித்தந் திளைக்குமெய்ஞ் ஞானத்
தவத்திலே யென்மனத்தைத் தங்குவித்த பாதம். (அ)

2216. அருட்குரு வாக வடைந்ததன் மெய்யன்
புருக்குவ தாவென் னுளத்தொளிர் பாதம். (அ)

2217. நெறியிற் பிறழா நியதி நிகழ்ச்சியிற்
சிறிதுங் குறுக்கிடாச் செம்மைசால் பாதம். (அ)

2218. மத்தமனக் கற்பனையா மாயையிருட் கூங்குபடர்
சுத்தவுணர் வானபரஞ் சோதியுருப் பாதம். (அ)

2219. விளங்குசிவ ஞான விபூதிமுன்மற் றெல்லாங்
களங்கமுள வாகக் கழிபவெனும் பாதம். (அ)

2220. அகமுத்தே தன்பா லபிமுகமா தற்கே
பகிர்முகத்து வாழ்விவிடர்ப் பாடுறலென் பாதம்.
(அ)

2221. அம்மா பரமுத்தி யான்ம சொரூபமாச்
சும்மா விருக்கிற் சுடர்வதாம் பாதம். (அ)

2222. விவிதமித்தி யாத்துவத்தின் மேவலுப சாந்தி
துவிதபுத்தி மோகந் தொலைந்திடிலென் பாதம். (அ)

2223. தியான வருள்விளக்கஞ் சேரா வுளங்காண்
பசாச துராசைகளின் பாழிவெனும் பாதம். (அ)

2224. சித்தி மயக்கந் தெளிந்தசிவ ஞானவருட்
புத்திமெய் யன்பருளம் பொங்குவிக்கும் பாதம். (அ)

2225. ஒழுக்கமுறைக் கேட்டா லுயிர்வெயர்ப்புற் றென்றும்
புழுக்கமுறும் பொங்கழலாம் புன்புலத்தென் பாதம். (அ)

2226. பரதேசி யாவோன் பரந்தாமந் தன்னிற்
பரதே வதையாப் பயில்வோனென் பாதம். (அ)

2227. அகந்தைமதி மோக மடர்க்கருட்கண் ணேக்கான்
முகந்தென்னை வாரியுண்ட மோகனப்பொற் பாதம். (அ)

2228. மோகனமாஞ் சொற்பொலிவான் வஞ்சநெஞ்சை [மூடுநவ
நாகரிகப் போக்குமிக நன்றுநன்றென் பாதம். (அ)

2229. உள்ளக்கள் ளத்தை யுடைநடையாற் போர்த்துமிகத்
தெள்ளியரே போல்வர்சில தீப்பரெனும் பாதம். (அ)

2230. புத்தியறி யாதே புலம்புளத்துத் தன்னுண்மை
யுத்தியான் மட்டி லுணர்வரிதாம் பாதம். (அ)

2231. போதனையின் மட்டும் புலங்கொள்ள லாவதன்று
சாதனைமுன் செய்தறியாச் சஞ்சலர்க்கென் பாதம். (அ)

2232. தானென்னுஞ் சிற்பரத்தின் சால்பாய வுண்மையே
யானென்னுஞ் சிந்தைக் கெழுவாயாம் பாதம். (அ)

2233. தற்புகழ்ச்சி தன்னையித சத்துருவாத் தான்மயக்கித்
தப்பருமைப் பாழ்படியத் தள்ளுமெனும் பாதம். (அ)

2234. தன்பெருமை போற்றித் தருக்கலின்மிக் கன்னியர்தம்
புன்சிறுமை தூற்றலிழி புன்மையெனும் பாதம். (அ)

2235. தஞ்சமெனப் பல்சமய சாதனையுந் தாம்பணிவ
தன்சொருப ஞான சமாதியிலென் பாதம். (அ)

2236. மருள்வஞ்ச மாம்பொய்ம் மனையாயை சாய
வருள்விஞ்சை காட்டுமெய்ஞ்ஞா னன்மரவிப் பாதம். (அ)

2237. யானு ரெனத்தன் னிதயத் துசாவிலருள்
வானு வெளிப்படக்காண் வாலறிவுப் பாதம். (அ)

2238. யாதொன்று தேற விடர்ப்படுவை யஃதையா
நீதொன்று தொட்டு நிகழ்தியெனும் பாதம். (அ)

2239. கண்ணாலே கண்ணைத்தான் காணவொண் ணாதற்காண
வொண்ணாதே தன்சுட் டுணர்வாலென் பாதம். (அ)

2240. சும்மா விருக்கை சொரூபஞா னானுபவம்
பொய்ம்மாயக் காட்சி புலப்படலென் பாதம். (அ)

2241. குஞ்ச முற்று வன்பரையோர் தாழ்வறமெய்ஞ்
[ஞானவருட்
குஞ்சாவூர் விக்குங் குருவரசுப் பாதம். (அ)

2242. கசங்குற்ற மோகக் கருத்தரா மாக்கட்
கசங்கற்ப சித்தி யடைவரிதென் பாதம். (அ)

2243. சிட்டிமுறை சாத்திரத்திற் செப்புவது
[சோர்ந்துதமைச்
சிட்டிதனைக் கண்டு திகைப்பார்க்கென் பாதம். (அ)

2244. திட்டியோர் பேதத் திறத்தாலே சாத்திரத்திற்
சிட்டிமுறை பல்விகற்பஞ் சேர்வதெனும் பாதம். (அ)

2245. ஞானியர்பல் லோர்க்குமெய்ஞ் ஞானஞ் சமமன்றி
ஏனையவெல் லாம்பல் வியல்பினவென் பாதம். (அ)

2246. யானுரென் னுள்ளமா ரென்னு முசாத்துணையால்
மோனானு பூதி முயங்கவருள் பாதம். (அ)

2247. இருட்கண் ணிடர்ப்பட லின்றாக வன்பர்க்
கருட்கண் ணளிதரு மற்புதப் பாதம். (அ)

2248. அறிவே நிறைபொருளா வல்லாத வெல்லாப்
பொறிபுலமும் பொய்ம்மனத்தின் புன்குறையென்
[பாதம். (அ)

2249. சொந்தவுரு வொப்பில் சுகமெனக்காண் காறுமுயிர்
கந்தமிரு கம்போற் கலங்குமெனும் பாதம். (அ)

2250. சுவதன்ம மாகத்தன் சொச்சொருப நிட்டை
அவதன்ம மாமற் றயலவையென் பாதம். (அ)

2251. பாசபந்த மான பசுத்துவமா மாயமறப்
பேசவந்த ஞானவருட் பேரொளியாம் பாதம். (அ)

2252. பல்விகற்ப மாங்கற் பனையகலத் தன்சொருபக்
கல்விகற்பித் தாண்டவருட் கைவல்யப் பாதம். (அ)

2253. என்னதென வன்றேநீ யீந்தவற்றோ டென்னதுநா
னென்னுமதிக் கின்னுமுனக் கென்னியைபென்
[பாதம். (அ)

2254. கெழுமலுறு மின்பக் கிளர்சொருப வேட்கையால்
வழுவலுறும் பொய்யுலக மையலெனும் பாதம். (அ)

2255. வாழ்க்கையில் வேட்கை வளர்ச்சிதன் மெய்ம்மறதிப்
பாழ்க்கையாம் பாசப் படர்ச்சியினென் பாதம். (அ)

2256. இன்பவடி வாகவென் றென்று மிருந்தொளிருந்
தன்பதத்தி லன்றிமகிழ் சாந்தியின்றென் பாதம். (அ)

2257. ஆணவமாத் துள்ளும்பொய் யாண்மையாற்
[காண்ட லரு
நாணயமாம் பூரணமெய்ஞ் ஞானநிதிப் பாதம். (அ)

2258. சித்துவத்தி னின்று திரியாதே சித்தப்போ
லத்தனையுஞ் செய்யுமதி யாச்சரியப் பாதம். (அ)

2259. அறிவறியுங் காறுமெய் யன்புறவாம் பக்தித்
திறவுணர்ச்சி யார்க்குந் தெரிவரிதாம் பாதம். (அ)

2260. அறிவமுத மானவான் மானுபவ மின்றே
மறிவமைதி காணு வகத்திலெனும் பாதம். (அ)

2261. ஊனு வொழிந்துமனஞ் சும்மா வுறைபினன்றிச்
சோனு சலன்பாதந் தோய்வரிதென் பாதம். (அ)

2262. தெள்ளத் தெளிந்த சிவானுபவத் தேற்றமுளத்
துள்ளலற் றுள்ள வுணர்ச்சியிலென் பாதம். (அ)

2263. அஜபையா மட்டு மகத்தே ஜபத்தை
நிஜபத்தி யோடு நிகழ்த்துதியென் பாதம். (அ)

2264. பிணமாஞ் சடவுடலைப் பேணுமகம் புத்தி
வணமா லுடலுலக வாழ்க்கையெனும் பாதம். (அ)

2265. ஓவியமா மிவ்வுலகக் காவியத்தின் கற்பனையைத்
தாவியமா தெய்வவொளித் தற்பரமாம் பாதம். (அ)

2266. அழிவறுமான் மாவை யழிவுறக்காண் கிற்ப
தழிவுடல்யா னென்னு மகந்தையெனும் பாதம். (அ)

2267. கனவுறக்கந் தானுங் கடவுளுணர் வாகும்
மனமிறக்கப் பெற்றதன் மாட்சியிலென் பாதம். (அ)

2268. கர்த்தவ் வியமோ கழிவதன்று தன்னுளத்திற்
கர்த்தத் துவமதியுள் காறுமெனும் பாதம். (அ)

2269. தஞ்சமடைந் தாநளத்திற் சஞ்சலந்தீர் வாழ்க்கையும
வஞ்ச மயல்விகற்பம் மாற்றுமொளிப் பாதம். (அ)

2270. சோற்றுவம வான சொரூபமா நின்றேவன்
கூற்றெனமெய் யன்பரையுட் கொண்டபசிப் பாதம்.
(அ)

2271. உண்ணா ரமுதப்பே றற்றேநீர் வேட்கையுற்ற
வண்ணமென் றைநயினை வாரியுண்ட பாதம். (அ)

2272. குறைவிலே சிந்தை குழுதவதா மோன
நிறைவிலறி வன்றி நினைதலின்றென் பாதம். (அ)

2273. ஓர்ப்பாரா யுள்ளத் தொளிர்வதாந் தம்முண்மை
பார்ப்பாரே கண்ணுறுமை-மெய்ப் பார்ப்பாரென் பாதம்.
(அ)

2274. பழவா தனைவெளிப் பாடே படைப்பா
வழிவா தனைபடைப்புக் கந்தமெனும் பாதம். (அ)

2275. அருளறிவா லுண்மை யனுபூதி யாகத்
தெருளுறவா மோன சிவாத்துவிதப் பாதம். (அ)

2276. தொழுதெழுகின் றாரைத் தொடர்ந்துதொடர்ந்
[தன்பால்
வழிவழிவந் தாண்டு வளஞ்சுரக்கும் பாதம். (அ)

2277. யான்முன் னிருக்கநுமக் கென்னகுறை
[யென்றுளத்துத்
தான்வந் தணைந்து சதாரமிக்கும் பாதம். (அ)

2278. கோலா கலஞ்செய் குருட்டகந்தைப் புல்லறிவைத்
தோலா மொழியாற் றணிக்குமொளிப் பாதம். (அ)

2279. போதவே தாந்தப் பொருளுரைபோற் பேயேனுன்
மாதப் பிதற்றும் மகிழ்ந்தவருட் பாதம். (அ)

2280. நானாரென் றுள்ளாழ்மெய்ஞ் ஞான விசாரத்தால்
மானுபி மான மயக்கறுமென பாதம். (அ)

2281. செழித்த சிவானுபவத் தேன்மயமா முற்றும்
பழுத்தபழ மான பராற்பரமாம் பாதம். (அ)

2282. நிராலம்ப மாக நிகழ்சிற் பரமே
யொராலம்ப மாக வுடைத்துலகென் பாதம். (அ)

2283. உள்ளவா றுண்மையையுள் ளோர்த்துணருங்
[காறுமே
கள்ளமா மிவ்வுலகக் காட்சியெனும் பாதம். (அ)

2284. மனத்தை வசீகரித்து வாழ்வளிப்ப தாகத்
தனைத்துருவு வார்க்குத் தரிசனமாம் பாதம். (அ)

2285. பிறப்பிறப் பென்னுமனப் பேதைமையை மாற்றிச்
சிறப்பியல்சேர் சிற்சொருபந் தேற்றுமொளிப் பாதம்.
(அ)

2286. அறியாமை போல்கினு மான் மானுபவ மஃதே
யறிவியல்பிற் றுக வனுபவஞ்செய் பாதம். (அ)

2287. சுட்டறிவின் மையலாற் றுனிபமே போல்வதுகாண்
மட்டறுமான் மானுபவ மாட்சியெனும் பாதம். (அ)

2288. சேட்டை யொடுங்கிச் செறிந்து தெளிந்தவுணர்
வோட்டைபோ காதமெய்க் காட்டையாம் பாதம். (அ)

2289. கலைகள் பலமலிந்தே கற்பனைதீர் சாந்தி
நிலையமா வோங்கு நிருவிகற்பப் பாதம். (அ)

2290. பொய்வருபுன் போகப் புலவுணர்ச்சி மோகமின்றும்
தெய்வ வுணர்ச்சிவளர் சிந்தையிலென் பாதம். (அ)

2291. விகற்பம் பலவா விளங்குலகத் தோற்றத்
துகப்பதுமெய்ஞ் ஞானி யுணர்வொளியென் பாதம்.
(அ)

2292. உறவிவ் வுலகோ டுதாசீன மன்றிப்
பிறவா ருருழுகிலுறு மபீழையெனும் பாதம். (அ)

2293. மோகத்தி னின்று முளைத்ததிரி பையமறப்
போகத் துலங்குசற் போதவொளிப் பாதம். (அ)

2294. தனைப் பருவத் தான்கடவ தன்சொருப ஞானம்
அனைப்புத்தி மோக மறக்கழிவென் பாதம். (அ)

2295. சித்திகளார் சித்திரிக்குஞ் சித்த மயக்கபாம்
புத்தியின்மிக் கோங்குபனு பூதியையென் பாதம். (அ)

2296. ஞானசித்தி யன்றிமற் றேனையபல் சித்திகளும்
மானச ரதின் கற்பனை மாத்திரமென் பாதம். (அ)

2297. தேகநா னென்னுமதி மோகத் திரிபுணர்ச்சி
போகலே தன்சொருப போதயெனும் பாதம். (அ)

2298. திகழ்ந்தபரி சுத்தத் தியாக மசுத்த
வகந்தைமதி முற்ற வகற்றலெனும் பாதம். (அ)

2239. உபாதியா லுற்றபா கோர்குறையுந் துங்க
சுபோத சொரூபத்துந் தோய்தலின்றும் பாதம். (அ)

2300. இருட்புணர்வாச் சுட்டியா விராதுந் நானென்
றுருப்பதாய்த் துன்ப முழப்பதென்னென் பாசம். (அ)

2301. பழவா தனைத்தொகையைப் பற்றறச்செற் றோர்க்கே
வழுவாத சாந்திபதம் வாய்ப்புறுமென் பாதம். (அ)

2302. மகிதலத்தி லெத்துணைதான் மாட்சிபடைத் தாலு
மகமுகத்தி லன்றி யமைதியின்றென் பாதம். (அ)

2303. அயலைவிட் டுத்தன் னறிவுருவைப் பற்று
மயலோருன் மந்தரா மாழ்குவரென் பாதம். (அ)

2304. அகமுக மென்ப தயல்விடயம் விட்டு
நிகழ்மனத்து வெர்றுணர்வின் னீர்மையெனும்
[பாதம். (அ)

2305. எம்மையினு மேமாப் புறுமகிழ்ச்சி யெய்துவர்தன்
செம்மைசே ரன்புவளர் சிந்தையரென் பாதம். (அ)

2306. அவலோ கனத்தா லடியரகத் தான்ற
சிவலோகக் காட்சி செழிப்பவருள் பாதம். (அ)

2307. பயில்கினுமோர் காலுலகிற் பைத்தியம்போன் ஞானி
யியல்வுறுந்தன் சிற்சொருபத் தெண்ணமெனும்
[பாதம். (அ)

2308. யானபிதா விட்டதுகேட் டேனென் றிரங்கிவந்து
ஞானபிதா வாக நயந்தாண்ட பாதம். (அ)

2309. ஊனச் சிறுபல் லுயிர்த்தொகைக்கே மிக்குறவாய்த்
தீனர்க் கிரங்குந் திருவருட்செம் பாதம். (அ)

2310. தெருமரல்சே ராணவப்புன் ஜீவபோ தக்கா
ரிருள்வருபொய்த் தோற்றமற வெற்றுசுடர்ப் பாதம்
(அ)

2311. மதிகடந்த தன்சொருப மாட்சியால் யாதோர்
விதிவிலக்கு மின்றி விளங்குசுடர்ப் பாதம். (அ)

2312. மதாசரணை முற்றும் மதிதொடர்மட் டாக
மதாசரணை தீர்ந்த சதாமவுனப் பாதம். (அ)

2313. மதிவிளைவாத் துன்றும் மதமனைத்துஞ் சாய
மதியைவிழுங் குற்றவருண் மாமவுனப் பாதம். (அ)

2314. அறிவுணர்ச்சி தானேமெய் யன்புணர்ச்சி யல்லாப்
பொறியுணர்ச்சி யவ்வன்பின் போலியெனும் பாதம்
(அ)

2315. அன்புக் குரியதுதன் னான்ம சொருபப்பே
ரின்பப் பொருளா மிறைபதமென் பாதம். (அ)

2316. இன்பியல்பிற் றங்க வியல்வதாற் றன்சொருபத்
தன்பியற்கை யாவமைந்த தாருயிர்க்கென் பாதம். (அ)

2317. கடினமன நெக்குக் கரைந்துருகி லன்றிப்
படனமுயிர்க் கென்னே பயன்செயுமென் பாதம். (அ)

2318. எல்லாஞ் சிவன்செயலென் றெண்ணுமனப் [பான்மையாற்
பொல்லாங் கியல்கலக்கம் பொன்றுமெனும் பாதம். (அ)

2319. உருகிக் கனிந்தவுளத் தூறவுப சாந்தி
மருவுசிவ போத மலர்ச்சிதரும் பாதம். (அ)

2320. சித்தசமா தானத் தெளிவிலே மெய்ப்பொருளா
வொத்தியந் தோறு மொளிர்சொருபப் பாதம். (அ)

2321. நீநெறி வாழ்ந்திந் நிலவுலகத் தாருயிர்க்கு
வீடுன்று மெய்ஞ்ஞான வேட்கையருள் பாதம். (அ)

2322. கேசாதி பாதமோ பாதாதி கேசமோ
நேசானு சாரமன்பர் நெஞ்சநினை பாதம். (அ)

2323. சுட்டுணர்வா மோகச் சுழற்சியற வென்றுயிரைச்
சுட்டொளிரா நின்ற சொருபநிலைப் பாதம். (அ)

2324. கிஞ்சிலுமின் றுகமனக் கேதமடி யார்திறத்துக்
கொஞ்சனுறு மோனக் குசலமொழிப் பாதம். (அ)

2325. அளவளா வுற்றமெய் யன்பரகம் வற்றுக்
குளவளா வொப்பமகிழ்க் கோள்கலமாம் பாதம். (அ)

2326. சிவோகமென மிக்கோர் தெரிந்தபொரு ளான்ற
சுவானுபவ மாகத் துலக்குமொளிப் பாதம். (அ)

2327. மொக்கவே மோனசுகம் மூதறிவா லோர்மொழியிற்
றொக்கவே தாந்த சுவையளிக்கும் பாதம். (அ)

2328. யானு ரெனத்தன் னியல்புருக்கண் டோய்வுறலே
வானு மொருமொழியின் மாண்பொருளென் பாதம். (அ)

2329. துன்மயல்சே ரிவ்வுலகத் தோற்றமனோ நாசத்திற்
சின்மாத் திரமாச் சிறக்குமெனும் பாதம். (அ)

2330. பத்திரமாந் தன்சொருபப் பார்வையா லிவ்வுலகோ
டொத்துறவோச் சில்லோ ரொழுகுவரென் பாதம்.
(அ)

2331. சொருபவறி வாமெய்ச் சுடரொளியான் முற்றத்
திரோதயமா யிவ்வுலகுஞ் சின்மயமாம் பாதம். (அ)

2332. சிச்சொருப மான சிவத்தைப் பழித்தல்காண்
முச்சுடர்முக் கண்ணு மொழிதலெனும் பாதம். (அ)

2333. வாலறிவா முண்மை மலர்விழியா மச்சிவத்தின்
பாலதன்று மற்றொருகண் பார்வையெனும் பாதம்.
(அ)

2334 கண்ணுக்குக் கண்ணொன்று வேண்டக் கடவதன்று
கண்ணாதா னுண்மையொளிக் கண்ணொளியென்
[பாதம். (அ)

2335. கருத்தழியி னன்றிக் கடவுளருள் வாழ்க்கைத்
திருத்தமுறு பாக்கியந்தான் சேர்வரிதென் பாதம்.
(அ)

2336. அமைதியிலே சுத்த வருள்விளக்க மாகச்
சமைவதா நின்று தரிசனமாம் பாதம். (அ)

2337. அகம்புறமு மொத்தாங் கமைந்தவியல் வாழ்வு
டிகம்பரமு மொன்று வியல்பவெனும் பாதம். (அ)

2338. உள்ளும் புறமு மொருமித்த வாழ்க்கையே
தெள்ளுசிவ ஞானவொளி மீதக்குமெனும் பாதம். (அ)

2339. பணிந்தமனத் தூடே பரசிவமெள் ளப்பாய்ந்
தணைந்துமனத் தாப மவிக்குமெனும் பாதம். (அ)

2340. மாணப் படைத்ததவ வாய்ப்புடையே னுகைநான்
காணக் கிடைத்தவருட் கல்யாணப் பாதம்.
(அ)

2341. காமிய புத்தி கழன்றநிட் காமசுப
நீர்மையக மின்ப நிலயமெனும் பாதம். (அ)

2342. ஆசாபா சப்பே யகந்தைநட வாழ்க்கையே
நீசாபா சப்பாழ் நிரயமெனும் பாதம். (அ)

2343. சாந்த வசீகர சத்திஜகத் தூடுருவிப்
பாய்ந்துசன் மங்கள தாயகமாம் பாதம். (அ)

2344. உளத்திலுப சாந்த வுணர்ச்சியெலோர் பாலுந்
தெளித்தமைதி யோங்கத் திகழ்த்துசிவ பாதம். (அ)

2345. எவ்வெக் கருத்தொடுமற் றெவ்வெச் செயலுமெனக்
கெவ்வெச்சொல் லூந்தன் னியைபுடைத்தாம் பாதம். (அ)

2346. கடவுட் சரணு கதிமாட்சி செய்யக்
கடவதுயிர்க் கின்ருக் கழித்தலெனும் பாதம். (அ)

2347. கழிவிலரு ளுடைக்கண் கட்டுவித்தை யாக
வொழிவருளி யென்னையடிக் குந்தரித்த பாதம். (அ)

2348. உருப்பெயரில் லாத்தாளிர்வெற் றுண்மையொளிக் [காந்தப்
பருப்பதமா நீடு பரப்பிரம்மப் பாதம். (அ)

2349. எடுத்தேற்றி யன்றியென் றென்றும்பல் பல்லோர்
தொடுத்தேற்றி யாப்பரவிச் சூழலுறை பாதம். (அ)

2350. விரவுவா ராய்ப்பல் விதவிதமா யன்பர்
பரவுவா ராகவருட் பார்வைகிளர் பாதம். (அ)

2351. ஊடிப் புலந்த வொழுக்க முஞ்சில் லோருளத்து
நீடித் தொடரு நிர்ச்சிசேர் பாதம். (அ)

2352. ஆனமெய் யன்ப ரனுட்டிக்கு வேண்டுமனே
மோனமே சாதனையின் மோலியெனும் பாதம். (அ)

2353. ஊனைக் கருத்தா லுறுங்கவலோய்ந் துள்ளூன்று
மோனத்தி லன்றிமகிழ் முற்றரிதென் பாதம். (அ)

2354. பாலையொத்த தன்னருளின் பானமுற மெய்யன்பர்
காலையொடு மாலையெக் காலமுஞ்சேர் பாதம். (அ)

2355. அருட்பெருஞ் சித்திரமெய் யஞ்பரகத் தன்றித்
தெருட்படலின் றுகமருட் சித்திரஞ்செய் பாதம். (அ)

2356. தங்கமணி யாப்புலவோர் தந்தலைக்கோண் டன்றன்று
சங்கமிருந் துண்மையுசாஞ் சந்நிதிசேர் பாதம். (அ)

2357. அருட்பெருஞ் சோதியையநன் காராதிக் கின்றோர்
மருட்புலங்கூர் காரிருளின் மாழ்கலறென் பாதம்.
(அ)

2358. பழிபாட்டு போகமதப் பற்றறுக்க லுற்றோர்
வழிபாட்டுக் கேற்றசுப யங்களமாம் பாதம். (அ)

2359. மடக்கிமாற் றுரை வளைத்துவாய் பேசா
தடக்குமதி யாற்றலா லாவதன்னென் பாதம். (அ)

2360. பழமையக் கற்டனையை மாற்றிடலான் மாயும்
விளைதமயல் வாழ்க்கையிற்சேர் வேட்கையெனும்
[பாதம். (அ)

2361. அறிவோனைத் தன்னை யமைருங்கா றுந்தா
னறிவோனுந் தன்மையின்மெய் யல்லனெனும் பாதம்.
(அ)

2362. தொடர்ப்பா டெதுவுமறத் தொக்க சொருபத்
திடர்ப்பா டெதுவுமில்பே ரின்பநிட்டைப் பாதம் (அ)

2363. மெய்ஞ்ஞான மாட்சியிற்பல் விஞ்ஞான மாட்சிகளு
மஞ்ஞான மாமெய் யறிவளித்த பாதம். (அ)

2364. தொன்றுதொட் டன்னியம்பாற் றேன்றியமெய்
[யென்றுமென்றே
டொன்றுபட்ட காடேய யுணர்ச்சிதந்த பாதம். (அ)

2365. தனைத்தழுவு ஞான சமாதியியல் பாநின்
றனைத்துவிவ காரமுநன் காற்றுநடப் பாதம். (அ)

2366. சுத்தசற் போத சொருப வுணர்ச்சியே
சித்தமல மற்ற சிவத்துவமென் பாதம். (அ)

2367. அறிவறிந்தா லன்றியின் றுவமைதி யந்த
வறிவுருவே யானசொரூ பானுபவப் பாதம். (அ)

2368. நானு றெனுஞ்சொருப ஞான விசாரமே
நூனமிலா மூலிகையெந் நோய்க்குமெனும் பாதம். (அ)

2369. ஆதி வியாநி யனைத்து விகற்பமுந்தான்
மோதி யடர்க்குமுசா மூலிகையென் பாதம். (அ)

2370. பேதமயற் பேயைப் பிறக்கிடக்காண் கிற்குமொரு
போதமயத் தன்சொருபம் பூரணமாம் பாதம். (அ)

2371. கருச்சுழியிற் பட்டுக் கலங்கியவென் மோகம்
திருச்சுழியிற் றேன்றித் தெளித்தவருட் பாதம் (அ)

2372. சுகத்துவடி வான சொருபசற் போத
முகத்துவசி யம்படைத்த மோனவியற் பாதம. (அ)

2373. அல்லகற்ப மான வகந்தைமதிக் கற்பனையாம்
பல்விகற்ப மானமயற் பார்வைகம பாதம். (அ)

2374. தானே சகலமுமாச் சாற்றல் சகலங்காண்
மானமயற் பார்வையயலு வாதமெனும் பாதம். (அ)

2375. ஆன்ம சொருப வறிவுக் கயல்போலத்
தான்மருவு சுட்டறிவு சர்ப்பனையென் பாதம். (அ)

2376. கற்பனையிற் பல் விகற்பக் காட்சிகளுங் கற்பித்துச்
சற்பனையற் றேங்குமொளித் தற்பரமாம் பாதம். (அ)

2377. நினைப்புமாப் பற்றவெறு நிம்மதியி லன்றி
முனைப்புறுகட் டோரவொண மோனவியற் பாதம்.
(அ)

2378. ஆண்டா னருட்செயலெவ் வாற்று லியக்குமவ்வா
றீண்டார்வ மோமயங்க லின்பமெனும் பாதம். (அ)

2379. உன்னியுணர் வாருக் குளத்கொளியாத் துன்றுபெருந்
தன்னிலையே யெந்நிலைக்குந் தாயகமாம் பாதம். (அ)

2380. திருப்புகலு ராகத் திகழ்வதா முள்ளத்
திருப்புணர்வா நின்றபே ரின்பவருட் பாதம். (அ)

2381. ஆவலித்து மாழ்கலகத் தாருயிர்தம் பேதைமையாங்
கேவலசச் சித்தாக் கிளர்சொருபப் பாதம். (அ)

2382. நிழலின்மாய் வுக்கு நிழலுருள்காண் மாந்த
ரழலுய பிறர்பிரிவுக் காவலித்தென் பாதம். (அ)

2383. தன்சொருப மாகத் தனக்கன்பு செய்யினன்றி
நெஞ்சிலியல் பாக நிலைப்பரிதாம் பாதம். (அ)

2384. மத்த மனப்புணர்ச்சி வந்ததயிர்க் கெங்ஙனமேன்
றெத்தருமத் தோரு மியம்பரிதென் பாதம். (அ)

2385. நடலைவாழ் வாசை நனைச்சலுறு மாக்கள்
சுடலைவாழ் விற்காண் சுழல்வதெனும் பாதம். (அ)

2386. எந்தவழி தானு மியல்வழியன் றுகத்தன்
சொந்தவழி யான சொரூபவழிப் பாதம். (அ)

2387. நாட்டைவிட்டுக் காட்டுவழி நாடலொழிந்
[துண்முகத்தே
நாட்டத்தை மாற்றி நடக்கைநன்றென் பாதம். (அ)

2388. தஞ்சொரூ பத்தையே சந்தேகிக் கின்றமருள்
வஞ்சர்தம் வாழ்க்கைமுழு மாயமெனும் பாதம்.
(அ)

2389. சரணமடைந் தாலன்றிச் சார்கதிமற் றில்லை
மரணமகன் றோங்கமர வாழ்வுறவென் பாதம். (அ)

2390. அருள்விளக்கம் பெற்றமெய் யன்பரகந் தன்றி
மருட்கலக்கந் தீர்ந்தமகிழ் வாய்ப்பரிதென் பாதம்.
(அ)

2391. மானவகங் காரமதி வல்லபம்போய் மாழ்கவொளிர்
மோனவியல் பானமுழு மூதறிவுப் பாதம். (அ)

2392. அருள்வல் லபத்தா லகந்தையறி வன்றி
யிருள்புல் லறிவா லியல்வதன்றென் பாதம். (அ)

2393. குருபத்தி பண்டிக் கொழுந்துவிடு நெஞ்சர்
சொருபத்தி லூறு சுவானுபவப் பாதம். (அ)

2394. அயலை யறியுமதி யான்ம சொரூப
வியல்பை யறிதற்க ணென்செயுமென் பாதம். (அ)

2395. நீயதுவென் றுன்றன் னிஜசொருபங் கூறுமறைத்
தாயதுமெய் யன்புனக்குத் தாரகமேன் பாதம். (அ)

2396. நிலைபெறுதாட் டஞ்சமுற்றார் நெஞ்சிலுற்ற பாரம்
தலைவிதிபோற் றன்றலைமேற் றாங்கலுறும் பாதம். (அ)

2397. நறுமணஞ்சேர் பாதமகிழ் நண்ணு ரிருப்பை
வெறிமணம்போ லைம்புலத்தை வேட்பரெனும் பாதம்.
(அ)

2398. சுவத்த சொருபசுகந் துய்த்தலுறு நெஞ்சர்க்
குவத்தலுற வைம்புலத்தா டொன்றுமின்றென்
[பாதம். (அ)

2399. என்மறுகல் சும்மா விருந்துமகி ழென்றுவந்து
புன்முறுவ லாலே புகலுமொளிப் பாதம். (அ)

2400. முற்றுணர் வென்பது மோகசம் பந்தமுடைத்
துற்றுணர் வொன்றுமின்று ளுண்மையிலென்
[பாதம். (அ)

2401. அம்மா வனைத்துமுமத் தற்றவகத் தோர்க்கன்றிச்
சும்மா விருக்கை சுலபமன்றென் பாதம். (அ)

2402. சுத்தவறி வாவுளத்திற் சும்மா விருந்துமகிழ்
புத்தருற வெய்திநேர் புண்ணியரென் பாதம். (அ)

2403. உருக்கமுறப் பெற்ற வுணர்ச்சியெட்ட வன்றித்
தருக்கமதி தட்டுமுப சாந்தவியற் பாதம். (அ)

2404. சொரூபவழ கானவருட் சோதியிலே தோய்ந்த
விரூபமதிக் கெவ்விடய வேட்கையுமில் பாதம். (அ)

2405. பத்தநிலை வுற்றமனப் பாழகந்தை யாற்காண்
முத்திமுனை வுற்ற முயற்சியெனும் பாதம். (அ)

2406. அமுதமய மான வருளமைதி வெள்ளத்
தமிழ்தரமெய் யன்பரைநன் காட்டலுறும் பாதம்.
(அ)

2407. புத்தரைக் கண்டு பொருந்துவதா வுள்ளமொளிர்
சுத்தவிஞ் ஞான சொருபவொளிப் பாதம். (அ)

2408. போலிகளை நம்பிப் புலம்புவரேன் மெய்யரது
போலுமா லூழின் புணர்ப்பெனும் பாதம். (அ)

2409. களத்துக்குச் சற்றுமவ காசமிலா வாறென்
னுளத்தைவெளி யாக வுடைத்தெறிந்த பாதம். (அ)

2410. வெளிமய மான விசுத்த சொரூபக்
களிமய மானசெங் கண்மணிப் பாதம். (அ)

2411. அறிதற் கரும்பே ரருட்பர மார்த்த
மறைசற் றெனக்குள் வெளிப்படுத்த பாதம். (அ)

2412. இரகசிய மென்ற லியல்சொரூப வுண்மை
ஒரகசிய மாமென் றுரையாடும் பாதம். (அ)

2413. அறிவறி யாமை யயல்விடயத் தன்றி
யறிவுருவாந் தன்மாட் டசங்கதமென் பாதம். (அ)

2414. அவபோக வாசையற மாற்றியகத் தன்பின்
சிவபோக சாரமாச் சேர்ந்தவருட் பாதம். (அ)

2415. பொய்யுணர்ச்சி யான பொறுப்புணர்ச்சி தன்சொரூப
மெய்யுணர்ச்சி வாழ்க்கையின் மேவலின்றென்
பாதம். (அ)

2416. அகந்தைப் பொறுப்புணர்ச்சி யற்றக்கா லான்ம
சுகந்ததும்பப் பொங்கு சுபோதவருட் பாதம். (அ)

2417. பாசப் பிறவிக்குப் பற்றுக்கோ டுனுடல
நீசப் புலையகந்தை நெஞ்சமெனும் பாதம். (அ)

2418. எனைத்துமெய் யின்புணர்ச்சி யின்றுகாண் மாய
மனத்து வழிப்படர்புன் மாக்களுக்கென் பாதம். (அ)

2419. மனப்பா லருந்தி மகிழ்வோ ரருணந்
தினிப்பா லருந்து மறிவிலரென் பாதம். (அ)

2420. சோதிக்க நின்ற சொருப மெவற்றிற்றும்பிக்
காதிக்கஞ் சேர்மெய் யருள்வெளியாம் பாதம். (அ)

2421. குருட்டகங் காரவலங் கோலமதி தீர்கை
யருட்கைங் கரிய வடைவெனும் பாதம். (அ)

2422. புருடார்த்த மாகப் புகல்கைங் கரியப்
பொருள்சாத் துவிகசற் போதமெனும் பாதம். (அ)

2423. அறிவிலே யூன்றி யமைதிபெறு வாழ்வே
பிறிவிலா மோனவருட் பேறெனுமெய்ப் பாதம். (அ)

2424. சசீதரமா தேவசிவ சௌந்தரியத் தாலே
வசீகரமா மோனவருள் வாழ்க்கையொளிப் பாதம்.
(அ)

2425. ஒழிவி லொடுக்க முறலே யுணர்வாற்
கழிவில் பரத்திற் கலத்தலெனும் பாதம். (அ)

2426. உண்மை யுணர்ந்த வுயிர்க்கு விடுதலையவ்
வுண்மையே கூட்டி யுதவுறுமென் பாதம். (அ)

2427. ஒழுக்கமுறு மன்பா லுருச்செபிக்கு முள்ளம்
மொழிக்குமொழி தித்திக்கு மூவெழுத்துப் பாதம்.
(அ)

2428. வெள்ளிடை நின்று விளங்குமலை போலவென்
னுள்ளிடை நின்ருங் கொளிர்சொருபப் பாதம். (அ)

2429. கருத்தண்ட மோனக் கருத்த ருயிர்ப்பே
திருத்தொண்டா மென்னிலவர் செய்வதென்னென்
[பாதம். (அ)

2430. இன்பமே யெண்ணிநா னேக்கமுரு தென்னுருவே
யின்பமா வென்னு ளிலக்கியபொற் பாதம். (அ)

2431. அறிவாகத் தன்னை யறத்தெளிந்தோன் புத்திக்
குறவாக வொன்றமற் றென்றுமிலாப் பாதம். (அ)

2432. கேவலசற் போதக் கிளர்ச்சியா மோனமே
மாவலஞ்சேர் மாதவத்து மாட்சியெனும் பாதம். (அ)

2433. உளறுபடி யாநா னுரைக்குமவை யெல்லாம்
தெளிவுபட நன்று திருத்தியருள் பாதம். (அ)

2434. தெய்வகதி யாகச்சிற் சில்லோர் சொருபமுணர்ந்
துய்வதுளம் பக்குவமிக் குற்றுழியென் பாதம். (அ)

2435. பொய்யிருள் போதலும் புந்திப் புலத்திலென்
மெய்யுரு வாக விளங்கொளிப் பாதம். (அ)

2436. சும்மா வொளிர்தன் சொருபத் தியானத்திற்
செம்மா ணலமணைத்துஞ் சேர்வதாம் பாதம். (அ)

2437. எவ்வொன் றியலா தெவர்க்குந் தளக்கொள்ள
வவ்வொன்றே யான்ம சொரூபமாம் பாதம். (அ)

2438. இதுவன் றிதுவன்றென் றெல்லாம்போய் மிஞ்சு
மதுவேநீ யென்றென் னறிவுதந்த பாதம். (அ)

2439. பார சமர்ப்பணந்தாம் பண்ணினர் பாரமெல்லாஞ்
சாரவே தன் றலைமேற் றுங்கலுறும் பாதம். (அ)

2440. பரபத்தி யாகப் பளிச்சிட் டொளிர்மெய்ப்
பிரபத்தி வாழ்வைப் பெரிதுவக்கும் பாதம். (அ)

2441. அட்டமூர்த் தத்தோ டமூர்த்தமாஞ் சிற்பரத்தே
நட்டமாஞ் சித்தமே நற்பேறும் பாதம். (அ)

2442. வாசனை மாண்ட மனோநாச மேசதா
பூசனை யாகப் பொருந்துசிவ பாதம். (அ)

2443. ஞானதிட்டி தன்னின்மெய்ஞ் ஞான சொரூபமன்றி
ஏனையொன்றுங் காண்டற் கிலாதவெளிப் பாதம்.
(அ)

2444. ஒன்றாய வுண்மை யுருவா முணர்ச்சியுளத்
தோன்றினு லன்றியுயிர்க் குய்தியின்றென் பாதம்.
(அ)

2445. பேதித்தா லன்றிப் பிழைசே ரகந்தைமதி
சாதிப் பரியபர தத்துவமாம் பாதம். (அ)

2446. அசித்தபுன் மூரலி னன்பர்க் கிதஞ்செய்
விசித்திர சத்தி விநோதஞ்சேர் பாதம். (அ)

2447. இருந்தொளிர்மெய்ஞ் ஞான வியல்பிற்றுந் தன்னிற்
பொருந்துமனம் புத்தி முதல் யாதுமிலாப் பாதம். (அ)

2448. சித்தத்திற் றுன்சேர்ந் திருந்துமே தன்னிலச்
சித்தத்தின் பேருமே சேர்தலிலாப் பாதம். (அ)

2449. ஆன்ம நிவேதன மாவது நானெனும்பொய்ம்
மான்மதி யற்றொளிர் வாழ்க்கையெனும் பாதம். (அ)

2450. ஏகஜீ வப்பெட் பிதயபரி பாகமுளோ
ருகமோ டொப்ப வுடன்படுத்தும் பாதம். (அ)

2451. நிஜானுபவங் கூர்சகஜ நிட்டருளங் கண்ட
வஜாதமாண் பாமெய் யருள்வெளியாம் பாதம். (அ)

2452. வரமான தன்மெய்ம் மறந்தயல் பேணும்
பிரமாதத் தாலுயிரைப் பீழிக்கும் பாதம். (அ)

2453. தக்க தவிர்கை தகாதன செய்கையோ
டொக்கமா மோகத் துறுபிழையென் பாதம். (அ)

2454. ஊனவெருள் சேர்ந்த வுபாதிநோக் கங்கெடமெய்ஞ்
ஞானவருள் வாழ்க்கையொளி நல்குசிவ பாதம். (அ)

2455. என்னுருவா வென்னுளத்தா டென்னியல்பா மன்புக்கு
மன்னுரிதா வைகுமின்ப வாழ்வொளியாம் பாதம்.
(அ)

2456. வாதம்பற் றுதவருண் மௌனவொளி யானவெறும்
போதம்பற் றுகவுளம் பொங்குதுங்கப் பாதம். (அ)

2457. அறிவாகச் சும்மா வமைந்தொழிதல் சாந்தச்
செறிவாய சாயுச் சியமென்னும் பாதம். (அ)

2458. பீதிக் கிடமாம்பொய்ப் பேதத் துவிதமகற்
ருதிக்க ஞானவப யாத்துவிதப் பாதம். (அ)

2459. தேறக் கடவதுதன் சின்மாத் திரசொருபம்
பாறக் கடவதுடற் பாசமெனும் பாதம். (அ)

2460. நேர்மையிலாப் பொய்வஞ்சர் நெஞ்சிலே நில்லாமெய்ந்
நீர்மைசால் சாந்த நிறைவொளியாம் பாதம். (அ)

2461. அறிவாய தன்னகத்தே யவ்வறிவு முற்றச்
செறிவாலே யன்றிமெய் தேர்வரிதாம் பாதம். (அ)

2462. ஆதியந்த மற்ற வகண்டவனந் தானந்த
நீதியான் மெய்யன்பர் நெஞ்சையள்ளும் பாதம். (அ)

2463. உலகவெற்றி யாவதுளத் துண்மையுணர் வாலவ்
வுலகதிட்டி யற்றெழிவென் றோதுமொளிப் பாதம்.
(அ)

2464. விருப்புவெறுப் பாதி விகாரசமு சார
'நெருப்பவியத் தண்ணென்றென் னெஞ்சிலுறை
[பாதம். (அ)

2465. ஞானவருட் கண்ணுலென் னஞ்சமுறு மாலகந்தை
யூனமற நோக்கி யுளத்திலுறை பாதம். (அ)

2466. பளிங்கொளியே போலப் பளிச்சிடூஉ முண்மை
விளங்கொளிகூ ரான்ம விசாரமளி பாதம். (அ)

2467. வாசனையே சங்கமா மெய்யா லதனொழிவே
தேர்சருவ சங்கத் தியாகமெனும் பாதம். (அ)

2468. அழுக்கதாம் வாசனைவே ரற்றொழிய வுண்மை
யொழுக்கமா வுன்சொருபத் தூன்றுதியென் பாதம்.
(அ)

2469. சிவத்திலே சித்தங் கரைந்து தெளிந்த
வவத்தையிலே யன்றி யறிபடாப் பாதம். (அ)

2470. பிரம சொரூபகம் பீரநோக் காலே
பிரமத்திற் கன்மம் பிறிதன்றும் பாதம். (அ)

2471. மதியருக்குண் டாகு மருட்கலக்கஞ் சற்றுங்
கதியருக்கின் றாகவுளந் தங்குமொளிப் பாதம். (அ)

2472. உள்ள தொரேயுணர்வவ் வுள்ளதன்கட் கற்பிதங்கா
ணுள்ளுபல வாஞ்சுட் டுணர்வுகளென் பாதம். (அ)

2473. புந்திமன மாதிப் பொறிக்கொளிதந் துள்ளொளிரும்
விந்தைசே ருண்மை விளக்கமாம் பாதம். (அ)

2474. தெய்வவருட் சிந்தனையே ஜீவியமாச் சேருளத்திற்
பொய்வருபுன் கற்பனையைப் போக்குமொளிப் பாதம்.
(அ)

2475. பொறிவாய்ப் புகாதுகற் புந்திசெய்வா நுள்ளத்
தறிவா விளங்குமெய் யன்பொளியாம் பாதம். (அ)

2476. அந்தியொடு சந்தியனு சந்திக்கு மெய்யடியர்
புந்திக்கு நல்லவருட் புத்தமுதாம் பாதம். (அ)

2477. சதாபூஜை யாகவுயிர் சாவாதே செத்தா
லநேபூதி யாகவகத் தாரமுதாம் பாதம். (அ)

2478. பிறப்போ டிறப்புவெறும் பேச்சளவாய்ப் பேரும்
மறப்பொழியப் பெற்ற மனத்திெனும் பாதம். (அ)

2479. கட்டொழிதற் கானகதி காணிற் கருத்துமுற்றச்
சுட்டொழியப் பெற்ற சுபோதமெனும் பாதம். (அ)

2480. புத்தத் துவமே யடியோங்கள் புத்திதெரி
சித்தத் துவமாச் செழித்தொளிர்மெய்ப் பாதம். (அ)

2481. சிவசிவ வென்று ஜெபிக்குமனம் பின்ன
ரவசமுறத் தானே யஜபையாம் பாதம். (அ)

2482. இடைவிடா தெண்ணு மிதயத்தோர் காணத்
தடைபடா தோங்கு சதோதயமாம் பாதம். (அ)

2483. உபயபாஞ் சேரா வுணர்வொளியான் மீதோங்
குபயபத மாமெய் யருள்வெளியாம் பாதம். (அ)

2484. அறிவுப் பயிற்சியா லாழ்ந்துமனந் தன்னுட்
செறியப் பெறிலே திரப்படுமென் பாதம். (அ)

2485. அறிவுதன் னுண்மையறிந் தற்றபதத் தல்லாற்
பிறிவில் பிரம்மபதப் பேறரிதாம் பாதம். (அ)

2486. சுத்தமாத் துன்று சொரூபவின் ஞானமே
முத்திதரு மோனவொளி முத்திரையாம் பாதம். (அ)

2487. மோகவுருத் துன்றுமுக மூடியான் முத்தசுக
போக சொரூபம் புதைந்ததெனும் பாதம். (அ)

2488. ஒழிவற்ற தன்சொரூப மோர்த்துணரக் கல்லாப்
பிழையுற்ற வவ்வுணர்வே பேதைமையென் பாதம்.
(அ)

2489. புகழ்ச்சிசேர் யோகப் பொலிவாவென் னெஞ்சிற்
றிகழ்சசிசே ருண்மைத் தெளிவான பாதம். (அ)

2490 நீசமனப் புன்மயல்சேர் நேசசங் கோசமே
பாசமலப் பாழிருள்சேர் பாதையெனும் பாதம். (அ)

2491. ஏனை விடர்ப்படுகின் றிரேன் றெமதுளத்து
ஞானே தயமா நடக்குமொளிப் பாதம். (அ)

2492. மோனசமா தான முகப்பவடி யாருளத்து
ஞானவரு ளாட்சி நடாத்தரசுப் பாதம். (அ)

2493. மெய்யுணர்வே முற்றுணர்வு மெய்யுணர்வின் [வேறுயிற்
பொய்யுணர்வா வஃது புரைபடுமென் பாதம். (அ)

2494. பேதமாந் தன்மையிற் பேதைமையா முற்றுணர்வு
போதமா முண்மையிரண் டின்மையிலென் பாதம். (அ)

2495. நேதிமார்க் கத்து நிகரில் சொரூபானு
பூதியாத் துன்றுபிர போதவொளிப் பாதம். (அ)

2496. செத்தமனத் தூடு திகழ்ச்சிதரு முண்மையொளிப்
புத்தமுதா வூறுசிவ போகவருட் பாதம். (அ)

2497. சாதனையே பேணியகன் சாத்தியத்தே சார்ந்துபிர
மாக மனதிமையல் வாதனையென் பாதம். (அ)

2498. உபதேச மாண்பா மொருமையுணர் வெய்தல்
சுபகேச மாமிதயந் தோய்ந்திடுமென் பாதம். (அ)

2499. சிற்சத்தி தன்னிற் செறிந்தொடுங்கி லன்றியுயிர்க்
கச்சத் தியற்கை யகல்வரிதென் பாதம். (அ)

2500. தத்துவ மென்பதே சத்துவஞ் சான்றமெய்த்
தத்துவ மாகத் தகவோதும் பாதம். (அ)

2501. எதுநினை வின்றி யிதயத்துச் சும்மா
வதேநிலையா முண்மை யறிவுருவப் பாதம். (அ)

2502. தத்துவத்தக் கூட்பைக்கே சஞ்சலமா மன்றித்தன்
சத்துவத்துக் கென்றுமொரு சஞ்சலமில் பாதம். (அ)

2503. பிணங்கு மநேகமதப் பேச்சுமுடிந் தொன்று
விணங்குமனு தீத வீதயவொளிப் பாதம். (அ)

2504. சுட்டறிவா மோகச் சுழற்சிசே ராணவச்சீர்
கெட்டழிவே தன்சொருப நிட்டையெனும் பாதம்.
(அ)

2505. சூதுவா தற்ற சொரூபஞா னனுபவத்
தேதுவா வுள்ளத் தியல்கருணைப் பாதம். (அ)

2506. மூலவினைப் பாசமற மோதியடர்க் கின்றவனு
கூலவருட் பார்வைகிளர் கோலவொளிப் பாதம். (அ)

2507. பிறியா வருள்வடிவைப் பெட்பறநிந் தித்த
தறியாமை யென்னவினி யானறிந்த பாதம். (அ)

2508. அறியாமை யாலழுங்க லன்றியுயிர் தான்செய்
நிறையருளுக் கென்றுங் குறைவிலையாம் பாதம். (அ)

2509. சன்னிதியிற் சும்மா சமைந்திருக்கு மன்பரகத்
தென்னதியா னென்னுமய லெற்றுமொளிப் பாதம்.
(அ)

2510. நீதமுற நிற்றலிற்றன் மீதகிலத் தோற்றமுமே
பாதமென வான்றோர் பரவொளிமெய்ப் பாதம். (அ)

2511. பேதபுத்தி பேரவுளத் தத்துவித ஞானவருட்
போதபத்தி பொங்கப் புகட்டுமொளிப் பாதம். (அ)

2512. அருள்வசப்பட் டாங்கே யகந்தைசேர் பொல்லா
மருள்வசப்பே யாட்டமற மாய்ந்துயிர்வாழ் பாதம்.
(அ)

2513. முகமன் னவாவா முழுவொருமைப் பாட்டா
லகமன்னு மான்ம சொரூபமாம் பாதம். (அ)

2514. உபசார மோதிலது வேற்றுமையுண் டாக்கி
யபசார மாங்கொலென யானஞ்சும் பாதம். (அ)

2515. கடவுட் பதந்தான் கருத்தொடுங்கித் தன்னுட்
டடவித் தலைப்படவே தக்கதாம் பாதம். (அ)

2516. பரமுத்தி யாக விகமத்தி தன்பா
லிரமித்த நெஞ்சத் திருந்தொளிர்மெய்ப் பாதம். (அ)

2517. கள்ளந் தவிர்சொருபக் காட்சியோர்க் கிவ்வுலகத்
துள்ளும் புறமுமவற் றூடுமொளிர் பாதம். (அ)

2518. திண்டுமுண் டாடித்திகைத் தொழியா
[துள்ளொளிநான்
கண்டுகொண் டாடவருட் காட்சிதந்த பாதம். (அ)

2519. அறிவொளியைப் பற்றி யமைந்தவுயிர் சுத்த
வெறுவெளியைப் பற்றி விளங்குமுத்திப் பாதம். (அ)

2520. தொக்க வுபாதி விசுத்தப் பரவெளியாய்
மிக்க வியாபகமா விஞ்சுமொளிப் பாதம். (அ)

2521. கிறிசே ரகந்தைமதிக் கீழா மனச்சுட்
டறிவாந் துவிதத் தகப்படாப் பாதம். (அ)

2522. கலங்குமனே புத்திக் கரணங்க ளோடைம்
புலங்களுமோர் சற்றும் புணர்தலிலாப் பாதம். (அ)

2523. தீவிரஞா ஞன்மத் தியான விசாரத்தா
லாவரமாம் பந்த மறுவிக்கும் பாதம். (அ)

2524. சிந்தனு மோகத் தெருமரல்காண் மன்னுயிர்க்கு
வந்தவா பாசபந்த வாழ்க்கையெனும் பாதம். (அ)

2525. கோசபா சத்தைக் குலேத்தெறிந்தா லன்றியுயிர்
நீசபா வப்பிறவி நீப்பரிதென் பாதம். (அ)

2526. ஒன்றெடுமற் றென்றை யுறப்பிணைத்தல் சூதுபடத்
துன்றுமனப் புன்பேய்த் தொழிலென்னும் பாதம்.
(அ)

2527. நின்றதன் னுண்மைநிலை நின்றபடி நெஞ்சிலுணர்ந்
தொன்றலே வாழ்க்கைக் குறுதியாம் பாதம். (அ)

2528. போதசொரு பாத்துவிதப் பொங்கொளியாற்
[கற்பனையாம்
பேதமதி பொன்றப் பிளந்தெறியும் பாதம். (அ)

2529. நீக்கமற நின்ற நிஜான்ம சொருபசுகந்
தேக்கமதி யூடு திளைக்குநடப் பாதம். (அ)

2530. கடையறவே நானுரென் சத்துமென் னென்றுட்
கடையவல்லார் காண்சொருபக் கண்மணியாம்
[பாதம். (அ)

2531. சருவத் தினுக்குமுபா தானந் தனது
சொருபத் தொளியாஞ்சை தன்னியமாம் பாதம். (அ)

2532. தன்மயமாக் கண்டு தரிக்காதோ ரிவ்வுலகப்
புன்மயல்சேர் மூப்புடிப்புக் காழ்வரெனும் பாதம்.
(அ)

2533. ஏலப் பொருந்துவதன் றேகமனப் புன்மயல்சேர்
ஞாலப் பசையொடுமெய்ஞ் ஞானமெனும் பாதம்.
(அ)

2534. வேணவா மிக்க விருப்புநெருப் பூருளத்தார்
பேணுவார் தாமே பெறும்பிரம்மப் பாதம். (அ)

2535. சுபோதமா வுள்ள சொருபத்தைத் காணுக்
கபோதியா ரென்று கடாவுமொளிப் பாதம். (அ)

2536. சுவிதரண ஞான சுபோதனையாற் றுன்றும்
புவிதரணஞ் செய்தவருட் புங்கவொளிப் பாதம். (அ)

2537. பின்னமாத் துன்றும்பல் பேதபுத்தி தன்னுறவா
லன்னமா லற்றொழிய லாக்குமொளிப் பாதம். (அ)

2538. பிறிவில்பே ரின்பம் பெறுதல் சொருப
வறிவிலே தன்னகந்தை யற்றுழியென் பாதம். (அ)

2539. சேதனு சேதன பேதங் கிளர்சொருப
போதநோக் கத்தே புரைபடுமென் பாதம். (அ)

2540. நிறைவுள சிற்சுக நித்தமுத்தி நெஞ்சம்
வெறுவெளி யாக விளங்கலாம் பாதம். (அ)

2541. கோமாளி யானமனக் கூட்டுறவாற் காண்டியுயி
ரேமாளி யாக விரங்குவதென் பாதம். (அ)

2542. ஊடறுக்கப் பட்டமுடிச் சாலுயிரு டுள்வெளியாப்
பாடுறுக்கப் பெற்ற பராற்பரமாம் பாதம். (அ)

2543. கண்கூடு தானன்றேற் கண்ணுந் தனக்கயல
கண்கூடாச் சற்றுங் கடவதன்றென் பாதம். (அ)

2544. கருவிகளே தானுக் கலங்குமதி தானே
மருவுகருத் தத்துவப்புன் மையயலெனும் பாதம். (அ)

2545. இறையன்பிற் கட்டுண் டியல்பந்த சிந்தை
நிறையின்ப முத்தி நிலையென்னும் பாதம். (அ)

2546. தேறத் தெளிந்து திடப்பட் டியல்சகஜத்
தூறப் பெறாஉமெய் யுபசாந்தப் பாதம். (அ)

2547. கரந்துறை வேடங் களைந்துயிர்தற் காணிற்
பரந்தொளிர் சுத்தப் பரவெளியாம் பாதம். (அ)

2548. சாந்தியெனச் சான்றோர் சதாபஜிக்கும் மங்களமாங்
காந்தையொடு கூடிக் களிக்குமொளிப் பாதம். (அ)

2549. ஊனிறந்து மற்றை யுயிரோ டுணர்விறந்து
யானறிந்த வுண்மையியல்பொளியாம் பாதம். (அ)

2550. நீடுசிவ யோக நிகழ்ச்சியிலே யூறியநெஞ்
சூடுலக மைய லுடற்றுமொளிப் பாதம். (அ)

2551. நிகழ்சொருபச் சைதன் னியக்களிமண் ணுலிவ்
வகிலமுங்கற் பித்தவதி யற்புதமாம் பாதம். (அ)

2552. தம்மைப் பலிகொடுத்தார் தம்முளமே சந்ததமுஞ்
செம்மைசே ராலயமாச் சேர்ந்தொளிர்மெய்ப் பாதம்.
(அ)

2553. நாயோட்டு மந்திரத்து நாயகமா யென்னகந்தைப்
பேயோட்ட மீட்டவருட் பேரொளியாம் பாதம். (அ)

2554. திருவருட்கட் டாரியாற் சிச்சடம்பே தித்து
வெருவரற்கொட் பானமன வேசறுத்த பாதம். (அ)

2555. சித்தசமா தானஞ் சிதைந்தொழியிற் செய்பணிமற்
றெத்தகைநன் றுயினுமஃ தென்பயனென் பாதம்.
(அ)

2556. தீயினிற்றூ சாங்காண் டிருவருட்செந் தீக்கொளுவுற்
றேயினு ருள்ளத் தெலாமொருங்கென் பாதம். (அ)

2557. இருந்தொளிருந் தன்மெய் யியல்வடிவை யுள்ளம்
பொருந்துவதா லன்றிப் புணர்வரிதாம் பாதம். (அ)

2558. சொருபசுக போகமிகத் துய்த்திடவென் னெஞ்சு
டுருவிநிற் கின்ற வுணர்வொளியாம் பாதம். (அ)

2559. தன்சொருபத் தன்றித் ததீயருயி ரெம்மையுமற்
றென்சுகமுந் தீர்ந்தபே ரின்பவொளிப் பாதம். (அ)

2560. உணர்வோ டியைந்த வுபசாந்த பத்திப்
புணர்வால் விளைந்தசிவ போகமாம் பாதம். (அ)

2561. தொன்றுதொட் டுள்ளபரி சுத்த சொருபசுக
வென்றிக் கிளர்ச்சிசால் விஞ்சையொளிப் பாதம்.
(அ)

2562. உள்ளத்து வாழ்க்கை யுடைந்துபடா துள்ளுறத்
தெள்ளத் தெளிந்த திடஞானப் பாதம். (அ)

2563. அறிவே சிவமா வறிந்தமைந்த நெஞ்சிற்
பிறியா வறிவாப் பிறங்குசுகப் பாதம். (அ)

2564. அவிச்சையிரு ளாம்பொய் யனந்தலிற்காண்
[பின்னக்
கவர்ச்சியுறு முப்புடியின் காட்சியெனும் பாதம். (அ)

2565. அறிவு நிலைப்பட் டமைந்த வகத்திற்
பிறவனைத்து மொன்றிப் பிரம்மமாம் பாதம். (அ)

2566. காண்பவ னுட்படக் காட்சிகள் யாவுமே
சேண்படு சுத்தசச் சிற்பரப் பாதம். (அ)

2567. அறிவுண்மை காணி னதற்கயலா மற்றென்
றறிதற் கிலாமெய் யருள்வெளியாம் பாதம். (அ)

2568. செப்படவே தன்சொருபச் சிற்பரந்தேர் காறுமே
முப்புடியே தத்திறத்து முற்றுணர்வென் பாதம். (அ)

2569. ஐயுணர்வாற் சேர்ந்த வனர்த்தப் பரம்பரைதன்
மெய்யுணர்வாற் பொன்ற "விளங்குசுகப் பாதம். (அ)

2570. அடலுறுமுத் தாப மகற்றுநிஜ முத்தி
விடலனைத்து மன்றியொன்றும் மேவலன்றென்
[பாதம். (அ)

2571. சிவத்திலே சித்தந் திளைத்தலன்றி வாழ்வை
யவத்திலே போக்க லனர்த்தமெனும் பாதம். (அ)

2572. விவத்தை பரமார்த்த மெய்யிலென்றி மற்றை
யெவற்றிலுமோர் சற்றுமின்று யான்றெளிந்த பாதம்.
(அ)

2573. மிஞ்சிடிற் கெஞ்சுவர் கெஞ்சிடின் மிஞ்சுவர்
வஞ்சவிவ காரமுழு மக்களெனும் பாதம். (அ)

2574. ஆடலும் பாடலு மன்னியர்பா லாக்கியுளங்
கூடலின்மட் டென்னைக் குறிக்கொண்ட பாதம் (அ)

2575. அஞ்சவோ வன்றி யவாவவோ தன்சொருபத்
தெஞ்சியுள தென்னென் றிதயமொளிர் பாதம். (அ)

2576. சிந்தை யடங்கிய சித்தத்தே தன்சொருப
வித்தைசே ரூண்மை விளங்குவதாம் பாதம். (அ)

2577. மோனவெளி கண்டு முயங்காதோன் முக்குணப்பட்
டீனவுல கத்தூ டிடர்ப்படுமென் பாதம். (அ)

2578. ஊழ்க்கையுறு புன்சடலத் துட்பட் டுயங்கலுறு
வாழ்க்கையென்ன வாழ்க்கையுயிர் பாழ்க்கையெனும்
[பாதம். (அ)

2579. குடிலமனந் தீர்ந்தான் குணந்தீர்ந்தான் மோகப்
படலமறப் பீறிவெளிப் பட்டானென் பாதம். (அ)

2580. ஊன்மயல்சேர் பந்தமதி யோய்தலே சிற்பரசுத்
தான்ம சுதந்தரவீட் டாட்சியெனும் பாதம். (அ)

2581. நெஞ்சமுத்தங் கொண்டசிவ நிட்டை நிரந்தரநெஞ்
சஞ்செழுத்தை யெண்ணலினுண் டாகுமெனும்
[பாதம். (அ)

2582. அகசியக்கூத் தாவகிலத் தைந்தொழிலுந் தோற்றி
ரகசியமாத் தானொளிர்சிற் றம்பலமாம் பாதம். (அ)

2583. ஒத்தவா றெல்லா மொரேதன் மயமான
சுத்த சுபோதவருட் சோதிமயப் பாதம். (அ)

2584. மடங்கவே யுள்ளத் துடங்குமன மாதி
யடங்குவோர் தம்மை யறவணைக்கும் பாதம். (அ)

2585. தன்சொருப மான தயாதரும மாட்சியினென்
னெஞ்சுருவப் பெற்று நிறைந்தவெளிப் பாதம். (அ)

2586. வஞ்சத்து மோக வறுமைநினை வற்றிடவென்
னெஞ்சத்தி லுண்மை நிறைவளித்த பாதம். (அ)

2587. காண்பான் சொருபவுண்மை கண்டுதெளிந்
[தொன்றளவும்
காண்பான் கருத்தமைதி காண்டலின்றென் பாதம்.
(அ)

2588. காண்பான் சொருபவுண்மைக் காட்சியாற்
[காரிருள்சேர்
வீண்பாச பந்தம் விடுபடுமென் பாதம். (அ)

2589. உள்ளுவோன் றன்சொருப வுண்மையுணர் வாலன்றித்
துள்ளுமனச் சுட்டுணர்வு துஞ்சலின்றென் பாதம்.
(அ)

2590. நாளையெனுஞ் சிந்தை நலியாமே யென்மனப்புண்
கோளையடுங் கொற்றவருட் கோமளப்பொற் பாதம்.
(அ)

2591. உலகைத் திருத்து முபாயமுளத் துண்மை
குலவத் தனைத்திருத்திக் கோடலெனும் பாதம். (அ)

2592. உலகையொளிர் விப்பதுளத் துன்னொளியென்
[றுண்மை
யிலகுபர மார்த்த மிலக்கியபொற் பாதம். (அ)

2593. அந்தர வானத் தசரீரி வாக்கெனவே
முந்துசிவ ஞான மொழிசிலம்பும் பாதம். (அ)

2594. அறிவுதூய் தாய வவிர்ச்சியே பாசம்
பிறிவுபடு சுத்தப் பிரம்மமாம் பாதம். (அ)

2595. பேதமனச் சுட்டறிவிற் பேர்ந்ததாற் சிற்சொருப
வேத மவேதமே போல்வதாம் பாதம். (அ)

2596. பேதமனக் காட்சி பிழைபட் டொழியவருட்
போத சொருபமாப் பொங்குமொளிப் பாதம். (அ)

2597. அதிவாத மான வழிவழக்குச் சாய
வதிவான் புகழ்கொண்ட மௌனநிலைப் பாதம். (அ)

2598. தன்சொருப மாகத் தழைத்தலிற்காண் மெய்யறிஞற்
கன்பியல்பா வீசற் கமையுமெனும் பாதம். (அ)

2599. நழுவலற நின்றதிட நம்பிக்கை யாற்சே
ருழுவலன்பு பாய்ந்தவுயிர்க் குய்தியாம் பாதம். (அ)

2600. உணர்ச்சி ததும்ப வுபா சிப்போர்க் குள்ளப்
புணர்ச்சிதரு கின்றசற் போதசுகப் பாதம். (அ)

2601. உள்ளத்துத் தன்னோ டுறவுகண்டு கொண்டதொண்ட
ருள்ளத்தைக் கொள்ளைகொண்ட கள்ளவொளிப்
[பாதம். (அ)

2602. உணர்ச்சியே யுண்மைப் புணர்ச்சியா வுள்ளத்
துணைச்சியான் கொண்டசொரு பான்மவொளிப்
[பாதம். (அ)

2603. அகந்தை யகன்றமெய் யன்பராந் தொண்டர்க்
குகந்து முகந்தருமோ ரொட்பவுருப் பாதம். (அ)

2604. எட்டரிதாச் சுட்டறிவுக் கென்னிதயத் தென்னுயிராய்
வெட்டவெளி யாக விளங்குசிவப் பாதம். (அ)

2605. எம்மா தவப்பயனென் றென்னுளத்துத்
[தன்னியையபாற்
சும்மா விருந்துமகிழ் துய்ப்பநின்ற பாதம். (அ)

2606. தன்சொருப ஞானத் தலைப்பாட்டாற் சுட்டறிவிற்
றுன்சருவ ஞானத் தொழிலகற்றும் பாதம். (அ)

2607. பற்றுக்கோ டான பராற்பரமாத் தம்மைத்தாம்
விற்றுக்கோட் டக்க விழுப்பொருளாம் பாதம். (அ)

2608. வெள்ளக் கடலா விளைந்திதயத் தன்பரறி
வள்ளிமகிழ் கொள்ளுபிரம் மானுபவப் பாதம். (அ)

2609. விடுதலை யுற்று விளங்குசிவ ஞானிக்
கிடுதல் சிவனுக் கிடுதலெனும் பாதம். (அ)

2610. விண்ணும் விசும்பும் விளக்கமுற நின்றிமையாக்
கண்ணனை சச்சிற் கனசொருபப் பாதம். (அ)

2611. துன்று முபாதியாத் தொக்க வகந்தைமதி
பொன்ற வொளிர்சொருப போதவெளிப் பாதம். (அ)

2612. சூனியமாப் பூரணமாத் துன்றுசிவ போகவெளி
மானியமா வென்னுள் வழங்கியபொற் பாதம். (அ)

2613. சிந்தை யனைத்துமறத் தீர்ந்த வகந்தையொடு
முந்தை யனர்த்தமற முற்றுசுகப் பாதம். (அ)

2614. என்னென்ன சாதனை யெவ்வெவர் செய்யினு
மன்னன்ன சாதனைக் கன்பினருள் பாதம். (அ)

2615. சுவச்சமா வூன்று சொருபநிட்டை தானே
சிவத்துவமாண் பாகவொளிர் சிற்சுகமாம் பாதம்.
(அ)

2616. உள்ளத் துணர்வோ டுறங்கலுறும் புத்தியிலே
கள்ளப் புலமாயக் கவ்வையின்றாம் பாதம். (அ)

2617. உயங்குறுகின் றுர்க்கவ் வுயங்குமனந் தானே
சுயங்கிருந்தா னர்த்தமாத் துன்றுவதென் பாதம். (அ)

2618. அறிவுண்மை கண்டா ரனைத்துண்மை கண்டா
ரறிவே யனைத்துமாக் கோர்றவினென் பாதம். (அ)

2619. கற்பனையாம் புத்தி கழன்றவகத் தான்றவதி
யற்புதஞா னன்மசொரு பானுபவப் பாதம். (அ)

2620. இரண்டுபடு புத்தி யிறந்தவுளத் திண்டத்
திரண்டொளிர்சற் போத சிவானுபவப் பாதம். (அ)

2621. காண்பவோ காணப் படுபவோ காட்சியோ
மாண்படுயம் முப்மையுஞ்சிந் மாத்திரமாம் பாதம்.
(அ)

2622. தன்சொருப ஞானமே சாவா மருந்தெனவே
வஞ்சமய லாம்பொய்ய் யரணமிலாப் பாதம். (அ)

2623. யாதே நிகழினு நானென்னையோ தன்னையோ
யாதுநிந் தித்தற் கிலாவொளிமெய்ப் பாதம். (அ)

2624. நெருப்பினின்று சூழ நிமிர்ந்தபுகை யாலந்
நெருப்புமறைந் தாற்போ னிகழுமொளிப் பாதம்.
(அ)

2625. அன்னியர்தங் காட்சிக் கவிச்சையன்றிச்
[செஞ்சுடராந்
தன்னியல்புக் கில்லாத் தடைமறதிப் பாதம். (அ)

2626. சாதனை யோக மெனக்காகத் தாளியற்றி
யூதியமெய்ஞ் ஞானமெனக் குற்றுதவும் பாதம். (அ)

2627. ஒருமைப்பாட் டாலிருவோ முள்ளுறவு யார்க்கு
மொருவுவிக்க வொண்ணு வுரங்கெழுமெய்ப் பாதம்.
(அ)

2628. ஒன்றென்றி னூடு முளும்புறமுந் தானுறைந்தே
யொன்றென்றுந் தன்னிடமவ் வேதுமிலாப் பாதம்.(அ)

2629. சிற்பரத்தைத் தேறார் திகைப்பர்தாந்
[தேறினும்பொய்க்
கற்பனையூ டாடுங் கருத்தரெனும் பாதம். (அ)

2630. அறிவோ வறிபடலோ வற்றபர மார்த்த
வறிவொளியா நின்றுவிளங் கற்புதமெய்ப் பாதம்.
(அ)

2631. பகாப்பதமா வெங்கும் பரந்தசிவந் தானே
புகாப்புகலா வென்னுளத்துப் புக்கொளிர்மெய்ப்
[பாதம். (அ)

2632. உன்னலே யுன்றி யுணர்தலுமங் கின்றகபா
மன்னலே யன்றியெனு மௌனநிலைப் பாதம். (அ)

2633. நின்றநிலை யான்மெய்ந் நிலையன்றி நெஞ்சினின்மற்
றென்றைநினைந் துள்கி யுழத்தலென்றென் பாதம்.
(அ)

2634. எல்லாஞ் சிவமா விருந்தொளிர்தன் சுத்தவெளிக்
கல்லாலென் வாழ்க்கை யவாவலின்றும் பாதம். (அ)

2635. அனைத்துத் தியானமுந்தன் றன்மநிட்டைக் கான
மனத்திட்ப மெய்துவிக்கும் வாயிலெனும் பாதம். (அ)

2636. ஒருவனு லன்றி யொருத்திக் குவகை
மருவலிலா வாறுகாண் மன்னுயிர்க்கென் பாதம். (அ)

2637. உயிர்மயற்கை யாம்பொய் யுடலகந்தை கெட்டா
லுயிரியற்கை மெய்யின் புருசிவமாம் பாதம். (அ)

2638. சுத்தான்ம ஞானபரி சுத்தவாழ் வுள்ளஞ்சேர்ந்
தொத்தமனப் பான்மையிலுண் டாமமைதிப் பாதம். (அ)

2639. யானிறந்தான் யாவனவன் ருனறிவா னத்துவித
யாநிறைந்த ஜீவபர வைக்கியமென் பாதம். (அ)

2640. சிந்தைதீர் சுத்தத் தெளிவிற் சிவோகமென
விந்தையா வோங்குபர விஞ்சையருட் பாதம். (அ)

2641. தனுகரண புத்தி தலைப்படலின் றுவோங்
கனுபவமெய்ஞ் ஞானவனந் தானந்தப் பாதம். (அ)

2642. பல்லாண்டு பாடிப் பரவுயிர்க்குத் தன்பதத்திற்
பல்லாண்டு வாழ்க்கை பணித்தருள்பொற் பாதம். (அ)

2643. ஆசா ரியன்பொன் னருளமயா யாருயிர்வெவ்
வேசாறற் கான விசிராந்திப் பாதம். (அ)

2644. தன்னையன்றி நானுமற் றென்னையன்றித் தானுமகந்
துன்னுவதின் ருகச் சுடர்சொருபப் பாதம். (அ)

2645. பாதமொன் றேயகில பாக்கியமு மாகவெனக்
கேதமின்மை நான்கண் மறுமாக்கும் பாதம். (அ)

2646. சந்தந் தமிழ்தான் பிழைக்கினுந் தன்சொருபச்
சந்தம் பிழைக்கிலாச் சால்புசால் பாதம். (அ)

2647. நியதிகள் யாவுந்தன் னீர்மைசேர் சாந்த
நியதிக் கடங்கி நிகழநின்ற பாதம். (அ)

2648. வல்லபமற் றெல்லா மழுங்குபவாத் தன்சொருப
வல்லபமா மௌனத்து வைகுநிலைப் பாதம். (அ)

2649. அகந்தைதன் மூலத் தழிவுறலே ஜீவன்
முகந்ததன் சாதனை முற்றுவதாம் பாதம். (அ)

2650. உரியவா நீயவற்றை யோம்பியுளத் துய்யப்
பெரியோர் குறிகளைநூல் பேசுவதென் பாதம். (அ)

2651. அறிவறிந்தா ருண்மை யறிந்தாரா மன்றிப்
பிறவறிந்தா ரென்னறிந்தும் பேதையரென் பாதம் (அ)

2652. களிபயன் ணிலுங்கீழ்க் கடையாகுஞ் சடர்க்குந்
தெளிமெய் யுணர்வுளத்துந் தோற்றுமொளிப் பாதம். (அ)

2653. கவிதைகளிற் கண் டடெருங் கற்டனையும் பற்றாத்
துவிதமயக் கின்றாத் தொலைக்குமொளிப் பாதம். (அ)

2654. இத்துவிதந் தோற்றலுறு மின்றும்பொய் யாகநித்த
வத்துவித மானபர மார்த்தவெளிப் பாதம். (அ)

2655. இருமொழி யில்லை யிதயத்துச் சும்மா
விருவென் றியம்பு மொருமொழிப் பாதம். (அ)

2656. உடையா னுடையா னொருங்கிய கந்தன்
தடையறு சச்சிதா னந்தமாம் பாதம். (அ)

2657. சத்தியை யன்றிச் சிவமோ சிவத்தையன்றிச்
சத்தியோ வின்றாத் தழைத்தொளிர் பாதம். (அ)

2658. நட்டமா டுற்றவா னந்தப் பிரானடிக்
கிட்டா முள்ளம்பே ரின்பமாம் பாதம். (அ)

2659. யானென்னும் புத்தியோ ரிம்மியுண் டென்கிலும்
தானென்னும் போதந் தடைப்படூஉம் பாதம். (அ)

2660. உயிருக் குறுதி யயல்சுட் டுணர்வை
மயர்வறத் தன்பான் மடுத்தலென் பாதம். (அ)

2661. துஞ்சலின் றான சொரூபத் தொடுகூட்டி
நெஞ்சுக் குறுதி நிகழ்த்துறூஉம் பாதம். (அ)

2662. சிவசமய ஞானத் தெளிவாகத் தன்பா
லவசமுறு பத்த ரகத்தொளிர்மெய்ப் பாதம். (அ)

2663. பலபிரகா ரங்களாப் பார்க்கப் படூஉமிவ்
வுலகு சொரூபத் தொளிமயமாம் பாதம். (அ)

2664. அத்தியா சத்தா லறிவிலே தோற்றுமதி
சித்திரமாங் காட்சி சிவத்திலின்றும் பாதம். (அ)

2665. சுத்த வறிவே தொழத்தகு தெய்வமாச்
சித்தமுற நின்ற சிவசொருபப் பாதம். (அ)

2666. சிவசொருப மெண்ணுச் சிதடர்க்கே கீழ்நோக்
கவசர்ப் பிணியி னழுங்கலெனும் பாதம். (அ)

2667. அறிவறிந் தார்க்கவ் வறிவுக் கயலாப்
பிறிதொன்றுந் தோற்றுப் பிரம்மவுருப் பாதம். (அ)

2668. அறிவுண்மை யானபர மாதார மாகிப்
பிறவனைத்துந் தன்மயமாப் பேண்சொருபப் பாதம்.
(அ)

2669. உண்மையை யாவ னுணர்ந்தான் சொருபமாத்
திண்ணமா வன்னுன் சிவவடிவாம் பாதம். (அ)

2670. உள்ளமே யுண்மை யுணர்வொளியா நிற்கமனக்
கள்ளமாங் காட்சியங்குக் கற்பிதமென் பாதம். (அ)

2671. மருவுமெய் யன்பர் மதிதேற நேர்நின்
றுருவிற் கடவு ளொளிகாட்டும் பாதம். (அ)

2672. யாதோரு பாதி யிணையந்தே யுணர்ச்சியின்றிச்
சூதறுசற் போதசொரு பத்திலின்றும் பாதம். (அ)

2673. உண்மையிற்றம் வாழ்வையுளத்
[தோர்த்துணர்ந்தோர்க் கெம்மையிலுங்
கண்மயல்சேர் போகக் கலக்கமின்றும் பாதம். (அ)

2674. யானவனே யாக வியல்சொருப மாட்சியால்
யானெனதுக் கென்றுமிட மின்றியொளிர் பாதம்.
(அ)

2675. யானற்றுச் சும்மா விருந்தொளிர்மெய்ஞ் ஞானபர
மோனத் துபசாந்த முத்திநலப் பாதம். (அ)

2676. உடல்வாழ்க்கை யெவ்வா றுறழ்ந்துபட் டாலுங்
கடவதா முண்மைக் கடப்பாட்டுப் பாதம். (அ)

2677. ஊராதே நின்றுநிலை யோடுகின்றாற் போலுண்மை
தேராதார் கண்ணைத் தியக்கலுறும் பாதம். (அ)

2678. தன்னியல்பா வுண்மை தரித்தபர மார்த்தத்தோ
டன்னியமெய்ஞ் ஞான மசங்கதமாம் பாதம். (அ)

2679. சுத்தசிவ மான துரீய சொரூபத்தோ
டொத்தமைந்த வாழ்வி லுபயமின்றாம் பாதம். (அ)

2680. மோனப் புலத்தான் முகந்து திளைக்கிலன்றி
யேனைப் புலத்தோ டியையுபடாப் பாதம். (அ)

2681. அருளாலே யன்றி யருட்பெருமை யாருந்
தெருளலா காதவருட் சிற்பரமாம் பாதம். (அ)

2682. உல்லங் கனஞ்செய்யா தோம்புயொரு செப்மொழியாற்
புல்லுங் கலாதீத போதவெளிப் பாதம். (அ)

2683. புக்ககமெங் கென்றுகேட் போருக் கவர்பிறந்த
மிக்ககமெங் கென்று விசாரமுறை பாதம். (அ)

2684. இருவருமொன் றுக விருத்தலின்மெய் யாகப்
பிரிவுவெறுங் கற்பிதமாப் பேரவருள் பாதம். (அ)

2685. உண்மைப் பொருளா முடையான் பதவுறவு
வண்மைபெற வாக்கி வழங்குசுபப் பாதம். (அ)

2686. அக்கிரமத் தெவ்வ ரறுவருமே நண்ணவொண்ணு
விக்கிரமஞ் சேரிதய வீட்டுவெளிப் பாதம். (அ)

2687. சித்த விருத்தி சிவத்துவழிச் சேரவே
புத்தமுத வூற்றெடுக்கப் பொங்குமொளிப் பாதம் (அ)

2688. பாவனமா மாலைதன் பாகத்துக் கிவ்வடிச்சி
சோபனமாச் சூட்டித் துலங்கவொளிர் பாதம். (அ)

2689. மனுதீத மாக மருவலான் முற்றக்
குணுதீத மாகக் குலவுதிருப் பாதம். (அ)

2690. சாதுக்கள் சித்தோப சாந்திக் குறுதடையா
மேதுக் களையகற்றி யின்புறுத்தும் பாதம். (அ)

2691. உலகமோ கத்தை யுடற்றியென் னுள்ளத்
திலகுமே கான்ம வெழிற்பரமாம் பாதம். (அ)

2692. தண்ணீர்மை சான்றோரெளிர்தன் சாந்தசொரு பானுபவ
வுண்ணீர்மை பொங்கு முதாரவொளிப் பாதம். (அ)

2693. சுழிக்த மவிச்சைசேர் சொப்பனத்தி னின்று
விழிக்கில் வெறுவெளியா மிஞ்சுமொளிப் பாதம். (அ)

2694. தலைக்கோர் தலையின்றித் தானே தலையா
யெனக்கோ ரிதயமா மென்சொருபப் பாதம். (அ)

2695. தரிசனங்க ளெல்லாமே தன்மயமா வேதித்
தெரிசொருப ஞான வெழிற்பரமாம் பாதம். (அ)

2696. பூரையா மத்துவித போத சொருபத்தால்
யாரையுநிந் தித்தற் கிடமில்லாப் பாதம். (அ)

2697. அட்டவணை யாம்பொய் யகிலமனத் தோற்றமற
வெட்டவெளி விட்டவெறு வெட்டவெளிப் பாதம். (அ)

2698. ஒழிவித் துடலுணர்வை யென்பாலே கன்மங்
கழிவித்த ஞான கனசொருபப் பாதம். (அ)

2699. தன்பரமே யாநாகன் சரிப்பதன்றி யிவ்வுலகத்
தென்பரமென் றென்றுமிலா வென்னறிவுப் பாதம்.
(அ)

2700. இருமைசேர் வஞ்ச விநட்பிழும்பை யுண்ட
வொருமைசே ருண்மை யுணர்வொளியாம் பாதம்.
(அ)

2701. ஆர்வமிக் கோங்கி யவசமுற்று லன்றிவேறும்
பாவனைக்கெட் டாத பரார்பரமாம் பாதம்.
(அ)

2702. ஆநமவ ஞைகமருமன் டல்லலுற்ற வென்னகத்தை
நீநமரங் காக நிகழ்த்தியமெய்ப் பாதம். (அ)

2703 பொழுதுபோக் காகவரு புத்தியளித் தென்னுற்
பழுதிலாத் தன்புகழே பாடுவித்த பாதம். (அ)

2704. உருவமுண் டாயினிமைக் குண்மையிலே யஃது
குருவுருவே யாநான் குறிக்கொண்ட பாதம். (அ)

2705. திருத்தமொன் றற்றமடத் தீம்பனேன் பொல்லாக்
கருத்தைக் கவர்ந்தவருட் காந்தமாம் பாதம். (அ)

2706. மருட்பிழை யன்றி யருட்பிழையன் றாக
வுருப்படுதெய் வீக வுணர்ச்சிதந்த பாதம். (அ)

2707. தழுவலருந் தன்னொடுநான் சாலவணைந் தன்பாற்
பழகலுறப் பெற்றபெரும் பாக்கியமாம் பாதம். (அ)

2708. மருள்வெரு ளான மனோமதி யற்ற
வருள்வெளி யானசிற் றம்பலப் பாதம். (அ)

2709. அறிவிலே யேமாந் தறியப் படூஉம்
பிறிதிலே காழ்ப்புறல்காண் பேதைமையென் பாதம்.
(அ)

2710. தெரிவுருவா மூண்மைச் சிவத்தினின்று வேறாப்
பிரிவுபட்ட காட்சிவெறும் பேதைமையேன் பாதம்.
(அ)

2711. திருப்பெறு தெய்வ சிவத்துவ மான
வருட்பெரு வாழ்க்கை யளித்தருள் பாதம் (அ)

2712. தோலா வழக்குத் தொடுத்து விசாரிகள்
பாலா மனைத்துமே டற்றிடும் பாதம். (அ)

2713. செந்நெறியி னின்று திறம்பா வொழுக்கத்தோர்க்
கெந்நிலையு மொப்பவினி தேற்புடைத்தாம் பாதம்.
(அ)

2714. அறிவுதெளிந் தான்ற வறிவோர்க்கே யல்லா
லறவுருநுட் பந்தேர்ந் தறிவரிதாம் பாதம். (அ)

2715. சிந்தைநிறை வானசிவச் செல்வப் புதையலகத்
தெந்தையாக் காட்டியெனக் கீந்தவருட் பாதம். (அ)

2716. எங்குமே காண்டற் கியலா விழுப்பொருளெங்
கெங்குமே காணவித யந்திறந்த பாதம். (அ)

2717. விளங்குறுசற் போத வியாபகமாந் தன்மெய்
யுளங்கிளரப் பெற்று வுபாதியின்றாம் பாதம். (அ)

2718. சுற்றுமுள யாவுஞ் சுழல்வனவா நிற்கநடுச்
சற்றுஞ் சலனமிலாத் தாணுவாம் பாதம். (அ)

2719. அன்பறிவில் லேன்செய் யனைத்துச் செயல்களுமே
தன்பணியாக் கொண்டெனக்குத் தண்ணருள்செய்
[பாதம். (அ)

2720. நினைந்துநினைந் துட்கியற நெஞ்சமுங்கா தன்பான்
முனைந்தெனை நன் ருண்டசிவ மோகனப்பொற்
[பாதம். (அ)

2721. பூததயை போலப் புலப்பட்டு நல்லறிவைப்
பாதகஞ்செய் வல்லதுபாழ் மாயையெனும் பாதம்.
(அ)

2722. செய்ததே செய்ததே திரும்பத் திரும்பவுயிர்
செய்தலே மாயைத் திறமென்னும் பாதம். (அ)

2723. வெற்றவெளி யான விசுத்த சொருபவொளி
பெற்றவரே கண்டுணரப் பெற்றமகிழ்ப் பாதம். (அ)

2724. ஐம்புலத்தோ டாரும் புலத்தையும்பே தித்திதயச்
செம்புலத்தை யூறு சிவானந்தப் பாதம்.
(அ)

2725. இஞ்ஞேதய மாக வெறிக்கமெய்க் காட்சி
விஞ்ஞேதமயல் வேட்கைமிக விந்தையெனும் பாதம்.
(அ)

2726. பொய்ச்சலமா மாயப் புலவுலகைத் தாங்கிமுழு
நிச்சலமா நிற்கு நிராதாரப் பாதம். (அ)

2727. ஒன்றினின்றுண் டாகாதே யொன்றையுமுண்
[டாக்காதே
யென்றுமுள பாழா விருந்தொளிர்மெய்ப் பாதம்.
(அ)

2728. சிற்பரமோ னத்தாலெண் டிக்குவிச யஞ்செய்து
தற்பரமாந் தங்கு சதாசிவமாம் பாதம். (அ)

2729. அனந்தசிவ சத்தி யகத்தடங்கித் தோன்ற
நனந்தலேஞா லத்து நடாத்தரசுப் பாதம் (அ)

2730. அறிவிலே யூன்றி யமைதிபெறக் கல்லா
வெறியராற் காண்டலரு மெய்ப்பொருளாம் பாதம்.
(அ)

2731. கள்ளவியா பாரக் கருத்தாற் சுழல்கறங்காத்
துள்ளுமதி மோகரைக்கண் டெள்ளுநகைப் பாதம். (அ)

2732. யாங்கோதா னிப்போ திருக்குமிட மென்றுணர்ந்தா
லாங்கே யினிப்புக் கடைபுகலாம் பாதம். (அ)

2733. தன்றிரு வுள்ளந் தழைப்பவென் னுள்ளத்து
நன்றினி தாக நடப்பதாம் பாதம். (அ)

2734. உலகங் கடந்தவோ ரொண்பொருளை யுள்ளங்
குலவு சொரூபமாக் கூட்டுகின்ற பாதம். (அ)

2735. நினைப்பே பிறப்பு மறப்பே யிறப்பா
முனைப்புறுசம் சார முரண்கெடுக்கும் பாதம். (அ)

2736. மாயா விசித்திர மாட்சிசேர் வல்லபத்
தோயா நிகழ்ச்சி யுறுந்தொழிற் பாதம். (அ)

2737. அறிவு நிலைப்பட் டமைந்த வகத்திற்
பிறிவுபட லின்றிப் பிறங்குசிவ பாதம். (அ)

2738. தற்புகழ்ச்சி பேசித் தருக்கல் வெறும்பதட்
டற்பருக் கான வறிகுறியென் பாதம். (அ)

2739. பணிவு மடக்கமும் பண்பட் டொளிர்சற்
குணிகளுக் கான குறிகளெனும் பாதம். (அ)

2740. அஞ்சியமெய் யன்பர்க் கபயமா மத்துவித
விஞ்சையரு ளேசன் விபூதியாம் பாதம். (அ)

2741. சொரூபமே சற்றுந் துளக்கமிலா துன்று
துருவமாக் கூட்டித் துயர்கெடுக்கும் பாதம். (அ)

2742. விட்டிலே போல விளங்கு சொரூபவொளிப்
பட்டவுயிர் கெட்டுப் பரமேயாம் பாதம். (அ)

2743. தெய்வசம் பத்துத் திருந்த வடித்தமனர்க்
குய்வதெளி தாகவுணர் வொட்பமருள் பாதம். (அ)

2744. அன்னியத்தை விட்டுநா னுரென் றகத்துமதி
தன்னியற்கை நாடிற் றலைப்படுமெய்ப் பாதம். (அ)

2745. வேசுறுமுத் தாபமறு வித்தமொழி யாலடியேன்
பேசுறுமெய்த் தெய்வமாப் பேணலுறும் பாதம். (அ)

2746. தன்சொருப மானசிவ சம்பத் தெனதுளத்தா
டெஞ்சலற நான்மிகப்பெற் றெக்களிக்கும் பாதம்.
(அ)

2747. அறிவுவழிச் சென் றமெய் யாராய்ச்சி யாலே
செறிவுபடச் சிந்தையகஞ் சேர்ந்தொளிர்மெய்ப்
[பாதம். (அ)

2748. பரகதியா இன்றதருட் பாதமே யாகக்
கரவறுமெய் யன்பரகங் கண்டுகொண்ட பாதம். (அ)

2749. பொங்குமுப சாந்தசுக போதபரி பூரணமாத்
தங்குமொளி சூழ்ந்தபரந் தாமவியற் பாதம். (அ)

2750. திருவருட்பாங் காகமுமுச் சித்தமற வொன்றிப்
பெருவிருப்புக் கொண்டடியோம் பேணலுறும்
[பாதம். (அ)

2751. அததனுக் குற்ற வதிகார மின்றி
யெதெதுங்கை கூடா தெனவியம்பும் பாதம். (அ)

2752. வெளியே பொருளா வெறுவெளிகை காட்டி
வெளியாக நின்றவெறு வெற்றவெளிப் பாதம். (அ)

2753. நிம்மதி யாலே நிறைந்தமனப் பான்மையே
சம்பதி யானசமத் தைசுவரியப் பாதம். (அ)

2754. கள்ளமன வாழ்விற் கலங்கிநான் கெட்டழியா
துள்ளமைதி பொங்கநீ டுள்ளொளிர்மெய்ப் பாதம்.
(அ)

2755. வாசனையாந் தெவ்வர் வசப்படா தென்னகத்தைச்
சாசனந்தான் செய்துகொண்டு தங்குமொளிப் பாதம்.
(அ)

2756. அறிவிரண் டோது மசட்டுவா தத்தை
முறிவுபட மோதுமுமு மோனவொளிப் பாதம். (அ)

2757. சுதாரச மான சொரூபத்தே மூழ்கி
மதாலச மாக மயங்கிய பாதம். (அ)

2758. தன்னையே பற்றித் தணவாத சிந்தைக்குப்
பின்னையோர் வேட்கை பிறத்தலிலாப் பாதம். (அ)

2759. அருளுக் குயிரை யடைக்கல மாக்கில்
வெருளுக் கிடமற விஞ்சுமொளிப் பாதம். (அ)

2760. நாட்டம் பரத்தே நடக்கு மியல்பினோர்க்
கீட்டும்பே ரின்பா மிதயவெளிப் பாதம். (அ)

2761. தேகான்ம பாவஞ் சிதைந்தொழிந்தா லன்றிமற்
றேகான்ம ஞான மியல்வரிதாம் பாதம். (அ)

2762. உளறுபடி யாம்பல் லூறழ்ச்சியூ டொன்றுத்
தெளிவுபடு சுத்தசச் சித்தான பாதம். (அ)

2763. அவ்வவர்தம் வாசனைக் கேற்ப வகத்திலமர்ந்
தவ்வவர்தஞ் சித்தத்தை யாட்டுவிக்கும் பாதம். (அ)

2764. உலகுக் குணர்த்து முபதேச மோனம்
நிலவுதற் கான நிலைப்பட்ட பாதம். (அ)

2765. கற்பவற்றுக் கெல்லாங் கரையாய்மேற் கல்வியிலாத்
தற்பரமா வோங்கு சநாதனமாம் பாதம். (அ)

2766. யாதோர் நிபந்தனையு மின்றியே நின்னைநின்
னாதார சத்தியி லர்ப்பியெனும் பாதம். (அ)

2767. சிவத்திலே தம்மைத் தியாகஞ் செயாதோர்
பவத்திலே மூழ்கிப் பதைப்பரெனும் பாதம். (அ)

2768. தன்னிழப்பா லுள்ளத்துத் தாமடங்கார் வெந்துயரே
மன்னுழப்பா ராப்புலத்து மாழ்குவரென் பாதம். (அ)

2769. சுத்தவருட் சத்திவழித் தோய்தலான் மெய்யடியர்
சித்த விருத்தி சிவப்படுமென் பாதம். (அ)

2770. புத்தமுத மாவதுதன் போத சொரூபமாச்
செத்தமன முத்தரகந் தேர்ந்துதிளை பாதம். (அ)

2771. வெறுவெளியா வென்னை விழுங்கிவெறு ந் தன்மெய்ந்
நிறைவொளியா நின்று நிலவுநெஞ்சப் பாதம். (அ)

2772. பழமுதலா வுள்ள முழுமுதலூ டுள்ளங்
கெழுமுதலா லுண்டா முழுவலன்புப் பாதம். (அ)

2773. விகற்ப மிலாத விசுத்தவுணர் வாலே
முகப்பதாய் மற்றரிய மோனவெளிப் பாதம். (அ)

2774. தருமார்த்த காமங்கள் சாயைகளே யாகப்
பரமார்த்த வுண்மைப் பரம்பொருளாம் பாதம். (அ)

2775. பயிற்றுங்கர்த் தத்துவப்புன் பாவமறக் கெட்டா
லியற்றுசெய லெல்லா மிறைபணியாம் பாதம். (அ)

2776. தன்னிலே தானுத் தழைத்தவருட் கற்பகத்துக்
கென்னிதய நன்னிலைவென் றென்றுமியல் பாதம்.
(அ)

2777. அலமென்னும் புத்தியா லான்றமைந்த வின்ப
நலமென் னிதயத்து நல்கியபொற் பாதம். (அ)

2778. அறிவுப் பயிற்சியின்றி யாருயிர்க்கு ஞானச்
செறிவுதரு சித்தியகஞ் சேர்வரிதாம் பாதம். (அ)

2779. நெஞ்சிலருள் பாய்ந்த நிறைவுணர்ச்சி யாலடியேன்
எஞ்சியவர் முக்கிரங்க லின்றிமகிழ் பாதம். (அ)

2780. அருட்செல்வந் தாலே யகநிறைந்தா லன்றிப்
பொருட்செல்வத் தென்றுமின்றும் பூரணமென்
[பாதம். (அ)

2781. பேதபுத்தி யானவுன் மாதபுத்தி பேர்ந்தொளிர்சற்
போதபுத்தி யாகவுளம் பொங்குமொளிப் பாதம். (அ)

2782. அறிவின் சொரூபமே யாய்ந்தறியா மேதை
யறிவுணர்ச்சி நன்றுநன் றென் றுடசதிப் பாதம்.
(அ)

2783. அறிவுக் கயலா விடயமொன்று காண்போ
னறிவறிந்த பண்டிதன்று னல்லனெனும் பாதம். (அ)

2784. அருட்பராமந் தன்மெய் யறிவறிந்து மக்க
ளுருப்படுதற் கான வுபாயமாம் பாதம். (அ)

2785. தாயிலாப் பிள்ளைபோற் றத்தளியா தென்னையுளங்
கோயிலாக் கொண்டுமிகக் கோதாட்டும் பாதம். (அ)

2786. விலங்கொடுமக் கட்குள்ள வேறுபா டுள்ளத்
திலங்கு முணர்வொழுக்கத் தென்றுணர்த்தும்
[பாதம். (அ)

2787. களக்கவகங் காரமதிக் கல்விக் கணக்கா
லளக்கவொண்ணு தாழ்ந்தபே ராழவகப் பாதம். (அ)

2788. சொருபந் தனக்கயல் சூனியமாக் காண்போன்
வெருவரற் கில்லா விசுத்தவெளிப் பாதம். (அ)

2789. வினைக்கேட னென்றே வெறுவெளியா வோங்கி
யெனைக்கே டனுமா விருந்தொளிர்மெய்ப் பாதம். (அ)

2790. பொங்குகலை முற்றப் பொருந்து முவாமதிபோ
லெங்கு மபிமுகமா மேகமுகப் பாதம். (அ)

2791. அகிலங்க ளீன்று மவள்கன்னி யென்று
லகிலத்தி னுண்மையதி யற்புதமென் பாதம். (அ)

2792. எம்மாந் தருக்குமிக் கேற்றமா வென்னுளஞ்
செம்மாந் திருக்குந் திறமளித்த பாதம். (அ)

2793. பெருமையோ வேண்டாச் சிறுமையோ பேணு
தொருமைசே ருண்மை யுணர்வளித்த பாதம். (அ)

2794. சுத்தசிச் சத்தித் தொடர்புற்ற சித்தமொளிர்
புத்தமுத போதானு பூதிமயப் பாதம். (அ)

2795. ஏதமறக் கெட்டொழிய வென்முன்மெய்ஞ் ஞானகுரு
பாதமா வந்துற் பவித்ததிருப் பாதம். (அ)

2796. கள்ளவஞ் சச்சதி காரமலப் பாழறச்செற்
றுள்ளமா வுள்ளத் தொளிரொளியாம் பாதம். (அ)

2797. அத்துவித மான வருட்பரமா னந்தை
செத்தவித யத்திற் சிறந்தொளிர்மெய்ப் பாதம். (அ)

2798. காலதே சக்கருத்துக் காயவகங் காரமதிப்
பாலதே யாகவறப் பற்றுவிட்ட பாதம். (அ)

2799. மோனவெளிக் காட்சியான் முப்புடியின் மோகமற
ஞானவருட் பார்வைமிகத் தானளித்த பாதம். (அ)

2800. சுத்தசச்சித் தான சொருபசத்தி யாலகத்திற்
சித்தசன்வல் லாட்டமறச் செற்றசிவ பாதம். (அ)

2801 ஊன மருட்பா முபாதிசேர் நோக்கமறு
மோன வருட்பரமா முத்திநிலைப் பாதம். (அ)

2802. பாதவருட் பார்வையாற் பற்றுவிடப் பெற்றவகம்
போதசொரு பான்மபரி பூரணமாம் பாதம். (அ)

2803. உணர்வன்றி மற்றோ ருபாதான மின்றிப்
புணர்பவா மெல்லாப் புலங்களுமென் பாதம். (அ)

2804. உணர்வி லனைத்து மொடுங்கலுறுங் காலும்
புணர்விவிதத் தோற்றம் பொருளாமென் பாதம். (அ)

2805. எங்குமிருக் கின்ற வியல்பான தன்சொருபம்
பொங்குவதென் னுள்ளப் புலத்திலாம் பாதம். (அ)

2806. பிரம்மசொரூ பத்திற் பிறிதறத்தா னென்றிற்
பிரம்மமய மாகும் பிரம்மாண்டப் பாதம். (அ)

2807. நிலக்கண் ணுடியை நீக்கி யருட்பரவான்
கோலக்கண் ணுடிவையக் கூட்டுவித்த பாதம். (அ)

2808. என்னைத்தான் சோதித்துந் தன்சொரு பத்திலெனக்
கின்னுமின்னு மேன்மே லெழுமார்வப் பாதம். (அ)

2809. துஞ்சலிலாச் சிற்சொருப சோதியைப்புன் மோகவுயிர்
வஞ்சனைசூழ் கின்றதென்ன மாயமெனும் பாதம். (அ)

2810. புன்மலத்தைப் போக்கியருட் போத சொருபசிவப்
பொன்மயமா வென்வடிவைப் பொங்குவித்த பாதம்.
(அ)

2811. வெற்றவெளி யூடுசுத்த வெற்றவெளி யாகவிளங்
குற்றவொளி யானவதி நுட்பவுருப் பாதம். (அ)

2812. அத்தகநிற் கின்ற வருட்புலத்தி லன்றிவெறும்
புத்தகஞா னத்திற் புலப்படாப் பாதம். (அ)

2813. கண்டுகொண்டா லன்றியருட் காட்சியாற் ருனுந்தான்
விண்டுசொல வொண்ணு வெறுவெளியாம் பாதம். (அ)

2814. விபத்தி யுணர்ச்சி விடப்படலே சுத்த
சிவத்தெழுமெய்ப் பத்தித் திளைப்பெனலாம் பாதம். (அ)

2815. அறிவிலே யூறுசாந் தானுபவ மோனக்
குறியுளே தங்குசிவக் குஞ்சரமாம் பாதம். (அ)

2816. கானலைநீ ராகவெண்ணிக் கானலைபுன் [மான்கணம்போல்
யானலையா தென்சொருபத் தென்னையுய்த்த பாதம். (அ)

2817. நிழலாம் புலத்தை நினைந்தினைந்தென் னெஞ்ச
மழல்வா தனைதீ ரமுதவொளிப் பாதம். (அ)

2818. அருட்பரத்தை யன்றி யடியேற்கு மற்ருே
ரிருப்பறத்தன் னுண்மை யியற்படுத்த பாதம். (அ)

2819. மருட்புலமாத் தோன்றுமகி மாயையறப் பாழ்க்க
வருட்பரமாத் துன்றுமனந் தானந்தப் பாதம். (அ)

2820. ஜீவ ரிடத்துந்தன் சிற்சொருப வுண்மையிலே
யாவதொரு குற்றமுமற் றென்றுமியல் பாதம். (அ)

2821. உபாதிநோக் கத்தா லுறுவதன்றி மெய்யா
விபாகந்தன் சிற்சொருபம் மேவலிலாப் பாதம். (அ)

2822. பந்தமுத்திப் பேச்சே பழங்கதையாப் போகவொளிர்
சொந்தமுத்தி யான சொருபசித்திப் பாதம். (அ)

2823. விஞ்சைவளர் தன்சொருப வீட்டுவளங் காட்டிமனச்
சஞ்சலமின் ருகவகந் தான்கலந்த பாதம். (அ)

2824. நியமங் களுக்கோர் நிமித்தமறத் தன்மெய்
ஜயமங் களமாத் தரித்தசிவ பாதம். (அ)

2825. உபமங் கடந்தென் னுளத்தூ டுதார
சுபமங் களமாச் சுடர்சொருபப் பாதம். (அ)

2826. கலையிலக்கா நுட்பக் கருவா முருவை
மலையிலக்காக் காட்டியெனை வாழ்வித்த பாதம். (அ)

2827. அறிவு திடப்பட் டமைந்தவகங் குன்று
நிறைவுறுபே ரின்ப நிலைக்களமாம் பாதம். (அ)

2828. மருளறிவே யாகமனச் சுட்டறிவு தான்கூ
ரருளறிவே யுண்மைப் பொருளறிவாம் பாதம். (அ)

2829. அகந்தையறி வற்று லருளறிவுக் கூறு
முகந்தபுற பேதமற முஞ்சுமெனும் பாதம். (அ)

2830. கரியாகத் தன்னைத்தான் கண்டக்கா லன்றிப்
பிரியா தகந்தையுருப் பேதைமையென் பாதம். (அ)

2831. போதமே யுண்மைப் பொருளாகப் பொய்த்தபிர
மாதமுயிர்க் கென்றும் மடுத்திலதாம் பாதம். (அ)

2832. வறந்தபுல வாழ்வை மறந்துதனை யாய்ந்தோர்
திறந்தவெளி யூடு திளைக்குமின்பப் பாதம். (அ)

2833. அற்புத சித்தி யநேகந்தா மேவினுமெய்
விற்பனர்நெஞ் சத்துவியா மோகமின்றாம் பாதம். (அ)

2834. அறிவோ டறியாமைக் கப்பாலே சுத்த
வறிவாக நின்றொளிர்சிற் றம்பலமெய்ப் பாதம். (அ)

2835. உண்மையுணர் வுற்றவுயி ருட்கலறக் கேவலமாய்த்
திண்மைசே ரத்துவிதச் சிற்பரமாம் பாதம். (அ)

2836. செவ்விதாந் தன்சொருபச் சிற்பரத்து வாழ்விலுயிர்க்
கெவ்விதச்சிந் தைக்குமிடமில்லாப் பாதம். (அ)

2837. வறந்தபலர் வாட்டமற வானொழுகி மண்மேற்
சிறந்தசிவ கங்கையாஞ் சீவநதிப் பாதம். (அ)

2838. அவ்வவர்தம் பக்குவத்திற் கேற்ப விகற்பஞ்சே
ரொவ்வோர் சமயமுமெய் யொப்பதாம் பாதம். (அ)

2839. கண்ணுக்குக் கண்ணாங் கனசொருபக் காட்சிதனை
யெண்ணுமெ லெண்ணி யிருப்பதாம் பாதம். (அ)

2840. மோகரின மானமுமு மூர்க்கரையுந் தேற்றுகுண
நாகரிக மானசிவ ஞானநடைப் பாதம். (அ)

2841. பவரோக மான பணிப்பறவென் னெஞ்சைச்
சிவயோக வாழ்விற் செலுத்தியபொற் பாதம். (அ)

2842. மதிக்கவதி யாக மடுத்தென் னிடத்தே
மதுக்களியொப் பாக மருவியசிற் பாதம். (அ)

2843. அமுக்கியமாம் போலி யறிவுகளைச் சாடி
விமுத்திவடி வாக விசைத்தெழுந்த பாதம். (அ)

2844. அச்சங் கவலை யகன்றேட வான்றவருள்
விச்சைகற் பிக்குமதி வீரியஞ்சால் பாதம். (அ)

2845. பாவனு மோகப் பசுபாச வாசனைதீர்
ஜீவன் சிவத்துத் திளைத்துமகிழ் பாதம் (அ)

2846. சிவசத்தி லூற்ற சிகாரப் பொருளெவ்
வுபயமுந்தீ ருண்மை யுணர்வொளியாம் பாதம். (அ)

2847. நாடக் கடவதொரு நாட்டமுமற் றுள்ளொளியாய்க்
கேடற்ற தன்சொருபக் கேவலமாம் பாதம். (அ)

2848. அறிவு படைத்த வரும்பயன் றன்றே
டுறவுகண் டுள்ள முவத்தலாம் பாதம். (அ)

2849. ஒன்றியா நின்றதனைக் கொன்றுமெதிர் நிற்றலற்று
வென்றிசே ருண்மை விளக்கமாம் பாதம். (அ)

2850. கள்ளக் கருத்துருவாங் கற்பனைசேர் சொற்பனந்தீ
ருள்ளக் கிளர்ச்சிதரு முண்மையொளிப் பாதம். (அ)

2851. நிலைப்பட்ட தன்சொருப நிட்டானு பூதி
தலைப்பட்ட வுள்ளமுப சாந்தமாம் பாதம். (அ)

2852. உள்ள மடங்கி யொடுங்குவது தன்சொருப
வெள்ளவொளி யாக விரிந்திடலாம் பாதம். (அ)

2853. சுத்தமோ னத்திற் சுடர்வதே தன்சொருப
சித்தியா மென் றுபிர சித்திசேர் பாதம். (அ)

2854. நீக்கமிலா தெங்கு நிறைந்த பரங்கருணை
நோக்கமே யெம்மனோர்க் காக்கமாம் பாதம். (அ)

2855. தன்னியலா முண்மைநிலை சார்ந்ததிட ஞானிகளுக்
கன்னியமொன் றுற்றி யடைதலின்றும் பாதம். (அ)

2856. வெறிபடுநோக் கத்திற்பல் வேறுபுலம் போன்றே
யறிவுநோக் கத்தி லருள்வெளியாம் பாதம். (அ)

2857. அருட்பர வாழ்வி லகப்படுவே னாக
வுருப்பட வென்னை யுருக்குலைத்த பாதம். (அ)

2858. பிறவுணர்ச்சி யெல்லாம் பிழைபடவே தான்மெய்
யறிவுணர்ச்சி யாகவிளங் காரமுதப் பாதம். (அ)

2859. ஏகரச மாக வியன்றதன் சிற்சொருப
போகரதி யன்றியனு போகமின்றும் பாதம். (அ)

2860. அறிவொளியாத் துன்று மகம்பதார்த் தத்தை
யறிவொளியாந் தானே யறியநின்ற பாதம். (அ)

2861. நின்றநிலை யேதன் னிஜசொருப மாகமன
மொன்றிநிற் கின்ற வுளமேயாம் பாதம். (அ)

2862. எண்ணவொணு தாக விரண்டற் றிருத்தலா
லெண்ணலுறுங் காறு மிலக்கமுறாப் பாதம். (அ)

2863. சொற்பொருளாத் தோற்றியுமச் சொற்பொருளைத் [தாண்டிநின்ற
வப்பொருளா வோங்கு மதீந்திரியப் பாதம். (அ)

2864. தன்னையே யென்னுந் ததேகத் தியானத்து
டன்னையினு மிக்கவரு ளாக்கஞ்செய் பாதம். (அ)

2865. மருட்படுவித் தாரமனே மாயையறத் தீர்தன்
னருட்பரத்து மாட்சி யகிலமுஞ்சேர் பாதம். (அ)

2866. மானவருக் குண்மை வழிகாட்டக் கேவலமெய்ஞ்
ஞானமுருக் கொண்டு நடக்கின்ற பாதம். (அ)

2867. வடிவிலே செய்யும் வழிபாடு தானும்
வடிவிலாத் தன்பதத்தில் வந்தடையும் பாதம். (அ)

2868. குறிகுணந்தீ ரொன்றை யறிகுவது தம்பாற்
குறிகுணங்க ளற்றகுறிக் கோளறிவாம் பாதம். (அ)

2869. நடப்பது யாதுமொரு நன்மைக்கே யென்று
திடப்படுமெய் யன்பருளந் தேறலுற்ற பாதம். (அ)

2870. பருவத்தி லன்றிப் பழாதாக வென்பாற்
பருவத்தைத் தானே வருவித்த பாதம். (அ)

2871. உருக்கமொடு செய்யு முபாசனைக்கண் ணேவீற்
றிருக்குமொளி சான்றபே ரின்பவுருப் பாதம். (அ)

2872. உலகிலுருக் கொண்டவ் வுலகையே மாற்று
மலகில் பரஞ்சோதி யாங்கடவுட் பாதம். (அ)

2873. சிவபத்தி யானவருட் செந்நெறிச்செல் வோருக்
கவபுத்தி யானா வகந்தையின்றும் பாதம். (அ)

2874. திடப்பாடு சான்றமனச் செப்பத்தோ டன்றிக்
கடப்பாடாச் செய்யுநிட் காமியமில் பாதம். (அ)

2875. ஊருக் கிடந்த வுயிர்ப்பான சிச்சடத்தை
வேருக்கி னென்றிவழி வேறின்றும் பாதம். (அ)

2876. மனத்துக் குறையான் மடிப்பதன்றி மெய்யா
வெனைத்துக் குறையு மெவர்க்குமிலாப் பாதம். (அ)

2877. என்றுமுள தாந்தன் னியல்பான முத்தியினித்
துன்றுவதே போல்வதொரு சூதின்றும் பாதம். (அ)

2878. சோதனையா ற்றுன்று சொரூபமா யன்னியமாச்
சாதனைவேண் டாத சதாமுத்திப் பாதம். (அ)

2879. வந்தவழிப் புக்கு மடிப்பதன்றித் தன்னிலைமாற்
றெந்தவழிச் செல்லினுமீங் கேபுகலாம் பாதம். (அ)

2880. தோற்றங்க ளூடே சுழல்வதுயிர் தன்சொருபத்
தேற்றமிலா மோகத் தெருயரலென் பாதம். (அ)

2881. அறிவுப் படர்ச்சிசே ரைம்புல வேட்கை
பிறிவுற்ற சித்தம் பிரம்மமாம் பாதம். (அ)

2882. அறிவினு லன்றி யறிந்தடைய வொண்ணு
வறிவுநா னுக வவிர்சொருபப் பாதம். (அ)

2883. உள்ளத்தை நீங்காமை யோர்ப்பவெலா மொட்பங்கூ
ருள்ளமாந் தன்மயமா வுற்றிடலாம் பாதம். (அ)

2884. உள்ளம் பரவொளியா வுற்றெழுந்தா லன்றிமனக்
கள்ளமாஞ் சேட்டையறக் காண்பரிதென் பாதம். (அ)

2885. உந்துமகங் கார வுணர்ச்சியே கற்பனைசேர்
பந்தசமு சாரப் படர்ச்சியெனும் பாதம். (அ)

2886. பலபடித்தாத் தோன்றும் படிற்றுமன மாயைக்
குலமறத்தா னன்றிக் குலைத்தொளிர்வெய்ப் பாதம். (அ)

2887. அறிவுவழி பாடவ் வறிவிலே யூன்றிப்
பிறவற்றிற் சிந்தை பிரிதலாம் பாதம். (அ)

2888. முன்னிதயத் தூடு முளைத்தநா னென்னு நினைப்
பென்னதெனக் கென்பவற்றுக் கேதுவெனும் பாதம். (அ)

2889. இறுகவுயிர்ச் சித்த மிதயத்து நிற்க
லுறுவிக்கு முண்மை யுரஞ்சான்ற பாதம். (அ)

2890. சருக்கரையே போலத் தனைக்கருதா நின்று
ருருக்கரையா நிற்பவுளம் பாற்கடலாம் பாதம். (அ)

2891. திருக்குறவாஞ் சிச்சடம்பே திப்பவகங் கார
வுருக்குலைந்தா லன்றியுயிர்க் குய்தியின்றென் பாதம். (அ)

2892. தன்னையே யன்னியன்போற் றன்கண் டொழுகுறலே
மன்னியதன் சிற்சொருப வாழ்க்கையெனும் பாதம். (அ)

2893. பரவெளியே யாகப் பயில்சொருப மோன
வுரவொளியா லிவ்வுலகை யாவரிக்கும் பாதம். (அ)

2894. முக்குணமாத் துன்றுமன முஞ்சினுர் நெஞ்சினன்றி
நிர்க்குணமாந் தன்சொருப நிற்பரிதாம் பாதம். (அ)

2895. அகம்போத மேமங்க ளாசரண மாகத்
தகும்போத மென்றகமாத் தான்றழைத்த பாதம். (அ)

2896. நிலவரைமேற் சோணக் குலவரையே தானுப்
புலவரெலாம் போற்றிடுசற் போதவொளிப் பாதம். (அ)

2897. திருவா திரையிற் சிவசொருப லிங்கப்
பருவதமா நின்ற பரஞ்சோதிப் பாதம். (அ)

2898. காணக் கிடையாக் கடவுளுருக் காட்சியிலென்
ஞணவத்தை மாய்த்த வருள்வெளியாம் பாதம். (அ)

2899. அகப்படவோண் ணுத வருள்வெளியென் னுள்ளத்
தகப்படுமா கண்ட வருள்விழியாம் பாதம். (அ)

2900. எவ்வுருவுந் தன்னை யன்றி யின்ருகப் பெற்றுவிளங்
கவ்வுருவாஞ் சிற்பரநா ஞத்தெரித்த பாதம் (அ)

2901. இருவோங்கள் போல வியல்கினுமென் னுண்மை
துருவுங்கா லேக சொருபமாம் பாதம். (அ)

2902. என்கன் னிமைமதிலே யீடழித்தென் னுட்புக்குத்
தன்கணுச் செய்சரச சல்லாபப் பாதம். (அ)

2903. உய்வதற்கு வேருே ருபாயமெவ னிவ்வுலகைத்
தெய்வவினை யாட்டாத் தெரிந்திடிலென் பாதம். (அ)

2904. கண்டறிப வெல்லாங் கடவுள் விலாசமாக்
கண்டமைவ தேகடவுட் காட்சியாம் பாதம். (அ)

2905. சித்தத் தெளிவே சிவப்பிர சாதமாக்
துய்த்தலே நான்கண்ட துப்புரவாம் பாதம். (அ)

2906. மாருதே யுள்ளபர வத்துவே தம்முருவாத்
தேருதார் தீரார் தெருமரலென் பாதம். (அ)

2907. மத்தவித்தை யாவொழிய மற்றவித்தை தன்சொருப
சுத்தவித்தை யானபர முத்திவித்தைப் பாதம். (அ)

2908. கல்வியிலே யானகழற் கண்ணே சகலதெய்வச்
செல்வநிலை யானசிவச் சீர்மைவளர் பாதம். (அ)

2909. காவடமே போலுமயற் காட்சிகளின் முன்னுப்
பரவெளியாந் தன்சொருபப் பார்வைகிளர் பாதம்.
(அ)

2910. பிறவற்றைப் பேணிமனம் பிழையுறல் தன்மெய்
யறிவற்ற மூட வகந்தையெனும பாதம். (அ)

2911. விழவுபோ லன்பர் விழைவுறக்கண் டோம்ப
வழகிதாத் துன்றுஞா னுசாரப் பாதம். (அ)

2912. அவசத்தி லென்னையணைந் தாரமுதம் பாய்ச்சு
சிவசத்தி யைக்கிய சச் சிற்சுகமாம் பாதம். (அ)

2913. பிணக்கிலா வாற்று லிணக்கமுறக் கூடி
உணக்கியெனைத் தன்பால் வசப்படுத்த பாதம். (அ)

2914. அந்தரத்து வாழ்வென் றயலார் மருண்டுபட
மந்தணமாந் தன்சொருப வாழ்வளித்த பாதம். (அ)

2915. இதயந் திறந்துபே ரின்பவெளி யாந்தன்
னுதயந் திறப்புவிழா வுண்மையாம் பாதம். (அ)

2916. பிறித்தலாற் செத்துப் பிரம்மசொரு பத்திற்
பிறத்தலே யுண்மைப் பிறப்புவிழாப் பாதம். (அ)

2917. மோனவருட் சீர்மை முனிகளுக்கே யன்றிமற்
றேனவருக் கென்று மிலங்கலிலாப் பாதம். (அ)

2918. பத்தியிலே நெஞ்சம் படிந்தமெய் யன்பாது
புத்தியிலார் கின்றசிவ போகவருட் பாதம். (அ)

2919. திறம்படவே யூன்றுமனே தீரமுற நெஞ்சத்
துறம்படர்மெய் யன்பரக் கருள்கின்ற பாதம். (அ)

2920. முக்குணத்து மோக முதிர்ந்தமனம் புக்ககத்திற்
சிக்கெனத்தன் னுண்மை திளைப்பரிதாம் பாதம்.
(அ)

2921. எனைத்துவழி யாலு மிரண்டுபடு முண்மை
தனைத்துருவி லொன்றுத் தழைப்பதாம் பாதம். (அ)

2922. பல்விகற்ப மோகப் படிப்பறமெய்ஞ் ஞானவருட்
கல்விகற்ப தானோர் கணங்கள்சூழ் பாதம். (அ)

2923. ஒட்பவுணர் வாக வுளந்தழைப்ப தாவததி
நுட்பமாந் தன்சொருப நோக்கமாம் பாதம். (அ)

2924. நெஞ்சத் தலத்துநிகழ் நிட்டையில்வந் தன்புறவாற்
கொஞ்சிக் குலாவுமனு கூலவருட் பாதம். (அ)

2925. அறத்திலே யன்றிமெய் யன்புசே ரின்பம்
பிறத்திலின் றென்றற மாட்சிசொல் பாதம். (அ)

2926. அடிப்படை யாந்தன் னறிவுண்மை கண்டு
மடுப்பதே செய்தவ மாட்சியாம் பாதம். (அ)

2927. சுத்தவறி வான சொருபத்தே யாணவங்கூர்
சித்தமறப் பெற்றவுயிர் சிற்பரமாம் பாதம். (அ)

2928 ஊனமாப் பொய்ப்பமற் றேனைய மாட்சிமெய்ஞ்
ஞான மாட் சிக்கொரு நாயகப் பாதம். (அ)

2929. அருள்வெளியா வென்னை யடைவளைந் துள்ளத்
திருள்வளர்யா னென்னுமதி யீடழித்த பாதம். (அ)

2930. சிவத்தியல் பாகத் திகழ்ச்சிசேர் மோனத்
தவத்தியல் சாற்றத் தரமன்றும் பாதம். (அ)

2931. மருட்பார்வை யான மனக்காட்சி மங்க
வருட்பார்வை யான வகக்காட்சிப் பாதம். (அ)

2932. எப்பொருளுக் குள்ளு மிருந் தேபொதுவாத்
[தானொளிர்வே
மெய்ப்பொருளுக் குள்ள விசேடமாம் பாதம். (அ)

2933. திருவிலாக் காட்சித் திரிபுடிமா யத்தைக்
கருவிலே செற்றவருட் கட்டாரிப் பாதம். (அ)

2934. சுமேதையோ டொன்று சொருபவிஞ் ஞான
மமோகமாப் பொங்கும்பே ராலயமாம் பாதம். (அ)

2935. நறுவிதா விசுதன் ஞானமணத் தாலே
வறுவிதாப் பொன்றமல வாசனைகொல் பாதம். (அ)

2936. அகிலங் களுமோ ரறிவிலே கற்பித்
தகளங்க மாநின் றசைத்தலுறும் பாதம். (அ)

2937. புக்ககமே சுத்தவகம் போகமுறப் போற்றலே
தக்கதாந் தன்சொருப சாதனையாம் பாதம். (அ)

2938. தனுகரணப் பன்மதியைத் தாண்டிஞ றுள்ளத்
தனுபவமாத் தேறி யகல்வரிதாம் பாதம். (அ)

2939. தன்மயமெய்க் காட்சி தழைப்பினுளத் தூடியல்பா
வுன்மனிபா வஞ்சேர்ந் தொளிர்வதாம் பாதம். (அ)

2940. சங்க மசங்கமிரு தன்மையுஞ்சிற் கேவலமா
வெங்குமுள தன்சொருபத் தென்றுமின்றும் பாதம்.
(அ)

2941. இமையா விழிப்போ டிதயவெளி யூடே
யிமயம்போ லோங்கும்பே ரின்பநிலைப் பாதம். (அ)

2942. உண்மையே போ லுருக்கொண் டுழலுமனத்
திண்மைசேர் கற்பனைகாண் சீவியமென் பாதம். (அ)

2943. காதலாற் காதலனைக் கண்டறிஞர் காமினிகள்
காதலினின் றுய்யக் கடைப்பிடித்த பாதம். (அ)

2944. ஊகமோ டாற்று முபாசனைவல் லோருக்குப்
போகமோ க்ஷங்களின் பொக்கிஷமாம் பாதம். (அ)

2945. முகவொளியா லென்மனத்தை மோகனஞ்செய் [துள்ளூ
ரகவொளியா லென்னுயிரை யாண்டவருட் பாதம்.
(அ)

2946. மறுக்கலா யிம்மை மறுமைநலஞ் சான்றோர்
வெறுக்கை துறக்கமென விட்டடையும் பாதம். (அ)

2947. நிட்டுரவார்த் தைக்கு நிமித்தமற வென்னுளத்து
மட்டறவூர் சாந்த மகிழ்ச்சியாம் பாதம். (அ)

2948. சிவசொருபத் தன்றியருட் சித்தோப சாந்தி
யெவரிதயத் துக்குமென் றென்றுமிலாப் பாதம். (அ)

2949. சிவசத்தி யாகத் திகழ்வுறுசற் போதக்
கவசத்தி லென்னுயிர்க்குக் காப்பளித்த பாதம். (அ)

2950. மனோரதங்கை கூடு மகிழ்ச்சிசே ரின்ப
மனோகரமாத் துன்று மனோலயமாம் பாதம். (அ)

2951. நித்தசித்த மாந்தன் னிஜசொருப மாட்சியொடு
சுத்தசத்து வத்திற் சுடருமொளிப் பாதம். (அ)

2952. திருத்தக்க சாந்த விருத்திக்க ணன்றி
விருத்தமா மற்றிரண்டின் மேவலிலாப் பாதம். (அ)

2953. அறிவா லறிபடூஉ மவ்வனைத்தி னின்று
மறிவான தன்சொருப மன்னியமாம் பாதம். (அ)

2954. தன்னுண்மை மாத்திரமாத் தானொளிரவ் வாலறிவே
யென்னுண்மை யெனனுள் ளிலக்குவித்த பாதம்
(அ)

2955. எக்கலக்கத் தாடு மெனக்கோர் கலக்கமின்றென்
றொக்கவுணர் வித்த வுளப்பொருளாம் பாதம். (அ)

2956. நிருவிடய ஞானமே நித்தசுத்த மாந்தன்
சொருபவிஞ் ஞானமாத் துன்றுவித்த பாதம். (அ)

2957. அறியாமை யாக வயலுணர்ச்சி தன்னிற்
பிறியா தொளிர்சற் பிரம்மமாம் பாதம். (அ)

2958. அறிவான தன்மெய் யறியுங்காற் றன்னி
லறியாமை யென்றுமின் றும்பிரம்மப் பாதம். (அ)

2959. பொய்ம்மாய மாம்புன் புலவழிக்குச் சேணாக
மெய்ம்மாட்சி யோடுளத்து மேவுமொளிப் பாதம். (அ)

2960. உள்ளந் தொழுதசிவ யோக வுணர்ச்சியாற்
றெள்ளத் தெளிந்த சிவானுபவப் பாதம். (அ)

2961. அவத்தைகளிற் சித்த மழுங்கலுயிர் தன்மெய்ச்
சிவத்துணர்வைத் தீர்ந்தயலைத் தேர்ந்திடலென்
[பாதம். (அ)

2962. தன்சொருப ஞானத் தகவுகாண் சான்றோர்க்குத்
தன்மரியா தைப்பொருளாத் தக்கதாம் பாதம். (அ)

2963. பொன்றவகங் காரமதி பொய்த்தலை தன்சொருப
மொன்றுவதற் கான வுபாயமாம் பாதம். (அ)

2964. எதிமுனிக ளாலு மிலக்கணந்தன் னுண்மைக்
கெதிர்மறையா லன்றி யியம்பவொணும் பாதம். (அ)

2965. மோனமுறை யன்றிமற் றேனைமுறை தன்னடைவுக்
கூனமுற வோங்கு முபசாந்தப் பாதம். (அ)

2966. தெளிந்த வுணர்ச்சித் திறமான சாந்தி
யளைந்திடலை தன்மெய் யனுபவமாம் பாதம். (அ)

2967. ஒடுங்கி யமைந்த வுணர்ச்சியூ டுண்மை
யடங்குவதா நின்ற வகண்டவெளிப் பாதம். (அ)

2968. கண்டமாத் துன்று மகங் காரமதி செத்தவுளப்
பண்டமாத் துன்றுபரி பூரணமெய்ப் பாதம். (அ)

2969. ஊறுபட்டு நின்றபர முத்தியாந் தன்னுண்மை
ஈடுபட்டார் நெஞ்சி லிலங்குமொளிப் பாதம். (அ)

2970. நட்டவருக் கன்றி நயப்புச் சுவையுணர்ச்சி
மற்றவர்க்கின் றுனசிவ மாட்சிமைசேர் பாதம். (அ)

2971. கால விலம்பனந்தாஞ் செய்யக் கடவதன்றுச்
சாலவுநன் றுனசிவ சாந்தசுகப் பாதம். (அ)

2972. நிறைந்தவுப சாந்த நிஜானுபவங் கூரத்
திறந்தவெளி யாகத் திறந்தவுளப் பாதம். (அ)

2973. பிறவுணர்ச்சி யெல்லாம் பிழையுணர்வாப் பேர
வறிவுணர்ச்சி யாவென் னகத்தொளிர்மெய்ப் பாதம். (அ)

2974. அனந்தலாத் துன்று மவிச்சையில் லாதே
யனந்தசத் திக்குமே காசிரயப் பாதம். (அ)

2975. பிழைபடுத லில்லாப் பிரம்ம சொரூபத்
திழைபடுத லான வெனுதறிவுப் பாதம். (அ)

2976. விரத்யுற நீத்த விசுத்தரது நெஞ்சிற்
கரத்தலரு முண்மைக் கடவுளொளிப் பாதம். (அ)

2977. அபீஷ்ட நினை வான வகக்குறைகெட் டான்ற
வபீஷ்டசித்தி யாவென் னகத்தொளிர்மெய்ப் பாதம்.
(அ)

2978. நயத்தகுமெய் யன்பர்க்கு நல்குமரு ளாலே
யயத்தனமா வன்னு ரறிந்தடையும் பாதம். (அ)

2979. திகந்தமுந்தா மோடோடிக் தேடினுந்தன் னுண்மை
அகந்தைமதிக் கென்று மகப்படாப் பாதம். (அ)

2980. இருத்தலன்றிச் சும்மா விதயத்து நானென்
றுருத்துணர்த்தற் கொன்றுமிலா வுண்மையொளிப்
[பாதம். (அ)

2981. தனித்த முழுமுதலாந் தன்னிடத்தி னின்று
நினைத்தலுறின் யார்க்குமொரு நீக்கமின்றும் பாதம்.
(அ)

2982. படபடப் பின்றிப் பதவிசாந் தன்மை
கடவதாத் தன்னடையிற் காண்பிக்கும் பாதம். (அ)

2983. பிறவூறல் சற்றுநான் பெட்டறியா துள்ளத்
தறிவூற லாக வமைந்தசுகப் பாதம் (அ)

2984. நல்லசிவ ஞானவாழ் வல்லதுமற் றென்றிலவாப்
புல்லவுற வென்னிதயம் பொங்குமொளிப் பாதம். (அ)

2985. அகந்தைப் பதைப்பையடர்த் தான்ம சொரூப
சுகந்துய்ப்ப தாகவகந் தொக்கவருட் பாதம். (அ)

2986. எனைத்தழுவி யுள்ளம்பே ரின்புணர்ச்சி பொங்க
முனைத்தெழுவ தானபர மோனவொளிப் பாதம். (அ)

2987. பொங்குமகா யோகபரி பூரணம்பெற் றூரறிவுக்
கெங்குமக மாவொளிர்பே ரின்பவெளிப் பாதம். (அ)

2988. நிக்ஷேப மாந்தன் னிஜசொருப மாவரண
விக்ஷேப நீங்கில் விளங்குவதாம் பாதம். (அ)

2989. உழைக்கின்ற வுள்ளத் துபாசனையி னூடே
தழைக்கின்ற தன்சத் தரிசனமாம் பாதம். (அ)

2990. விடயத் தொடர்ப்பாடு விட்டறிவு தன்னுட்
படியக் கிடைக்கும் பரம்பொருளாம் பாதம். (அ)

2991. தன்செயாந் தந்நெஞ்சைப் புன்செயினுங் [கெட்டொழியப்
பஞ்சையார் போக்கலந்தோ பாவமெனும் பாதம். (அ)

2992. அவதரும மாம்பொய் யகந்தையற லேமெய்ச்
சிவதரும மாகச் சிறப்பதாம் பாதம். (அ)

2993. தனுஅது நிஜசொருப சத்துவபோ தத்தா
லனுதியகங் காரமகன் றன்பரடை பாதம். (அ)

2994. வேண்டிய தான விழுப்பதமே யென்னகமாக்
காண்டக நின்றவருட் கண்ணான பாதம். (அ)

2995. சிவத்துநினை வாவதுயிர்ச் சித்தத்து மற்றை
யவற்றுநினை வற்றவியல் பாமமைதிப் பாதம். (அ)

2996. இம்மா நிலத்தோரா மெம்மனோர் தன்னடியைச்
சும்மா விருந்துதொழச் சூழ்ச்சிசொன்ன பாதம். (அ)

2997. அஞ்ஞானக் கற்பனையா லாவரித்தாற் போலவியல்
சுஞ்ஞான மோன சொரூபமாம் பாதம். (அ)

2998. துப்புரவாத் துன்றுமொரு சொச்சொருப [மாவிருந்தே
முப்புடியாங் கற்பனையான் மூடுண்ட பாதம். (அ)

2999. பிறிவுபடச் சுட்டறிவாம் பேதைமைதன் மெய்யா
மறிவறிந்த மோனத் தனுபவமாம் பாதம். (அ)

3000. உபசமன மாமெய் யுணர்ச்சியே யாய்வார்க்
கபயபத மாக வருள்சுரக்கும் பாதம். (அ)

3001. சாந்த விருத்திசேர் சத்துவந் தம்மிதயம்
பாய்ந்தவருக் கஃதுபெரும் பாக்கியமாம் பாதம். (அ)

3002. பிறருக்கே யன்றித் தமக்குந்தாம் பொல்லார்
வெறியுற் றமைதிகெட்ட வீணரெனும் பாதம். (அ)

3003. எப்போ திலங்குமோ வெல்லாஞ்சிந் மாத்திரமா
வப்போதே சித்தமல மற்றதெனும் பாதம். (அ)

3004. சுட்டுணர்வு தன்னிலொரு முற்றுணர்வுண் [டேலதுவுஞ்
சிற்றுணர்வே பின்னத் திறத்தாலென் பாதம். (அ)

3005. மாயவாழ் வானபிர மாதமர ணப்பிழையைப்
போயொழிய வோட்டுபிர போதவருட் பாதம். (அ)

3006. அறிவே சிவமா வனுபவத்திற் காணப்
பெறிலகிலந் தானும் பிரம்மமாம் பாதம். (அ)

3007. சஞ்சலங்கூர் வாழ்வே சதாகதியாச் சாவதுயிர்
தன்சொருப வுண்மைநிலை தப்பலினென் பாதம். (அ)

3008. அடிப்படையாந் தன்மெய் யகண்ட விருத்திப்
படிப்பினையே யுண்மைப் படிப்பினையாம் பாதம். (அ)

3009. உய்விதுவென் றுள்ளத் துணர்த்தியனு பூதிசேர்
தெய்விகவாழ் வாகச் சிறக்குமொளிப் பாதம். (அ)

3010. அருளுக் கபிமுகமா நின்ற வுகந்தை
வெருள்சே ரிருள்போய் விளங்குறுமெய்ப் பாதம். (அ)

3011. ஊர்வழியா னோடி யுழலாதே தன்சொருபந்
தேர்வழியா வென்னுளத்து நேர்வழியாம் பாதம். (அ)

3012. சுத்தமெய்ஞ் ஞான சொருபமா மோனங்கூர்
புத்தருளங் கண்டசிவ போகமாம் பாதம். (அ)

3013. எண்ணுவ யாவு மிறையெணமாத் தன்னிழப்பிற்
பண்ணுவ யாவும் பரன்பணியாம் பாதம். (அ)

3014. அருள்வடிவா நெஞ்சிற் குருவடிவை நம்பித்
தெருள்வதுகாண் சச்சீடர் சீர்மையாம் பாதம். (அ)

3015. மதாசார மன்றுதன் மாட்டெணமே மிக்க
சதாசார மாகத் தருவதாம் பாதம். (அ)

3016. பாதமாந் தன்சொருப பத்தியின் சித்தியே
மோதமா மோனபர முத்தியாம் பாதம். (அ)

3017. கலங்ககந்தை தேறக் கடவதன் றுகப்
புலங்கடந்த வுண்மைப் பொருளான பாதம். (அ)

3018. மோனமே யெல்லா முயற்சியுங்கை கூடுபய
ஞனமே தக்க வருட்பரமாம் பாதம். (அ)

3019. தன்சொருப சத்துவத்தைத் தாங்கண்
[டமைந்துவிடிற்
பின்சருவு வஞ்சமயற் பேதமிலாப் பாதம். (அ)

3020. அறிவி லனைத்து மடங்கலா லந்த
வறிவே முடிந்தபர மார்த்தமாம் பாதம். (அ)

3021. அறிந்தவறி வெல்லா மறியாமை யாக
மறந்தொழிய வேண்டுமொரு வாலறிவுப் பாதம். (அ)

3022. கவலையே துக்கத்தின் காரணமாக் கண்டோர்
கவலையற வோய்ந்துசுகங் கண்டதிருப் பாதம். (அ)

3023. உதாரகுணத் தாலே யுரம்பட்ட ஞானிக்
கெதாகிலுநன் றன்றி யிளிவரலில் பாதம். (அ)

3024. வெறுவெளியே யாக விடுபட்ட நெஞ்சிற்
குறைவுநிறை வென்றுங் குறுகலிலாப் பாதம். (அ)

3025. அறிவுருவாந் தன்னை யலாதுமற் றெல்லா
வறிவுகளும் பொய்ப்ப வதீதமாம் பாதம். (அ)

3026. பாதமாந் தன்சொருப போதமே தான்சகல
வேதமுடி பானவருள் விஞ்சையாம் பாதம். (அ)

3027. புலங்களிலே யாசையறப் பொன்றினர்க் கெல்லா
நலங்களுமா வுள்ளத்து நண்ணுமொளிப் பாதம். (அ)

3028. அறந்தருமெய் யன்பரகத் தாசைபிற வற்றால்
வறந்தமனத் தாபமற மாற்றுகுளிர்ப் பாதம். (அ)

3029. கடமையெனும் பந்தமகங் காரமயக் காகத
திடமெயுணர் வுற்றவழித் தீர்வதெனும் பாதம். (அ)

3030. நோக்கமே மிக்க நொசிப்பாகப் பேரின்பத்
தேக்கமா வெண்ணுளத்திற் சேர்ந்தவருட் பாதம். (அ)

3031. அகாரமே போல வநாதியியல் பாக
விகாரமே யின்றி விளங்குமெய்ப் பாதம். (அ)

3032. மதுமயக்க மாம்பொய்ம் மறதிதீர்ந் தார்க்குப்
புதுமையறத் தோன்றும் பழமையாம் பாதம். (அ)

3033. போதாந்த மானசற் போதமா மோனமே
வேதாந்த வுண்மை விளக்கமாம் பாதம். (அ)

3034. வேறுபா டற்ற விளக்கத்தா லொன்றனொடும்
மாறுபா டற்று வழங்குறுமெய்ப் பாதம். (அ)

3035. சூனியம்போ லஞ்சிமனந் துஞ்சுவது மூடருயிர்
வானுருவாந் தன்சொருப வாலறிவாம் பாதம். (அ)

3036. அத்தியா சங்கா ணவித்தையனந் தானந்த
வித்தையே யுள்ளதொரு மெய்ப்பொருளாம் பாதம்.
(அ)

3037. சுத்தமெய்ஞ் ஞான சொருபமாய்ப் பேதமதி
பொய்த்தொழியப் போக்குபரி பூரணமாம் பாதம்.
(அ)

3038. யானற்றுச் செய்யுமவ் வெல்லாமே சுத்தசிவ
மோனத் துபசாந்த மூர்த்தியாம் பாதம். (அ)

3039. அயர்வற வுண்மை யறிந்த பதத்திற்
பெயர்வடி வெல்லாம் பிரம்மமாம் பாதம். (அ)

3040. வாழ்க்கையிலே யென்னைமுன் மாட்டினாற் [போன்றருளாற்
றாழ்க்கையறப் பின்பு தடுத்தாண்ட பாதம். (அ)

3041. ஆத்தரைத்தான் காப்பதா வன்றருளிச் செய்தவொரு
வார்த்தையைத்தா னென்றும் மறத்தலிலாப் பாதம். (அ)

3042. எந்தப் பொறுப்புந்தன் சொந்தப் பொறுப்பன்றிச்
சிந்தைப் பொறுப்பெனக்கில் சிற்பரமாம் பாதம். (அ)

3043. ஏழைபடும் பாட்டுக் கிரங்கிப்பே ரின்பமுறப்
பீழைகெடுத் தாண்ட பெருங்கருணைப் பாதம். (அ)

3044. ஊனக் கலக்கமற வுள்குமெய் யன்பருண்மெய்ஞ்
ஞானக் களிசெய் நமசிவயப் பாதம். (அ)

3045. உம்பரார்க் கும்பரா னிம்பரோ முக்குமிக்
கிம்பரா னாக வெளிவந்த பாதம். (அ)

3046. சொல்வரவு கூறித் தொழும்பரோ முள்ளத்து
நல்வரவா வந்தபெரு நல்விருந்துப் பாதம். (அ)

3047. சரசவித்தை யாகத் தகிருணர்ச் சிக்குப்
பரசிவத்து ஞானப் பயிற்சியருள் பாதம். (அ)

3048. எல்லாங் கடவுள்செய லென்னுமனப் பான்மையிலே
நல்லாங் கெனைநடத்து நாயகப்பொற் பாதம். (அ)

3049. அழிம்பனா மென்னை யழகாநான் மாற்றித்
தொழும்பனாத் தன்புகழ்த் தொண்டுகொண்ட [பாதம். (அ)

3050. இன்பவளம் பொங்க வீதயத்து நான்மகிழ
நன்பவள வண்ணனா நன்றேவிர்பொற் பாதம். (அ)

3051. அருட்பயனு வுள்ளத் தவிர்கின்ற சுத்த
வருட்பரமா முண்மைஞா னந்தப் பாதம். (அ)

3052. தனைத்துருவி யுள்ளந் தலைப்படுவ தாக
வனைத்துயிர்க்கு மொக்கவே கான்மாவாம் பாதம். (அ)

3053. பரவெளியே கண்ணுப் பரத்தலாற் சுட்டற்
றரவொளியா நீடு முபசாந்தப் பாதம். (அ)

3054. அருட்காட்சி யாகவிளங் கான்றசிவ போதப்
பொருட்காட்சி துன்றுமுளப் பொற்கமலப் பாதம். (அ)

3055. ஆன்ம சொரூப வவிரொளியாற் சிற்பா
வான்மயமா விவ்வுலகை மாற்றுகுரு பாதம். (அ)

3056. பரிசுத்த மானபர பத்தியாற் றன்னைத்
தரிசித் தவரகத்துத் தன்மயமாம் பாதம். (அ)

3057. ஆவேச மான வகந்தைமுனைப் பற்றகத்திற்
சாவே சமாதியாத் தக்கசிவ பாதம். (அ)

3058. உன்மாத மாம்பொய் யுளறுபடி வாழ்க்கைமயல்
வன்மாயஞ் செற்று வதைக்குமொளிப் பாதம். (அ)

3059. என்றென்றிம் மாலேபுகன் றேத்திவனைந் தாருளத்துத்
தொன்றென்றுந் தன்சொருபந் தோயவருள் பாதம். (அ)

திருச்சிற்றம்பலம்

## பரிஸமாப்தம்

### 1. அருள்விளையாட்டுப் பாராட்டு

(அருள் வெற்றியை அதிசயித்தல்)

(வெண்பா)

1. தான்றன்னைப் பாடியதாச் சாற்றலே தக்கதன்றி
யான்றன்னைப் பாடியதா வெண்ணலெவன்—
[என்றென்னுட்
கோலா கலமாக் குலவுந்தன் சிற்சத்தி
லீலா விநோத மிது.

### 2. வாழ்த்து

(கலிவிருத்தம்)

2. வாழிமறை வாரிவளம் வாழிமனு நீதிமுறை
வாழிதவ தானவகை வாழியுப காரகுணம்
வாழியல மென்னுமதி வாழியுப சாந்தமகிழ்
வாழிகுரு பாதவொளி வாழியடி யாரினமே.

(வேறு)

3 வாழிய செம்மலைத் தென்பா ரிசவடி
வாரத் தெழில்வள ராச்சிரமத்
தூழிதோ றூழி யுகம்பல கோடி
யுலப்பிலா தென்னை யுடைப்பதமே

(வேறு)

4. மருண்ஞான பசுபாச வறள்சாய வுபதேச
[மழைமாரிபெய்
யருண்ஞான குருபீட மடியார்கள் குடிவாழ
[வரசாள்கவே.

## 3. தனி

(வெண்பா)

5\. வெருவருமா லாற்று விகற்பமற மாற்றிப்
பொருவருமெய்ஞ் ஞானவொளி பொங்கும்— [குருவுருவின்
ஞாயிறெழுத்தெஞ் ஞான்று நடந்தொளிர்ஞா [ஞன்மபதத்
தாயிரத்தைஞ் ஞூற்றைம் பது.

## 4. கிளிக்கண்ணிமாலை

**ஆண்டானே டென்னை அகத்திற் கூட்டி
அகண்டான்மசுக மளித்த அருட்பராசத்திக்கு
அர்ப்பணம்**

(கலிவிருத்தம்)

6\. கிளிக்கண்ணி மாலையுயிர்க் கேள்வனே [டிவ்வடியேன்
அளக்கொணு வின்ப மனுபவிக்க வென்னகத்து
விளக்கமாச் சேர்த்தவருள் விஞ்சை [விநோதினிக்குக்
களிக்கணெழு நன்றிக் கருத்தாற் பொருத்தினனே.

உ

சிவமயம்

# 3. சரணத் திருவகவல்

(நேரிசையாசிரியப்பா)

திருச்சிற்றம்பலம்

## திருவவதாரச் சிறப்பு

அருள் விளையாட்டுக் கரங்கமா விந்த
மருள்வை யகத்தை மகிழ்ந்தாய் சரணம்
உத்தரம் பெற்ற வுயர்ச்சியை யுண்மையே
தக்கிணம் பெற்றுத் தலைசிறந் தோங்க
உயரிய விண்மணி யுற்பவித் தாங்கே 5
ஜயஜய நின்னவ தாரச் சிறப்பாற்
புவிமகள் சென்னியிற் பொன்னடி சாத்திக்
குவிமலி பாவங் குலைத்தோய் சரணம்
மலர்கலை ஞால மயங்கிருள் பாறப்
புலர்தலை மிக்குப் புரிந்தோய் சரணம் 10
அரைமாத் திரையி னருத்தமாப் போற்றும்
பரமார்த்த மோனப் பதத்தாய் சரணம்
பாண்டிச் சுழியற் பதியோ டருணையை
ஈண்டித் தொடர்புற யாத்தோய் சரணம்
கமனிய மாவென் கருத்தைக் கவர்ந்த 15
ரமணிய பாத ரமணா சரணம்
முனிநா யகமா முளைத்துல கெல்லாந்
தனிநா யகஞ்செய் சகிரா சரணம்
விழுமிய செம்பொருள் வித்தக ஞானம்
கெழுமிய சோண கிரீசா சரணம் 20

## புராதனச் சிறப்பு

இமயப் பொருப்பி னிமையவர் போற்ற
உமையோ டமர்ந்த வுறவா சரணம்

தொல்லும் புவிக்குந் துறக்கவிட் டுக்குயே
நல்லைம்மை யப்பனு நம்பா சரணம்
தரணமா வேதந் தலையாற் பணியும் 25
புரணமாம் போதப் பொருளோய் சரணம்
சூதா மயக்கச் சுழற்சிப் படர்கெட
வேதா கமங்கள் விரித்தோய் விரித்ததால்
ஓர்மொழி மோனப் பனுவற் கோராயிர
ஏர்மொழிப் பாயிர மீந்தோய் சரணம் 30
நோக்குவாய் நோக்குறு நோக்கத் திலேசானே
ஆக்குவாய் காப்பா யகில மடங்கலும்
ஊழிநாட் டன்னு ளுருத்திரம் பொங்கிவெந்
நூழிலாட் டுச்செய் நொடியா சரணம்
ஊடிய மோடியை யூர்த்துவ தாண்டவம் 35
ஆடி யடர்த்த வடியா சரணம்

### சொரூபச் சிறப்பு

மருட் புலந் துன்று மனக்கற் பனைதீர்
அருட் பொலஞ் சோதி யடியா சரணம்
பொன்மய மானபல் பூண்போ லகிலமும்
தன்மய மாகத் தழைத்தோய் சரணம் 40
அகிலமுந் தானு மகண்ட விருத்தி
முகுள முறுமுழு மோனு சரணம்
திருவரு ளின்பத் திகழ்ச்சிசேர் பாதத்
துருவிய வெண்ணி லுலகா சரணம்
குடும்ப சுகத்தைக் குதூகல மாக 45
உடும்பெனப் பற்று முளத்து வெளிற்றர்க்
கரும்பெற லின்பத் தழிவில் சொரூபக்
கரும்பா கடவுட் கனியா சரணம்
பிராப்பிய மாகப் பிறங்குசச் சித்தாம்
பராற்பர தம்ம பதத்தாய் சரணம் 50
மன்னிய வின்னருள் வாய்ப்புற் றிதயத்தே
தன்னிய லாய்ந்து தலைப்பட்ட மன்னுயிர்
நிம்மதி முற்ற நிகழ்சிற் பரானந்த
தம்ம பதமலர்த் தாளா சரணம்
காலமே தானுக் கலந்தோய் கழிவிலா 55
வால வடிவென் றும் வாய்ந்தோய் சரணம்
வேறு படாத வியன்பர மாவிளங்
கூறு படாத வுடம்பா சரணம்

மூண்டார்த் தெழுங்கொழு மோக வகந்தையர்
தீண்டத் திருமேனிச் செம்மான் சரணம் 60
வான்மதி வெள்க வனந்தங் கலைவளர்
மோனமே யெந்தை முகங்காண் சரணம்
அம்முகா லோபனஞ் செய்தார் பராமிர்த
தம்மகா யத்தாற் றழைப்பார் சரணம்
மோனக் கடலின் முளைத்த குளிர்மதி 65
யானநின் கண்ணேக் குமுதாஞ் சரணம்
இதய முடிச்சை யிறப்பிளக் குங்கூர்
நுதியமர் வாள்விழி நோக்கா சரணம்
அலங்கலி னென்று மராப்புல னின்றித்
துலங்குமெய்ஞ் ஞான சொருபா சரணம் 70
ஆய்ந்தநெஞ் சத்தே யறிவுண்மை யாவகம்
தோய்ந்து விளங்கு சொருபா சரணம்
எழுநாக் கிளர்வுற் றியல்வாக் கொளிரத்
தொழுநா வகத்துச் சுழல்வோய் சரணம்
இகத்தும் பரத்து மிகத்தலில் லாத 75
சுகத்துரு வான சொருபா சரணம்
அமங்கல மான வவிச்சைதீண் டாத
சுமங்கல ஞான சொருபா சரணம்
அறிவொளி யான்மெய் யழகுபெற் றோங்கும்
திறவெளி யாய சிவத்தோய் சரணம் 80
அழகுங் குழகு மொருங்குட ஞடி
விழைவருள் செல்வ விமலா சரணம்
களஞ்சிய மாகக் கலைபல வற்றின்
வளஞ்சிறந் தோங்கு மனத்தாய் சரணம்
கலைக்கள மான கருத்தொடு சாந்தி 85
நிலைக்கள மாநிகழ் நெஞ்சா சரணம்
சித்தம் பரசிவ மாகச் செழித்தொளிர்
வித்தக ஞான வியோமா சரணம்
அமித வருட்பே ரறிவொளி யான
அமுதப் பெருவெளி யம்மான் சரணம் 90
யானறத் தானு வியல்வுறுந் தற்பர
வானிற் றிளைக்கு மனத்தாய் சரணம்
வாலறி வாந்தன் மகிமையே வாய்த்தமெய்
யாலய மாக வமர்வாய் சரணம்

அறிவாய்ச் செறிவா யவிர்மெய் யகத்தூ 95
டுறைவா லறிவா முளவா சரணம்
அறிவுக் கறிவா மறிவை யறிவித்
துறவுக் குறவா முளத்தாய் சரணம்
அறிவிலே யாவுமொன் றுவொடுங் குள்ளச்
செறிவில் வெளிப்படு தேசா சரணம் 100
போதாந்த மோனப் பொருளா வுளத்தொளிர்
வேதாந்த வுண்மை விளக்கா சரணம்
சிந்தா குலஞ்செய் தெருமரல் போக்குறும்
நுந்தா மணிவிளக் கெந்தாய் சரணம்
யாண்டைச் சுடர்மூன் றிலக்கங் கெடுபவோ 105
ஆண்டை யறிவொளி யம்மான் சரணம்
இருண்ட தெலாம்பே யெனும்புன் மயல்போய்த்
தெருண்ட மனத்துறை தேவா சரணம்
பகட்டு மனக்கற் பனைதீ ரிதயப்
பொகுட்டு மிசைச்சேர் புனிதா சரணம் 110
தியானத்தாற் சித்தத்து வாதனை மாண்ட
மயானத்தே யாடி மகிழ்வாய் சரணம்
திருத்தமாச் சித்தந் தெளியக்கா லூன்றி
நிருத்தம் புரியு நிமலா சரணம்
உபாதியி னன்றி யொளிர்சிற் பரத்து 115
விவாதித்தற் கில்லா வெளியா சரணம்

உருவகச் சிறப்பு

இன்பமொ டன்பொருங் கேய்ந்த கடைக்கணின்
மன்பதை யோம்பு மகிபா சரணம்
பற்றலும் பற்றப் படலுமா மின்னருட்
கொற்றங் குலவுறுங் கோமான் சரணம் 120
தேடா தடைந்த திருவருட் செல்வஞ்சேர்
வீடா மிதயத்து வேந்தா சரணம்
மகிதலத் தோரை மயக்கி வருத்தும்
பகைமலி மாயப் படையைச் செகுத்து
விளங்குமெய்ஞ் ஞான விறல்வெற்றி வீரர் 125
தளங்குலவு சேனைத் தலைவா சரணம்
செயற்கருஞ் செய்கை திறன்படச் செய்து
மயக்கற முற்றிய மள்ளா சரணம்
நிலையார்ந்த ஞான நிறையார்ந்த செவ்வா
பலிதேர்ந்து வாழுங்கா பாலீ சரணம் 130

சிற்கன மாகத் திகழ்விசும் பாமிகச்
சிக்கன வாழ்க்கைசேர் செல்வா சரணம்
செந்தண்மை பூண்ட திறத்தாற் சிறந்தமெய்
யந்தண ஞவோங் கறவோய் சரணம்
உளத்தைக் களைகட் டுழுதுசிவ போகம் 135
அளித்தருள் சீலவே ளாளா சரணம்
ஒருவனு மன்னி யுணர்வைவே தித்த
சொருபனு மென்னுளச் சோரா சரணம்
அருட்குல மாமெய் யடியவ ருள்ளத்
திருட்குலஞ் சாய்க்கு மிரவீ சரணம் 140
மறங்கிய மாந்தருன் மாதம் பிளக்கப்
பிறங்கிய சாந்தகம் பீரநோக் காலே
மதக்களிற் றியானை மணந்திடுக் கிட்டுக்
கதக்களி சாக்கடி சிங்கா சரணம்
உலக மயக்கிரு ளூடு கடந்து 145
குலவு சிவச்சுடர்க் கோமான் சரணம்

## திருவியற் சிறப்பு

வான்மகத் தாக வகைப்படச் செய்தநின்
ஆன்மத் தியாக மரிதாஞ் சரணம்
ஒன்றிரண் டாக வுநவெடுத் தொன்ருெடான் 150
றன்றிமிண் டாடுவல் லாட்டா சரணம்
ஒத்த வுணர்ச்சியி னொன்றுபட் டன்பொடு
மெத்தென வாழும் விநோதா சரணம்
சத்தித் திறத்தொடு சார்ந்த வியைபுகொண்
மத்திறத் துன்னை யியம்புவ ரேனும்
விசித்திர சத்தி விலாசமல் லான்மற் 155
றிசைத்த வியல்பொன் றுமில்லாய் சரணம்
வேருப் புறத்த விளையா டினுந்தனி
வீறுன்ம வத்துவா மிங்காய் சரணம்
உலகம் பரத்தை யொழிந்துவே றுகா
திலகம் பரமா மியல்பா சரணம் 160
உலகில் விழியா யுறங்காய் சொருபத்
திலகு விழிப்பா மியல்பா சரணம்
தத்துவ சுத்தமாந் தற்பர சிற்பர
தத்துவ மாகத் தழைப்போய் சரணம்

சாதக சாத்தியந் தம்மிலை வேற்றுமை 165
ஓதலுன் மெய்யோ டுறழ்வாஞ் சரணம்
அன்பே சிவமா யறிவே வடிவமா
இன்பேழ் கடலா மிறைவா சரணம்
பாணினும் பாட்டினும் பாலினுந் தேனினும்
தாணினுந் துய்யினுந் தொக்காய் சரணம் 170
பரியா யணுவினு நுண்ணியாய் பார்த்தாற்
கரியா யெளியா யடியேன் சரணம்
உறமுங் குணம்பல வெம்மனோர் புத்தி
பிறமும் படியுடைப் பெம்மான் சரணம்
பெத்தனு முத்தனு மாகப் பிணங்குநின் 175
எத்தினை யாவரே தேர்வார் சரணம்
செய்துநீ செய்யாய் செயாதுநீ செய்வாயேல்
ஐதுநீ யாற்றுவ தையா சரணம்
தெரிவனு நீயே தெரிப்பனு நீயே
தெரிவுநீ தானைத் திகழ்வாய் சரணம் 180
சரணிய னீயே சரணு கதனுஞ்
சரணமு மாகத் தழைத்தாய் சரணம்
கதுவொளி யொன்றயல் காணு விசுத்தப்
பொதுவெளி யாகப் பொலிவோய் சரணம்
துருவுளத் தான்ம சொரூபமா முண்மைத் 185
தெரிவள வாகத் திகழ்வோய் சரணம்
சித்தமில் சுத்தசச் சித்தா மியல்புகொண்
டொத்தநோக் காலொன் றெடுந்தான் படாதே
மருண்டுந் தெருண்டு முயிர்செல் வழியாம்
இரண்டினுஞ் சான்று யிருப்போய் சரணம் 190
இன்பதுன் பங்க ளிருவினைப் பாங்குற
மன்பதுக் கூட்டி மகிழ்வோய் சரணம்
ஒருதலை யாமெய் யுணர்வன்றி யுள்ளத்
திருதலைக் கற்பனை யில்லாய் சரணம்
சச்சிதா னந்தமாந் தன்னின் மறுதலை 195
குச்சிதா கந்தைக் குடில மனத்தின்
வறுங்கற் பனையா வழுக்கி யிழுக்கப்
பிறங்குசுத் தான்மப் பெருமான் சரணம்
கிறிசே ரவிச்சைக் கிழங்கா மகந்தை
வெறியோ ரறியா நெறியாய் சரணம் 200

களவுறு மோகக் கருத்தா மகந்தை
அளவிய காட்சிக் கமையாய் சரணம்
சேவடிக் கூஞ்ஞய்த் தியானத்தே நான்கெடச்
சாவிடந் தானுத் தழைப்போய் சரணம்
உதயமோ டத்த முறுதே யிதயத் 205
திதயமா நின்றேங் கிறைவா சரணம்
முன்னடி யாக முயங்குசச் சித்தெனுத்
தன்னடி யாய சமஸ்தா சரணம்
சன்னிதி சாருமோர் சாதன மன்றிமற்
றன்னியம் வேண்டா வருளா சரணம் 210
காண்டலே யன்றிக் கருதலு முட்பட
வேண்டலில் லாத விசதா சரணம்
கலிநலிந் தேங்கக் கதிர்கா லருட்செம்
மலேமலிந் தோங்குமெய்ம் மாண்பா சரணம்
நின்னியல் கண்டவர் நீர்மையு நேர்மையும் 215
இன்னதென் றெங்ங னிசைப்பேன் சரணம்

## ஞானத்திருக்கோலச் சிறப்பு

ஒத்தின் முடியா முபநிடக் காட்சிக்கு
நேத்திர மாய நிரதா சரணம்
வளத்தெளி வாம்பர வாழ்க்கை முதலா
உளத்தொளி நுண்மை யுணர்வா சரணம் 220
காவிய நுட்பக் கருத்தொடு கைபுனே
ஓவிய நுட்ப வுணர்வா சரணம்
அரங்கொடு காண்பார் நடர்நட மெல்லாம்
ஒருங்கொளி தானு மொருவா சரணம்
தாயக மோடு சகலஞா னத்துக்கும் 225
நாயக மாம்பிரஞ் ஞானு சரணம்
கடபட ஞானங் கழிந்தசுத் தான்ம
திடஞான மோனத் தெளிவா சரணம்
அறிவெனத் தோற்றினு மல்லா வகத்தை
அறிவுறுத் துண்மை யறிவா சரணம் 230
தொகத்தத் துவங்கடோன் றுந்தா யகமா
அகத்தே யவிர்வா லறிவா சரணம்
கோலா கலமாக் குலவுந் திரிபுடிக்
காலா கலமெய் யறிவா சரணம்

## திருப்புகழ்ச் சிறப்பு

தன்னை நிகர்ப்பவர் தன்னினும் வேறின்றி 235
நின்னைநீ தானே நிகர்ப்பாய் சரணம்
சேதன சுத்தமாத் தீர்ந்ததா னேதனக்
காதன மாக வமர்ந்தாய் சரணம்
வினீதமாத் தன்னிற்றன் வீற்றிருந் தாற்றும்
விநோத மகத்துவ மிக்காய் சரணம் 240
பகுதி விகுதி யெனும்பாற் படாதே
வெகுவித மான விலாசா சரணம்
திருமா வளவர்தஞ் செல்வமென் றியார்க்கும்
உரிதாய ஞான வுதாரா சரணம்
தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன் 245
எனக்கிளர் வண்புக ழெந்தாய் சரணம்
இருள்சே ரிருவினை யெய்தா விறைநின்
பொருள்சேர் புகழ்புரிந் தோர்பாற் சரணம்
துயர்க்குல மாமுடற் றுச்சி லிருந்த
உயிர்க்குப் புகலா முடையாய் சரணம் 250
புவன மனைத்தும் புரப்பதுன் சுத்த
மவுனத் திருவருளே மாண்பாஞ் சரணம்
நின்னடி தாழ்ந்தோர் நிமிர்வா ருளங்களி
மன்னிட வாழ்த்தினோர் வாழ்வார் சரணம்
வஞ்ச மகன்ற மனமொழி மெய்யர்தம் 255
நெஞ்சமு தஞ்சமு நீகாண் சரணம்
அனந்த வித்தா லனந்தனே தான்சொல்
லினுந்தன் புகழ்க்கெல்லை யில்லாய் சரணம்
நேதியா லுன்னை நிகழ்த்துவ தன்றிமற்
றியாதினு லுங்கூற் றியலாய் சரணம் 260

## பொதுவிலருட்செயல்

சிற்பத் தொழினுட்பஞ் சேர்மாயைத் திட்பந்தாற்
கற்பித் துலகுயிர் காப்போய் சரணம்
நனுமகன் கண்ணே கனுவிற்பல் பேதம்
எனுமனக் கற்பனை யின்றிறத் தாலே
துவிதமல் லாநின் சொருபத்தின் கண்ணே 265
விவிதபே தந்தோற்று விப்போய் சரணம்
மனோகர மாப்பா மரர்க்கணி மாதி
தனுகர மாகத் தழைப்போய் சரணம்

மாட்சிபோற் றேன்றி மயங்குவ யாவுமெய்க்
காட்சியா லாட்சிகொள் கண்ணு சரணம் 270
சித்தமில் சுத்தசச் சிற்பர மாயநீ
புத்தனு மூடனும் போல்வாய் சரணம்
அகலிடத் தெல்லார் தமக்கும் பொதுவாம்
புகலிட மாவொளிர் புத்தா சரணம்
அழுதகண் ணீரி லமர்வோய் வழுத்தித் 275
தொழுதகை துன்பந் துடைப்போய் சரணம்
நறவந் தெவிட்ட மெய்ஞ் ஞானனுபூதி
அறவந் துணருக் கருள்வோய் சரணம்
களைக்குமன் பான்மகிழ் மாணடி யார்க்கு
விளைக்குமா னந்த மிருடா சரணம் 280
மதுகுணத் தாலே மடுத்தார் மனத்தைக்
குதுகலஞ் செய்யுங் குணளா சரணம்
ஓலமிட் டாருக் குறுதி பயத்தலிற்
சாலச் சிறத்தமெய்ச் சான்றேய் சரணம்
பத்தி வலைக்கட் படுவோ யருட்பெரு 285
வித்தை வலைக்குட் படுப்போய் சரணம்
கருணு கரனைக் கலிகடிந் தாளுந்
தருணு ருணமணித் தந்தாய் சரணம்
புத்தகந் தீண்டாதே புந்திக் கனுபவ
வித்தக ஞானம் விளைப்போய் சரணம் 290
விலைபக ராதே யிலவச மாகக்
குலவுமெய்ஞ் ஞானங் கொடுப்போய் சரணம்
இதயம் புகுதற் கியானு ரெனவே
ததியர்க் கொருமொழி தந்தோய் சரணம்
மம்ம ரறுக்கு மருந்கா முணர்ச்சிபின் 295
இம்மையே யம்மைநன் கீவோய் சரணம்
தவக்கொழுந் தாச்சுடர் தத்துவ ஞான
சிவக்கொழுந் தாத்திகழ் சிட்டா சரணம்
உண்மைப் புலவ ருளத்தை நிறைப்பதில்
வண்மைபெற் றேங்கு வளத்தாய் சரணம் 300
நோற்றூர் தமக்கு நுனித்துணர் பார்வையிற்
நேர்மா வுண்மை தெரிப்போய் சரணம்
உள்ளுநரா ருள்ளத் துளனு னொவொளி
தெள்ளுநான் மாவாத் திகழ்வோய் சரணம்

தானேதா மாகவுந் தாமேதா னாகவுந் 305
தேனேபோ லன்பரைச் செய்வோய் சரணம்
உனைக்கும்பி டன்பரை யும்பரோ டிம்பர்
இனிக்கும் பிடவைக்கு மெந்தாய் சரணம்
அத்தக நிற்கு மடியார்க் கனுபவ
வித்தக ஞானம் விளைப்போய் சரணம் 310
திண்ணிய ராவுனை யெண்ணியே சித்தத்து
நண்ணியார் தம்மை நயப்போய் சரணம்
உளக்கோயிற் கண்ணே யுபாசிப்போர்க் காற்ற
விளக்கமா யின்பம் விளைப்போய் சரணம்
கருத்தோக்க வெண்ணினர் காமங்கை கூட்டும் 315
திருத்தக்க தேவாதி தேவா சரணம்
புல்லரை யில்லது போற்று மயக்கற
நல்லருள் வண்மைகூர் ஞானா சரணம்
இகழ்ச்சிசேர் புந்தி யிருட்டை வெருட்டும்
திகழ்ச்சிசேர் ஞானத் திரளா சரணம் 320
கற்பனை யாலே கலங்கு மனோமயச்
சற்பனை மாய்க்குஞ் சதுரா சரணம்
பாப மனைத்தும் பறக்கடித் தாருயிர்த்
தாப மனைத்துந் தணிப்போய் சரணம்
விண்மணி யாக விளங்கியே விஞ்சைசேர் 325
கண்மணி யாகக் கலப்போய் சரணம்
பல்வகை யின்பும் பரசுக வெள்ளத்தின்
சில்வகை நொப்புத் திரள்காண் சரணம்
பொருட்பாகு பாடா மகம்புற மென்ப
அருட்பார்வை தன்னி லயிக்கஞ் சரணம் 330
அகமே புறத்தை யறத்தன் மயமா
முகம்புரிந் தாளு முழுவா சரணம்
மறைப்பொரு ளாநின் வடிவமே யின்பத்
துறைப்பொரு ளாகத் துணிந்தேன் சரணம்
முப்புடி தன்னை முறியடித் தோட்டுறும் 335
செப்படி வித்தைத் திறத்தோய் சரணம்
முடியடி காண முடியா வுளத்து
முடிவிடு வித்தருண் மோனா சரணம்
சிந்தை யிலாவருள் செய்கை குணமன்றி
எந்தை பிரானுக் கியல்பாஞ் சரணம் 340

### குறையெடுத்துரைத்தல்

துயக்கரி தான சொரூபமா வுள்ளத்
துயிர்க்கரி யாக வுறைவோய் சரணம்
என்குறை யான்சொல வெண்ணுமுன் னேயதை
அங்குறை நீயே யறிவாய் சரணம்
உடலைநா னென்றுவந் தோம்பினேன் மோகக் 345
கடலைநா னெங்ஙன் கடப்பேன் சரணம்
மாயா விலாச வறுங்களு வூடறிவில்
சேயா வலமரல் சேர்ந்தேன் சரணம்
சிவத்தே யழுந்தித் திளைத்தற் கறியேன்
பவத்தே யழுந்தப் படிந்தேன் சரணம் 350
அழுதழு தன்பா லகங்கசிந் தாரத்
தொழுதுன் சொரூப சுகந்திளைக் காதே
உழுதசால் பின்னு முழுதைம் புலத்தே
பொழுதுவீண் போக்கிய புல்லேன் சரணம்
தெரியேன் சொரூபந் திளைக்கு முபாயம் 355
தரியே னருட்பெருந் தக்காய் சரணம்
பொல்லாப் புலத்திற் புலம்பினேன் புண்ணியா
கல்லா மனத்திற் கடையேன் சரணம்
நித்திய நைமித் திகநிய மக்கடன்
பொய்த்தியல் புந்தியிற் புல்லேன் சரணம் 360
செயத்தக்க செய்யாத் திறத்தாற் கெடுவேன்
செயத்தக்க வல்லவுஞ் செய்தேன் சரணம்
ஒருக்கமில் லாத வுணர்வாற் புலத்தில்
வெருக்கொள வோடி வெறித்தேன் சரணம்
இன்பவீ டான விதயம் புகுந்திடென் 365
றன்பா லடித்தடித் தக்காரந் தீற்றி
விடயத்தி னின்று விமுகமா தற்காத்
தடைபற் பலவாற் றகைந்துழு திப்பட
நல்லதுக் காநீ நவிற்று மவற்றைநான்
அல்லதுக் கென்றுழுந் தாய்ந்தேன் சரணம் 370
என்னைநீ நின்பா லிழுக்கவுந் தொன்றுதொட்
டுன்னையே மாற்றி யுறழ்ந்தேன் சரணம்
அதனாலே வன்கண னுவனை நாயேன்
கதனாலே வைதேன் கமிப்பாய் சரணம்
என்னை யகந்தையால் யானே தனைந்துகொண் 375
டுன்னையே நிந்திக்க லுற்றேன் சரணம்

உடலநா னென்னு முணர்வா மகந்தைப்
படலமா யத்தாற் பதைத்தேன் சரணம்
சித்துநா னென்னுந் திகழ்ச்சியாற் புந்தியைப்
புத்துணர் வாகப் புதுக்காய் சரணம் 380
களிமயக் காமகங் காரத் திறத்தால்
வெளிமயக் கத்து விளிந்தேன் சரணம்
மோனியா நிற்கும் முறையிற் பிறழ்ந்துமெய்ஞ்
ஞானியே போல நடித்தேன் சரணம்
பரவெளிப் பாடே பயின்றிட லின்றி 385
உருவெளி யூடே யுழன்றேன் சரணம்
அகட விகட வகந்தை யறவே
துகளறு போதந் துலக்காய் சரணம்
முளைமதி தன்னை முழுமதி யாகத்
திளைசடி லாவெனைத் தேற்றாய் சரணம் 390
மறிவறி யாதே மயங்கினேன் ஞாலத்
தறிவறி யாமை யறியேன் சரணம்
அருத்தவா தத்தை யறுதியா முண்மைத்
திருத்தமாத் சேர்ந்து திகைத்தேன் சரணம்
சச்சித்தா முன்னைத் தணந்த மறவியின் 395
அச்சத்தா லுட்கி யலந்தேன் சரணம்
ஏதத்தின் மிக்க விறப்புண்மை யாம்பிர
மாதத்துக் குண்மை மருந்தா சரணம்
கழிவிரக் கத்தாற் கடவதின் றேனும்
பொழிவிரக் கத்தாற் பொலிவேன் சரணம் 400
செம்மைசேர் பாதத் திருவரு ளன்றிநான்
எம்மையு மோர்பற் றிலாதேன் சரணம்
ஆண்டிட வென்னை நீ யாய்தலு நின்னையென்
ஆண்டவ னாக வறிந்தேன் சரணம்

முறையிட்டிரத்தல்

ஆவா வழிந்தே னடிகட் கபயநான் 405
சாவா மருந்தாத் தழைத்தோய் சரணம்
உபாதிக்கே யுண்மை யுதவுறும் பொல்லாக்
கபோதிக்குக் காட்சி யளித்தாள் சரணம்
நோக்கமே தீக்கையா நோக்கிக் கடைக்கணின்
ஆக்க மளித்தரு ளாசான் சரணம் 410
கண்ணிருந் துங்குருடிக் கண்ணே விழுந்தழும்
மண்ணனென் றென்னை மறாதே சரணம்

ஆணனென் றுனு மறிவறி யாதுழல்
வீணனென் றென்னை வெறுதே சரணம்
இதமெனு வெண்ணி யிரப்பவற் றுள்ளே 415
எதனை நீ நல்கா தெனக்கு மறுக்கினும்
உன்னை வணங்கு முரிமையை மட்டுநீ
என்னிடத் தென்று மறுதே சரணம்
அளியனு வுன்னை யடைந்தே னகிலக்
களைகணு நீயே கதிகாண் சரணம் 420
போத மலங்கப் புறப்படும் பல்வகை
வாதனை யாலே வலிதடர்ப் புண்ட
நெருக்கடி தீர நினைந்துன் னடிக்கீழ்
அருட்குடி யாக வடைந்தேன் சரணம்
கலித்தளைப் பட்டுக் கலங்கினேன் சித்தம் 425
சலித்திளைத் துன்னடி சார்ந்தேன் சரணம்
உனைச்சரண் புக்கார்க் கொராளுேர் குறையும்
தினைத்துமின் றுநன்கு தேர்ந்தேன் சரணம்
அண்டர்க்கு மிக்கபே ரண்டனு நின்னடித்
தொண்டர்க்குத் தொண்டனேன் சோத்தஞ் சரணம் 430
பின்னப் படாநின் பெரும்பூ ரணவருள்
வன்னப் படமனம் வாங்காய் சரணம்
அருளாடக் கூறு யறுக்கப் படினே
பருளுடைச் சித்த மலங்கெடு மன்றிமற்
றென்று லதனை யிறுத்தலெவ் வாற்றனும் 435
என்றனு மாவ திலைகாண் சரணம்
குள்சையே நெஞ்சொடு கொஞ்சுமன் பாவணிற்
குஞ்சுபோல் யானுமோர் கொஞ்சன் சரணம்
பிஞ்சிமற் கெஞ்சுவேன் மீதே யிரங்குதி
வஞ்சியா தின்னருள் வள்ளால் சரணம் 440
கோழை மனத்தாற் கொடுமைகண் டிண்ணடுங்
கேழை யெனத்தேர்ந் திரங்காய் சரணம்
வெடுக்கென் றுரைப்பின் விதிர்விதிர்த் துள்ளம்
படக்கென் றுடைவேன் பரிவாய் சரணம்
செயுஞ்சோ தனைக்குச் சிறிதுமா ளல்லேன் 445
நயஞ்சே ரருட்கதி நல்காய் சரணம்
அநன்மந் தணநன் கறிந்தவர்க் காளாப்
பொருள்மலி போதம் புணர்ப்பாய் சரணம்

அல்வழிக் கண்ணரின் றகல்வித் தடியரை
நல்வழிக் காண்குறு நாதா சரணம் 450
அரந்தை கடிந்தரு ளாற்றலின் கண்ணை
துரந்தர வாண்டுகை தூக்காய் சரணம்
கைதூக்கி யன்பர் கருத்தைத் தலையளி
செய்தூக்கு மின்னருட் செல்வா சரணம்
உன்னடி யன்றிமற் றோரா வுளத்தராம் 455
இன்னடி யாருக் கிரங்காய் சரணம்
அருளாழி யாலிவ் வகிலமுங் காப்பாய்
மருளாழி நின்றென்னை வாங்காய் சரணம்
முறையோ வடிநாயேன் மோகத்தின் மோழ்கல்
அறையோ கரையேற்றி யாளாய் சரணம் 460
கயத்தக்க பொல்லாக் கடையே னிடையா
துயத்தக்க நன்னெறி யோதாய் சரணம்
உலகியற் சேற்றி னுழன்றே னருளின்
குலவுநீ ராட்டிக் குறிக்கொள் சரணம்
துலங்குறு சத்துவ சுத்தமாத் தானே 465
இலங்கு மஹேமணி லிங்கா சரணம்
அந்தலிங் கத்தை யறிவால் வழிபடு
சொந்தலிங்க மாகத் தொழுதேன் சரணம்
உருக்கமு மில்லே னெருக்கமு மில்லேன்
வெருக்கொள நோக்கி விழித்தேன் சரணம் 470
ஆட்கொ ளடிக்கெனை யாளாத் திருவுளப்
பீட்கொள் கருணைப் பெருமான் சரணம்
அகந்தை மணப்புணர்ப் பாலுன் னடியை
இகந்து செருக்கி யெழுந்தேன் சரணம்
எழுந்தத னற்பல் விடர்ப்பட் டடர்ப்புண் 475
டழிந்துநான் புத்தி யடைந்தேன் சரணம்
இளிவர லெய்தினு மெய்த வகந்தைக்
களிவிர வாதுளங் காவாய் சரணம்
ஆண்டா மடிகே ளகந்தைத் தெருமரல்
ஈண்டா தகத்தை யிலக்காய் சரணம் 480
தேறித் தெளியவென் சித்த நினைப்பலை
ஆறி யமர வருள்வாய் சரணம்
பாழ்வா தனையறப் பண்ணருட் பாக்கிய
வாழ்வா சரணமென் வைப்பா சரணம்

தாழங்காய் போல்வேன் சமுசார மாமனத் 485
தாழங்காற் பட்டே னருள்வாய் சரணம்
இறைவா வருளென் னிதயத் துறைபபத்
தறைவா யெனக்குத் தருவாய் சரணம்
நின்னருட் செம்மைசேர் நெஞ்சினர் சூழலின்
மன்னுவ தாகவென் வாழ்க்கை சரணம் 490
இருட்குலஞ் சேர்ந்த விதயத் தரும்பை
அருட்கரத் தாலே யலர்த்தாய் சரணம்
நின்னடி யன்றி நினைத்திடத் தாங்கலா
உன்னடி யாரி னொருத்தனு வென்னுளத்
தன்னிய சிந்தைக் கவகாச மின்றிநின் 495
மெய்ந்நிறை வாக விளங்காய் சரணம்
சாத்திரந் தேறேன் சதாமுத்தி தேறவோர்
சூத்திரங் கூறித் துலக்காய் சரணம்
மோனமே ஞான முடிவென் றடங்குறத்
தீனனேன் புத்தியைத் தேற்றுய் சரணம் 500
சிவசிவ வென்றுநின் சேவடிக் கண்ணே
அவசமா நிற்க வருள்வாய் சரணம்
தன்னிழப் பேநயத் தக்கதொண் டாமென
மன்னுவப் பாங்குரு மாண்பா சரணம்
எங்ஙனே யென்னை யியக்கத் திருவுளம் 505
அங்ஙனே யென்னை யசைத்தாள் சரணம்
எதுநீ யருளுதி யென்பொருட் டாக
அதுவே யடியே னபீட்டஞ் சரணம்
அன்றி யொரோவழி யானொன் றவாவினும்
மன்ற வதூநின் மகிழ்வாஞ் சரணம் 510
எதற்கு மிறைவா வெதுவுநீ செய்தி
அதற்குநா னுயக மல்லேன் சரணம்
நின்றிரு வுள்ள நிகழ்ச்சியி லன்றிமற்
றொன்றிலு மோகை யுறேன்காண் சரணம்
ஒருகா லிருகாலே யன்றுமுக் காலும் 515
சரதமாக் கொள்ளத் தகுங்காண் சரணம்
அடிந்துணைக் கோல மடைக்கலம் புக்கேன்
அடித்தது போது மணைத்தாள் சரணம்
துடைக்கினும் போகேன் றுறந்தே னுலகை
அடைக்கல முன்னை யடைந்தேன் சரணம் 520

அடைக்கலங் காக்கு மறவோய் குறிக்கொண்
டிடைக்கல மாகா தென்னையாள் சரணம்
வசித்துவத் தாலே வசீகரித் தென்னைப்
பசுத்துவ முற்றப் பறித்தாள் சரணம்
தேவா திருவருட் செல்வா தியங்கினேன் 525
ஆவா வடியேற் கருள்வாய் சரணம்
மாவடி வாணவென் மத்தகத் துன்மணிச்
சேவடி சூட்டித் திருத்தாய் சரணம்
நியாமக ஞை நிகழ்த்துஜீ வாந்த
ரியாமிநின் சேவடிக் காளாய் சரணம் 530
செல்வத் திருவருட் சேவடி சேர்தலே
கல்விப் பயனெனக் கண்டேன் சரணம்
ஓதா துணர்ந்த வுவாத்திநீ யென்மன
மேதா மணியா விளங்காய் சரணம்
அசலமா நின்றன் னடியென் னகத்துக் 535
குசலமீ தூரக் குடிகொள் சரணம்
தெரிவா வொளிருந் திருவடிக் காளாத்
தெரிவாய் திருவருட் சீமான் சரணம்
பிணைத்தமோ கப்பாழ் படராப் பதத்தோ
டிணைத்தருள் விச்சை யிலக்காய் சரணம் 540
மருட்கட லாடி மயங்கி மருண்டேன்
அருட்கட லாட்டி யருள்வாய் சரணம்
விடயபண் டின்று வெறுத்த வெனக்குன்
னுடையவுண் கண்ணமு தூட்டாய் சரணம்
வளஞ்சே ரருட்பால் பருகிநின் பாதத் 545
திளஞ்சே யெனச்சேர்ந் திருப்பேன் சரணம்
கைவல் லியமாங் கமல பதந்திகழ்
தெய்வப் பிரானென்னைத் தேற்றாய் சரணம்
மருட்கடல் வீழ்ந்துநான் மங்குறக் காண்டல்
அருட்கழல் வண்மைக் கடாதே சரணம் 550
காலம் பெறவென்னைக் காவா யருண்ஞான
சீலர் பெறவுனைச் சேர்ந்தேன் சரணம்
புழுவாய்ப் பிறக்கினும் பந்தியுட் பாதம்
வழுவா திருக்க வழங்காய் சரணம்
கீடமொன் றேனுங் கிளரடிச் சிந்தனை 555
வாடலின் றேலது மாண்பாஞ் சரணம்
கற்றுச் சொலியாக் கழலடிக் கென்னையாட்
பற்றிக் கொளுவாய் பரமா சரணம்

குணியோ வவகுணி யோவருட் பாதப்
பணியா ளடியேன் பணிகொள் சரணம் 560
விற்றுக் கொளற்கும் விருப்பமே போலநான்
ஒற்றிவைத் தற்கு முரியேன் சரணம்
கெட்டாலு நின்றற் கெடலன்றிக் கிஞ்சித்தும்
ஒட்டாரின் வாழ்வதற் கொவ்வேன் சரணம்
அடுக்கவந் தேனைமெய் யன்பரிற் கூட்டி 565
மிடுக்கர்தங் கேண்மை விடுத்தாள் சரணம்
தாளுந் தலையுந் தடுமாறும் பேதையேன்
ஆளுவ துன்கட னையா சரணம்
அடிமுடி யான வயிக்கிய ஞானக்
கொடுமுடி மோன குருளா சரணம் 570
உடனு னெனுஞ்சட வுள்ள முருகின்
உடனு வொளிர்வா லுணர்வா சரணம்
என்புட லாதி யிசைந்தளித் தேனுவந்
துன்புடை யன்பா லுருக்காய் சரணம்
காரான் பசுவிளங் கன்றுக வென்னுயிர் 575
நீரா வுருக நிகழ்த்தாய் சரணம்
அன்புரு வாநின் னடியை நினைந்தவ்
வன்புரு வாக வருள்வாய் சரணம்
அன்பாக் கரைந்த வகத்துளே யன்றிமற்
றின்ப மகிழ்ச்சி யெழாதே சரணம் 580
புகழ்பூத் தொளிரருட் புண்ணியா நாயேன்
மகிழ்பூத் தொளிர மலர்த்தாள் சரணம்
நித்த மருளா நிரம்ப வழகியா
சுத்த குருளா தொழும்பன் சரணம்
அழகா சரண மகலத் தணிந்த 585
புழுகலங் காரநின் பொற்றுள் சரணம்
சுகந்தரா யாநின் சொருபத்தோ டொன்ற
முகந்தரா யெற்கு முகுந்தா சரணம்
போரவே செந்தீப் புலத்திற் கரைந்தகற்
பூரமே போலநின் போத சொருபத் 590
திரத்தலே யன்றிப்பே ரின்ப நுகர்ச்சித்
திறத்தெவ் வுபாயமுந் தேறேன் சரணம்
ஜங்கம லிங்கமாத் தாவர லிங்கத்தின்
மங்கல நல்கு மருளா சரணம்

வேளைக்கு வேளை விழைந்துவந் துன்கழல் 595
தோளைக் குளிரத் தொழுதேன் சரணம்
திக்கு விதிக்காத் திகழ்வோ யருளன்றித்
திக்குவே றென்றுளந் தேறேன் சரணம்
மன்னிய நின்னருள் வண்மையே துன்னிய
என்னியல் பாக்கிய மெந்தாய் சரணம் 600
சாரசமா நின்னைத் துறந்துமற் றெல்லாம்
விரசமாக் கிற்றுநின் வேட்கை சரணம்
மன்னவா வுன்னை மடுக்க விதும்பிய
என்னவா முற்றவீ டேற்றுய் சரணம்
அமிதசந் தாப மகற்று யருட்பே 605
ரமுதசஞ் சீவியா மண்ணல் சரணம்
நீயகத் தொன்றலே நேயவென் சந்தாப
நோயகற் றுண்மை மருந்தாஞ் சரணம்
மதாலச மாக மனந்தன் மயஞ்செய்
சுதாரச மான சொரூபா சரணம் 610
சுவத்தவை போகந் துலங்கப் பெறுநின்
சிவத்தை யுளத்தே தெரிப்பாய் சரணம்
யானு தரத்தா லிதயத் துனையொன்றத்
தானே தானுகத் தழைப்பாய் சரணம்
என்றுனை யான்பணிந் தேத்திக் கருதவே 615
நன்றெனை யாண்டமெய்ஞ் ஞானு சரணம்

## அனுக்கிரக வனுபவம்

நீயே துதிக்க நிகழ்த்திய தன்றியிந்
நாயேன் துதித்திட நாணுர் சரணம்
உன்னி னெடுங்கலி னுண்மைத் திறத்துநான்
உன்னை வழிபட லொல்லேன் சரணம் 620
என்கவி வாணியைத் தூண்டி யெழுப்பிய
நன்கவி வாணமெய்ந் நம்பா சரணம்
நல்வாக் களித்தமெய்ஞ் ஞானு வுலகெலாம்
செல்வாக் குடையசச் சித்தா சரணம்
செவ்வியாய் பூனைத் திறந்தா லடியனைக் 625
கவ்வி யாட்கொண்ட கருத்தா சரணம்
செய்வகை யாதெனத் தேருச் சிதடனுக்
குய்வகை சொன்ன வுளவா சரணம்

பக்குவந் தோற்றுப் பதகன் றனக்குநீ
மிக்குவந் தாற்றிய வீங்கருள் வண்மையை 630
முன்னே யுரைப்பின் முகமனென் றென்மொழி
பின்னிடை கின்றது பெம்மான் சரணம்
தனேவேறு கொண்டசொற் ருன்கேட்க தானும்
நனிநா கரிகமெய்ந் நம்பா சரணம்
இனையை யெனக்குநீ யின்னன்யா னென்று 635
புனையிற்புல் லென்னப் புலப்போய் சரணம்
என்னி னிலிய ரெவரு மெனக்கிலர்
என்னினு நீமிக் கினியா சரணம்
பஞ்சகோ சத்துட் பட்டுங்குகை யாயவென்
நெஞ்சத் துறையான்ம நேசா சரணம் 640
வெருவரக் கவ்விய விஞ்ஞான மோகத்
தெருமரல் போக்கிய தேஜா சரணம்
பிறவொளி புன்கற் பிதவொளி யாமெய்
யறிவொளி காட்டிய வம்மான் சரணம்
பித்தனு மென்னைப் பெரிதருள் வைத்திய 645
சித்தா சரணமென் செல்வா சரணம்
உழையிருத் திக்கொண் டுவந்துநா யேனைப்
பிழைபொறுத் தாண்ட பெரியாய் சரணம்
எனையாது குற்ற மியற்றினு மென்றும்
முனியாத சாந்த முனிவா சரணம் 650
உண்டைக் களிமண் ணுயிர்வா லுணர்வுறக்
கண்ட திருக்கடைக் கண்ணு சரணம்
பொருவே றிலாச்செம் பொருளே பொருளாத்
தெரிவனு வென்னைத் தெரித்தாய் சரணம்
கைவந்த செம்பொருட் காட்சியி னுள்ளத்து 655
மெய்வந்த வாழ்க்கை விளைத்தாய் சரணம்
ஆன்மசச் சித்தே யறிபடு தெய்வமா
யான்மனந் தேற விசைத்தாய் சரணம்
ஆயப் படாப்பர மார்த்தநுட் பந்தெளிந்
தோயப்பெற் றேனுமெ னுள்ளஞ் சரணம் 660
ஓதுமெய்ஞ் ஞான வுறுதிசேர் கேள்வியிற்
காதுதோட் புண்டு களித்தேன் சரணம்
சிவசத்தி யாமேலு தெளிந்துநா னற்ற
அவசத்தி லுன்னை யறிந்தேன் சரணம்

இருப்புணர் வன்றிநான் யானென் றெழும்பொய் 665
யிருப்புணர் வன்று வுணர்ந்தேன் சரணம்
கள்ளியா வென்னைக் கரந்து வெளிப்படும்
ஒள்ளியா யென்னை யுடையாய் சரணம்
இகம்பர மென்னு மிரண்டெனக் கின்றி
அகம்பர மாக வளித்தாய் சரணம் 670
தவராஜ சிங்கா தமியே னுளத்தைச்
சிவராஜ தானியாச் செய்தாய் சரணம்
எனைக்கிறை யாவென் னிதயத் தமர்ந்து
மனக்குறை மாற்றிய மாண்பா சரணம்
எத்திறத் தானு மிதயத் தெனக்கினிப் 675
பொய்த்திலா மெய்யருட் பூமான் சரணம்
மறதியை யென்மாட் டறுதியா மாய்த்த
உறுதிசே ருண்மை யுணர்வா சரணம்
அக்கர மானஞா னுன்ம சொரூபத்தைச்
சிக்கென வென்னுளஞ் சேர்த்தாய் சரணம் 680
சொருபத்தி லொன்றுத் துலங்குமெய்ஞ் ஞானப்
பரபத்தி யுண்மை பளிச்சிட் டொளிர்வதாச்
செஞ்செவே யென்னைத் திருத்திப் பணிகொண்டு
தஞ்சமாத் தாங்கிய தாளா சரணம்
மெய்யுணர் வாக விளங்கும் பதந்தனில் 685
ஐயுணர் வோய்வுற் றமைந்தேன் சரணம்
சடுக்கென நின்னடி தன்னி லொடுங்கத்
துடுக்கனை யாண்ட சொரூபா சரணம்
கயவனை மென்னைக் கலிநலி யாதே
நயவனா வாண்டவென் னம்பா சரணம் 690
எனக்குநீ யாற்றிய வின்னருட் பண்பை
நினைக்குந் தொறுமுண் ணெகிழ்வேன் சரணம்
அகந்தை யுடன்றனை யார்ப்பரிக் காதே
அகழ்ந்தித யத்தே யடர்த்தாய் சரணம்
நேற்றெடு நாளையைப் பற்றி நினைதடு 695
மாற்ற மனத்தை மடித்தாய் சரணம்
விரிகதி ராநின் விழிக்கடை வாளாற்
புரியித யப்பூட் டுடைத்தாய் சரணம்
சிலந்திபோற் கட்டிச் சிறைப்படுத் துண்டாய்
அலந்திடா தாணவத் தால்யான் சரணம் 700

நீக்கமில் லாமெய்ந் நிலையாஞ் செழும்பத
மோக்கத் தெனைநீ முடித்தாய் சரணம்
வெல்லப் படிவத்னத விண்டுதன் பூசனை
வெல்லப் படைக்கும் விசித்திர மென்று
நினக்கியா னென்னை நிவேதனஞ் செய்கை 705
எனக்கே நகைதரு மெந்தாய் சரணம்
உனக்கெனை யூனு வுதவினே னென்ற
மனக்கருத் தென்றன் மடங்காண் சரணம்
நின்னருட் சத்தி நிகழ்ச்சியிற் றீர்ந்தது
துன்னிருட் கர்த்தத் துவங்காண் சரணம் 710
உடைமையா நானிற் கொழிந்தே னுடையாய்
கடமையெல் லாநான் கழிந்தேன் சரணம்
அவிச்சை யிருள்கெட் டடியே னனைத்தும்
சிவச்செய லாகத் தெளிவுற் றியங்கப்
பவந்த வகந்தைப் படிற்று மனத்தைக் 715
கவர்ந்த வருட்பரை காந்தா சரணம்
உருகப் படைத்த வுளத்தா லகந்தை
அருகிக் கழிந்திட லானேன் சரணம்
முடிகளுக் கெல்லா முடியா நிமிர்ந்த
அடிகளுக் கைக்கிய மானேன் சரணம் 720
விண்மணி யாக விளங்குந் திருவருட்
கண்மணி யான கழற்சே வடிக்கு
வசங்கத மான மனத்தயல் வேட்கை
அசங்கத மாக வறிந்தேன் சரணம்
யானென் றொருருவ னிறந்துஞ் சரண்சொல்கை 725
ஆன பயிற்சியாற் போலுஞ் சரணம்
எண்ண மெலாநின் னிடமாக் கழிந்தொளிர்
வண்ண மனத்தான் மகிழ்ந்தேன் சரணம்
காதலர் நெஞ்சைக் களிப்பிக்கு நின்புகழ்
ஓதலி னுள்ள முவந்தேன் சரணம் 730
இடம்பொரு ளேவ லெனப்படு மெல்லாம்
உடன்பொருந் தோகைமுற் றுற்றேன் சரணம்
மெய்ப்பொரு ளாக விளங்கு மியன்பதம்
துப்புர வாவுளத் தோய்ந்தேன் சரணம்
அண்ணல் சரண மபய பதங்கடைக் 735
கண்ணு லகுமுறக் கண்டேன் சரணம்

சாந்தி யளித்த சதாசிவ நின்னருட்
காந்தியா லுன்னுருக் கண்டேன் சரணம்
பிறிவதின் ருகயான் பேணிடந் தோறும்
நிறைவது நின்சந் நிதிகாண் சரணம் 740
பயங்கர மாகப் படர்கொடுங் கால
ஜயங்கர மாவுளஞ் சார்ந்தாய் சரணம்
கோள்வாய்ப் படாது குதித்தேன் கருத்துநின்
தாள்வாய்ப் படுமெய்த் தவத்தாற் சரணம்
பஞ்சையா மென்னைப் பரம்பர நின்னருள் 745
விஞ்சையால் வேற்ற வேட்டாய் சரணம்
பிரியே னெனமுனம் பேசியாங் கென்றும்
பிரியா திருந்தாய் பெருமான் சரணம்
வாழ்க்கைப் படலினின் மாணடிக் கென்னுயிர்
ஊழ்க்கைப் படாதொழிந் துய்ந்தேன் சரணம் 750
பொன்னடிக் காளாப் பொருந்திய நாண்முதல்
என்னுயிர் வாழ்க்கைபே ரின்பாஞ் சரணம்
தேனொடு பால்போற் றிளைத்துளத் தொன்ருகத்
தானொடு நானுந் தழைத்தேன் சரணம்
எனக்கு முனக்கு மிசைந்த பொருத்தந் 755
தனக்குத் திருவருள் சான்றுஞ் சரணம்
இருவேங் களையு மொருங்கே யிசைத்த
திருவருள் காண்டியென் றெய்வஞ் சரணம்
மனமகிழ்ந் தியானினி மற்றெரு தெய்வம்
கனவினு மெய்யாக் கருதேன் சரணம் 760
தானெனக் காற்றிய தண்ணரு ளெண்ணுதோ
றியானெக் குருக லுடையேன் சரணம்
எனக்கருள் செய்தநின் னின்னருட் சீர்மை
நினைக்க நினைக்க விளிக்குஞ் சரணம்
நச்சிய நான்மல க நல்கிய நின்னருள் 765
விச்சையை யாரும் வியப்பார் சரணம்
ஊத்தைமா யத்தே னுரவுநீர்ச் சேர்தலும்
தீர்த்தமா நன்று திகழ்ந்தேன் சரணம்
சீருஞ் சிறப்புஞ் செழித்தோ யெனதுளம்
தேருந் தெளிவாத் திகழ்வோய் சரணம் 770
களிசேர் மயக்கக் கலியிருட் கண்ணின்
றெளிசேர் வெளிதனி லுய்த்தோய் சரணம்

மீத்தான மாக விளங்குநின் சந்நிதி
யாத்தான வாயிற் கமைத்தோய் சரணம்
சிச்சடப் பேயா மகந்தையைச் செற்றவென் 775
அச்சுத சுத்தஞா ஞன்மா சரணம்
மோனப் படையின் முழக்திறன் ஞானவேந்
தானநின் பாதத் தறிந்தேன் சரணம்
பேயகங் காரம் பிரியவே சுத்தான்ம
நாயக மாநீ நடந்தாய் சரணம் 780
என்னை நீ யாக வியல்வித் திரண்டறத்
துன்னுமே கான்ம சொருபா சரணம்
வீணவ மானபொய் யாணவ மீத்தலை
நாண வளர்ந்தமெய்ந் நானு சரணம்
யானெங் குளேனமற் றிருத்தநீ யங்கெனு 785
யானித யத்துன்னை யேய்ந்தேன் சரணம்
சதத மிருந்தொளிர் சச்சித்தாந் தானே
இதய மெனக்கண் டமைந்தேன் சரணம்
உன்னை யடைந்தியா னென்றுங் குறைவற
மன்னிய தானு மகிழ்ந்தேன் சரணம் 790
நாயகப் பெண்மணி ஞானத் திருவருள்
பாயகத் தாலே பழக்தேன் சரணம்
உரித்தா யுளத்தென் னுயிருக் குயிராத்
தரித்தாய் சரணந் தருமா சரணம்
இன்பக் கடலா வெழுந்து வளர்ந்தபே 795
ரன்புக் கடலா மகத்தாய் சரணம்
சேர்ந்தறி யாத செழுங்கைப் பிரானுனைச்
சார்ந்தறி வின்பந் தழைத்தேன் சரணம்
பவக்கடல் வற்றப் பதந்தரு சாந்த
சிவக்கட லாடித் திளைத்தேன் சரணம் 800
சாந்தப் பதமே சதாசிவ மன்றிமற்
ருந்தற் பரமொன் றறியேன் சரணம்
யான்கரை காண்குரு தெங்கு முபசாந்த
வான்கடல் சூழ வளைத்தாய் சரணம்
மாண்புடைத் தாவென் மனித்தப் பிறப்பினைக் 805
சாண்படைத் தண்ணருட் கண்ணு சரணம்
மோக வகந்தையின் மூடி யசச்சட
தேகமே நானுத் திரிந்த வெனைத்தன்
சொருபச் சுடரருட் சோதியிற் போர்த்த
விருப விலோசன மெய்யா சரணம் 810

உடல்வாழ்வில் யாதுற்று முன்னைநா னெள்காத்
திடவாழ் வளித்தமெய்த் திட்பா சரணம்
பளிங்கொளி போலும் பரவொளி யாலே
யுளங்கொளப் பெற்றுநா னுய்ந்தேன் சரணம்
அருளென் பதன்மெய்ப் பொருளா வகத்தே 815
தெருள்வதுன் மோனமாத் தேர்ந்தேன் சரணம்
நின்னருட் கன்றி நிகழ்தற் கிடமினி
என்னகத் தென்று மிலைகாண் சரணம்
அறிவனு முன்னை யறிஞர் தொழக்கண்
டறிஞன்போல் யானுந் தொழலுமற் றுங்கே 820
அறிவன்றி யென்ற னகத்தறி யாமைக்
குறியொன்றுங் காணேன் குருவா சரணம்
செறிவா யொளிர்நின் சிவசொரு பத்தை
அறிவே னறியே னறிவாய் சரணம்
அறிவறிந் தான்ற வமைதியே சான்ற 825
அறிவினுக் கெல்லையென் றுய்ந்தேன் சரணம்
அறிவொடு சும்மா வமர்தலே யுண்மைத்
திறமென வுள்ளந் தெளிந்தேன் சரணம்
சுகமது வன்றிமெய்த் துப்புர வாக
இகபர மெங்கிலு மின்றே சரணம் 830
கருத்தத் துவமிலார் கன்மநீ தானே
திருத்துவ தாவுளந் தேர்ந்தேன் சரணம்
கருத்தனு நின்னருட் கைவல் லியச்சீர்
திருத்தனுத் தேர்ந்து திளைத்தேன் சரணம்
அத்தனு நின்னையென் னுண்ம சொருபமா 835
நித்தனு னோர்ந்து நிறைந்தேன் சரணம்
சிவாய நமவெனச் சிந்தித் திருப்போர்க்
கபாய மின்றென்ன வறிந்தேன் சரணம்
மதிசே ருபாயமிஃ தன்றிமற் றெல்லாம்
விதியே மதியாய் விடுங்காண் சரணம் 840
வாலறி வாயவான் மாவை விடுத்துமற்
றேலப் பிறிதொன்று மின்மையி னெந்தாய்
பிறர்நலந் தன்னதாப் பேணலே யுண்மை
யறநில மாக வறிந்தேன் சரணம்
மனக்கற் பனையின் மயக்கற வாண்டாய் 845
இனிக்கருத் தெண்ணலொன் றெங்ஙன் சரணம்

நின்னது பாத நினைந்தவென் னெஞ்சகத்
தென்னது மென்றுநா னெண்ணேன் சரணம்
அன்னிய புத்தி யகன்றிவ் வுலகத்துத்
தன்னிய னாகத் தழைத்தேன் சரணம் 850
உன்னை யொழிந்தியா னுளனல்ல னென்னின்மற்
றென்னை யொழிந்து மிலாய்நீ சரணம்
அழிக்கலா வுண்மைத்தொன் றஃதுநீ தானும்
ஒழிக்கலா காமெய் யுறவா சரணம்
நீக்கமுற் றேனன் னியங்களிற் பொன்னரு 855
ளாக்கமிக் காய்நின் னடியேன் சரணம்
நானுமுன் றன்னை நழுவே னெருங்கிநீ
தானுமென் றன்னைத் தணவாய் சரணம்
கற்புடைப் பெண்டு கணவன்பா லன்றிமற்
றற்புவைத் தென்று மறியாள் சரணம் 860
திருவருட் செல்வமே செல்வமல் லான்மற்
றொருபொருட் பேறுளத் துள்ளேன் சரணம்
அருளவா வன்றி யயலவா வல்லின்
மருளவா வாக மதித்தேன் சரணம்
செல்வமாச் சிந்தையிற் சேர்ந்து நிரப்பினை 865
வெல்வதா நின்னருள் விஞ்சை சரணம்
கருவூலக் காட்சிபோற் கண்ணுக் கினிய
திருவோலக் கத்தாற் சிறுகொச்சை தன்னைக்
குணவானைப் போலக் குறிக்கொண்ட சத்தி
மணவாள நின்னருள் வாழி சரணம் 870

## தத்துவ மாலை

சத்திக்கு மூலமாந் தற்பர மாதலின்
முத்திக்கு வித்தா முதல்வா சரணம்
எதிர்ப்பொரு சத்தசத் தென்சொல் லிரண்டன்
பொதுப்பொரு ளாகப் பொலிவோய் சரணம்
தனித்தனி போலச் சரிக்கும்பல் ஜீவர் 875
இனத்தினி லொன்று வியல்வோய் சரணம்
சகலத் தொடுந்தான் சமரச மாக
விகலமற் றோங்கும் விளக்கா சரணம்
யாவற் றையுந்தன் னிடமாப் புரந்தருள்
காவற் கதிரொளிக் கண்ணு சரணம் 880

பாணித்த லின்றி யுளத்துட் பதியமெய்
ஆணித் தரமா வறைவோய் சரணம்
மெய்ப்பொரு ளுண்மை விளம்புந் திறத்தின்மற்
றெப்புயர் வில்லா வொருவா சரணம்
திட்பமு நுட்பமுஞ் சேரச் சொலுமதி 885
யொட்ப முடைச்சீ ருரையா சரணம்
சிவமணஞ் சேருந் திருவாய் மொழியாற்
பவமணஞ் சாய்க்கும் பகவா சரணம்

## கடவுள் மாட்சி

கடவதாக் கன்மம் பயனொடு கூட்டும்
கடவுளே மன்னுயிர் காப்போன் சரணம் 890
நிராதார மாநிகழ் நீயே நிகிலத்
தொராதார மாக வுளோகாண் சரணம்
நீதா ரகமா நிகழா விடிற்பல்வே
றுதாரந் தாமு நிலையா சரணம்
பாவனை யோகம் பயில்வோர்க்கே பற்றுக்கோ 895
டாவநா னுவா மவைதாஞ் சரணம்
வியன்முத லான விழுப்பொருண் மாண்பே
இயன்மொழி வாழ்த்துக் கிலக்காம் சரணம்
தாழ்க்கை யறநம்பித் தற்சார்ந் தவர்க்குமெய்
வாழ்க்கை வளம்பெற வாய்க்குஞ் சரணம் 900
எவ்வெவ் வுறவா லெவரெவர் தம்முளத்
தெவ்வெவ் வுருவா லிறைவனை யெண்ணுவார்
அவ்வவ் வுறவா லவரவர்க் கவ்விறை
அவ்வவ் வுருவா லருள்வான் சரணம்
தன்னை யியக்குந் தலைவனைக் கண்டதற் 905
பின்னை மயக்கம் பிறிதாஞ் சரணம்
பொய்த்துப் புலர்புர் புலத்திலும் பொய்ப்படா
வித்தக மெய்ப்பொருள் வேறுஞ் சரணம்
நவசத்தி யாக நடப்பன வேக
சிவசத்தி யானசச் சித்தாஞ் சரணம் 910
ஆண்டா னொருவனே யாண்டகை பெண்டிர்மற்
றீண்டா ருயிர்த்தொகை யெல்லாஞ் சரணம்

## பரம்பொருளின் தன்மை

இயல்வது முன்பின் னெதுவோ விடைக்கட்
பயில்வது மந்தப் பரங்காண் சரணம்

## அருள் மாட்சி

உலகியல் வேட்கை யுதவிக் கிழுத்தல் 915
குலவருண் மாண்பைக் குலைத்தல் சரணம்
மருளின் மயங்கு மனத்தர் தெளிந்த
வருளின் பயனை யறியார் சரணம்
வறுமை நினைவு வருங்கொ லருட்பே
றிறையள வெய்தினு மெந்தாய் சரணம் 920
அருளென் பதுதனை நம்புமெய் யன்பர்க்
கிருள்கடிந் துண்மை யிலக்குஞ் சரணம்
வெஞ்சின மோக வியாக்கிரஞ் சாவுற
வஞ்சினங் கூறி வதைக்குஞ் சரணம்
குருவிய லாகக் குலவலி னஃதே 925
பரவியல் பாலிப் பதுகாண் சரணம்
நின்னரு ளாட்சித்தண் ணீழலி னெய்திடிற்
றுன்னுமுத் தாபந் தொடரா சரணம்
ஆரண தோன்று மபயந திருவருட்
பூரணத் தென்றும் பொலியுஞ் சரணம் 930
திருவருள் பெற்றுத் திகழ்ந்த வுளத்தில்
வெருவரல் சற்றும் விளையா சரணம்
அருளாலே யன்றி யதீதமா முண்மைப்
பொருளாம் பதத்தையார் புக்கார் சரணம்
நிவேத்திய மாக்கிய நெஞ்சினர்க் கன்றி 935
அவேத்திய மாநின் னருமைப் பதத்தை
உவாத்தியு நூலு முணர்த்துவ தெங்ஙன்
அவாச்சிய மாமெய் யடியா சரணம்
நின்னையார் நாடுவார் நீயே யவர்தமை
முன்னதா நாடி முனைவாய் சரணம் 940
சித்தமொன் றித்தன்னைத் தேடுமெய் யன்பரை
அத்தனே தேடுகின் றுன்காண் சரணம்
நின்னரு ளாட்சி நிகழ்ச்சியிற் றோய்ந்தவர்
துன்னிருள் சாய்ந்து சுடர்வார் சரணம்
புவன மனைத்தும் புரப்பதுன் சுத்த 945
மவுனத் திருவருண் மாண்பாஞ் சரணம்
இருளைச் சிதைய வெறிப்பதாந் தன்மெய்
யருளை யெதூஉந்தடை யாற்று சரணம்

அருட்பாக் கியத்தா ருண்டையர்புன் றல்லா
மருட்பாக் கியத்தார் வறியார் சரணம் 950
கர்த்தத் துவந்தாங் கழிவதை யன்றிமற்
றெத்தகைத் தொண்டுந்தா னிச்சியாப் பூரண
சித்தாய சத்தின்கட் சித்தந் திளைத்தலால்
ஒத்தாரபிக் காரற் றுவப்பார் சரணம்

### தத்துவ ஞானம்

சிவத்தையாய்ந் துண்மை தெளிவுறி னன்றி 955
விவத்தை மதிக்கு விளங்கா சரணம்
உள்ளுணர் வாற்பர வுண்மை யுணர்ந்தபின்
உள்ளுவ தில்லை யுள்ளத்தே சரணம்
நியதியால் யாவே நிகழினுஞ் சற்றும்
அயர்தி யுறாமை யறிவாஞ் சரணம் 960
அகந்தைசேர் பேத மகல்வதே யுண்மை
யகந்தே ரறிகுறி யாங்காண் சரணம்
உள்ளத் தொளிர்மெய் யுணர்வே யளிவளர்
தெள்ளத் தெளிபதச் சீராஞ் சரணம்
உனையுணர்ந் தோர்மெய் யுளவரா மன்றிப் 965
பினையுணர்ந் தோர்கற் பிதர்காண் சரணம்
கற்பனா சத்தி விலாசக் கதிர்களா
உற்பவித் தன்னு முழல்வார் சரணம்
உறுதிசே ருண்மை யுணர்ச்சியா லன்றிப்
பிறவிசேர் துன்பம் பிரியா சரணம் 970
பொய்யகங் காரப் புலத்தைப் புலம்புறச்
செய்யகந் தான்மெய்த் திகழ்வாஞ் சரணம்
அன்னியக் காட்சிக் கவகாச மற்றொளிர்
தன்னியற் காட்சியே சால்பாஞ் சரணம்
சொரூப மகத்துத் துலங்குறக் கண்டோர் 975
அரூபமாம் பூரண மாவார் சரணம்
சொரூபத் துலக்கந் துலங்கு முளத்தோர்
உருவத்தி லுன்னை யொடுக்கார் சரணம்

### ஞான விசாரம்

அறிவறி யாமையே யான்ம சொரூப
வறிவுக் கறிவென் றறைதல் சரணம் 980
அறிவறிந் தார்முன் னிலைச்சுட் டறுவா
லறிவொளிர் மோன மடைந்தார் சரணம்

அகந்தைமூ லத்தை யகந்தேர்ந் தடையும்
விகங்கமார்க் கத்து விளக்கா சரணம்
நேராக வுண்மை நிகழ்த்தலல் லான்மருங் 985
கூராத வாய்மை யுடையாய் சரணம்
மனத்தை மனத்தான் மதிப்பின் மலின
மனத்துரி சற்றொளி மாண்பாஞ் சரணம்
நானு ரெனத்தனை நாடலே யுள்ளத்துத்
தானுந் தகைமை தருங்காண் சரணம் 990
நூலறி வாலே நுனிப்பதன் றஃதுதன்
னுலறி வாகவுள் ளாழ்கை சரணம்
ஊக்குவ துள்ளத் துணர்வின்ப வெள்ளந்தான்
தேக்குவ தான திறங்காண் சரணம்
அயலை விடுத்த லறிவொளி யாந்தன் 995
னியலை யடுத்தலின் மெய்யாஞ் சரணம்
இயலு மகமித மென்னு மிரண்டும்
அயலெனுஞ் சொல்லி னடங்குஞ் சரணம்
அகத்தே முழுகிநா னுரெனத் தன்னைத்
தகத்தேர்ந் தறிவு தலைப்பட லன்றி 1000
நுனித்தெவ் வளவுதா னேக்கினு நூலிற்
றனைத்தரி சித்த லரிதாஞ் சரணம்
அகத்து விசாரம் பொருளாப் புறத்து
நிகழ்த்து விசார நிழல்காண் சரணம்
விசுத்தமெய்ஞ் ஞான விசாரமே மோகப் 1005
பசுத்துவ நோயறப் பாற்றுஞ் சரணம்
சோதனை யாற்றன் சொரூபந் திளைத்தலே
சாதனை தம்மிற் றலைகாண் சரணம்
அற்றநோக் கித்தன் னகத்தை யழித்திட
லுற்ற வகந்தையைத் தெற்றென நோக்கித் 1010
தலையா முயற்சியிற் சாந்த பதத்திற்
குலையா திருத்தல் குணங்காண் சரணம்
அகத்தை யகத்தா லகத்தி னுசாவின்
மகத்தாம் பரத்தை மடுப்பார் சரணம்
தகத்தேர் சதுரர் சதாமுத்தி காண 1015
இகத்தே பரம்போந் திலங்குஞ் சரணம்
ஆன்ம விசாரமவ் வான்ம சொரூபமே
போன்மன் பதைக்குப் பொதுவாஞ் சரணம்

உளனு ளெனுமவ் வுணர்வா முளத்தே
உளனை வுடையோ னொளிர்வான் சரணம் 1020
அகந்தைசே ரன்னிய புத்தியுள் காறும்
நிகழ்ந்துசா நெஞ்சத்து நிற்குஞ் சரணம்
அறிபவன் யாவ னவன்று னறிவோ
டறியப் படுவது மாகுஞ் சரணம்
மூலத்தை நாடி முழுகலே மெய்ஞ்ஞான 1025
சீலத்தி னுண்மைத் திறங்காண் சரணம்
அக்கர வத்துவை யாய்ந்த வகத்தரவ்
வக்கர வத்துவே யாவார் சரணம்"

## ஞானநிஷ்டை

அறங்க ளனைத்து மமைந்தொளிர் மோனத்
துறங்கா துறங்க லுணர்வாஞ் சரணம் 1030
மெய்யறி வாக விளங்கிடி னன்றிமற்
றையந் திரிபேற் மாட்டா சரணம்
கயக்கற் பனைசேர் கருத்தற வோங்கித்
துயக்கற் றிருந்தொளிர் சுத்தசச் சித்தாம்
இதயத் தலத்தும்மற் றெல்லாத் தலமும் 1035
வதியலி னங்கு வதிந்தோ னனைத்துத்
தலத்தினுஞ் சேர்ந்து தவச்செய லாற்றிச்
சொலத்தகு தன்மத் துறையெலா முற்றுறப்
பல்வகைத் தீர்த்தமும் பல்வகை மூர்த்தியும்
தொல்வழி யாடித் தொழுதோன் சரணம் 1040
வென்றிசே ருண்மை விளக்கமாஞ் சிற்பரத்
தன்றியா னந்த மரிதாஞ் சரணம்

## ஒழிவிலொடுக்கம் - தன்மய நிஷ்டை

ஒழிவி லொடுங்குவோ ருண்மைப் பொருளின்
உழுவலன் புள்ளத் துறுவார் சரணம்
உண்மையிற் சித்த மொடுங்கலே பேரின்ப 1045
வண்மைசேர் வாழ்க்கை வழிகாண் சரணம்
உள்ளத்தே யாவ னொடுங்கா னவன்புலக்
கள்ளத்தி னின்றுண்மை காணுன் சரணம்

## நிர்விகற்ப நிஷ்டை, ஆத்ம நிஷ்டை

உருவை யருவி னொடுக்கவல் லோனே
நிருவிகற் பத்துறு நிட்டன் சரணம் 1050

ஒருவனைப் பற்றித்தா ஞேரகத் தொன்றின்
இருவினைப் பற்றற் றிருங்காண் சரணம்
தெளிந்த சமாதித் திகழ்ச்சியி னெல்லாம்
விளிந்துசிந் மாத்திர மிஞ்சுஞ் சரணம்
சுட்டற் றெளிர்வான் சொரூப சமாதியை 1055
நுட்பநோக் கத்தோர் நுனிப்பார் சரணம்
பாரையான் மெல்லிய பட்டை யிழையிடார்
கூரியா ரன்றிக் குறியார் சரணம்
நிபாதசிச் சத்தி நிகழ்ச்சியி னெஞ்சத்
தூபாதி யுணர்வோ டுடன்பாடு நீங்கித் 1060
தனிப்பர வுண்மையிற் றன்மெய் யுணர்ந்து
நினைப்பற நிற்றலே நிட்டை சரணம்
ஆன்மதன் மந்தை யயர்வறப் பற்றுமெய்த்
தான்மிகன் மற்றவுஞ் சார்ந்தோன் சரணம்
உள்ளதி லுள்ள முறைத்தலே யுள்ளவா 1065
றுள்ளதை யோர்த்துண ருண்மை சரணம்
உணமையி லூன்றிய வுள்ளத்துட் பேரின்ப
வுண்மை திரண்டு வழங்குஞ் சரணம்
உள்ளதி லுள்ள முறைப்பி னுப சாந்த
வெள்ளத் தகில மிதக்குஞ் சரணம் 1070
நெஞ்சமான் மாவி னிலைத்தலே யாணவ
வஞ்சமா லற்றமெய் வாழ்வாஞ் சரணம்
மெய்யுணர் வாந்தன் விழுப்பத நிட்டையிற்
பொய்யுணர் வெங்கு புகுங்கொல் சரணம்

## நிஷ்டாநுபூதி

நிருபா திகமா நிகழ்சிற் பரான்ம 1075
சொருபாநு பூதி சுபங்காண் சரணம்
இருபாகு பாட்டுக் கிடங்கொடா ஞான
சொருபாநு பூதி சுபங்காண் சரணம்
அனுதி யனந்தமெய் யாஞ்சிற் பரத்தே
தனுதியல் காண்போன் சதுரன் சரணம் 1080
நன்னிய வுண்மை தலைப்பட்ட தக்கணம்
பின்னிய தொந்தம் பிரியுஞ் சரணம்
யாநலத் துள்ளு மிவையதன் றுன்மீய
மாநலஞ் சேர்ந்தமெய் வாழ்க்கை சரணம்

ஆரப் பெறும்பர மான்மாநு பூதியே 1085
சேரத் தருமெய்ச் சிறப்பாஞ் சரணம்
அதுவே தனிப்பர மாகலி னப்பாற்
பொதுவா மனந்தான் பொலியுஞ் சரணம்
கற்பனை யான விகற்பங் கழிதலிற்
சிற்பர மோனந் திகழுஞ் சரணம் 1090
உள்ளதா வுள்ள வொழுக்கமே மற்றோரைத்
தெள்ளிதாத் தான்சீர் திருத்துஞ் சரணம்

### ஞான பூஜை

உள்ளமே கோயி லுணர்வே யருட்பரம்
கள்ளக் கருத்தே பலிகாண் சரணம்
தூயவா னந்த சொரூபாநு பூதிதோய் 1095
நேயமே மஞ்சன நீர்காண் சரணம்
அகத்தே யமைந்தமந் றன்ன பிறவும்
தகத்தேர்ந்து கொள்ளுவர் சான்றோர் சரணம்
உடல்வழி பாட்டி னுயிர்வழி பாடே
கடவுளுக் காற்றக் களிப்பாஞ் சரணம் 1100
அறிவால் வழிபடு மன்ப ரகத்திற்
பிறவா தனைகள் பிறவா சரணம்

### ஞானமாட்சி

படருமுப் பாழ்வினைப் பஞ்சுப் பொதியைச்
சுடருமெய்ஞ் ஞானஞ் சுடுங்காண் சரணம்
திடக்கை வலியந் தெரிபன்னூ லுள்ளக் 1105
கிடக்கையை நன்றுகாண் கிற்பிற் குறையாத்
தவா நிலை ஞானந் தனக்கொரு கன்மத்
தவாய்நிலை சாற்ற லடாதாஞ் சரணம்
கலக்கந் தெளிந்து கடந்தமெய்ஞ் ஞான
நிலைக்கண் ணிகில நிழல்காண் சரணம் 1110
உண்மை யுணர்வி னொளிரப் பெறுதன
திண்ண மசத்தெனத் தேற்றுஞ் சரணம்
பேதைமை யிற்றற் பிழைத்த வகந்தையே
பேத மனைத்தும் பிறப்பிப் பதனாலே
தன்னை யறிந்து தழைப்பிற் றலைவன்மாட் 1115
டன்னிய பத்தி யகலுஞ் சரணம்

பக்குவர்க் கெல்லாப் படியாலுஞ் சாக்கிரம்
புக்குவாழ் சொப்பனம் போலுஞ் சரணம்
அவ்விரண் டற்கு மறிஞர் மனைமயத்
தெவ்வித பேதமு மேலார் சரணம் 1120
அறிவனை யன்றி யறிபடுங் காட்சிக்
குறிவழு வாதல்கண் கூடாஞ் சரணம்
நேரமே லோங்கி நிமிர்ந்த கொழுந்தழற்
கீரமோர் சற்று மிலைகாண் சரணம்
அகந்தைசேர் பேத மகல்வதே யுண்மை 1125
யகந்தே ரறிகுறி யாங்காண் சரணம்

## இதயமாட்சி

அவனவட் குப் பேத மகந்தை மதிதீ
ருவளகத்திற் காண்ட லரிதாஞ் சரணம்
உபாதி யுணர்ச்சி யொழிந்தவவ் வுள்ளம்
சுபோத சொரூபச் சுடர்காண் சரணம் 1130
ஏதந் தவிர்பிர மோதந் தரும்பிர
போத சொரூபப் புலனு மிதயக்
குறியெதிர்ப் பட்டோர் குதூகலிப் பாராக்
குறிபிழைப் புற்றோர் குலைவார் சரணம்
அருட்டுணை கொள்ளா வறிவை யஃது 1135
மருட்டுவ தாக மயக்குஞ் சரணம்
ஆதலின் யாரு மதேநினை வாவருட்
காதலி னுடைக் கடவார் சரணம்
எண்ணமட் டாக வியன்ற வகந்தையின்
வண்ணமற் றுண்மை வளத்தா லிருக்கின்றே 1140
னென்றுளிர் சச்சித் திதயமா மற்றவை
மன்ற மனோபா வனையாஞ் சரணம்
சித்தந் தனிலவை சேர்வன தெள்ளிய
சுத்தந் தனிலவை தோன்று சரணம்

## இறைபணி நிற்றல்

நிகழ்வுறற் பால நிகழ்ந்திட லன்றி 1145
நிகழ்தற்பா லல்ல நிகழவே மாட்டா
நியதிப் படியே நிகழவிட் டுன்றுள்
அயர்தியற் றுய்த லறிவாஞ் சரணம்

## சாந்தி

அமைதியின் சால்பை யமரருங் காணார்
அமைதியே சான்றோ ரறங்காண் சரணம் 1150
இமையவ ராலுங் கடத்தற் கெளிதன்
றமைதிசேர் நெஞ்சத் துடல்காண் சரணம்
மாந்த ரினத்து மனக்கவ லோய்ந்தொளிர்
சாந்தரே சாலத்தாந் தக்கோர் சரணம்
ஆன வமைதியான் மாவிடத் தன்றிமற் 1155
றேனை யிடத்தி 'னிலைகாண் சரணம்
தெளிந்த வமைதி சிதைந்த மனத்தால்
விளைந்த வறச்செயல் வேறுஞ் சரணம்
கலக மனத்தைக் கடிந்தோர் கடந்தார்
உலக மனைத்து மொருங்கே சரணம் 1160

## மனக்கற்பனை, மாயை

வளர்கால தேசகன் மங்க ளனைத்தும்
பளகார் மனக்கற் பனைகாண் சரணம்
மனித்தர் தமக்குவன் கட்டொடு வீடு
மனத்தின் மடுத்து மருஉங்காண் சரணம்
குறையென் பதுபுன் குடிலை மனத்தின் 1165
மிறையியல் பல்லது வேறென் சரணம்
கற்பனை மாயிற் கரையில் சொரூபமாந்
தற்பர வுண்மை தழைக்குஞ் சரணம்
உலகஞ் சுழற்சி யுறக்கொந் தளித்தல்
சுலவுஞ் சதிமனத் தோற்றஞ் சரணம் 1170
கற்பனைக் கண்ணே கனுவிவ காரமொத்
துற்பவித் தெல்லா மொடுங்குஞ் சரணம்
வெருவர லாலே விளைவதை யன்றிப்
பருவர லுண்மையிற் பாழ்காண் சரணம்
கள்ளமாங் காட்சி கழிவதாந் தான்றனு 1175
வுள்ளதென் றென்று மொழியா சரணம்
உணர்வொன்றே மெய்யா வொளிர்வதா நிற்கப்
புணர்விவிதத் தோற்றம் புணர்ப்பாஞ் சரணம்
தான்றனு வுண்மை தழைத்து விளங்கவும்
ஏன்றனே மோக வியற்கை சரணம் 1180
மாயாசத் திக்கு வசப்பட்டார் சிந்தாகு
லாயாசத் திற்பேர் வரிதாஞ் சரணம்

உண்மையுந் தோற்றமுந் தம்மு ளுறழ்வகை
விண்மைநன் ருக விளக்குஞ் சரணம்
ஒன்றுள்ள தாகமற் றென்றன் புலப்பாடு 1185
மன்றபுன் மாயை வலிகாண் சரணம்

### விஷய தோஷம்

பறிபோ யுளந்தாம் பதறிப் பதைப்பர்
பொறியூ டொழுகும் புலவோர் சரணம்
கோசப் புழுப்போற் குலைவா ருருமறந்
தாசைச் சுழற்பட் டலைவோர் சரணம் 1190
விருத்தமா மோக விடஞ்சேர் விகற்பக்
கருத்தை யறவே கடிந்தபே ரின்ப
நொசிப்பை யகத்தே நுனித்திடா ரைந்தன்
பசப்பின் வசப்பட் டசர்ப்போர் சரணம்

### சரியை

சாதுக் களுக்குச் சரியையே சாதன 1195
வேதுக் களின்முன் னெடுப்பாஞ் சரணம்
சரியையிற் பொய்த்தார் கிரியையின் மெய்யைப்
பரியசிக் கின்ருன் பரமன் சரணம்
உளத்தாய்மை யில்லா வெளிப்பூ சனையை
உளத்தூ டுணர்வோ னுகவான் சரணம் 1200
உளக்கண்மெய் யன்பொ டுபாசகர்க் கொப்ப
விளக்க வொழுக்கமும் வேண்டுஞ் சரணம்
உள்ளந் துளிலுறு கள்ள நினைப்பினைத்
தெள்ளிய வான்மா சிரிக்குஞ் சரணம்
சுகவடி வாந்தன் சொரூபப் பதத்தே 1205
தகவுடை யாருயிர் தங்குஞ் சரணம்

### சாது சங்கம்

சாதுவர் சங்கந் தழுவலே மேதகு
சாதகந் தம்மிற் றலையாஞ் சரணம்
அடையத் தகும்பே றனைத்துமவ் வொன்றால்
அடையப் பெறுவ ரடைவே சரணம் 1210
மனத்தடு மாற்றந் தெளிவுறுஞ் சான்றோ
ரினத்தொடு சேர்ந்த வியைபாற் சரணம்

## துறத்தல்

பரத்துக் கொருவ னிகத்தைத் துறக்கப்
பொருத்த மிளமையே போலுஞ் சரணம்
குடையா விடயர் கொழுநாண் மலரே 1215
உடையா னடிக்கேற் புடைத்தாஞ் சரணம்

## தன்னிழப்பு

நிவேதன மாக நிகழ்ந்தநன் னெஞ்சில்
அவேதனம் வேதன மாகுஞ் சரணம்
தன்னிழப் பாவது தானல் லவைதானு
உன்னுளப் பான்மை யொழிதலே யாகக் 1220
கருத்தத் துவமறக் காண்டலே யுண்மைப்
பரத்தின் பணியாப் பகர்வார் சரணம்
கர்த்தத் துவவகங் காரங் கழல்காலும்
கர்த்தவ் வியமுந் தொடருஞ் சரணம்
நெஞ்சங் கரியா நிகழத் தலைப்படிற் 1225
றுஞ்சுறுங் கர்த்தத் துவங்காண் சரணம்

## ஆணவ முளைப்பு

அகந்தை யெழுச்சி யரந்தை விளைக்கும்
முகந்த விகற்ப முயக்காற் சரணம்
நானென் றெழுந்து நடக்கு மகந்தையால்
ஆனவே பேத மனைத்துஞ் சரணம் 1230
மான்ற வகந்தை மனைமையற் கேயன்றி
ஆன்ற வனர்த்தமற் றூர்க்கோ சரணம்
ஆன்ம சொருபத் தனுமதிசே ரின்பன்றி
மான்மலி யல்லல் வழங்கா சரணம்
உடம்பினி லோகைசே ருள்ளன் புலத்தை 1235
யுடும்பெனப் பற்றிக்கை யோவான் சரணம்
அவத்தைமெய் யென்றே யலமரு கின்றோர்
சிவத்தை யறிந்துமகிழ் சேரார் சரணம்
உள்ளடங் குற்றோ ருறும்பத வுண்மையைத்
துள்ளுங் கருத்தினர் தோயார் சரணம் 1240
அடிச்சரண் சேரா ரறச்செயல் கொண்டே
படர்ச்சிதீர் சாந்தி படையார் சரணம்

அரணு வதுநல் லறங்களுக் கெல்லாம்
சரணு கதியாத் தகுங்காண் சரணம்
மிக்கவவ் வுண்மை விளங்க வுளங்கொளத் 1245
தக்கனுஞ் சண்டியுஞ் சான்ருஞ் சரணம்

**ஜீவ போத விழப்பு**

ஜீவபோ தத்தைச் செறுவதவ் வான்மமா
தேவபோ தக்கதிர்ச் சீராஞ் சரணம்
உள்ளதை யோரா துழலுயிர் வாழ்க்கை
கள்ள வவிச்சைக் கதைகாண் சரணம் 1250
நிகழ்ச்சிசே ருண்மைத் தெளிவாம் பதத்தை
இகழ்ச்சிசெய் தோரே யிறந்தோர் சரணம்
வந்த வரத்தை மறந்தோர் வளங்கிளர்
சொந்தப் பதத்தை துறந்தார் சரணம்
தன்னை யறியாத் தவற்றின் மனிசற்குப் 1255
பின்னையோர் பேதைமை யென்கொல் சரணம்
சரண மடைந்தார் மரணங் கடந்தார்
புரணமெய்ஞ் ஞானப் பொலிவா சரணம்
மோகத்தி னின்று மூளைத்தவா முப்புடி
மோகத் தழிவான் முடிவாஞ் சரணம் 1260
அகந்தைக் கிழங்கை யகழ்ந்தபின் முன்பு
நிகழ்ந்தவவ் வெல்லா நிலையா சரணம்
இரவிடை மின்மினி யென்றுதன் னுண்மைக்
கரவிடத் தாமகங் காரஞ் சரணம்
மிகலுடை மின்மினி யெய்யுணர் வாமொண் 1265
பகலிடைச் சற்றும் படரா சரணம்
அகந்தை மனத்தி னழிவே யவிச்சை
முகந்த முடிச்சவிழ் மோனஞ் சரணம்
யானென்னு மெண்ண மெழாவியல் சிற்பர
வானென்னு மோன வளங்காண் சரணம் 1270
எண்பத மானயா னென்பதை நீத்தவர்க்
கொண்பத வாழ்வொன் றுளதாஞ் சரணம்
யானென்னும் புத்தி யிகந்தென்ன செய்யினும்
தானன்ன வெல்லாந் தவங்காண் சரணம்
பந்த வகந்தை பறிந்த மனத்தவர் 1275
தொந்தங் கடந்து துயில்வோர் சரணம்
முடங்க வகந்தைதன் மூலமா முள்ளத்
தொடுங்க வொடுங்க வுயர்வாஞ் சரணம்

ஆழப் படிந்த வகத்தோ ரயரும்
தாழப் பெருமிதஞ் சார்வார் சரணம் 1280
இகழ்ந்தவர் தம்பா லிரங்கவும் வல்ல
திகழ்ந்த வுசாமதித் திட்பத் தவரும்
புகழ்ச்சியா லுள்ளம் புளகாங் கிதமாய்
அகழ்ச்சி யுருமை யரிதாஞ் சரணம்
அகந்தையுண் டாயி னலான்மற் றெதுவும் 1285
முகந்தெழ லின்றி முடங்கலி னவ்வொன்
றருகிடப் பெற்றோ ரகிலமுஞ் செங்கோல்
ஒருகுடை நீழலி னேச்சுஞ் சரணம்
சான்றதற் குண்மைச் சதுரப்பாட் டாலுளத்
தூன்றுதக் கோரு முளர்காண் சரணம் 1290

### பரபக்தி – பரஞானம்

ஞானமே யுண்மை நயத்தகு பக்தியாய்
மோனமா வுண்மை முயங்குஞ் சரணம்
மன்னுமெய்ஞ் ஞான வடிவமின் பாதலிற்
சொன்னவப் பக்தி சொரூபஞ் சரணம்
உண்மையாம் பக்தி புணர்வின்க ணல்லது 1295
வண்மையாத் தோன்றி வழங்கா சரணம்
உண்மையே யின்பா வுளத்துறுமெய் யன்பவ்
வுண்மை யறிவோ டொருதிறப் பாட்டால்
மறுவிலா மெய்யன்பு மன்னுள முண்மை
யறிவினர்க் கன்றி யரிதாஞ் சரணம் 1300
பத்திபி னன்றிப் பரிபக் குவமுளத்
தெத்திறத் தானுமற் றெய்தா சரணம்
அதிருக் குமமாக் கரைந்த வகத்தே
யதியாக்க மீக்கூர்ந் தியலுஞ் சரணம்
வேற்றுமைப் பாடு வெறுந்தோற்ற மாகமெய்த் 1305
தேற்றத் தொருமை தெளிவாஞ் சரணம்
அன்பாஞ் சிவத்தைமெய் யன்புசெய் வார்க்கவ்
வன்பாஞ் சிவமே யருளுஞ் சரணம்
அத்திர சித்திர குத்திர சித்தியின்
மத்த மனித்தர் மயங்குவ தன்றிப் 1310
பயிக்கமேற் றுண்பர பத்தரெக் காலும்
மயக்கமேற் கொள்வ திலைகாண் சரணம்

எண்ணுவான் யாவ னெதனை யிடைவிடா
தண்ணுவா னவ்வுரு வன்னுன் சரணம்

**மெய்யன்பு**

இன்பமு மன்பு மிணைந்தமெய் யோர்ந்தவர் 1315
அன்பினி லின்பை யடைவார் சரணம்
ஒருபொருட் கண்ணவா வோங்கு மவற்றின்
ஒருமை நிரந்தர வுண்மை சரணம்

**மெய்யன்பர்**

தன்னல மற்றுச் சரிக்குமெய் யன்பருக்
கின்னலெஞ் ஞான்று மிலைகாண் சரணம் 1320
தொழுதுணைப் போற்றுமெய்த் தொண்டரெஞ் ஞான்றும்
பழுதார் கதியிற் படரார் சரணம்
உளங்கிளர் வுற்றுனை யுள்குவோர் சாந்த
வளங்கிள ரின்ப மடுப்பார் சரணம்
நின்னது சந்நிதி நேர்ந்தவ ருளத்திற் 1325
பொன்னிதி யோர்பொரு ளன்றுஞ் சரணம்
நவவித பத்தியு நம்பநின் னன்பர்
நவநிதி யாக நயப்பார் சரணம்

**மோனச் சிறப்பு**

எனைத்து வகைப்பட வெண்ணினு மீற்றின்
முனைத்துநின் மோனமே முற்றுஞ் சரணம் 1330
மோனப் பெருமொழி மூதறி வாளருக்
கேனைச் சிறுமொழி யென்னுஞ் சரணம்
மறைமொழி யாம்பல மந்திரங் கட்கும்
தறைமொழி மோனநா தங்காண் சரணம்
முழுமொழி யாமம் முதன்மொழி தானே 1335
பழமொழி யாமெய்ப் பதங்காண் சரணம்
சும்மா விருக்குமச் சோம்பலே யுண்மையில்
அம்மா வுஞற்றற் கரிதாஞ் சரணம்
முதிர்ந்து பழுத்தொளிர் மோன சமாதி
பதிந்த வுளஞ்சிற் பரங்காண் சரணம் 1340
வேதா கமங்களுள் வேற்றுமை தோற்றினும்
போதாந்த மோனம் பொதுவாஞ் சரணம்
வேற்றுமைத் தோற்றம் வெறுநினை வாக்கெடும்
போற்றுமம் மோனப் பொருள்வாய் சரணம்

குறிகுண மற்றுக் குலவு சொருப 1345
நிறைவணம் மோனத்து நீடுஞ் சரணம்
மோனப் பதமே முனிவர் தமக்குரித்
தானநிர்ப் பேத வரண்காண் சரணம்
ஒருகாற் சரண மடைந்தோ னுளம்பின்
னொருகாற் சரணமென் றுன்னவும் மானென் 1350
றெழாஅ தழிவுற் றிதயத்து மோனந்
தழாஅல் சரணத்துச் சால்பாஞ் சரணம்
கலங்குவிக் கேபக் கருத்துள் ளளவும்
துலங்குமெவ் வின்பமுந் துன்பா வொழிதலின்
ஒடுங் கருத்தற் றுளத்தொளிர் மோனமே 1355
நீடுந் திருவடி நீழல் சரணம்
பழுத்தமோ னத்துட் படிந்தோ னுயிர்ப்பாற்
செழித்த நலன்சீவர் சேர்வார் சரணம்
ஒருமொழி யான்மெய் யுறுதி பயக்குப்
குருமணி மோனக் குவாஅல் சரணம் 1360
சொருபதே சத்தே துலங்குமோ னங்காண்
குருபதே சத்தின் குறிக்கோள் சரணம்

ஞானியர் மாட்சி

உயிர்க்குயி ராநீ யொளிருணன்மை யோர்ந்தார்
உயிரினு நின்னை யுவப்பார் சரணம்
யாவுநின் னுலே யியங்க லுணர்ந்தவர் 1365
ஜீவனம் பாதத் தியானஞ் சரணம்
அறிவுண்மை நன்றுய்ந் தடங்கினு ரின்பம்
நிறைவண்மை யென்றென்று நீங்கார் சரணம்
உள்ளதின் றுதலு மில்லதுண் டாதலும்
கள்ளமென் றுேர்ந்தார் கவலார் சரணம் 1370
இம்ப ருளாரல ரும்பரி னும்பர்காண்
செம்பொரு ளாய்ந்து தெளிந்தோர் சரணம்
கறங்குபோற் சுற்றுங் கருத்து மரித்துள்
ளுறங்குவோ ரான்ற வுணர்வோர் சரணம்
அவத்தைநோக் கற்றுஞா னன்ம சொருப 1375
சிவத்தையாய் கிற்பார் சிறந்தோர் சரணம்
தன்மையி னுண்மைத் தனிமைகண் டோர்மயற்
பன்மையி னுட்டம் படரார் சரணம்
உழல்வுறு வாதனை யுள்ள முலப்பில்
கழிபெறுஞ் சந்தைக் கடைகாண் சரணம் 1380

விவகாரஞ் செய்தன் வியத்தியு முள்ளிட்
டவபாச மட்டா மவற்குச் சரணம்
மெய்யே தனக்கோர் வியத்தி யில்லாவவன்
பொய்யே கருமம் புரிதல் சரணம்
அனுன்ம ஜடத்தைஞா னுன்ம சொருப 1385
மெனுமருண் டாரிதைத் தேருர் சரணம்
முன்னு ளியற்றி முடித்தோளிர் முத்தராம்
அன்னு ரியற்ற லரிதாஞ் சரணம்
அறிதலே தானது வாவது மெய்யாப்
பிறிதே லபேதம் பிழைகாண் சரணம் 1390
பரிச்சின்ன மாகப் பதைக்கு மகந்தை
வெரிச்சென்ன மான வெளிப்பட் டொளியுருப்
பூன்றமா வோங்குசா் போதமாந் தன்னிலே
ஏன்ற மகானந்தி யெங்கோன் சரணம்
ஆற்றவொன் றில்லா வறிதற்கு மொன்றிலான் 1395
சாற்றற் கரும்பெருஞ் சால்போன் சரணம்
அவிச்சை யகந்தை யகன்றே ரனைத்தும்
சிவச்செய லாகத் தெளிவார் சரணம்
தொடர்ப்பட் டெதனெடுந் தோயா ருளத்தால்
உடற்பற் றொழிந்த வுரவோர் சரணம் 1400
சிவத்தை யறிந்து தெளிந்தோ ரியல்பிற்
றவத்துரு வாகத் தழைப்பார் சரணம்
பார்ப்பன ரென்போர் பரத்தைத் தமதுளத்
தேர்ப்பா லுணர்ந்த வுரவோர் சரணம்
செந்தண்மை பூண்டுதஞ் சித்தத் தொழுகலான் 1405
அந்தண ரென்போ ரறவோர் சரணம்
போத முளோன்பரி பூரணச் செல்வன்மற்
றேத முளானதை யில்லோன் சரணம்
சாந்தத் தெளிவிலுன் றன்னையே தானுகத்
தேர்ந்தறி கிற்பர் தெளிந்தோர் சரணம் 1410
உபாதி யகந்தை யுணர்ச்சி யொழிந்து
சுபோதமே தானுத் துலங்கு மனுபவம்
சேர்ந்திடு மிக்க சிவச்சீர் திடம்படத்
தேர்ந்தமெய்ஞ் ஞானி தெரிப்பிற் சரணம்
பக்கமெய்ஞ் ஞானி பயின்றிடிற் சாத்திரம் 1415
சக்கையாத் தள்ளத் தகுங்காண் சரணம்

கிளர்ந்தமெய்ஞ் ஞானியைக் கேட்டுத் தெளிய
விளைந்தபார்த் தற்கு விளம்பலிற் கண்ணனே
ஞானிதன் மாட்சி நவிலற் கருமையைத்
தானுத லிற்ருத் தகுங்காண் சரணம் 1420
மோன முகத்தான் முனிவரன் முன்புமெய்ஞ்
ஞான விசார நடக்குஞ் சரணம்
ஓதின வோத்தி னுளப்பொருண் ஞானியே
போதனை செய்யப் பொருந்துஞ் சரணம்
ஆரியன் சொல்லின்மெய் யாதரஞ் செய்யுளத் 1425
தோரிய லுண்மை யொளிருஞ் சரணம்
அருட்பூ ரணத்தை யடைந்த வகத்தார்
மருட்பூ தலத்துக்கோர் வைப்பாஞ் சரணம்
தம்மைநீ யாகத் தரிசித்த காட்சியோர்
பொய்ம்மயல் சாய்ந்த புலவோர் சரணம் 1430
அருளுருத் தேர்ந்த வகத்தினர் குன்ரு
வருளுருத் தாரு வமைவார் சரணம்
அருட்புண் ணியவயத் தாலன்றி யுண்மைத்
தெருட்புங் கவனையுட் டேருர் சரணம்
துலங்கவே யாருந் துணியமெய்ஞ் ஞானிக் 1435
கிலிங்கமே தோன்று மிலைகாண் சரணம்
ஞானப் புலவரை நம்பியன் புற்றுமேல்
வானப் புலவர் மகிழ்வார் சரணம்
புகழ்பூத் தொளிர்சிவ போத சொரூப
மகிழ்பூத் தொளிரு மனத்து மதர்ப்பொடு 1440
மீட்சியில் வான்பத மேவுந் திருவரு
ளாட்சியில் வாழ்வ ரறவோர் சரணம்

## ஜீவன் முத்தன்

உளதாதன் மாத்திரத் துள்ள மொடுங்கித்
தெளிதாதல் ஜீவன்முத் திச்சீர் சரணம்
உயிர்க்கும் பொழுதே விடுதலை யுற்ருேன் 1445
இயக்கம் பரத்தி னியக்கம் சரணம்
முத்த ரியல்பைத்தும் மூட மனங்கொண்டு
மத்தரே யாய்ந்து மருள்வார் சரணம்
முத்தர் மகத்தா முழுமுதற் றன்மையைச்
செத்த மனத்தரே தேர்வார் சரணம் 1450

## அருள் வாழ்க்கை

ஊழ்வலி யாவிவ் வுடல்வாழ் வுறலினவ்
வாழ்வினை மாற்றயார் வல்லார் சரணம்
அவ்வப் பொழுதவ் வதுவந் தடைவது
தெய்வ நியதித் திறங்காண் சரணம்
வேண்டினும் வேண்டா விடினு முறற்பால 1455
தீண்டா விடுத லரிதாஞ் சரணம்
ஆற்றிக் கொளலே யறிவாம் பழவினை
மாற்றக் கழியா மரபாற் சரணம்
விபுதரு மாட்டா வினையின் பயனைத்
தபுதலில் யார்கொல் சமர்த்தர் சரணம் 1460
வித்திய தம்மூழ் வினைப்பய னுண்டிடச்
சித்தந் திறம்புந் திறமென் சரணம்
நல்லதற் குள்ள நயக்கின்றோ ரல்லதற்
கல்லற் படலெவ னம்மா சரணம்

## அருட் புலமை

பொய்யுடம்பை யெண்ணி நரத்தைப் புறந்தொழான் 1465
பொய்யடிமை யில்லாப் புலவோன் சரணம்
நரத்துதி யெண்ணி னடுங்குவர் நாவாற்
பரத்தையே பாடிப் பணிவோர் சரணம்
அருட்கவி யந்த வருட்குல மல்லா
மருட்குல வோரை மதியான் சரணம் 1470
அந்த வருள்வல் லபத்தின் பெருமித
விந்தை வியக்கத் தகுங்காண் சரணம்
வியத்தகு செஞ்சொல் விசித்திரப் பாட்டால்
நயத்தகு நின்புகழ் நாடலற் றந்தோ
நரத்தையே பாடு நடலைப் புலவோன் 1475
கருத்தையா ராயிற் கடைகாண் சரணம்
பனையி னளவாம் பனுவ லுணர்விற்
றினையே யனுபவஞ் சீராஞ் சரணம்
வாலறி வாக வடித்தோங் கனுபவம்
நூலறி வுள்ளே நுழையா சரணம் 1480
நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகுங்காண் சரணம்

தெருளில் வெறுஞ்சாத் திரந்தெரி கோட்டி
பொருளில் வறுமொழி போலுஞ் சரணம்
நூலாற் பயன்மிக நொய்தே சமுசார 1485
மாலாழி மாற்று வதன்கட் சரணம்
நூலறி வாலே நுனித்தன மாய்ந்திடின்
வாலறி வுண்மை வயங்குஞ் சரணம்
வீட்டுச் சுரைக்காய் மிசையா மன்றிமற்
றேட்டுச் சுரைக்கா யிசையா சரணம் 1490
உயர்ந்தோ ரெனவு மிழிந்தோ ரெனவும்
பெயர்ந்துதஞ் சிந்தை விருப்புவெறுப் புற்றுப்
போற்றலுந் தூற்றலும் புந்தி யமைந்தொவிர்
தேற்ற மிலாதோர் செயல்காண் சரணம்
குற்றமுள்ள நெஞ்சங் குறுகுறுக்குங் குற்றநினை 1495
வற்றவெள்ளை நெஞ்சமைதி யகலா சரணம்
ஆன்றோர் மரபி னடைந்த வொழுக்கந்தாம்
ஏன்றோ ருயர்சிறப் பேய்வார் சரணம்
உண்மைக் குலா வாழ்க்கை யோடிவ் வுயிர்வாழ்க்கை
எண்மைக் களவொன்று மின்றுஞ் சரணம் 1500
போத முளோன் பரி பூரணச் செல்வன்மற்
றேத முளானதை யில்லோன் சரணம்
தளரா முயற்சி தலைப்படி னுள்ளங்
குளிரான்ம போகங்கை கூடுஞ் சரணம்
முயல்வேட்கை மெய்யா முயங்குறி னுள்ளத் 1505
தயல்வேட்கை யின்று வமையுஞ் சரணம்
இசைவுறப் பெற்றால் யமநிய மங்கள்
அசைவறு சித்தி யடையுஞ் சரணம்
நெகிழ்ச்சி யுறாதே நியமம் புரிவோர்
திகழ்ச்சி யுறும்பரந் தேர்வார் சரணம் 1510
உண்மை யொழுக்க முறுதி பயப்பது
திண்ணமென் றோர்ந்தார் திறம்பார் சரணம்
தெய்வந் தொழுமவர் செந்தண்மைப் பூட்சிசேர்
சைவந் தழுவல் சரதஞ் சரணம்
வார முடைப்பெரு மக்க ளுயிர்த்தொகைக் 1515
கீர முடைமை யியற்கை சரணம்
பழித்தவர் தம்மைப் பொறுப்பவ ருண்ணு
விழுத்தவர் தம்மினு மிக்கோர் சரணம்

திருவருள் சைவத் தெளிவிலா மூர்க்கர்
வெருள்வரு புந்தியில் வேருஞ் சரணம் 1520
துன்பத்தோ டாசை தொடர்புடைத் தன்றிமற்
றின்பத் தொடர்பதற் கின்ரும் சரணம்
எவர்த மிடத்து மெனைத்து மிரக்கை
தவிர்தலே செல்வமாச் சாலுஞ் சரணம் 1525
கள்ள மயக்கறக் கல்லாத புந்தியோர்
உள்ளதை யுள்ளவா ருேரார் சரணம்
கோட்ட மகற்றிக் குலவுஞ் சமரச
நாட்ட மளிப்பதே நன்னூல் சரணம்
புத்தக ஞானம் பொருளெனக் கொள்ளார்மற் 1530
றுத்தம ஞான வுறவோர் சரணம்

## திருவடிச்சிறப்பு

உலக மனைத்து மொருங்கே யளாவிக்
குலவு மலர்த்தாட் குரிசில் சரணம்
நரவுயிர் தம்மை நலிவற வின்பப்
பரவுயி ராக்கும் பதத்தாய் சரணம் 1535
அகந்தை யழிந்தஞா னுரூபு திக்குத்
திகழ்ந்தசிங் காதனத் தாளா சரணம்
யானெழிற் ருன்கீ ழிதயத் தறக்கரந்
தியான்விழிற் ருன்மே லெழுந்தாள் சரணம்
ஊகத்துக் கெட்டா துளத்தெளி வாம்பரி 1540
பாகத்துக் கெட்டும் பதத்தாய் சரணம்
முனைந்து பரிபாகம் மூளும் பதத்தை
நினைந்து நினைந்துள நெக்கார் சரணம்
பொருத்தமாப் புல்லலுன் பொன்னடி யன்றி
விருத்தமா மற்றவை மெய்யே சரணம் 1545
வெய்யிலை மாற்றி விடாயாற்றி யாருயிர்க்
குய்யிலை நல்குவ துன்ருள் சரணம்
பாலையே போற்சுடும் பாரிற் றளிர்நளிர்
சோலைகா ணுன்றன் றுணைத்தாள் சரணம்
தீனர்க் கிரங்குந் திருவருட் சிற்பர 1550
வானத் திருவடி மாண்பாஞ் சரணம்
அருணமாந் தன்னடி யாய்ந்த வகத்தோர்க்
கிருணமென் றென்று மிலைகாண் சரணம்

மரணம் புகாவல் லரணமா முன்றன்
சரணந் தனிர்சார் சரணம் சரணம்
எனைத்துத் திறத்தா லெனினு மரணவ் 1555
வனைத்துத் திறத்து மடிகாண் சரணம்
வேண்டா விருட்பும் வெளிமரி யாதையுந்
தீண்டாத் திருவடித் தேவா சரணம்
சரணமாத் தன்னடி சார்ந்தவர்க் கல்லாற்
புரணவிஞ் ஞானம்பொய் போலுஞ் சரணம் 1560
உதியா வொடுங்கா வுறுதியா முண்மைப்
பதியா முனது பதத்துணை யேயலாற்
றேவர்க்கு மல்லைவான் சித்தர்க்கு மல்லமற்
றியாவர்க்குந் தஞ்ச மிலைகாண் சரணம்
குருவடி வாகக் குலவுநின் ஞானத் 1565
திருவருட் சிந்தையே செல்வஞ் சரணம்
சிதானந்த பூரணச் சேவடி சேர்ந்தோர்
மதோன்மத்த ராக மகிழ்வார் சரணம்
தெளிவா வொளிர்சச் சிதானந்த போகக்
களியூட்டு செம்பொற் கழலா சரணம் 1570
எங்கெங் கெவரெவ ரோப் பறக்கினும்
தங்குந் தலந்திருத் தாள்காண் சரணம்

## சரணமாலை

உடையாய் சரண முவந்தாள் சரணம்
கடையேன் சரணங் கடவுள் சரணம்
அனுதீ சரண மனந்தா சரணம் 1575
மனுதீ சரண மனுந்தா சரணம்
தந்தாய் சரணந் தலைவா சரணமென்
சொந்த சொரூபத் துணைவா சரணம்
தூயா சரணமெய்த் தோழா சரணநற்
றுயா சரணநின் சேயேன் சரணம் 1580
ஒருத்தா சரண முரித்தா வெனக்குத்
திருத்தமாத் தோன்றுந் தெரிவா சரணம்
வெளியா சரணங் கரியா சரணம்
ஒளியா வுளத்து ளுளவா சரணம்
எளியா சரண மரியா சரணம் 1585
தெளிவா திறந்த வெளியா சரணம்

அருளா சரண மறிவா சரணம்
பொருளா சரணமென் போகா சரணம்
பிறவாய் சரணம் பிறப்பாய் சரணம்
துறவாய் சரணந் துறப்பாய் சரணம் 1590
பிறவாய் பிறப்பாய் பிறங்குமெய்ஞ் ஞானத்
துறவா மகந்தைத் துறவா சரணம்
பகலா சரணம் பகவா சரணம்
புகலா சரணம் பொறையா சரணம்

## வாழ்த்து

வாய்ந்தவா றெல்லாம் வழுத்துவே னல்லன்மற் 1595
றுய்ந்தவாற் றுலே யறைந்தேன் சரணம்
பெரிதுங் குழறிப் பிதற்றிய தெல்லாம்
அரிதுரை யாமகிழ்ந் தாண்டாய் சரணம்
ஆவலா யிவ்வோ ரகவ லிசைப்பித்த
தேவரா யன்மகிழ் தேவா சரணம் 1600
யானெனக் குள்ளாழ்ந் திறந்துழிக் கோயிலொன்
றியானுனக் கோங்க வெடுத்தேன் சரணம்
கோயி லதன்கட் குடிகொண்டு வீற்றிருந்
தாயிரங் கால மரசாள் சரணம்
வாழிய நின்னருள் வைப்பகத் தென்புரை 1605
ஏழையர் பங்குறை யெந்தாய் சரணம்
எனையாண்ட நின்ற னியல்வாழி யென்றன்
மனமார்ந்த நன்றியும் வாழி சரணம்
பொருள்வாழி யந்தப் பொருட்போத மாமெய்
யருள்வாழி வாழி யகங்காண் சரணம் 1610

## சரணுகதி

சொல்லாற் பொருளாற் றுணிவிலாப் பேதையேன்
கல்லாக் கவியைக் கமிப்பாய் சரணம்
பேயேன் பெரும்பல் பிழைபொறுத் தாண்டவ
நீயே யெனக்கு நிலைகாண் சரணம்
என்றன் மனோவாக் கிரண்டுந் திருவடி 1615
யன்றிமற் றொன்றை யறியா சரணம்

மறவியின் மோக மனத்தான் மடுத்த
பிறவியைப் பற்றிப் பிரிவறத் தான்றொடர்
மாதுக்க நீக்க மனங்கொண்ட தீவிர
சாதுக்க ளுக்கோர் சரணிய மான 1620
சரணும் புயநான் சரணம்
சரணமென் றென்றுஞ் சரணநா யேனே. 1622

திருச்சிற்றம்பலம்

---

## திரிவகவற் கருத்து

(குறள் வெண்பா)

சரணத் திருவகவல் சாற்றுவது செம்மாண்
பிரணவத்தாற் பேசும் பொருள்.

ஸ்ரீ ரமணார்ப்பணமஸ்து

பிற்பால்—1

## ஸ்ரீ ரமண சந்நிதி முறை

என்னும் நூலிற் சேர்க்க வேண்டியவை

**ஸ்ரீ ரமண புராணம்:**

1. ஓராதார மாகி யுலகுக்குத் தானே
நிராதார மாக நிகழ்மோன வானே

("கடக்கவொணுச் சிந்தைக் கவல்" என்னும் 400ம் வரிக்குப்பின் சேர்க்க)

**போற்றித் திருவகவல்:**

2. அன்னிய முற்று மறக்கழிந் தொழியிற்
றன்னிய லுண்மை றலைப்பட் டொளிர்தலால்
இதுவும் பொருளன் றதுவும் பொருளன்
றெதிர்விட யத்தா டெதும்பொரு ளன்றென
உய்கைக் குறுதிசே ருண்மைகேட் போரைச்
சைகையிற் றேற்றல்போற் றலையசைந் தாட

("ஒர்கெனக் குங்குமத் திலத" என்னும் 52ம் வரிக்குப்பின் சேர்க்க)

3. கலக மனமயக் கற்பனை வாழ்வா
முலகங் கடந்த வொருமுதல் போற்றி

("பொய்யுட் பொலியும் மெய்யே" என்னும் 88ம் வரிக்குப்பின் சேர்க்க)

**உபதேசத் திருவகவல்:**

4. உள்ள மெனுமனு பூதி யுண்மையி
னுள்ளமா மென்று முரைத்தாய் போற்றி

("உள்ளமென் றுமென் றுரைத்தாய்" என்னும் 80ம் வரிக்குப்பின் சேர்க்க)

5. மரண பயமிக மனநடுங் கினரே
தரணமார்க் கத்துத் தலைப்படத் தக்கோ
ராதலா லவரே யதிகா ரிகளெனக்
காதலா லெற்குக் கழறினை யெந்தாய்
சாதல் பிறத்தல் சாரா விறைவனோர்
காதலற் காகமுற் காலனைக் கடிந்த
வீரக் கழலே மிக்க வரணுச்
சாரப் பெறுவரச் சார்பின் பயனு
வகத்தைப் பற்றிய வினைத்துச் சார்பொடவ்
வகச்சார் பாயபொய்த் தாமு மகப்பட
முன்போன் மீள முளைத்த லின்றித்
தன்பான் முடிந்துமெய்த் தானுத் தரித்தனர்
மரணசங் கற்பமம் மாண்டவர் மாட்டு
வரலசங் கதமென வழங்கினை போற்றி
அமுதத் துவமதென் றமயே னுவிக்
கமுதா வாய்மலர்ந் தருளினை போற்றி

(''உள்ளதே யுள்ளலென் றுணர்த்தினை'' என்னும் 98ம் வரிக்குப்பின் சேர்க்க)

**சந்நிதிமுறைச் சார்பு:**

திருத்தெள்ளேணம்

6. தெள்ளேணங் கொட்டவென் சித்தம் புகுந்தபிரான்
கள்ளார் மலர்க்கழலே கண்டுகேட் டுண்டுயிர்த்துற்
றுள்ளாதே யுள்ளிநா னுள்ளம் பரவெளியாக்
கொள்ளாநின் றேன்சொருபக் கோயளமெய்த் தன்மையே.

திருப்பொற்சுண்ணம்

7. சுண்ண மிடித்திடித்துத் தூயவென் னுயகனைக்
கண்ணுங் கருத்துங் களிக்கநீ ராட்டினேன்;
வண்ணந் தெளிந்தவருள் வாலறிவா மோனத்தாற்
றண்ணிதாஞ் சித்தோப சாந்தி தழைத்ததே.

திருச்சாழல்

8. சூழ விளங்கு துரீய சொரூபனடித்
தோழமையா லன்பு சுரக்க வுளங்கிளர்ந்து
சாழல் படித்தேன் சதாசிவசாந் தானுபவ
நீழ லடைந்து நிரந்நரவாழ் வுற்றேனே.

## திருப்பொன்னூசல்

9. மின்னுசிவத் தேசு விளங்க வுளங்கனிந்து
துன்னுமெய்ஞ் ஞான சொரூபானு பூதிபொங்க
நன்னரெமை யாண்டகுரு நாதனருட் சீர்பாடிப்
பொன்னூச லாடிப் பொழுதுபோக் குற்றோமே.

## திருக்கோத்தும்பி

10. சோத்தெம் பிரான்கேளாய் சொக்கவருட் கட்டழகால்
ஆத்தமா லென்னகம்புக் காண்டவநின் பூங்கழலிற்
கோத்தும்பி யாகக் குடைந்தடைந்தேன் சிற்சொருப
நீத்தமா நீடு நிரதிசயா னந்தமே.

## குயிற் பத்து

11. அயற்பற் றகன்றெழிய வாண்டானைக் கூவு
குயிற்பத்தா லுள்ளங் குளிர்ந்தேன்; சொரூப
வியற்பத் திமையா விதயம்பூ ரிக்க
நயப்புற்றேன் மேன்மேலந் நாதனருட் பேறே.

## திருப்பள்ளி யெழுச்சி

12. பள்ளி யெழுந்தருளப் பாடிப் பரவினேற்
குள்ளமா வுள்ளத் தொளிர்சொருபன் கண்ணோக்காற்
கள்ள வகப்பாழ்ங் கலக்கமறச் செஞ்சுடர்போற்
றெள்ளியமெய்ஞ் ஞானத் திருவருள்பொங் குற்றதே.

13. கள்ள மனங்கரக்கக் காணுங்கண் ணுளனே நான்
பள்ளி யெழுச்சியாற் பாதம் பரவலுற்றேற்
குள்ள வொணுத வுபசாந்த போகமுறத்
தெள்ளியமெய்ஞ் ஞானத் திருவருள்பொங் குற்றதே.

## கீர்த்தித் திருவகவல்

14. கீர்த்தி யகவல் கிளந்தேனுக் காண்டவன்பா
லார்த்திமேன் மேலு மகம்பொங் கனுராகங்
கூர்த்தலாற் பாசக் குடிலமனத் துன்பமறப்
போர்த்ததுபே ரின்பப் புளகம்பூ ரிக்கவே.

ரமண புராணம்

15. மனுதிக் கரண மடாஅ தோங்கு
மனுதிப் புராண வகன்பெருந் தன்மை
எனலிசைப் பித்த ரமணப் பிரான்மாட்
டெனுதுற் பவமோர்ந் தியல்வாழ்வுற் றேனே.

குறிப்பு: புராணம் - ரமண புராணம்

திருவம்மானை

16. பொய்ம்மா லகந்தையறப் பொங்குமெய்ஞ் ஞானவருட்
செம்மா ணடியே சிவச்செம் பரம்பொருளா
அம்மானை பாடலா லாண்டவருட் பெம்மானுக்
கெம்மா நிலத்துமில்பே ரின்பநலம் பெற்றோமே.

திருத்தோணோக்கம்

17. மாணுக் களிசெய் மயக்கப் புலவுலகில்
வீணுக் கழியாது வித்தகத்தா லாண்டவனுக்
கூணுக் கழிந்த வுணர்வா லுவகைபொங்கத்
தோணோக்க மாடித் தொழுதுசுபம் பெற்றோமே.

சென்னிப் பத்து

18. தன்னந் தனிப்பர தத்துவமா வென்னகத்துத்
துன்னு துரீய சொரூபப் பரஞ்சோதி
வன்னவருள் வாழ்வா மலர்ந்த பதத்திலென்
சென்னியென் றென்றுஞ் சிறக்க விளங்குமே

திருப்பூவல்லி

19. மூண்டமோ காவரண மொய்யிருள்முற் றக்கரக்கத்
தூண்டவேண் டாதசுயஞ் சோதியா வென்னகம்புக்
காண்டவோ ரங்கணு னன்பாம்பே ரின்பநான்
பூண்டவா பாடிநாம் பூவல்லி கொய்யாமோ.

---

பிற்பால்—2

# ஸ்ரீ ரமணநுபூதி - முதற் பாகம்

என்னும் நூலிற் சேர்க்கவேண்டியவை

**முக்கியக் குறிப்பு:**

"சிவபோக சிந்தாமணி என்னும் ஸ்ரீ ரமணநுபூதி" என்னும் இந்நூலின் முதற் பாகம் இறைவன் திருவருள் கூடி இரண்டாம் பதிப்புக்கு வரும்போது, அந்தப் பாகத்தில் முக்கியப் பெரும்பகுதியா யுள்ளது "குருவருட் பிரசாதம்" ஆகிய காரணத்தால், அப்பதிப்பு *"**குரு ரமணப் பிரசாதம்**" என வேறு பெயர் இடப்பட்டு ஒரு தனி நூலாகவே வெளி வரும்.

இத்தகைய நோக்கம் இருப்பதால் "சிவபோக சிந்தாமணி என்னும் ஸ்ரீ ரமணநுபூதி இரண்டாம் பாகம்" என்னும் இந்நூலின் இரண்டாம் பதிப்பு வெளிவரும்போது, அது முன்போல 'இரண்டாம் பாகம்' என்னும் பெயர் ஏலாமல் "சிவபோக சிந்தாமணி என்னும் ஸ்ரீ ரமணநுபூதி" என்று பொதுப்பட ஒரே பாகமாகவே மற்றொரு தனி நூலாக வெளிவரும்.

—ஆக்கியோன்

(ஸ்ரீ முருகனார்)

---

*இந்நூல் திரு சாது ஓம் சுவாமிகள் ஸ்ரீ முருகனாரின் ஆயுட் காலத்திலேயே பகுத்து அச்சகத்திற்குத்தரும் அளவிற்குத் தயாரக்கி வைத்துள்ளார். முதற்பாகத்தில் சேர்க்கப் படாதவையும், ஆசிரியரால் மாற்றியமைக்கப் பட்டவையும் ஆகிய பாடல்கள் இப்பிற்பாலில் இடம் பெற்றுள்ளன. ஸ்ரீ பகவான் திருவருளிஷடம் உண்டேல் இந்நூல் விரைவில் வெளிவரும்.

குருவருட் காட்சி:

என் கண்மணியான ஆண்டவன் பேரின்பப்பதமாய் என்னகம் புக்கு மோனவளம் பெருக்கி மெய்க்காட்சியா நின்றானெனல்.

1. எண்ணற் கினியபே ரின்பப் பெரும்பத மென்னகம்புக்
கண்ணிப்ப தாக வருள்சுரந் தான்மஞா னனுபவ
வண்ணப் பரசிவ வாழ்வான மோன வளம்பெருக்கிக்
கண்ணுக் கினியமெய்க் காட்சியா நின்றனென்
[கண்மணியே.
(அநு1-a)

குரு ஆட்சித் திறன்:

ஆண்டான் அருட்புகழை ஆர்வமுறப்பேணி யுரைக்குந் தவம் மத்தமனக் கடியேற்கு வாய்த்ததெனல்.

2. கருமத் தமனக் கடியேற் கிதயத்
தொருமித் தவுணர் வொடருட் புகழைப்
பெருமைத் தவிருப் பொடுபே சுசிவத்
தருமத் திருவார் தவமெய் தியதே. (273-a)

ஆண்டான் அருளிய அனுபவம்:

உடல் வடிவான அகந்தை முனைப்பொழிவால் இதயத்தில் அருட் பர வடிவாக இயல்கின்றேனெனல்.

3. யானென் னுமகந் தையெழா வியல்பே
தானென் றசதா சிவதற் பரமாம்
ஊனென் றுமுனைப் பொழிவா லிதயத்
தானந் தவருட் பரமா யினனே. (298-a)

அவத்தை யபிமானியான அகந்தை மயக்கம் அகன்றொழிவாற் சிவத்துவமான சுவஸ்த நிலை சேர்ந்தேனெனல்.

4. பவத்தை விளைவிக் குமனப் படர்சேர்
அவத்தை யபிமா னியகன் றொழிவாற்
சிவத்தின் மயமாத் தெளிவுற் றெனை நான்
சிவத்தப் பெருநன் னிலைதோய்ந் தனனே. (298-b)

ஆவரண விக்ஷேபமற்ற ஆன்மா சதாசிவமாக விளங்கும் அபரோக்ஷ ஞானத்தால் அமைதி பெற்றேனெனல்.

5. அன்மை யிருளா னவகங் கெடலாற்
பன்மை யுறுகற் பனைதீ ரொருமெய்த்
தன்மை மனமற் றசதா சிவமென்
றென்மெய் யறிவா லமைவெய் தினனே. (298–c)

சுக சொரூபமான ஆண்டவன் அகத்தே பிரசன்னமாக விளங்கலால் பிறவித்துயர் பேரப் பேரின்ப மகிழ் விளைந்த தெனல்.

6. சுகமே வடிவாச் சுடர்தற் பரன்என்
னகமே முகமா வமைவால் மயலாற்
றுகமே வியவெம் பிறவித் துயர்போய்த்
தகமே வியதா தரமார் மகிழே. (302–a)

பாழகந்தை யகன்ற பரிசுத்த வுணர்வால் மோன வியற்பதம் சொந்த சொரூபமேயாக முடிந்த தெனல்.

7. தரமே துமிலாத் தமியேற் கருளாற்
புரமோ கவகந் தைமதிப் புலைபோய்
உரமா னசொரூ பவுணர் வுறலாற்
பரமோ னவியற் பதமெய் தியதே. (303-a)

செருக்கற்றொழிந்த சிவஞானாநுபூதித் திறத்தால் உலக மயக்கம் ஒழிந்த தெனல்.

8. இருளா கவியன் றவகந் தையைமாய்த்
தருளா கவிளங் குமனந் தசிவப்
பொருளா மநுபூ திபுணர்ந் ததனுல்
மருளா முலகத் தைமதிக் கிலனே (304-a)

அகந்தை அகன்றொழிய நான் அனுபவமாகத் திளைப் பது அறிவில் அருள் வெளியாக விளங்கும் பரசிவ மெனல்

9. களியா னவகந் தைகழன் றொழியத்
தெளிவா மநுபூ திதிளைப் பதுநான்
ஒளியா கநிறைந் தெனதுள் ளுணர்வில்
வெளியா கவிளங் குசிவப் பரமே. (305-b)

ஏகான்ம சொரூப ஸாம்ராஜ்யமான இதயப் பேரர சாட்சி எய்தலால், இழிதகவு சேர்ந்த மயக்கமனம் இறந்தொழிந்த தெனல்

10. அன்பே யுருவா வறிவுத் தெளிவால்
இன்பே யியல்பா விதயப் பரமாம்
தன்பே ரரசாட் சிதலைப் படலால்
வன்பா ழிளிசேர் மனமற் றதுவே. (308-a)

திருவருட் பேற்றால் பெற்ற பேறுகள் இவை எனல்:

உள்ளுணர்வான வுண்மை உள்ளத்திற் றெளிதலாற் பரவெளிவடிவான பரமுத்தி சொருபமே யாயிற்றெனல்.

11. பொய்வந் தமயக் கமனப் புலன்விட்
டுய்வந் திடவுள் ளுணர்வா கவொளிர்
தெய்வந் தெளிவாற் சிவபூ ரணமா
மெய்வந் தவெளிப் பரவீ டகமே. (316-a)

அனுபவங் கூறல்:

ஆண்டவன்முன் அருள் வெளியாகப் பரமுத்தி சொருபவியல் விளங்க, அகந்தை மனப் பாசபந்தம் அற்றொழிந்ததெனல்.

12. *இலங்கப் பெறுஞா னரவீந் திரன்முற்
றுலங்கப் பரமுத் திசொரு பவியல்
கலங்குற் றமனக் களிசே †ரகவல்
விலங்கற் றதருள் வெளியா வகமே (318-a)

*இலங்கப் பெறு முன் - அடியார் பரமான்ம சொருபம் விளங்கற் கிடமான அறிவுச் சுடரான ஆண்டவன் சந்நிதியில்-

†அகவல் விலங்கு - அகந்தை வடிவான வலிய சிச்சடக் கிரந்தி பந்தம்.

உலகோர்க் குபதேசம்;

ஆன்ம விசாரத்தால் அஞ்ஞான மயக்கம் அழிந்திடுமெனல்.

13. சுஞ்ஞா னசொரூ பமறந் து*மனோ
விஞ்ஞா னவிகற் பவெறிப் படுதன்
மெய்ஞ்ஞா னவிசா ரணையா லிதயத்
தஞ்ஞா னமயக் கமழிந் திடுமே (337-a)

* மனோ விஞ்ஞானம் - மனோமயமான விஞ்ஞானம்.

அனுபவங் கூறல்:

கற்பனை கழியக்காணும் சிற்பரமான சிவசொருபமே மெய்யான ஜீவ சொருபமாக விளங்கிற் றெனல்.

14. இம்மை மறுமை முதலா வியல்பல்
பொய்ம்மை களறப் புணர்சுத் தவருட்
செம்மை வளர்சிற் பரமே மிறைதீர்
மெய்ம்மை யகமா கவிளங் கியதே. (381-a)

பாதானுசந்தானம் என்னும் பாத மாலை:

15. ஒளிமறைவில் லாவோ ரொளிவெளியா உள்ளத்
திளிவரவு போக விருந்தொளிர்மெய்ப் பாதம்.

16. அறிவாக வுள்ளத் தவிர்சொருப மோனச்
செறிவா லசைவறுமெய்த் திட்பமாம் பாதம்.

17. விருப்பற்ற வெண்ணகத்தில் வேணவா முற்ற
அருட்பெற்றி யாலவிர்மெய் யன்புருவப் பாதம்.

18. பொற்புறுசற் போதப் பொலிவே திருவருட்சீ
ரற்புதமெய் யாக வகந்தெளிந்த பாதம்.

19. அடங்கடங்க மெய்யடியார்க் காக்கமளித் துள்ளே
யொடுங்கொடுங்க மோன வுவகைதரும் பாதம்.

20. மைத்தவகங் காரமற மாய்ந்தொழிந்த சித்தத்து
மெய்த்தவவாழ் வாக விளங்குசிவ பாதம்.

21. பிறவுண்மை யெல்லாம் பிறக்கிட் டொழிய
அறிவுண்மை யாக வவிர்சொருபப் பாதம்.

22. பரங்கெழுமெய்த் தன்மை பதையாதே மாயைக்
கரங்கமுந்தா ஞானசிற் றம்பலமாம் பாதம்

23. அறிவறிந்த சுத்த வகத்தே சொருப
நிறைவெளியா வோங்கு நிஜானுபவப் பாதம்.

24. கள்ளவுணர் வானமனக் கண்கலக்கம் பேரவருள்
வெள்ளவுணர் வாக விளங்குசிவ பாதம்.

25. மீட்சியறப் பொய்ம்மலிந்த வீணனை நன் கைக்கியமெய்க்
காட்சியா லாண்டவருட் கண்மணியாம் பாதம்.

26. *மேலாக் கியபாழ் வினைத்தொகையை நீறாகக்
காலாக் கினியாக் கனன்றெரித்த பாதம்.

*மேல் – முன்பு, முற்பிறவிகளில்

**ஆண்டான் அடிச் சிறப்பு:**

(கலி வெண்பா)

27. மற்றுவமை யற்றமுழு மாணிக்க மாமலையாச்
சுற்றுமொளி வீசுபரஞ் சோதியடி—சுற்றுமே
வேறென்று தோன்று விதங்கேவ லாத்துவித
வீறென்று சுத்த வெறுவெளியாத்—தேறென்ற
நேதியாற் கற்பனு ஞேயமெலாந் தள்ளலுற்ற
நீதியிற்றன் மீந்தொளிர்மெய்ஞ் ஞேயவடி—யாதுமோர்
ஊனமின் றாக வுயிர்த்தொகையைக் காத்திடுமெய்ஞ்
ஞானபண் டாரகுரு நாதனடி—வானவரும்
போற்றி வணங்குமடி பொங்குசுக வாரிதியாத்
தேற்றிமெய் யன்பர் திளைக்குமடி—நாற்றிசையும்
கூடுநடுத் தானமாக் கொஞ்சிக் குலாவுமடி
ஈடு மெடுப்பு மிலாதவடி—நீடுசிவச்
செம்மலடி ஜீவன் சிவலிங்க மாத்திகழப்
பொய்ம்மயல் போக்குசிவ போதனடி—மெய்ம்மைசேர்
சுத்தவறி வாகச் சுடர்தலாற் கைவல்ய
முத்தியுரு வாவகத்து மூண்டவடி—மத்தமன
மானுபி மான மயக்கற்றும் மெய்ஞ்ஞான
மோனனு பூதி முகத்தனடி—தானான
தன்மயமா விவ்வுலகைத் தாங்குமடி சுத்தசிவ
தன்ம சொரூபமாத் தங்குமடி—பன்மையனைத்
துள்ளு மொருமையா வுற்றவடி உள்ளத்தே
யுள்ளமா வுள்ள வொருவனடி—கள்ளமனத்
தாப மகற்றுமுப சாந்தவருட் சோதியடி
பாப மனைத்துமறப் பாற்றுமடி—தாபரமா
லிங்கவுருக் கொண்டவடி லேசமுமே துக்கமற
எங்கு மனைந்தியல்பே ரின்பவடி—மங்களமாய்

நல்லா ரிதயத்திற் போன்றே நலமொன்று
மில்லாவிப் பொல்லே னிதயத்தும்—எல்லேற
என்றுங் கொலுவீற் றிருக்குமடி எல்லோர்க்கும்
தோன்றுதொட் டுள்ள சொருபவடி—ஒன்றிரண்டென்
றோதுவார் வாத வுரைகடந்த மோனவடி
தீதுசே ராதபர தெய்வவடி—பேதுபடு
பேதவா திக்குப் பெருந்தூர மானவடி
போதமோ னத்திற் பொருந்துமடி—நீதவருட்
பார்வையாற் பாச விமோசனம் பண்ணுமடி
ஆர்வமுறத் தக்க வமுதனடி—கூர்வசியச்
சொக்கக் குழகனடி சொற்பரமன் றுகவெறுந்
தர்க்கக் கருத்தைத் தகையுமடி—சிக்கெனவே
தேடமிகத் தக்கபெருந் தெய்வவருட் செல்வவடி
கேடருமெய்ஞ் ஞான வருட் கேள்வியடி—ஆடகச்செம்
பொன்னிற் சிறந்தவடி போற்றுவார்க் காற்றமிகத்
தன்னிசைதித் திக்குந் தலைவனடி—என்னில்
அறிவொளியாத் தானே யகமகமென் றுண்மை
யுறவு சொருபமா வுற்றே—பிறிவருமெய்
யன்புசிவ மாக வனுபூதி யானவடி
தன்பரமா வென்னுயிரைத் தாங்குமடி—அன்பரகம்
பொங்க வழங்குசிவ போதவருட் செல்வமென்றும்
மங்கலற மேன்மேல் வளர்வதாற்—பங்கமகன்
றெங்கெழிலென் ஞாயிறெமக் கென்றன்ஞர் செம்மாக்கத்
தங்குமெய்ஞ்ஞா னனுபவத் தன்மையைநான்—நன்கு
நினைக்க நினைக்கவென் னெஞ்சம்பூ ரிக்கத்
தனக்குறவா வென்னைத் தழுவி—இனிக்க
இருக்கின்றே னென்னு மியல்பா முணர்வால்
உருக்கொண்ட வுண்மை யொளிரச்—செருக்காற்
பொருத்தமில் லாதமனப் புல்லியேன் காண
உருத்தநோக் காலூ டுருவிக்—கருத்தாற்
கணிக்கலா காதவருட் காட்சியளித் தென்னை
யணுக்கனு வாண்டா னடி.

**அனுபவங் கூறல்:**

ஞான சொருபமாக நண்ணிய ஆண்டவனுக்கு ஊன வகந்தை யுணர்வு ஊனுக வொழிந்த தெனல்.

28. ஈன மயக்க விளிவரல்சே றென்னகத்து
மோன வருட்பதமா முத்தி தலைப்படமெய்ஞ்
ஞான சொருபமா நண்ணியவாண் டானுக்கென்
னூன வகந்தையுணர் வூஞ வொழிந்ததே.

தெய்வந் தெளிதலால் அபரோக்ஷ ஞானநுபூதி அடைவுற்ற தெனல்

29. தெய்வந் தெளிந்தவருட் சீர்மையால் உள்ளத்திற்
பொய்வந்த மோகமறப் பொங்கியது மெய்யுணர்வு
கைவந்த நெல்லிக் கனியாக் கலந்ததகத்
தையந் திரிபகல்சுத் தான்மாநு பூதியே.

இறைவன் அமர்தலாற் கிரந்திபேதித்து இதயம் விசுத்த வெளியாக விரிவுற்ற தெனல்.

30. துரியவருள் வாழ்வாத் துலங்குசுப மோனக்
குரிசிலென் னுள்ளமே கோயிலாக் கொண்டான்
விரிய மலர்ந்த விசுத்தவெளி யாகப்
பெருகியதவ் வுள்ளம் கிரந்திபே தித்தே.

ஆண்டவனுல்:

ஆண்டவனோ டொன்றலால் அருள் வாழ்வாக விளைந்த அனுபூதி அகண்டப் பிரவாகமாக இயல்கின்ற தெனல்.

31. கள்ளவாழ் வான கலக்கமற ஆண்டவனோ
டுள்ளவா றென்று வொளிர்தலால் ஆன்றவருள்
வெள்ளவாழ் வாக விளைந்தமோ னநுபவம்
தெள்ளத் தெளிந்தொழுகு ஜீவநதி யாயிற்றே.

அனித்தான்:

ஆண்டவன் சிந்திக் கலக்கமறந் தேற்றிந் தமக்கு முத்திப் பேரின்பமான மோன வுணர் வருளினனெனல்.

32. சித்திகளிற் சற்றுமே சித்தங் கலங்காது
சுத்தவருட் கேவலமாத் துன்றும் பரமார்த்த
முத்தியிற் பேரின்ப மோனமெய்ஞ் ஞானமே
அத்தனளித் தென்னை யருளியவா வச்சோவே.

அனுபவத்தை மேலிட்டுக் கூறியது:

அறிவுருவாந்தன்னை அயர்த்தொழிந்தாற்போல் ஆராய்ந் தறிதல் கள்ளுண்டு களித்தோர் தம்மியல் கற்றறி தலேயா மெனல்

33. மறக்கவொண்ணு மாட்சிசேர் வாலறிவாந் தன்னை
அறக்கழிய லூற்ருர்போல் ஆவரண மோக
வுறக்கமனக் கற்பனையா லோர்த்துணர்வு கள்ளுண்
டறக்களியர் தம்மியல்கற் ருய்தலின்வே றன்றே.

தன்மயமான தோற்றத்தைத் தன்னிற் பின்னமாகத் தோர்தலான அஞ்ஞானமும் ஞான சொருபமான தனக்கு அன்னியமன் றெனல்.

34. பொன்னிலே பொன்னணிபோற் போத சொருபமாந்
தன்னிலே தன்மயமாந் தோற்றத்தைத் தன்னினயற்
பின்னமாத் தேரலே பேதைமையாம் பேணுங்கால்
அன்னதூஉந் தன்னியற்போ தத்துக் கயலன்றே.

அன்றி ஆகாதது:

சுத்த சைதன்யமான சொருபநிலை விசாரஞானத்தால் விளங்கலுற்ருலன்றி யோகசாதனையாலே மட்டும் எய்த வொண்ணு தெனல்.

35. மெய்த்தவமா வுள்ள விசாரத்தா லுள்ளஞ்சேர்
தத்துவஞா னத்தாற் றலைப்பட்டா லன்றிமற்
றெத்தகைமா யோக மியற்றினுந்தன் ஞெட்பநுட்பச்
சித்துவமா முண்மைநிலை சேர்ந்து திளைப்பரிதே.

அறிவுறுத்தல்:

சம்சார வாழ்வு சாசுவத மன்ருகக் கண்டவர்க்குக் கைவல்ய சொருபமே கண்டடையத்தக்க தெனல்.

36. பெண்டுபிள்ளை யென்றறிவு பேதலிக்கப் பற்றுடல்வாழ்
வுண்டுபோற் ருேன்றலன்றி யுண்மையன்ருக்
[கண்டவர்க்குக்
கண்டுகொள்ளத் தக்கவருட் கைவல்ய வாழ்வகத்து
மண்டுசிவ தற்பரமா மன்னு சொருபமே.

சொருப வேட்கையால் மற்றெல்லா வேட்கைகளுந் தொலைதலால் அருட்பர சொருபம் தானேதாகை விளங்கு மெனல்

37. அருட்பரத்தைப் போன்ற வரும்பொருளொன் றில்லை
விருப்பதன்மேற் பற்றலே மிக்க சுபேச்சை
மரிப்பதால் மற்றெல்லாக் காமனையு மந்த
விருப்பா லகத்தில் விளங்குமது தானே.

மனக்கலக்கமற்ற மவுனமாட்சியா லன்றிப் பரவாழ்வு படைக்க வொண்ணு றெனல்.

38. கலங்கு மனத்தாற் கடவுள ரேனும்
விலங்கினுங் கேடா விளிவ ரதான்று
விலங்குந் தெளிந்த விசுத்த மனத்தால்
இலங்கொளி சான்றோரெங் கியவுள ராமே.

என் தவமன்று:

யாதோர் சாதனையும் இயற்றாத தமக்கு இறைவன் கடாட்சத்தால் இதயத்தில் ஞானனுபூதி எய்திற் றெனல்.

39. பின்னப் படாதசிவப் பேற்றுக் குபாயமா
என்னைப் பொறுத்தவரை யானொன் றியற்றிலேன்;
என்னப்பன் பார்வையா லெய்திற் றிதயத்து
நன்னர்ப் பரசொருப ஞானனு பூதியே.

சகச வழிபாடு:

அருட்போத வடிவான குருநாதனை அவனே நானாகத் துலங்கு சொரூபானுபூதியாற் பூஜிக்கின் றேனே

40. புலங்கடந்த சுத்தவநட் போத சொரூப
நலங்கிளர்மெய்ஞ் ஞானகுரு நாதனையே தானாத்
துலங்க விளங்கு சொரூபானு பூதிப்
புலந்தெளிந்த புந்தியாற் பூஜிக்கின் றேனே.

பாடித் தொழல்:

வாசகமாலையால் அன்போடு வாழ்த்தலே அவன்பா லடையவேண்டு மபீஷ்டமெனல்.

41. * வாசக மாலையால் வார்கழல் வாழ்த்துசிவ
நேசமே யன்றியென் னெஞ்சத்தோ ராசையில்லேன்
யாசகமா வுள்ளமுவந் தீந்தருளப் பெற்றுவக்க
நேசவே ணுசையது நேர்பட்டாற் போதுமே.

*வாசகமாலை—பாமாலை (திருவாய்மொழி 3-8-10)

குருவருட் குதூகலம்:

சிவன்கழலே முமுட்சுக்களுக்கு முத்திநெறி காட்டித் துரிய சொருபத்துலக்கமான சுத்தமுத்தி விளைப்ப தெனல்.

42. பொய்யுற் றகளுப் புலமோ கமற
மெய்யுற் றுதுரீ யவியன் பரமாய்
உய்கிற் பவருக் கொளிசேர் கதியாச்
செய்கிற் பதமுத் திசிவன் கழலே. (252க்கு முன்)

அகந்தை மாலை அறவே கெடுத்த அருட்பத வொளியால் அகத்தே சிவசொருப சாட்சாற்காரம் சித்தித்ததெனல்.

43. மருளா னவகந் தைமனப் பிழைதீர்
அருளா விதயத் தவிர்பொற் கழலால்
வெருளா னமயக் கவிகற் பமறத்
தெருளா னசிவத் துவமெய் திடுமே. (258-a)

செய்வதறியாது திகைக்கின்ற தமக்குச் சிவசொருப சாட்சாற்காரம் பெற, இறைவன் மோனமுணர்த்தியது என்ன விந்தை யெனல்.

44. செய்யும் பரிசொன் றறியேன் சிவமா
வுய்யும் படிமோ னமுணர்த் தியவா
ஐயந் திரிபற் றவிர்வா லறிவின்
மெய்யன் புருவா கவிளங் கிறையே. (273க்கு முன்)

நிஷ்களமாக விளங்குகின்ற நிஜானந்த சிவ சொருபத்தில் மெய்யன்புணர்வான பரபத்தி விளைந்ததெனல்.

45. ஒளியே வெளியா வெளியே யொளியாத்
தெளிவா கவிளங் குசிவத் தியற்
களிசே ருவகைக் கனிவுற் றமனத்
தளிசேர் பரபத் தியளைந் ததுவே. (325-a)

சுத்தவறிவாகத் துலங்கு சொரூப ஞானநுபூதித்திறத்
தால் கற்பனை தொந்தங் கழன்றொழிந்த தெனல்.

46. பிறவா விறவாப் பிரியாப் புணரா
மறவா நினையா மகிழாத் துயரா
அறிவா கவிளங் கனுபூ தியின் மற்
றுறவே துமிலா மலொழிந் ததுவே. (310-a)

அறிவோடு அகத்தில் ஆழ்ந்தொடுங்கலுற்ற சமாதி
சாதனையால் ஆன்மஞானனுபவம் திடப்படுமெனல்.

47. பொறிவாய் மனமோ டுபுணர்ப் பறுமந்
நெறியா லிதயத் துநிலைப் படவூன்
றறிவா னசமா தியிலா முமதிச்
செறிவாற் றனதுண் மைதிடப் படுமே. (358-a)

பிற்பால் – 3

## ஸ்ரீ ரமணநுபூதி - இரண்டாம் பாகம்

என்னும் நூலிற் சேர்க்க வேண்டியவை

குருநாதன் அருளிய திருவருட் செந்நெறிக்கட் கூடி நிற்பவர் நெஞ்சம் காலன் குறுகாத கைவல்யச் செம்பதமெனல்.

1. ஓமென்ற சொல்லா லுபநிடங் கூறு
 முயர்பர மார்த்தவுண்மை
 நாமென் றறிய நலங்கிளர் மோனமெய்ஞ்
 ஞானந் தெருட்டியாண்டான்
 சேமங் கிளர்சிவச் செல்வத் திருவருட்
 செந்நெறி நிற்பவர்நெஞ்
 சேமன் குறுகா வியற்செம் பதம்அங்
 கிருப்ப தியற்பரமே. (47-a)

ஆண்டவன் பெயரை உயிருக்குறுதியாக வுணர்ந்து அநுசந்திப்பா ரகத்தில் அருள்விளக்கம் சேருமெனல்.

2. மறந்தே நினைந்தே மதிமயக் கப்பிர
 மாத வகந்தையினால்
 இறந்தே பிறந்தே யிடையறுத் துன்புற்
 றிரங்கு முயிர்த்தொகையைச்
 சிறந்தோம் புறுதி சிவத்துவத் தன்மைசால்
 சீரம ணப்பெயரென்
 றறிந்தே யநுசந்திப் பார்தங் கருத்தில்
 அருள்விளக் கம்முறுமே. (55-a)

அருட்பர வாழ் வொளியாக அகத்தே அலர்ந்த சற் குருபாதச் சால்பே ஆன்மசொருபமான பிரம்ம கைவல்யமெனல்.

3. திருந்தா வகந்தைச் செருக்கா(ம்) முனைப்பின்
திருட்டு வெளிப்பட,வன்
கருந்தாது போன்ற கடுந்தமப் பாழ்ஒரு
கண்மாய மாக்கரக்க
வருந்தா வகைஅருள் வாழ்வொளி யாக
மனத்தே மலர்ந்ததிருப்
பெருந்தா மரைப்பதப் பெட்பே சொரூபப்
பிரம்மகை வல்லியமே. (56-b)

குருவருள் - திருவடித்தொண்டர் சிவத்துவம்பெற, அவரகத்திற் பாசவகந்தையைப் பாறறிப் பரவெளியாகப் பொலியுமெனல்

4. சந்தித்துத் தன்னைத் தலையால் வணங்கித்
தழுதழுக் கத்துதித்துச்
சிந்தித் தொழுகுந் திருவடித் தொண்டர்
சிவத்துவத் தன்மைபெறப்
பந்தித்து நின்றவெம் பாச வகந்தையைப்
பாற்றிப் பரவெளியாப்
புந்திப் புலந்தேறப் பொங்கிப் பொலியும்
புணர்சற் குருவருளே. (58-a)

ஞானவடிவான சற்குருவை நம்பினோர் ஆணவப் பாழ் அகன்றொழிய பரமங்கல வாழ்வே சொரூபமாகப் பற்றுவரெனல்

5. வென்றி துலங்க விளங்குந் திருவருள்
வித்தகப் பார்வையினுல்
நன்றருள் கின்றமெய்ஞ் ஞான சதோதய
நம்பனை நம்பலுற்றோர்
துன்று மநாதித் தொடர்பான சூனியப்
பாழ்மயக் கந்தொலைய
மன்ற வியற்பர மங்கல வாழ்வு
சொரூபமா மன்னுவரே. (63-a)

அருட்சிற்பரமே அகமா வமைந்த ஆண்டவனை வழி பட்டொழுகும் அன்பர் அருள்ஞான விளைவால் பாசக் கலக்கமறப் பரசொரூபஞ் சேர்வரெனல்.

6. அழுத்தமா மோன வருட்சிற் பரமே
   யகமா வமைந்த பிரான்
புழுத்தலை நாயைத்தன் பொன்னடிக் காளாப்
   புணர்த்திய புண்ணியன்சீர்
வழுத்தி மனத்தால் வழிபா டியற்றுவோர்
   மாயக் கலக்கமற
விழுத்தவ ஞான விளைவா லடைவர்
   விசுத்தப் பரசிவமே. (70-a)

தன்னிழப்பாலே சகஜசமாதி படைத்த ததீயரான அடியர்தம் பெருமை அதிநுர்லபமெனல்.

7. சிந்தை யிலாப்பெருஞ் செல்வத் திருவருள்
   செய்துமெய் யன்பரகத்
தெந்தையென் றென்று மிருத்தலால் அன்ன
   ரிளிவரல் சற்றுமில்லார்
நிந்திய மானபொய்ந் நீச வகத்தை
   நிலந்தரஞ் செய்துதன்னிற்
சந்தத மோன சமாதி படைத்த
   ததீயர்தஞ் சால்பரிதே. (82-a)

கண்மணி விண்மணியாகக் கலந்த மோனப்பரசிவ முத்திநோக்கத்தில் உலகு மனோமயக் கற்பனை மாத்திரத் தோற்றமெனல்.

8. நயக்கவென் னுள்ளத்து ஞானமா நின்ற
   நமச்சிவா யப்பொருளாற்
கயக்கமா மோகக் கலக்கங் கழன்றிடக்
   கண்மணி விண்மணியா(ய்)
முயக்கமுற் றூர்ந்தது மோனப் பரசிவ
   முத்தி சொரூபவியல்
மயக்கமார் வஞ்ச மனோமயக் கற்பனை
   மாத்திரங் காணுலகே. (83-b)

இறைவன் திருவடிக்கு மெய்யன்பு பற்றினோர் ஏங்க வேண்டாமல் இதம்பெற வாழலாமெனல்.

9. ஏங்கநீர் வேண்டா இதம்பெற வாழலாம்
இன்பப் பெருமிதங் கூர்
ஓங்கலா வுள்ளவோ ரும்பரா னெம்பிரான்
உண்மைத் திருவடிக்குப்
பாங்கரா மெய்யன்பு பற்றினோர் மிக்கசௌ
பாக்கியத் தாரெனற்கு
யாங்களே மிக்க வெடுத்துக்காட் டாக
வியல்கின்றோம் காண்மின்களே. (91-a)

சதாசிவமே தன்னுண்மையாக ஒளிர்கின்ற சாந்த சொரூபாநுபூதி அகந்தைமுனைப்பழிந்தாலன்றி அடைய வொண்ணாதெனல்.

10. தமங்கெழு மோகத் தடிப்பால் உலகத்திற்
சஞ்சலங் கொண்டுழல்பாழ்
அமங்கல மான வரக்கப் பசாச
வகந்தை யழியினல்லால்
சமங்கெழு சுத்த சதாசிவத் தன்மையே
தன்னுண்மை யாகவியல்
சுமங்கல மான சொரூபாநு பூதி
துலங்கத் தினைப்பரிதே. (96 a)

ஞானன்ம சொரூபமே நாமாகத் துலங்கத் தெரியி லன்றிப் பிரம்ம சுகாநுபவப் பெருமிதவாழ்வான சாந்தி துய்த்தலரிதெனல்

11. தன்னைத் தவிரமற் றொன்றுமில் கேவலத்
தன்மை சதாசிவமா
நன்னர்த் துலங்கமெய்ஞ் ஞான சொரூபமே
நாமென் றுணரிலன்றிப்
பின்னைப் பிறிதொரு பேதமு மற்ற
பிரம்ம சுகாநுபவ
வன்னப் பெருமித வாழ்வான சாந்தி
வளம்படத் துய்ப்பரிதே. (96-b)

அகந்தை முனைப்பான அபிமானத்தை அருள்வாளால் வெட்டியழிக்கில் பராமிர்த வாழ்வான வீட்டின்பம் வேணவாமுற்ற விளைந்திடுமெனல்.

12. ஆணவ மோக வகந்தைவே கத்தை
யறச்செற் றழிக்கிலன்றிக்
காண வொண்ணுதுமெய்க் கைவல்ய சித்தி
கருத்தி லுருத்தெழுமவ்
வீணபி மான விடக்கொடும் பாத்தளை
வெட்டி லகத்தருளால்
வேணவா முற்ற நுமக்குப் பராபிர்த
வீட்டின்பம் மேவிடுமே. (98-b)

ஆன்மவிசாரந்தால் அகங்காரக்கிரந்தி பேதஞ்செய்து அமுத சொரூப ஞானுநுபூதி வடிவான சாந்தியே அடையவேண்டு மெனல்.

13. திருத்தக் கடவது சித்தமே தேறத்
தெளியச் சிவபதத்தே
பொருத்தக் கடவது புத்தியே நானென்னும்
பூட்டறக் கூருசாவால்
இருத்தக் கடவது சாந்தியே யுள்ளத்
திடைவிடா தாருயிருக்
கருத்தக் கடவ தமுத சொரூபஞா
ஞநுபூ தித்தெளிவே (105-a)

செறிவாரிதயத்திற் சிற்பரமான அருட்கேவல வொளியாற் சிதம்பர தரிசனம் சேர்வுறுமெனல்.

14. இறவான மோகத் திடைப்பா முடம்பைநா
னென்ற வகந்தைமதிக்
குறவான பல்வே றுபயஞா னங்களும்
உள்ளத் தொருதனிவெற்
றறிவான தன்னி லடங்கக் கிளர்மெய்
யருட்கே வலவொளியாற்
செறிவா ரகத்திற் சிதம்பர தெய்வ
தெரிசனஞ் சேர்வுறுமே. (110-a)

தன்னிழப்பாலே சாந்தியிற் கரைந்த சற்போத மனத்தர் சாந்தாநுபவமே சாற்றுவதல்லது பேதரசம் படப் பேசாரெனல்.

15. பின்னலாங் *கற்பனு பேதக் கிரந்திபே
    திக்கப் பரவெளியாய்த்
தன்னிழப் பான தலத்திலே பொங்குறு
    சாந்தியின் மக்கினமாய்த்
துன்னுசற் போத சொரூப மனத்தர்
    சொரூபசாந் தாநுபவஞ்
சொன்னதே சொன்னதே சொல்லுவ தல்லது
    சொல்வதென் நூதனமே. (117 a)

*கற்பனு பேதக் கிரந்தி – கற்பனு பேதங்களுக்குக் காரணமான அகங்கார வடிவச் சித்சடக் கிரந்தி; இதயக்கிரந்தி என்பதும் அது.

சிற்பரவரழ்வான சிவாநுபவம் பற்றிலைல்லாது கற்பனை யான கலக்கப்பிறவி கழல்வரிதெனல்.

16. சொற்பன மாகத் துணிந்து புலங்களைச்
    சுட்டற விட்டொழித்து
நிற்புறு மெய்ஞ்ஞான நிஷ்டையா லுள்ளத்து
    ஞேய சொருபவியற்
சிற்பர வாழ்வாத் தெளிந்த சிவாநுபூ
    தித்திறம் பற்றிலன்றிக்
கற்பனை யான கலக்கப் பிறவி
    கழன்றிடா தாருயிர்க்கே. (128–a)

மோகவகந்தை அதன்மூலந் தொடுங்கவாற் கற்பனையற் றொழியச் சிற்பர மோனம சிவந்திற் றிளைத்தலே சிவாநு பூதித் திறமெனல்

17. முற்பட நானென்னும் மோக வகந்தை
    முனைப்பைமூ லத்தொடுக்கித்
தற்பர மான சதாசிவ சாதனை
    சாதித்த வால்அகத்திற்
கற்பனை யான கருத்தற் றொழியக்
    கடவுட் பரசிவத்திற்
சிற்பர மோனஞ் சிறக்கத் திளைத்தல்
    சிவாநுபூ தித்திறமே. (133-a)

பரவெளியே சுயசொருபமாக அகந்தையறப் பரந் தொளிரும் வாழ்வே உயிர்த்தொகையின் உண்மைப் புகலிடமான் முத்திநிலை யெனல்.

18. ஈனந் தருமுடல் யானென் றியங்கு
மிளிவரல் சேரகப்பா
மூனந் தவிர உதாரப் பரவெளி
யேதன் சுயவுருவா
ஞானந் துலங்க நடப்புறு வாழ்வு
நலங்கிளர் முத்திநிலை
ஆனந்த மோன வருட்பெரு வைப்பா
மதுவே புகலிடமே. (140-a)

சைதன்ய சொரூபத்திற் றணவாத சதாசார மோன நிலையே சாதகராற் கடைப்பிடிக்கத் தக்க பிரம்மீ பாவத் திறமெனல்.

19. அறிவான தன்னையே யல்லாது மற்றென்
றறியா வருட்கேவலச்
செறிவான சுத்தத் தெளிவே சொருபத்
திதியான மோனநிலை
உறவாக வுள்ளத் துணர்ந்தொழு கத்தக்க
வுண்மையாந் தன்னியலிற்
பிறியா துறைக்கையே பேணக் கடவ
பிரம்மீபா வத்திறனே. (141-a)

சிவோக ஞானநுபவத்தாற் சித்தக் கலக்கந் தெளிவி லல்லது சாயுச்சிய மின்மையாற் சதாசிவமே தாமாகப் பற்றவேண்டுமெனல்.

20. திடவுட் செறிவாற் செருக்கற் றொழியச்
சிவோகஞா னநுபவக்
கடவுட் பதத்தைக் கருத்திற் பொருத்திக்
கலக்கந் தெளியிலன்றிப்
படர்வுற்ற மோகவெம் பாசப் படர்தீர்
பரமசா யுச்சியத்துக்
கிடமற் றொழிதலால் இன்பப் பரமதே
யாமெனப் பற்றுகவே. (170-a)

சுத்தான்ம சொருபத் துலக்கமான மெய்யன்புறவே இயற்பர யோகசாதனையாக இயற்றவேண்டு மெனல்.

21\. அறிவிற் பிறந்தமெய் யன்பே சொரூப
வருட்பத்தி யாகவிளங்
குறவிற் பழுத்தலே யுத்தம யோகமென்
றேதுவர் மெய்யுணர்ந்தோர்
அறிவிற் கலக்கமற் றன்புதூய் தாக
வகப்பேய் முனைப்பையகழ்ந்
திறைசிற் பதத்தி லியக்குக சிந்தையை
யாதும் பிடிப்பின்றியே. (171-a)

நெஞ்சத் தியல்பான குருபாத ஞேயமே தெய்வத் தியானமாகத் திகழ, சிவபோக வாழ்வு அருள்கின்ற ஸ்ரீ ரமணாநுபூதி சொல்வேனெனல்.

22\. தஞ்சமாத் தன்னடி சார்ந்தா ரகத்துமெய்த்
தத்துவ ஞானவொளி
விஞ்சவே வீசு விசுத்த சொரூப
விளக்கந் தெளிதரலாற்
செஞ்செவே சொல்வேன் சிவபோக வாழ்வருள்
**ஸ்ரீ ரம ணாநுபூதி**
நெஞ்சமே யாக நிலாவுங் குருபாத
ஞேயத் தியானஞ்செய்தே. (171-b)

பரமார்த்த வுண்மை யுணர்த்திப் பசு பாசமயக்கம் ஒழித்த சற்குருபாதமே சற்கதியெனல்

23\. பழிபடு மாணவப் பாச மலத்தாற்
படர்படக் காரணமா
இழிபடு புன்புலால் யாக்கையை நானென்
றிருள்சே ரிருவினைப்பட்
டழிபடு வேன்பா லருள்கூர்ந் திரங்கி
யரும்பர வுண்மைதெரித்
தொழிபட மைப்பா முலகுடல் வாஞ்சையை
யோட்டினான் றாள்கதியே. (175-a)

மனக்கேத மார்ந்த மயக்கப் பிறப்பற இன்பமகிழ் சேர்ந்த இயற்பத வாழ்வருள் என இறைவனை நோக்கிப் பிரார்த்தித்தல்.

24. எனக்கேது வேண்டுமென் றியானே யறிந்திடா
வேழையேன் என்னதெல்லா
முனக்கே பொறுப்பாக வுன்னேயே தஞ்சமா
வுற்றே னுயிர்க்குயிரா
மனக்கேத மார்ந்த மயக்கப் பிறப்பற
வண்மைசே ரின்பமகிழ்
வெனக்கேய் தரநின் னியற்பத வாழ்வருள்
எந்தா யொளிபெறவே. (176-a)

ஆண்டான் பதத்திற் பதிந்தமனம் ஆங்கே அழிந்தொழிந்தமையால் மனோதீதமான அருட்பெருவாழ்வு மலிந்த தெனல்

25. ஆத்தங் கலந்தமெய் யன்பா லடியே
னகம் பொங்கச் செய்ததொரு
சோத்தங்கொண் டாண்ட சொரூபப் பிரான்மெய்த்
துரீய வருட் பதத்திற்
கோத்தங் கொழிந்த குறிப்பாற் குறிக்கப்
பிறிதொரு கொள்கையின்றி
மாத்தங் கமான மனோதீத வாழ்வு
மலிந்து பொலிந்ததுவே (184-b)

அகத்தே அருள்வாழ்வான அநுபவம் பொங்க, மவுன திகையாற் சிற்பரன் சிவபதந் தெரித்தானெனல்

26. இருட்புல மாக வெதிர்ந்த கனவகத்
தேங்கி வருந்தினேனுக்
கருட்பர வாழ்வா மநுபவம் பொங்க
வகத்தே மயற்பிழைதீர்
தெருட்பர மோனமே தீட்சையா வாண்டு
சிவச்செம் பதந்தெரித்தான்
குருப்பர னுவருட் கோலமேற் கொண்டு
குலாவிய சிற்பரனே. (195-a)

இறைவன் கண்ணேக்கால் ஆணவச் செருக்கான இதயக்கிரந்தி பேதிக்க ஏகாண்ட வாழ்வொளியான சித்தி இயற்பர வெளியாக இயைந்ததெனல்

27. அருள்வித் தகனான வாண்டவன் கண்ணேக்கால்
 ஆணவப் பாழ்மயக்க
விருள்கெட் டொழிய இதயப் பரவெளி
 *ஏகாண்ட வாழ்வொளியாத்
தெருள்வுற்ற சுத்தான்ம சித்தித் திறத்தாற்
 செருக்கா மகந்தைமனச்
சுருள்†விட் டொழிந்தது சொப்பனக் கற்பனு
 சோகமோ கங்கெடவே. (196-a)

*ஏகாண்டம் – ஏகாகண்டம் என்பதன் மரூஉ.
†விட்டொழிந்தது - விடுபட்டொழிந்தது

இறைவன் கண்வழியே தம்மிதயத்தொன்றலால் இருட் பாழவிச்சை யழிய இயற்பரஞ் சோதியாக இமையாத நின்றேனெனல்.

28. தொல்லை யநாதிச் சுயம்புவாத் துன்று
 சொரூப ரமணப்பிரான்
ஒல்லையென் னுள்ளத் துணர்வொளி யூறவந்
 தொன்றலாற் கண்வழியே
இல்லையாத் தீர விருட்பா ழவிச்சையை
 ஏறிட்டு நோக்கியகத்
தெல்லை யிலாத வியற்பரஞ் சோதியா
 நின்றே னிமைப்பின்றியே. (197-b)

கண்மணியான ஆண்டவன் தன் கருணை கடாக்ஷத்தால் சொரூபவநடபத வீட்டில் என்னை விண்மணியாகச் சுடர்வித்தானெனல்.

29. உண்மய வாலே யுணர்வு மடம்பட்
 டொழிந்தேன் ஒளிநெறிகண்
டண்ம வசத்தனு மென்னை யருட்பத
 வீட்டி லடைவியென்னக்
கண்மணி யான கருத்தன் சொரூபக்
 கடவுட் பதத்திலென்னை
விண்மணி யாக விளங்கத் தெருட்டினன்
 வீட்சண மாட்சியென்னே. (203-a)

ஆன்மசொருபமான ஆண்டவன் சிற்பராசக்தியான திருவடியாற்றுக்கச் சிச்சடக்கிரந்திபந்தம் சிதைவுற்றதெனல்.

30. ஆளா வடைந்தவென் ருவி பராக்கா
வகந்தைக் கலக்கமுற்று
மாளா துலக மனேமய வாழ்வில்
வசீகரித் தென்மனத்தை
மீளா வருட்பத வீட்டொளி காட்டி
விளங்கு சொரூபமெய்யன்
தாளான சிற்பரா சத்தியாற் ருக்கத்
தகர்ந்தது சிச்சடமே. (204-a)

சம்சார மயக்கமறத் தன்மாத்திரஞான மளித்தலால் இறைவன் ஏகான்ம சொருபமாகத் தம்மை யுணர்த்தி ருனெனல்.

31. அருவமா வுள்ள வருட்சிற் பரவெளி
யானவென் னுண்மைமறந்
துருவமாக் கற்பனே யூடே யுயங்கி
யுழன்றிடக் காரணமா
மருவசா வான மயக்கற் றெழியத்தன்
மாத்திர ஞானமளித்
தொருவனு வென்னே யுணர்த்தினன் உள்ளத்
தொளிர்சொரூ பாரியனே. (207-a)

மனங்கலங்கிய தம்மை மலரடிக் காட்கொண்ட இறைவன் அத்துவித ஞானுநுபவமான அருட் பேரமுதவாழ்வு ஆர்த்தினனெனல்.

32. என்று கொளுங்கோ லிறைப்பர மேசனென்
றேங்கி மனங்கலங்கி
மான்ற வெனேத்தன் மலரடிக் காளா
மகிழ்ந்துகொண் டாண்டபிரான்
மூன்றுமொன் றுன முழுப்பர தத்துவ
மோனமெய்ஞ் ஞானமளித்
தான்ற சிவத்துவ மான வருட்பே
ரமுதவாழ் வார்த்தினனே. (226-a)

ஆண்டவன் ஆசீர்வாத பூர்வமாக அடியேனுக்கு மனங்கடந்த அத்துவித மோனுநுபவமான சாந்தி அளித்தானெனல்.

33. முன்னெனப் பின்னும் ஓர் மூடனே போற்பிறர்
முன்புநான் தோற்றிடினும்
மெய்ஞ்ஞன வாக விளங்கு துரீய
விழுப்பத வொட்பமுற்றேன்
இன்னண மென்னை இரண்டற்ற மோன
வியல்பான தன்னிலையில்
மன்னென வாழ்த்தி மனோதீத சாந்தி
வழங்கின ரமணனே. (231-புதுப்பிக்கப்பட்டது)

ஆண்டான் அருளடிக்கீழ் அடைந்த ஆன்மசொரூப சாக்ஷாத்காரம் இனி என்றும் தேய்ந்தழியாதெனல்.

34. அரிய பெரியவாழ் வாக வகத்துனக்
கார்ந்து திளைத்திடென்று
பிரிய வொண்ணவருட் பேறளித் தாண்ட
பிரம்மப் பிரானடிக்கீழ்த்
தெரிய வொண்ணத சிவக்கே வலந்தெளி
வாகத் திகழ்வுறுமெய்த்
துரியமா வுள்ள சொரூபசாட் சாற்காரந்
தோய்ந்தது தேய்ந்தறுதே. (247-b)

உள்ளும் மனத்தை இறைவன்பால் உருக்கிக் கரைத்தலும் உணர்வின் கற்பனையற்றதெனல்.

35. திருக்கு மயக்கச் செருக்குற்ற ஜீவர்தஞ்
சித்தத் தெருமரலால்
விரிக்கும்பொய்ம் மாய விலாசக் கனவை
விசாரவிஞ் சைத்திறத்தாற்
சுருக்கிக் *கரக்குந் துரீய சொரூப
சுமங்கள மெய்ப்பரன்பால்
ஒருக்கி மனத்தை யுருக்கிக் கரைத்தாங்
குணர்வின் படைப்பற்றதே. (254-a)

*கரக்கும் — கரப்பிக்கும் எனப் பிறவினை.

ஆண்டவனுக் கடிமைப்படலால் அகந்தையுருவான பந்தவுணர்வு அகல, அருட்பூரணமான முத்தி சொரூபாநுபூதி அடைந்ததெனல்.

36. தாளே தலையாத் தலைப்படு ஞான
 சமாதியா லாண்டவற்கு
மீளா வடிமையா விற்றென்னை முற்ற
 விளங்கப் பெறுமிதயத்
தாளான பெத்த வடிமையைச் சற்று
 மறியவொண் ணுதபடி
மூளா வருட்பர முத்தி சொரூப
 முழுத்தன்மை முன்னின்றதே. (255-a)

திருவடித் தியானந்தாற் சேர்ந்த அத்துவித ஞானுபவந்தாற் சிந்தாகுலங்கெடத் திருத்திசேர்வுற்றதெனல்

37. நீர்மைசே ரன்பு நிரம்பியோர் நெஞ்சத்தி
 னின்றக லாதபிரான்
சீர்மைசேர் பாதத் தியானக் கதிரொளி
 சேர்ந்தாங் கிதயமுற
ஓர்மைசே ருண்மை யுணர்வுற் றெழுந்தநல்
 லோகையால் யானெனும்பொய்க்
கார்மயல் சேர்மனப் புன்கவல் பொன்றக்
 கருத்தமை வுற்றதுவே. (255-b)

நெஞ்சத்தே நியாமகஞன ஞேயப்பிரான் சொரூபம் விளங்கலாற் கர்த்தத்துவச் செருக்கற்றொழியச் சிச்சடக்கிரந்தி சிதைவுற்றதெனல்.

38. அயாமயல் சேர்ந்த வகந்தைக்கர்த் தத்துவ
 மற்றிட வற்புதமெய்ந்
நியாமக ஞனவிஞ் ஞேயப் பிரானுரு
 நெஞ்சத் தொளிர்வதனுல்
*எயாமையில் யானென் றெழுந்துதுள் ளிக்குதித்
 தேங்காது சொப்பனத்தூ
†டுயாமயக் கப்பொய் யுணர்வான சிச்சட
 யோகங் குலைந்ததுவே (256-a)

*எயாமை —எய்யாமை, அறியாமை.
†உயாமயக்கம் - உய்யாமைக் கேதுவான மயக்கம். பிறவித்துன்பத்துக் கேதுவான மயக்கம் என்னுமாம்.

குருவருளாற் கூடிய பரசிவ ஞானவொளி ஆணவச் செருக்கை அசத்தாக வகற்றிற்றெனல்.

39. அரக்குற் றெனைத்தன் னடிக்கீ ழடர்த்தபா
 ழாசைப் பசாசமயல்
கரக்குற் றெழியவெங் காமப் பிழையறக்
 காணுங் குருவருளாற்
பரக்கத் தெளிந்த பரமோப சாந்தப்
 பரசிவ ஞானவொளி
அரக்கச் செருக்கா மவிச்சையை முற்ற
 வசத்தா வகற்றியதே. (278-a)

குருநாதன் கூடுவிட் டென்னுளம் கோயில்கொண் டுறைதலால் உள்ளம் உவாமதிபோற் குளிரப் பராற் பரவாழ்வு பற்றிற்றெனல்.

40. பீடுபெற் றோங்கும் பிரம்ம சொரூபப்
 பெருமித மோனவொளிக்
கூடுவிட் டென்னுளங் கோயிலாத் தான்குடி
 கொண்டுறை கின்றவாற்றுற்
பாடுபட் டாலன்றிப் பற்றப் படாத
 பராற்பர வாழ்விதயத்
தூடுபுக் கார்ந்த துவாமதி போலவென்
 னுள்ளங் குளிர்ந்திடவே. (282-a!

உள்ளக்கமலம் மலர்தலால் உண்டான அநுபூதி வளத்தால் மனக்கலக்கமான மறுக்கங் கழிந்ததெனல்.

41. அங்கத் தகம்புத்தி யாலே மயங்கிமா
 யாவிலா சத்தமிழ்ந்தேற்
கங்கட் பிரான்சொரு பாரிய னுலே
 யகத்தா மரைமலரப்
பொங்கிக் கிளரநு பூதித் திருவருட்
 பொக்கிச முற்றமையால்
மங்கிக் கழிந்தன மத்த மனப்புன்
 கலக்க மறுக்கங்களே. (282-b)

அதீதசிவம் அகந்தை யடங்கின அகத்தில் ஆன்ம சொரூபமாக அவிர்கின்ற தத்துவஞான சமாதி தலைப் பட்டதெனல்

42. இனைத்தென் றறிந்திட யானென் றெழுந்தா
        ரெவர்க்குமொாண் ணுதசிவம்
    முனைத்துநா னென்றெழு மூர்க்க வகந்தை
        முடங்கிற் றனுதுமூலத்
    தனைத்துமொன் றுனசுத் தான்ம சொருப
        வருள்வெளி யாகவொளிர்
    தனித்த பரமார்த்தத் தத்துவ ஞான
        சமாதி தலைப்பட்டதே. (286-a)

இறைவன் சொருபவொளியே இதயமாக விளைதலால், தமக்குக் கற்பனு தொந்தங் கடந்த கைவல்ய மாண் புற்றதெனல்.

43. ஒன்ருக வுள்ள வொருத்தன் சொருப
        வொளியே யெனக்குளமாய்
    நன்ரு விளைதலால் நன்றுதீ தற்றமெய்ந்
        நாயகத் தன்மைபெற்றேன்
    பொன்ருத வுண்மைப் புகழ்சால் குருபரன்
        பொன்னடி துன்னடியார்
    வென்ரு ரகிலமும் வீடே சொருபமா
        வித்தக ஞானமுற்றே. (286-b)

தலைவி பக்குவப்படாத தன்னைப் பக்குவப்படுத்திக் கலந்த தலைவன் விளையாட்டியல்பை வெகுண்டுரைத்தல்.

44. பருவப் படாச்சிறு பாவையா மென்பாற்
        பராமிர்தப் பார்வையைஊ
    டுருவச் செலுத்தி உளம்பக் குவமா
        வுணர்வு மதர்த்தலுற
    மருவிக் கலந்தவன் மாயத்தை யென்சொல்கேன்
        மானங்கெட் டாளென ஊர்த்
    தெருவிற் சிரிப்பவர் தம்மொடு சேர்ந்துதா
        னுஞ்சிரிக் கின்றனனே. (289-b)

அயலார் அலர்தூற்றலைச் சற்றும் பொருட்படுத்தாமல் ஆண்டவன்பால் அன்புணர்வால் உளங்கரைந்துக்க தெனல்.

45. ஜகமீ தெனைப்பிற தையலார் தூற்றலைச்
 சற்றும் பொருட்படுத்தேன்
சுகமே சொரூபமாத் துன்றும் பரமே
 தொழுதெழு மெய்யடியார்
அகமே யகமகி ழாலய மாக
 வமர்ந்தரு ளாண்டவன்றாட்
குகமே விவதென்னுளங்கரைந் நுட்கசிந்
 தூறமெய் யன்புணர்வே. (289-c)

தன் கைகடந்த காதலைத் தலைவற் குணர்த்துமாறு தோழியைத் தலைவி குறிப்பாக வேண்டல்.

46. ஐய னருட்கட் டழகு முகத்தால்
 அறிவு பறிகொளப்பட்
டுய்யு முபாய முணர்ந்திட வொண்ணு
 துளத்தா ழுருவலுறத்
தைய லொருத்திநான் மையலுற் றேங்கலாற்
 சோறுதண் ணீர்மறந்தேன்
பெய்யுங் கருணைப் பிரானுளந் தேறப்போய்ப்
 பேசுகின் றாரில்லையே. (290-a)

உள்ளம் பரசிவமான பதியிற் கலத்தலால் தமக்கு மவுனப் பதத்திற் பரசிவ ஞானானுபவம் பற்றிற்றெனல்.

47. உதயச் சுடர்செய் யொளியா லிருள்கெட்டாங்
 கூன மயக்கமற
இதயத் தொளிசெய் தெனது சொரூப
 வியல்பேயா வாண்டசிவப்
பதியிற் கலத்தலாற் பற்றிய துள்ளம்
 பரம சிவானுபவம்
மதியத் துவாப்போல் வசீகர மாக
 வழங்குமோ னப்பதத்தே. (295-a)

ஆண்டவன் பாற் செய்த ஆன்ம சமர்ப்பண வடிவான சரணாகதியால் அபேத சொரூப சாட்சாற்காரம் தலைப் பட்டதெனல்.

48. தன்னையே யர்ப்பணஞ் செய்த ததியர்க்குத்
 தன்னையே தானளிக்குந்
தன்னையே மிக்கமெய்த் தாரக மாகச்
 சரணு கதியடைவால்
தன்னையே யன்றித் தலைப்படத் தக்கதோர்
 தத்துவ மற்றெளிர்மெய்த்
தன்னையே என்சுய தத்துவ மாகநான்
 சாட்சாற் கரித்தனனே. (300-b)

யானற்றெழிந்த இதயத்தில் எழுந்த இயற்பர மோன வொளி பாசவிருளைக் கிழித்துப் பரவியல்வாழ்வாக மலர்ந்ததெனல்.

49. ஊனக் கலக்கமா வுற்றென் னுணர்வை
 யுழப்பிக் குழப்பியுழற்
றியானற் றெழிந்த விதயத் தெழுந்த
 வியற்பர மோனவொளி
ஈனப் பழிசே ரியற்கையாம் பாச
 விருட்பா ழிறக்கிழித்து
வானத் தலத்தை வளாவிப் பரவியல்
 வாழ்வா மலர்ந்ததுவே. (307-b)

அகந்தையறிவழிந்த வுள்ளத்தில் அருட்கேவலமாகத் திருவடி விளங்கலாற் சிவத்துவ சித்தி தெளிய விளைந்த தெனல்

50. உள்ளற் கரிய வொருத்தன் பரமா
 வுணர்வற் றெழிந்தவுளத்
தெள்ளத் தனையு மெதிர்ப்படு பேத
 மிலாவருட் கேவலமாக்
கள்ளக் கருத்தைக் கடந்த சொரூபக்
 கழல்விளங் கப்பெறலாற்
றெள்ளத் தெளிந்த சிவத்துவ சித்திச்
 சிறப்புற மல்கியதே. (307-c)

அருட்பர வெளியே பரமார்த்த சொரூபமான ஆண்டவன் திருமுன்பு ஞான முடிவான மோனவுண்மையில் தம் ஆன்மீயசாதனை முற்றிற்றெனல்.

51. ஈனமொன் றற்ற வியற்பர மார்த்தமா
வெண்ணத் தகுவடிவு
வானமே யாக மலர்ந்தோங் கருட்பர
மாட்சிசே ராண்டவன்முன்
ஊனமா மோக வுடற்பாழ் முனைப்பற்
றொழிய வகந்துலங்கும்
மோனமே ஞான முடிவான வுண்மையில்
முற்றிற்றென் சாதனையே. (307-d)

அருட்பெருவள்ளலான ஆண்டவன் பாதநிழலில் அமர்தலால் பிறவித் துன்பங்கெடப் பேரின்பப்பரவாழ்வு பற்றிற்றெனல்

52. உவமிக்க வொண்ணு வொருத்தன் சொரூப
வொளியா லகங்கிளர்மெய்த்
தவமிக்க ஞானந் தடையற் றியல்வுறத்
தந்த தயாநிதிதன்
சிவமிக்க பாதச் செழுந்தண் ணிழலிற்
சிறக்க வமர்தலின்,வெம்
பவமிக்க மோகப் படர்கெட் டொழியப்
பரசுகம் பற்றியதே. (312-a)

தோற்றமனைத்தும் ஒன்றாக இதயத்தே சுத்தவருட்காட்சி துலங்கலால் சித்தந்தெளிந்து சிவப்பட்டதெனல்.

53. கோவையா வுள்ளகோ லாகல வாசனைக்
கூத்தா வெதிர்ப்படத்தோன்
றேவிய மான வுலோக நிகழ்ச்சிக்
குணர்வே யடிப்படைகாண்
யாவையுந் தானு விதயத்தொன் றாக
வியன்றொளிர் சுத்தவருட்
சேவையின் காட்சி செழித்தலாற் சித்தந்
தெளிந்து சிவப்பட்டதே. (322 b)

ஆண்டவன் கூட்டிய மோனக்குறியில் அருட்பரமே வாழ்வாகப் புணர்தலால் அகந்தை மனப்பிழை அற்றொழிந்த தெனல்.

54. தேர வொணுத சிவத்துவத் தன்மைஎன்
சித்தத் தொளிர்தலுறக்
கூரளி யாண்டவன் கூட்டிய மோனக்
குறியே யியற்குறியாய்
நேர வகத்து நிறைந்தொளிர் கேவல
ஞேய வருட்பரமே
பூரண வாழ்வாப் புணர்ந்ததா லற்றது
பொக்க மனப்பிழையே. (324-a)

ஆணவப்பாழகன்று நானென்னுஞ் செருக்கற்று மனோரதவாழ்வு பொருந்தத் திருவருளால் உள்ளம் பரசிவமாக மலர்ந்ததெனல்.

55. ஆணவக் காரிரு ளான வனுதிப்
படுபா ழகன்றொழிய
நாணிக் கழிந்திட நானெனும் பொய்ப்புலே
நாட்டம் திருவருளாற்
காணக் கடவமெய்க் காட்சியா வோங்குங்
கடவுட் பரசிவமா
மாணத் துலங்க மலர்ந்ததென் னுள்ளம்
மனோரத வாழ்வுறவே. (325-b

ஆண்டான் திருவடி மோனத்தில் அகங்காரக் கிரந்தி பேதித்தலால் ஜீவியம் சிற்பர வாழ்வாகச் சிறப்புற்றதெனல்.

56. அறிவைக் கடந்த வறிவான வுண்மையா
ஆண்ட பிரானடியிற்
செறிவான மோனந் தெளிந்து விளங்கு
சிவாநு பவச்செழிப்பால்
*இறவான மாயப் பிரமாதப் பேதைமை
யில்லேன் †அகந்தைமனத்
திறவான சுத்தசச் சிற்பர வாழ்வாச்
சிறந்ததென் ஜீவியமே. (326 புதுப்பிக்கப்பட்டது).

* இறவு - இறப்பு
† அகந்தை மனத்திறவு - சிச்சடக் கிரந்தி பேதம்.

வளமாக வுற்ற வயிராக்கியத்தால் இந்திர திருவினும் மிக்க மனநிறைவும், மாணபிமான மயக்கந் தீர்ந்த உண்மை ஞானநுபூதியும் வாய்த்ததெனல்.

57. வயிராக் கியமே வளமாக வுற்ற
மனத்திட்ப வாழ்க்கையினுல்
அயிரா வதமூ ரமரா திபனின்மிக்
கான்ற நிறைவுபொங்க
உயிராக்க மாமெய் யுதாரப் பரவுணர்
வுள்ளங் கிளர்தலுற்றேன்
மயரா லுழன்ற மதோன்மத்தப் பேயபி
மானங் குலேந்திடவே. (327-a)

விரக்தியால் உணர்வு ஜகத்தினின் றுண்முகமாகவே, சுபேச்சையா லுற்ற பரபத்தியாற் பரசுகாநுபவம் பற்றிற் றெனல்.

58. விரத்திமீ தூர விளேந்த சுபேச்சை
மனத்தில் விசைத்தெழலாற்
சிரத்தைவே றென்றிலுஞ் செல்லா துணர்வு
செகத்தினின் றுண்முகமாய்ப்
பரத்திலே நானெனும் பாச முனேப்பறப்
பற்று(ம்)மெய் யன்பொளிகூர்
உரத்திலே பொங்கிற் றுலப்பிலாப் பேரின்ப
வுண்மை யநுபவமே. (327-b)

அடியா ரகத்தில் ஆண்டவன் விளக்கும் விஞ்சைத் திருவருள் வெற்றி அடியோங்கள் பாலதா மெனல்.

59. தெய்வச் சுடர்விழி சேர்ந்த நுகப்பரன்
சிற்கன சித்தமுத்தன்
சைவச் செழியன் சநாதன தத்துவன்
சந்மாத் திரசொருபன்
* கைவச் சகந்தனேக் காராம் பசுப்போற்
கசிந்தென்னேக் காத்தபிரான்
மெய்வச் சிரக்கழல் விஞ்சைத் திருவருள்
வெற்றிநம் பாலதன்றே.
(333-குறிப்பு சேர்க்கப்பட்டது.)

* கைவச்சகம் - ஈன்றணிமையுள்ள இளங்கன்று

அகந்தை மனக்கணிகை மயக்கத்தில் அழுந்தலுற்ற தமக்கு அருள்விளக்கந்தால் அகப்பேய் மதியழுஞ்ஞெ ழிந்தது ஆச்சரியமெனல்

60. நாணப் படத்தக்க நானென்னும் மோக
நவைப்படு பாழ்மதியால்
* வேணத் தகாமன வேசையை வேட்டுழல்
வீணனேற் கென்னவிந்தை
காணப் படாவுண்மைக் கண்ணுக வுள்ள
கழற்சிற் பரவொளியால்
மாணப் படாப்புன் மயக்க வகப்பேய்
மதியற் றெழிந்ததுவே. (335-a)

* வேணத்தகா – விரும்பத்தகாத.

இறைவன் சீபாதத்தியான நோக்கம் இடையருதியல்வதால் முற்பிறப்பில் நோன்புபல தமக்கு முற்றியிருக்க வேண்டுமெனல்.

61. ஏக்க மிலாத வியற்பர வாழ்வா
இகபர சிந்தையற்ற
வாக்கமா மோன வருட்பர சித்தி
யளைந்திட வென்னகத்து
மோக்க சொருப முனீந்திரன் சீபாத
மூலத் தியானமரு
நோக்க மியல்வதை நோக்கில்யான் முற்பல
நோன்பு முடித்தவனே. (340-a)

தம்மகத்திற் சதாசிவ வாழ்வாகப் பரமார்த்த தத்துவம் பலித்தலின் அதற்கேதுவான முற்றவம் யாதென வியத்தல்.

62 போக்கிய மாகப் புலன்களிற் புத்தியைப்
போக்கி யழுங்குறுநான்
ஆக்கிய முற்றவம் யாதோ வறிகிலேன்
ஆசாபா சங்குலையத்
தாக்கி யடர்த்தசிற் சத்தித் திறத்தாற்
சதாசிவ மோனவருட்
பாக்கிய வாழ்வாப் பலித்த தகத்திற்
பரமார்த்தத் தத்துவமே. (340-b)

ஆண்டான் அருட்பாததூளி மாட்சியால் அநுபூதி யடையப் பெற்றதன்றி, அதுபாடும் அரும்பெரும் பாக்கியமும் தமக்கார்ந்ததெனல்.

63. பென்னம் பெரிய பிரம்ம சொரூபப்
பிரானருட் பாததூளி
என்னது சென்னிமே லேறப் படைத்தலால்
ஏழையேன் றன்னியனுய்த்
துன்னரு(ம்) மோன சொரூபாநு பூதி
துலங்கத் திளைத்ததன்றி
அன்னது பாடவும் ஆர்ந்ததென் னுள்ளத்
தரும்பெரும் பாக்கியமே. (343-a)

யானென்னும் அகந்தை இதயமான பிரம்ம மூலத்தில் இறந்து உயிர்த்தெழப்பெற்ற உணர்வால் உலோபமனம் பொய்த்தொழிந்ததெனல்.

64. மயர்த்தன மானபொய்ம் மானுபி மான
மதிப்பிழை சேர்செருக்காற்
பாபித்திய மாகப் பராக்குற் றெதிர்ப்படு
பாசஜா லத்தமிழப்
பெயர்த்து முடம்பிற் பிறந்திற வாதே
பிரம்மமூ லத்திலிறந்
துயிர்த்தெழப் பெற்ற வுணர்வால் இதயத்
துலோப மனம்பொய்த்ததே. (348-a)

சகஜ சமாதி வடிவான மோனநிலையளித்த சற்குரு மூர்த்திக்குத் தமது ஞானாநுபூதி நயப்பே பரமார்த்த நன்றியறிவெனல்

65. மானுபி மான மதோன்மத்தப் பேயாய்
மனுமையப் பாழிலுழல்
யானென வென்னை யெடுத்து விழுங்கி
இயற்சிற் பரவெளியாந்
தானென மோன சகஜ சமாதி
தலைப்படத் தந்தவற்கு
ஞானநு பூதி நயப்பே பரமார்த்த
நன்றிகூர் நல்லறிவே. (353-a)

ஆண்டான் அருள்வண்ணமும் என் அன்பு வண்ணமும் தம்மில் ஒன்றாகக் கலக்கப் பொருள்வண்ணம் பொலிதலாற் புத்தி சற்போதமாகப் பொங்கிற்றெனல்.

66. இருள்வண்ண வண்ணம்யா னெங்கெங்குந் தேடினும்
எங்குங்கா ணுதொழியத்
தெருள்வண்ண வண்ணமாந் தெய்வப் பரசிவச்
செம்ம லெனக்கருள்கூர்
அருள்வண்ண வண்ணம்அன் பின்வண்ண
ருயிரண் டுங்கலக்கப் [வண்ணம்என்
பொருள்வண்ண வண்ணம் பொலிதலாற் புத்திசற்
போதமாப் பொங்கியதே. (353-b)

ஞாதப் பரசொருபமே நாட்டத்தில் விளங்குவதன்றி ஞானபாசம் யாதுமில்லையெனல்.

67. ஆதனே னுந்தன் னடியனேன் மிக்க
வருட்பாக் கியவசத்தால்
வாதவூ ரார்தம் மனம்போற் றெளிந்த
வளம்படு வாழ்வுபெற
வேதவே தாந்த விளக்கமா வென்னுள்
விளங்கும் பரசொருப
ஞாதமே நாட்டத்து நண்ணுவ தல்லது
ஞானபா சம்மிலதே. (354-b)

குருநாதன் கூட்டிய ஞானதிருஷ்டியாற் காண்கின்ற நமக்குத் தோன்றுமனைத்தும் சொருபவுருவெளித் தோற்றங்களாமெனல்.

68 பொய்க்கன வாகப் புலத்தொகை மங்கப்
புரண வருட்பரமாத்
தொக்க துரீய சொரூபச் சுடர்மணி
சொச்சந்த மாத்துலங்கச்
சிக்கென வாண்டவன் தேற்றிய மெய்ஞ்ஞான
திட்டியாற் காணுகின்றேற்
கொக்க வனைத்து மொராங்கே சொருப
வுருவெளிக் காட்சிகளே. (354-c)

சற்குருநாதன் தரிசனத்தால் ஆணவச் செருக்கற்றொழிய மோனவடிவான முத்தியுணர்வொளி மூண்டெழப் பொங்கிற்றெனல்.

69. ஈனப் பழிசே ரிருட்பா ழகத்துநா
        னேங்கிக் கலங்குழிமெய்ஞ்
    ஞானப் பிழம்பாக நண்ணிய சற்குரு
        நாதன் றரிசனத்தால்
    ஊனப் பழமல வூத்தை யகப்பா
        ழுணர்வாஞ் செருக்கொழிய
    மோனப் பரவச முத்தி யுணர்வொளி
        மூண்டெழப் பொங்கியதே. (354-d)

சதாமோன முத்தியாகத் தாங்கண்ட சாந்த சொரூபாநுபவப் பெருவாழ்வு உள்ளலற்றுள்ள உதாரப் பரவெளியெனல்

70. பவமாயம் மோகப் பசாச மனக்கற்
        பனையா வகன்றிடமெய்த்
    தவமாய ஞான சமாதித் திறத்தாற்
        சதாமோன முத்திகண்டேன்
    சிவமே சொரூபமாச் சேர விளங்கு
        சிவாநு பவப்பெருவாழ்
    வுவமான மற்ற வுதாரப் பரவெளி
        உள்ளலற் றுள்ளதுவே. (355-a.l)

பிரம்ம சொரூபப் பிரஞ்ஞான மாத்திரயான ஆன்ம சாக்ஷாத்கார வடைவு சாற்றல்

71. எற்றியே யானென தென்னும் பகையை
        எதிரிலா வத்துவித
    வெற்றிசேர் ஞான விளக்கமா(ம்) மோன
        விசுத்த வருட்பதத்தைப்
    பற்றியே சித்தப் பதைப்பற நிற்றலாற்
        பாசக் கலக்கமற்றேன்
    பெற்றியா தெனிற் பிரம்ம சொரூபப்
        பிரஞ்ஞான மாத்திரமே. (355-c)

உண்மையுருவான ஆண்டவனை உணர்வுருவான என் சொரூபமேயாக உபாசனையாலுற்ற ஞானசமாதியால் உணர்ந்துகொண்டேனெனல்

72. ஒன்றான கேவல வுண்மைப் பிராணே
உளங்கூ ருபாசனையாற்
றென்றான ஞான சொரூபப் பிராணுத்
துலங்கநான் கண்டுகொண்டேன்
பொன்றாத வாழ்வாப் புலந்தே ரருட்பெரும்
புண்ணியப் பொற்பதத்து
நன்றான மோனமெய்ஞ் ஞான சமாதி
நயப்பில் வியப்புறவே. (355-d)

சச்சிதானந்த சற்குருசொரூபமே தம் அதிஷ்டானமாக விளங்கலால் இதயம் பரசிவமாயிற்றெனல்.

73. என்னதிட் டத்தைநான் என்னென்று சொல்லுகேன்
இன்பப் பரசிவவாழ்
வுன்னதுட் சார வுணர்ந்துகொள் ளென்றென்
னுணர்வை யொருமுகமாத்
தன்னதுட் சாரச் சரளமா வாண்டவன்
சச்சிதா னந்தவுரு
என்னதிட் டானமா யான்கண்டு கொண்டேன்
இதயம் பரசிவமே. (356-b)

மறப்பு நினைப்பான மயக்க மனப்பிழையற்ற கைவல்யமே அகந்தை யழிவாற் பரமாக அறிந்தடைந்த உண்மை நிலையெனல்

74. பிறப்பென்னும் பேதைமை சேர்ந்த வகந்தை
பிரம்மமூ லந்தெரிந்தாங்
கிறப்பென்னு(ம்) ஞானப் பிறப்பா லியற்சிற்
பரவடி வெய்தியதால்
இறப்பொடு சேர்ந்த பிறப்பறக் கண்ட
வியற்பர வுண்மைநிலை
மறப்பொடு சேர்ந்த நினைப்பா(ம்) மனப்பிழை
யற்றகை வல்லியமே. (357-a)

உண்மையுணர்வால் விசுத்தசொரூப வியாபகவாழ்வு பொங்கப் பசாசமனக் கற்பனைஜாலம் பாறுபாறாக வுடைந்ததெனல்.

75. ஊறுபா டான வுடற்செருக் கற்றவெற்
றுண்மை யுணர்வொளியால்
மாறுபா டான மயக்கவெம் பாச
வலைப்பட்ட ஜீவியம்போய்
வேறுபா டற்ற விசுத்த சொரூப
வியாபக வாழ்வுபொங்கப்
பாறுபா றுகப் பசாச மனக்கற்
பனைமுற் றுடைந்ததுவே. (357-b)

தம்மையன்றித் தமக்கயலாக உலகமொன்றின்மையால் உலகோடு தமக்கு உண்மையில் யாதோரிபையு மில்லை யெனல்.

76. மேதா விகளாக மேடைமீ தேறிய
விற்பனர் தம்மொடுறழ்
வாதாட நான்முன் வருகின் றிலேன், வாதை
தாமே மலைந்திடுக
*யாதோ ரியைபு மிலையென் றறிந்தே
னெனக்குல கப்புலத்தோ
டாதார மாகநான் அன்னியர் நோக்கத்தாற்
றேன்றினு மாங்கதற்கே. (360-a)

* மற்றெவ்வாறுக வாதிக்கப்படினும் உண்மையில் ஆன்மா அசங்கம் எனத் தம் அநுபவம் என்பது பின்னிரண்டடிகளின் தாற்பரியம்.

செருக்கற்றெழியத் திகழும் சிவசொரூபத் திருவருளை யன்றி மற்றெரு செல்வம் மெய்யாக மதிக்கிலோமெனல்

77. வெருவரல் கொண்டு வினைக்கே முனைக்குறு
வேகமூ லாணவத்தோர்
ஒருவரும் பேத வுணர்வினு லோர
வொணுதமெய் யுத்தமன்,பொய்த்
தெருமரல் சேர்ந்த செருக்கற் றெழியத்
திகழும் பரசொருபத்
திருவரு ளன்றிமெய்ச் செல்வமா மற்றெரு
செல்வம் மதிக்கிலமே. (363-a)

இறைவன் மெய்ப்புகழ் போற்றலால் இருள்சே ரிருவினையை மாற்றி, பரணைப் பிரமாத மனத்தை மாய்த்து மெய்ப்பதத்தில் விளங்குகின்றேனெனல்.

78\. போற்றற் கரும்பெரும் புண்ணிய மூர்த்திதன்
    பொற்புறு மெய்ப்புகழ்நான்
சாற்றிடப் பெற்ற தவத்தாற் சிவத்துவ
    ஞான சமாதிபெற்று
மாற்றற் கரிய மலப்பா ழிருள்வினை
    மாற்றியே மத்தமனக்
கூற்றுப் பிசாசின் குடரைக் குமைத்துக்
    குலாவினேன் மெய்ப்பதத்தே. (372-a)

79\. காதலாற் றன்னடி கண்டுசே விப்பார்
    கருத்திற் பரமார்த்தக் காட்சியளித்
தோதலா காப்பர வுண்மைப் பதவாழ்
    வுதவும் பிரானருட் சீர்வாழியே. (533-a)

80\. பரமான வுண்மை பளிச்செனக் காண்டலாற்
    பாச மயக்கப் பசுத்துவங்கெட்
டுரமாக வுள்ளத் துருவேயாப் பொங்கு
    முபசாந்த வாழ்க்கை யொளிவாழியே. (559-a)

81\. எந்தையும் யானு மிரண்டற்ற வொன்று
    யிருந்தோளர் மோன வியற்பார்வையில்
சிந்தையும் புந்தியுஞ் சேரத் திகைக்கச்
    செருக்கற் றொழிந்த திறம்வாழியே. (563-a)

82\. ஊன வகந்தை யுணர்வற் றொழிய
    வுளத்தை வெளியாக்கி ஒமெனுமெய்ஞ்
ஞான சொரூப நலங்கிளர் சித்தியா
    நண்ணிய மோன வருள்வாழியே. (587-a)

83\. அடியே னிதயத் தறிவு கொளுத்தி
    யநாதியா வுற்றமூ லாணவப்பாழ்
மிடியே யகல விளங்கு சொரூப
    விபூதிசேர் சற்குரு தாள்வாழியே. (592-a)

---

பிற்பால்—4

## ஸ்ரீ ரமண சரணப் பல்லாண்டு

என்னும் நூலிற் சேர்க்க வேண்டியவை

**சரணத் திருவெண்பா:**

1. ஆவவென் றன்பா லடியேன்றன் வெம்பிறவித்
தாவமொரு மூன்றுந் தணியவே—தேவ
சிரோமணியா வோங்குந் திருப்பாத தெய்வச்
சரோவரநீ ராட்டாய் சரண். (57-a)

**திருப்பல்லாண்டு (2):**

2. பல்லாண்டு வஞ்சப் பழவா தனையின் வயப்பட்டுப்
பல்லாண்டு கெட்ட பதிதையை மீட்டுப் பதத்துக்கே
பல்லாண் டருட்டாலி பூட்டிக்கொண் டானுக்குப்
[பல்லாண்டு
பல்லாண்டு நங்கோ ரமண பகவற்குப் பல்லாண்டே.
(93-a)

3. பல்லாண்டு குஞ்சிதப் பட்டிப் படிற்றுள்ளப் பாவமறப்
பல்லாண்டு தன்னருட் பார்வைநீ ராற்பரி சுத்திசெய்து
பல்லாண்டு கற்பு நெறிப்படுத் தானுக்குப் பல்லாண்டு
பல்லாண்டு நங்கோ ரமண பகவற்குப் பல்லாண்டே
(93-b)

**திருப்பல்லாண்டு (3):**

4. சாக்கிர மென்றுப சாரமாச் சாற்றிடு
சற்பனைச் சொற்பனத்தே
ஊக்கி யெழுந்துதன் னேர்மை யிழந்தாங்
குளத்தை யுழப்புமதம்
மீக்கிள ராணவ மாக்களி றுவி
விளிந்துண் மையில் விழிப்பத்
தாக்கி யடர்த்தொளிர் நோக்கியல் சிங்கற்குப்
பல்லாண்டு சாற்றுதுமே. (11-a)

5. வயாப்பரி வுற்று வருந்து மனத்தடு
மாற்ற மறும்பொருட்டுத்
தயாப்பிர சாதந் தழைத்து விளங்குதன்
சந்நிதி சாரடியார்
அயாப்பிர மாத வகட்டி னகப்பட்
டலமரு மாணவத்தை
வியாக்கிர மாக மிசைந்தருள் போதற்குப்
பல்லாண்டு விள்ளுதுமே. (11-b)

6. பேதநீங் கப்பெரும் பெம்மான்கற் பித்த
பெருநெறிப் பெட்பறிந்தே
ஏதமோங் குஞ்சிச் சடமா மகந்தைநான்
யாரென் றிதயமெய்தி
நீதமோங் காதவ னேரிரு ணேரா
நிலேயான்ம போதபரஞ்
சோதியாங் கம்பிர பூரண னந்தற்குப்
பல்லாண்டு சொல்லுதுமே. (15-a)

7. உடல்போர்த்து வந்த வுடையா னதுமெய்
யுடலினின் றும்பிரிதா
மடல்கூர்த்த சுத்த வறிவென் றறிந்துமெய்
யன்புமீக் கூரடியோம்
கடல்போர்த்த வின்பக் கழிகாதல் சேர்ந்த
கனுன்ம சொருபமேயா
யிடலா லிரண்டற் றிதஞ்சே ருளம்பொங்கப்
பல்லாண் டிசைக்குதுமே. (23-a)

**வாழ்த்து:**

8. புத்தியைச் சிற்பரி பூரணத் தொன்றுப்
பொருந்துறப் பூட்டித் ததா காரமாம்
முத்திரை யிட்டென முக்கர ணங்களும்
முற்றூட்டாக் கொண்ட முனிவாழியே. (2-a)

பிற்பால்—5

# கதம்பம் - பாடல்கள்

## 1. பாதம் பரவெளி

(கட்டளைக் கலித்துறை)

1. ஈங்குமாங் குஞ்சென் றிதையதை மீண்டுமீண் [டெண்ணுமனத்
தீங்குசே ராமலென் சித்தம் புகுந்து செருக்கறச்செற்
றுங்குமோ னைந்த வாழ்வளித் தாண்ட வருளங்கணன்
பாங்கனு மென்னுட் பதித்தசீ பாதம் பரவெளியே.

2. கருவிலே மாழ்கிக் கலங்கிடாதென்னைக் [கடைக்கணித்த
குருபிரான் சிச்சடக் கூட்டமே யான குருட்டடியேன்
பொருவிலா வேதக பூரண மாட்சி புலங்கொளத்தன்
பரிவினு லென்னுட் பதிந்தசீ பாதம் பரவெளியே.

3. மூலபண் டாரமெய்ஞ் ஞானமே மோன [முடிப்பெனக்குச்
சால வழங்கிய சற்குரு மூர்த்தியாற் சஞ்சலந்தீர்ந்
தேல விளங்குபே ரின்பப் பெருவாழ் விதயமுற்றேன்
மாலறி வான மயக்க மனப்பிழை மாண்டிடவே.

## 2 அனுபவ அடைவு

(கொச்சகக் கலிப்பா)

1. மோனத்தா லன்றி முகப்பரிய வுண்மைநிலை
யானற்றார் துய்க்கும்பே ரின்பநிலை ஏற்றமுறு
வானத் தவர்மதிக்கும் மட்டுப் படாதநிலை
ஈனத்தே னுக்கருளா லெய்திற் றனுபவமே.

2. அத்துவித மான வகண்ட நிலை ஆதரஞ்சேர்
சுத்தசிவ மான சொரூபநிலை தொக்கதொரு
மெய்த்துரிய மாக விளங்குநிலை பொய்ம்மலிந்த
இத்தமியே னுக்கருளா லெய்திற் றனுபவமே.

3. விந்தகமா வுள்ள விபூதிநிலை மாற்றமிலா
வத்துமய மாகமனம் மாண்டநிலை வண்மைசேர்
புந்தமுத வாழ்வாகப் பொங்குநிலை பொய்ச்சதிகு
ழெத்தனே னுக்கருளா லெய்திற் றனுபவமே.

4. எல்லாமே தான்போ லியன்றநிலை தன்னையன்றி
எல்லாமென் றென்று மிலாதநிலை பொய்ம்மயக்கப்
பொல்லாமை போக்குறுசற் போதநிலை மெய்த்தவச்சார்
பில்லாதே னுக்கருளா லெய்திற் றனுபவமே.

5. கந்தழியா முண்மைக் களவுணிலை கற்பனையாஞ்
சிந்தனைக்கெட் டாதபர தெய்வநிலை தன்சொருப
மந்தணமோர் வார்க்கறிவா வைகுநிலை தேர்வறியா
அந்தனே னுக்கருளா லாயிற் றனுபவமே.

6. அற்பகல்கா ணாத வதீதநிலை என்னறிவின்
முற்படுமெய்ஞ் ஞானகுரு மூர்த்திநிலை மோனவியற்
றற்பரமாத் தானே தனித்தநிலை தைணியங்கூ
ரற்பனே னுக்கருளா லாயிற் றனுபவமே.

7. கண்ணுக் கடங்காமெய்க் காட்சிநிலை காட்சியறக்
கண்ணேவிண் ணாகக் கலந்தநிலை மெய்ஞ்ஞான
வண்ணக்கர் தேர்ந்தபொருள் வண்ணநிலை மத்தனேற்
கண்ணிற் றருளா லதன்மெய் யனுபவமே.

8. முற்றமுற்றத் தானா முடிந்தநிலை தன்சொருபம்
முற்றறிவா வுற்றமுழு மோனநிலை தன்னையலால்
மற்றறிவின் மையலற மாற்றுநிலை பொய்யனேற்
குற்றதருட் பெற்றியினவ் வுண்மை யனுபவமே.

9. பாசமணு காத பரமநிலை சுத்தசிவத்
தேசுறுமெய்ஞ் ஞானந் தெளிந்தநிலை சிந்தைகூ
ரேசறவில் லாதபே ரின்பநிலை ஆணவப்பா
ழாசையே னுக்கருளா லாயிற் றனுபவமே.

10. நேர்மைகோ டாதசெங் கோன்மைநிலை நெஞ்சத்து
நீர்மைசே ரன்பர்க்கன் பானநிலை நிஷ்டையா
லோர்மைசே ருள்ளுணர்வோர் கண்டநிலை ஞர்க்குமதிக்
கூர்மையிலே னுக்கருளாற் கூடிற் றனுபவமே.

## 3. பொன்விழாப் புகழ்மங்கலம்

### (அறுசீர் விருத்தம்)

1. திருப்பாண்டி நாடன் திருச்சுழிக் கோமான்
திகழுமண் ணுமலையில்
விருப்பான்று மேவி மிகவைம்ப தாண்டு
விலங்காது வீற்றிருப்போன்
திருப்பூண்டு வாழவென் சித்தத்தைத் தன்னெடு
சேர்த்தருள் ஸ்ரீரமணன்
கருப்பூண்ட துன்பக் கலக்கங் கெடவுயிர்க்
காவல்செய் கின்றனனே.

2. சேவிக்கு மன்பர்தஞ் சித்தத் துவட்டாது
தித்திக்கு(ம்) நல்லமுதம்
சேர்விக்கு மின்னருட் செந்தா மரைப்பதச்
சீமான் சிவரமணன்
கூவிக்குற் றேவல்கொண் டென்னைக்கோ தாட்டிக்
குலவான்ம நாதனருள்
வாழ்விக்கு மாற்ருலிவ் வையமவ் வானமாய்
மன்னி மகிழ்கின்றதே.

3. தேற்றிருக் கின்ற தியானியர் சிந்தையிற்
சேர்ந்தொளிர் ஸ்ரீரமணன்
போற்றிருக் கின்றசெம் பொன்னடிப் புண்ணியன்
பூத தயாசொருபன்
நோற்றிருக் கின்றமெய்ந் நோன்பிய ரேயன்றி
நொய்யருங் கண்டுகொள்ள
வீற்றிருக் குங்கொலு வேட்கையிற் கண்டுநான்
விம்மித முற்றனனே.

4. சுத்தர் தொழும்பரி சுத்தத் துறவைத்
துலக்குஞ் சுடரொளி சேர்
சித்தர் தொழும்பிர சித்தச் சரிதையிற்
சேனேங் கிசைரமணன்
முத்தர் தமக்குள் முதிர்ந்து பழுத்த
முழுப்பழ மாமெனவே
புத்தர் தொழும்பிர புத்த முனிந்திரன்
பொற்கழல் வாழியவே.

5. அவத்திற் கரக்குமோ காம்புதிக் கண்ணே
யமிழ்ந்து படாதடியேன்
பவத்திற் படர்ந்துழல் பாவக் கலியறப்
பாற்றுங் குருரமணன்
சிவத்திற் பயின்றொளிர் சித்தக் கிளர்ச்சிசேர்
தெய்வஞா னனுபவத்
தவத்திற் கனிந்திடச் சார்வித் தருளிய
தற்பரன் வாழியவே.

6. படியோங்கு காவற் பரிவோங்கு மந்தணன்
பண்டித ஞானவரன்
கெடியோங்கு சந்நிதிக் கேழோங்கு மங்கலக்
கேள்வன் சிவரமணன்
கொடியோங்கு முன்றிற் குடையோங்கு கோமான்
குடிகளா வின்புறுமிவ்
வடியோங்கள் பாக்கியத் தாலே யடிக
ளமோகமா வாழியவே.

7. பொன்விழாக் கொள்ளும் புனிதசற் போதப்
புராணன் சிவரமணன்
றன்விழா விந்தத் தரணியி லெல்லோருந்
தம்விழா வாவிழைந்து
மன்விழா வாக மகிழ்த்துக்கொண் டாடும்
மனோரதச் சீர்விழாவை
என்விழா வாக வினித்த மனத்தொடு
யானுங்கொண் டாடுவனே.

8. நீருங் குளிர்ந்த நிழலும்பொன் னுடையு(ம்)
நெய்யுண வாதிகளால்
யாருங் குறைவற் றிதயங் களிப்பநல்
விச்சை யெலா(ம்)நிறைத்துச்
சீருஞ் சிறப்புஞ் செழித்துப் பழுத்தொளிர்
தெய்வத் தருரமணன்
கூருந் திருவருட் கோலா கலவிழாக்
கொண்டா டுதுமினிதே.

9. தாமன்ன பாக்கியஞ் சாராது வானவர்
 தைனிய ராவிரங்கப்
பார்மன்னு மாந்தர்தம் பண்டைத் தவத்தாற்
 பரமேச் சுரரமணன்
ஓமென்ன யார்க்கு முடன்பட் டுதவு
 முதார விழாவிணக்கண்
டியாமென்ன பாக்கியஞ் செய்தோ மெனக்களித்
 தெக்களிப் பெய்துவரே.

10. நம்பன் வரந்தரும்) நண்பனென் ஞுருயிர்
 நாதன் சிவரமணன்
செம்பொன் விழாவைச் சிறப்ப நிகழ்த்துறுஞ்
 செல்வர் செழுங்கிளையோ
டம்பொன் வயிரமுன் ஞக்கிள ரொன்பா
 னரதனச் செல்வமும்பெற்
றிம்பர் வளங்க ளெலாம்பெரு குற்றுநீ
 டின்புற வாழ்வர் நன்றே.

## மங்களம்

11. மங்கள சோபனம் மன்னு சொரூப
 வரோதய நின்னடிக்கு
மங்கள வாழ்க்கை மகிழ்ந்த மனத்தொடு
 வந்தடி யோமிசைக்கும்
மங்கள வாழ்த்தின் மலர்தலை ஞாலத்
 தகில வுயிர்த்தொகைக்கும்
மங்கள மெய்தநன் மங்களம் பாடுதும்
 மங்கள வைபவத்தே.

———

## 4. நூறாண்டுப் பிரார்த்தனை

### குறையிரத்தல்

(ஆசிரிய விருத்தம்)

அடியோங்க ளாருயிர்க் கோருயி ரா(ம்)நின்
னருமைத் திருவுருவைப்
படியோங்கப் பன்னெடுங் காலம் பரிவொடு
பாலித் தருளவென் றுன்
கொடியோங் கருட்பயன் கொண்டது முற்றுங்கை
கூடப் பெறுதிருக்கும்
குடியோங்க ளுன்னடி கூடித் தொழுதே
குறையிரக் கின்றனமே.

### பிரார்த்தனை

(வெண்பா)

1. காமியந் தீர்ந்த கருத்தா லடிவணங்கிக்
காமியமே காதலித்துக் கைதொழுதேன்—காமியமீ
தாயினுந்தா னுகென் றறிவுதுணிந் தாரியநின்
னேயிகந்தே நூறாண்டு வாழ்.

2. ஐயா வருட்கடலே யானந்த மாநதியே
செய்யா வியற்கைச் செழுந்தவமே—பொய்யாத
ஞானபண் டாரகுரு நாயகமே நன்னலத்தோ
டூனமற நூறாண் டுயிர்.

3. ஆண்டரம ணேசா வரோகதிட காத்திரத்தோ
டீண்டினிது நூறாண் டிருக்கநீ—வேண்டியுனை
மாணடிக்கே தோய்ந்து வரங்கிடக்கின் றேமடியோம்
வேணவா நல்காய் விரைந்து.

4. கரவா வருட்செல்வக் கற்பகமே என்று
மிரவாதோ மின்றேன் றிரந்தோம்—கரவாப்
பரங்கருணை யாலே பரிந்தருளிச் சும்மா
விருங்களென நூறாண் டிரு.

5. வாழ்வுசிவ மாக வகுத்த குருமணியே
தாழ்வுபட வெங்கள் தரிசனத்துக்—கூழ்வகையால்
யாதுமுறு துன்னெறிநபே ரிலைப வருள்வடிவுக்
கேதமற நூறாண் டிரு.

6. குஞ்சுகளா நின்னடிக்கீழ்க் கூடியுளோம் சற்றுமே
பஞ்சைகளா காதருட்கண் பார்த்தருளி—நெஞ்சுதளர்ந்
தேங்காம லெங்கட் கிறகு முளைப்பளவும்
நீங்காது நூறாண்டு வாழ்.

7. உம்பருந் தேறு வுபதேசச் செம்பொருளை
இம்பரோந் தேறுவித்த செப்பரமே—இம்பரோம்
அன்புசிவ மா(ம்)நின் னருள்வடிவைக் கண்டுபே
ரின்பமுற நூறாண் டிரு.

8. பன்முகமா வோடிப் பரிதபித்த வெம்முயிரை
நின்முகமே மிக்க நிலாமதிபோல்—தன்முகமாய்
ஈர்த்ததுகாண் ஈர்த்துப்பே ரின்பவமு தெம்முளத்து
வார்த்தவா நூறாண்டு வாழ்.

9. நூறாண்டு வாழ்க்கை நுனக்குக் கடமைகாண்
மாறீண்டுக் கூறல் வழக்கன்று—தேறலிலாப்
பேதையரா மெங்கள் பிரார்த்தனையை ஞானகுரு
நீதயா மூர்த்தி நிரப்பு.

10. உண்மையொளி யேயுருவா வுற்றகுரு தேவவெமக்
கண்மையிலே யிந்த வருள்வடிவோ—டொண்மைசேர்
மங்களமா நாங்கள் வழிபாடு செய்யவுனக்
கெங்களொடு நூறாண் டிரு.

11. அவியமுதுண் வானத் தமரரினும் மேலாச்
செவியமுதுண் டுள்ளந் திளைத்தே—புவியமர
ராயிடயா முன்னால் அரோகதிட காத்திரத்தோ
டாயிரங் கால(ம்)நீ வாழ்.

12. பொருட்செல்வம் பொன்றுமெனப் பொன்றாத ஞான
வருட்செல்வ வாழ்க்கை யளித்தாய்—மருட்செல்வ
வாதனைசேர் புன்மனத்தை மாய்த்தெமக்கு மாநிலத்து
மாதனமா நூறாண்டு வாழ்.

13. திருவிலா மூடச் செருக்கா மகந்தைக்
கருவிற்கட் கட்டாரி வீசி—மருமத்தைக்
கொன்றுமெய்ஞ் ஞானங்கொளுவியருள் வாழ்வளித்தாய்
மன்றநீ நூறாண்டு வாழ்.

14. பிரிவுணர்ச்சி யானகொடும் பீழைதரும் பீதித்
திரிபுணர்ச்சி நீங்கிச் சிறியோம்—விரிவுணர்ச்சி
யானமெய்ஞ் ஞானவப யானுபவஞ் சேரளவும்
ஊனமற நூறாண் டுயிர்.

15. அறிதுயிலா மின்ப வருள்வாழ்க்கை நெஞ்சிற்
பிறிவுபடா தென்றும் பெறயாம்—சிறிதும்
பிளவா வகண்ட பிரம்மாநு பூதி
வளவாநீ நூறாண்டு வாழ்.

16. அவஞ்ஞைகளே மெய்போன் றடிப்படையா மான்ம
சிவத்தை மறந்தொழிந்த சேயோம்—பவத்துக்
கிடனாகா தேயிதயத் தெம்முருவைத் தேற்றி
உடனாக நூறாண் டுயிர்.

17. ஓலமிடு கின்றோம் உதார தயாளவருட்
பாலனஞ்செய் கின்ற பதத்துக்கே—காலனுக்குங்
காலனா முன்றன் கருணைத் திருவுருவோ
டேலநீ நூறாண் டிரு.

18. சரணஞ் சரணமெனத் தஞ்சமடைந் தோமுக்
கரணா மபயபத வம்மான்—இரணமாம்
புற்றுநோய் நீங்கிப் புதுநலமுன் பொன்மேனி
யுற்றுநீ நூறாண் டுயிர்.

19. புலங்கதுவா தோங்குறுசற் போதமா வுள்ளந்
துலங்குபர மான்ம சொரூபா—கலங்குமுயிர்ப்
பாழ்வா தனையீட்டம் பாழ்க்கவெளி வந்தவருள்
வாழ்வேநீ நூறாண்டு வாழ்.

20. உன்னருளா லுன்னுறுடைமைக் குண்டான [மெய்த்தொடர்பு
பின்னருமேன் மேலும் பெரிதோங்கி—நின்னடியோம்
பன்னருமெய்ஞ் ஞானபர பத்திக் கடலாட
உன்னருளால் நூறாண் டுயிர்.

21. புத்தமுதே போன்றசிவ போதாநு பூதியருள்
வித்தகவே தாந்த வியன்முதலே—மெய்த்தழலை
மூட்டியெம் முள்ளத்தே மோனங்கூர் சித்தபர
மேட்டிநீ நூறாண் டிரு

22. அஞ்சலெனச் சொல்லியப யாத்துவிதச் செப்பொருளாஞ்
செஞ்சரண வல்லரணஞ் சேர்ப்பித்தாய்—தஞ்சமடைந்
துன்றுற்பல் லாயிரவோ ருய்தற் குளரின்னும்
மன்னவா நூறாண்டு வாழ்.

23. தன்னறிவாந் தூன்றுமுப சாந்தயே மெய்யறிவு
துன்னுபுலச் சுட்டறிவோ சூதறிவாம்—என்னவே
பொங்குசொரூ பாநுபூதியளித் தாண்டவா
மங்கலற நூறாண்டு வாழ்.

24. சும்மா விருக்கச் சுடர்விட் டொளிர்கின்ற
அம்மான் பதமே யனுபவமாப்—பொய்ம்மாயக்
கற்பனை பேதக் கலக்கமற வாண்டவருட்
சிற்பரா நூறாண்டு வாழ்.

25. மகத்தான தன்சொருப மாட்சியால் அன்ப
ரகத்தே யருள்விளக்க மான—சுகத்தேன்
உறப்பாய்ச்சு கின்ற வுதாரவுப காரா
சிறப்பாக நூறாண்டு வாழ்.

26. அருட்பாத சோதியால் அன்பரகத் துள்ள
விருட்பா ழறக்கெடுக்கு மெந்தாய்—மருட்பார்வை
யானவா ரோப மகற்றும் பரதெய்வ
மானவா நூறாண்டு வாழ்.

27. எட்டாக் கடவுளெம்மா லெட்டப் படிவதொரு
நிட்டானு பூதி நிலையளித்தே—சுட்டாத
சுத்தான்ம போதச் சுடர்விளக்கெம் முள்ளத்து
வைத்தவா நூறாண்டு வாழ்.

28. விவகார நோக்கில் விசித்திரமே தோற்றும்
அவிகார மாட்சிசே ரண்ணால்—அவகாச
மின்றாக நோதகவுக் கன்பர்க் கருள்சுரந்தே
நன்றாக நூறாண்டு வாழ்.

29. எம்மனோர் வாழ்க்கையெமக் கின்பந் தருவதிங்கு
நும்மனோர் செய்யருட்கண் ணோக்கமே—செம்மைசேர்
அவ்வருளா லெம்முயிரை யாண்டவுரு நூறாண்டிங்
கெவ்வமற வாழ்க வினிது.

30. பரம தயாளவருட் பண்பாளா நின்றாள்
சரதமாத் தஞ்ச மடைந்தோம்—*அரதையால்
ஏங்கியாஞ் சற்று மிடர்ப்படா தெக்களிப்ப
ஈங்குநீ நூறாண் டிரு.

31. பாழவித்தை யானகொடும் பாசமயல் சேருமுயிர்க்
கீழவத்தை யேழுமறக் கெட்டொழியச்—சூழொளிசேர்
மேலவத்தை யேழும் விளைவித்து வீடுதவும்
வாலறிவோய் நூறாண்டு வாழ்.

32. உண்மையா நின்றா னுறுதுணையா நம்பினோ
திண்மைசே ருன்னன் சிவபதத்தே—உண்மயல்சாய்ந்
தோன்றளவும் எங்க ளுபாசனா மூர்த்திநீ
மன்றநீ நூறாண்டு வாழ்.

(கலி விருத்தம்)

33. அருண கிரியுறை யமல நாதனே
கருணை யுருவனே கடைக்கண் பார்வை நீ
அருளி யெங்களுக் கமுத வெள்ளமாய்
அருகில் வாழ்கநூ றாண்டு சுகமொடே.

---

* அரதை - துன்பம் [அரதை - அரந்தை என்பதன் தொகுத்தலாகவாவது அரதி என்பதன் திரிபாகவாவது கொள்க]

## 5. திருமந்திரோபதேசம்

(எழுசீர் விருத்தம்)

1. இமைக்கண மேனு மிமைத்திடா திதயத்
திருந்துமைத் தாங்குவ தோரீர்
சுமக்கநீர் வேண்டா சுமையறக் கழிமின்
சுமேருவாந் தோன்றலே தாங்கும்
அமர்க்கள மான வலங்கோல வாழ்க்கை
யதிசாந்த மாய்மகிழ் பொங்க
நமக்குமெய்ஞ் ஞான நலந்தருங் கண்டீர்
நமோரம ணாயநன் ஞமம்.

2. ஊன்கண்ட வாழ்வூ டுவகையா லுயிரை
யுளக்கவல் பிளக்கவே யுழல்வீர்
தேன்கண்ட வாறே சித்தந்தித் திக்கச்
சிந்தனைக் குகந்தது சிவஞ்சேர்
வான்கண்ட சாந்தி வளர்பரந் தாம
வாழ்வெனக் கிம்மையே வாய்ப்ப
நான்கண்ட சீர்மை நீவிருங் காண்மின்
நமோரம ணாயநன் ஞமம்.

3. அஞ்சுக்கு முயிரை யடிமையாப் போக்கி
யதோகதி வீழ்த்துவெம் பாவப்
பஞ்சுக்கு நெஞ்சிற் படர்நெருப் பாகப்
பயில்வது தொண்டுபட் டடைந்த
தஞ்சர்க்கு மிக்க சதாகதி யாகத்
தழைப்பது பாழ்ம்பிர மாத
நஞ்சுக்கு நஞ்சாய் நமக்கரு மருந்தாம்
நமோரம ணாயநன் ஞமம்.

## பிற்பால்—6

# கதம்பம் - உரைநடை

### 1. ஸ்ரீ ரமணர்

தன்னையலாது அன்னியமொன்றும் அறியாராகத் தன்னை அழித்தெழுந்த் தன்மயானந்தர் நிலைமை இன்னதென் றெண்ணி யுரைத்தல் எவர்க்கும் இயல்வதன்று.

பண்டைத்தவப்பயனால், ஈச்சிறகேபோல் அத்துணை மெல்லிதாக *ஆணவமலத்திரைமட்டும் ஒரு சிறிது எஞ்சிய தன்றி ஏனை இருமலங்களும் ஏற்கெனவே இற்றொழிந்தமை யால் உயிர்க் குயிரான இறைவனே அறிவுக்கறிவாக நின்று தன்னுண்மை யுணர்த்தலால்-[அவ்வாறுணர்த்தற்கு சிந்தாந்த சாஸ்திரமான திருவருட்பயனே சான்று கூறுவதாம்]—வேறொரு குருவும் வெளியில் வேண்டாமலே, கேள்வியாலும் பிரம்மமென்னும் பெயரறியாமலே பிரம்ம ஞானம் பெற்ற புலவர் ரமணர் தூலத்தில் அண்ணாமலையாரே அவர்க்குக் குரு; அம்மலையின் அடிவரைவாழ்வே அவரது நிரந்தர குரு குலவாசம். அதன் எல்லையைவிட்டு அவர் என்றும் அகன்ற தில்லை. அவர் சரீரவாழ்விலும் வியாபிக்கும்படி அவ்வளவு அசல மாயிற்று அவர் ஆத்யாத்ம வாழ்வின் அமனஸ்கநிலை. அகந்தை யறிவுக்கு அடிப்படையுண்மையாய் அனுபவ வாலறிவுவடிவான உள்ளத்தினின்று தன்னியல்பால் எழும் அவர் வாய்மொழி களால் தத்துவசாஸ்திர விற்பன்னர் பலரும் சிக்கலானதம் ஐயப்பாடுகள் எளிதில் அகலப் பெறுகின்றனர். விநோதார்த்த மாகவன்றி மெய்யாகவே தம்மாலியன்ற பக்திசிரத்தையோடு தம்மைச் சூழவாழும் அடியார்மாலின்யத்தைப் போக்கி உள்ளத்தைக் கிளர்ச்சிசெய்கின்றது, அன்னார் மத்தியில்

---

* ஆணவலேச மாத்திரமே இறுதியான இப்பிறப்புக்கேதுவாக அவர்க்கு எஞ்சிநின்றதென்பது, 'நானா'ரென்னும் விசாரணையே முன்பு விட்டகுறையால் அவருள்ளத்தே தானாகக் கிளர்ந்த தோடு, அவ்விசாரணையான் மட்டில் முடிவான பூரணநிலை மிக்கெளிதில் அவர் கைகூடப் பெற்றது கொண்டு உய்த்துணர் வார்க்கு நன்குணரலாகும்.

வீற்றிருக்கும் அவரது அத்யாத்ம காந்தசக்திக் கதிர். அவருபதேசங்கள் எல்லாக் காலதேசங்களுக்கும் ஏற்பப் பொருந்துவனவாய்ப் பாமரபண்டித பேதமின்றி, நாத்திகமுட்படப் பலதிறப்பட்ட சமயச்சார்புள்ளவர்க்கும் ஒருங்கே ஆன்மதிருப்தியளிப்பன. நாத்திகனும் கடவுளுண்மையை ஒவ்வாது மறுப்பினும் 'நான்' என்னும் தன்னுண்மையை எவ்வாற்றுனும் ஒப்பியே தீரவேண்டுமாதலின், அந்த 'நான்' என்பதன் விசாரணையால் முடிவான உண்மை அனுபவத்திற் கண்டறியப்பட்டுக் கவலையற்றதோர் பேரின்பவாழ்வு இம்மையிலேயே அதனாற் கைகூடுமென்னின் அந்நெறி அவனுக்கும் உடன்பாடாகவேண்டியதுதா னன்றோ?

இறைவனைத் தந்தையாகத் தேடிச் சென்று தம்மகத்தே கண்டறிந்தும், கண்டறிந்த அத்யாத்மத்தந்தையான அவ்விறைவனோடு தன்னிழப்பால் இரண்டறக்கலந்தும் விளங்கும் குருத்துவத்தால், அவரை முறையே ஞானபண்டிதனை குமர குருபரன் கூறுகவும், ஆதிகுருவான தக்ஷிணாமூர்த்தி சொருபமாகவும் அருட்கண்ணால் அறிஞர் கண்டு வழிபடுகின்றனர்; உபாசகர் பலர், தம்மை உய்வித்தற்கென்றே உலகில் அவதரித்துவந்த வெவ்வேறான தத்தம் இஷ்டதெய்வமென்றே பூரணமாக நம்பித் தொழுகின்றனர். திடஞானஜீவன் முக்தரான அவர்பால் பரமார்த்தவுண்மை கேட்டறிந்து அவரருள்வலிகொண்டு அத்யாத்மசாதனை செய்தொழுகுவோர் கணக்கிலர்; எனவே, உண்மை வழிகாட்டியான உலககுருவாக, அந்தப் பட்டமின்றியே, சூரியன்போலச் சுடர்கின்றவர். உலகியற் கற்பனைபேதங்களோடு வர்ணாசிரமம் முதலிய சமஸ்த சாஸ்திரசமயாசார பேதங்களும் ஒருங்கே கழன்றவர். சுருங்கச் சொல்லின், தனித்தன்மையுணர்வான அகந்தைவாசனையே அற்றமையால் துவிதபேதங்கள் எல்லாமே தொலைந்தொழிந்து; அணிமாதி யோகசித்திகளுக்கெல்லாம் மேற்பட்ட ஞானசித்தி பெற்று, நிஷ்பிரபஞ்சமாய் 'நான்' என்பதுட்பட அகிலமும் ஒரே சிவமயமாகக் கிளர்வதான கைவல்யநிலையில் இயல்பாகவே நிலைத்து நிற்பவர். உடலுருவே நோக்குவார்க்கு, மற்றோர் மாட்டுப்போல் அவர்மாட்டும் ஒருசில வியாவகாரிக குணஞ்செயல்கள் நிகழ்வனவாகத் தோன்றினும், பாவகாரிகள் பார்ப்பரிதான அருட்பரவெளியே தம் யதார்த்தசொருபமாகத் திடஞானனுபவத்தா லுயிர்க்கும்

அவரிடத்தில் அவையாவும் கற்பனையன்றி உண்மையன்ருக உய்த்துணரவல்லார்க்கு, நிர்க்குணமே அவர் குணமும், தம்மைச் சூழ வாழ்வோர் சிந்தையை யடக்கித் தம்மேபோல் அவரையும் சும்மா விருப்பித்தலே அவர்சுபாவமான தொழிலு மாக முடிவதாம். அவருணர்வு, பல்வகையுணர்வும் ஒரே தன்மயமாகச் சுட்டுணர்வு கடந்து சுடர்கின்ற கேவலசொரூப வுணர்வாம். மதியைப் பற்றியதன்ரே மதம்? மதியற்ற விடத்து ஜீவபோதம் சிவபோதத்தே தன்மயமாகக் கரைந் தொழிந்த விடத்து மதமேது? எனவே, ஞானவரம்பான மோனமே உண்மையான அவர் மதமாம். பேச்சும் ஓரள வாகப் பேசுவதன்றி, மற்றைப்பெரியார் எல்லாரும் போன்றே அவரும் அதிகம் பேசுவாரல்லர். அதுவும் ஒரு வியாஜமாத் திரமேயாக, அவர் சந்நிதிமாண்பானே, ஐயத்தினீங்கித் தெளிந்த வுணர்ச்சியும் சித்தசாந்தியும் பெறுகின்றனர் பக்குவப்பட்டோர். [சிந்தையு மொழியுஞ்செல்லா நிலைமைத் தாகத் தத்துவங்கடந்த செம்பொருள் — ஆதிகுருவான தக்ஷிணாமூர்த்திய சனகாதிகளுக்கு மௌனைத்தாற் றெரித்த செம்பொருள் —அவ்வாயிலான் மட்டுமே உணர்த்தவு முணர வும் படுவதன்ரே!] மற்ருேரும் அவ்வவர் பக்திசிரத்தைகளுக் கேற்பக் காமியங்கள் கைகூடப் பெறுவதோடு, பல்வகைப் பட்ட கவலைகளும் நீங்கி மகிழ்ச்சி பெறுகின்றனர்.

பூமண்டலத்தோர் பாக்கியவசத்தால் தென்பாண்டி நாட்டுத் திருச்சுழித் தலத்தில் அந்தணர்குலத்தில் பராசரர்மரபில் விருந்தோம்பலான வேள்வியான் மேம்பட்டதோர் குடும்பத்தில் சுத்தரமையர்க்கு அழகம்மாளிடத்தே முன்னுதித்த குமாரர் மூவருள் நடுநாயகமாக, நான்காவதாகப் பின் பிறந்தாளொ ருத்தியோடு ஞானநெறி தழைத்தோங்கத் தோன்றினூர் நம் ரமணர். அவரவதாரத்தால் விளங்கியது பிரமாதியாண்டு மார்கழித்திங்கள் பதினாறந்தேதி (30-12-1879) சோமவாரம் புனர்வசுநக்ஷத்திரம். வேங்கடராமனெனப் பெயரிடப்பெற்ருர். [அவ்வியற்பெயரே ரமணரெனப் பின்னர் மருவியது] திருச் சுழியிலும் திண்டுக்கல்லிலும் மதுரையிலுமாக ஆறவது பாரம்வரை ஆங்கிலக்கல்வி பயின்ருர். அருணாசலத்தியானம்— அது யாராலும் அடைதற்கரிய பிரம்மலோகமே, அன்று, பிரம்மமே போன்றதோர் பாவனை—அவரை யறியாமலே, பிறப்பில் இயல்பாகவே யுண்டாகி, பதினேழாம் வயதில்

திருவண்ணாமலைக்குப் புறப்படும்வரை நீறுபூத்த நெருப்புப் போல அவரகத்திற் கனன்றுகொண்டிருந்தது. அருணாசல மென்பது திருவண்ணாமலையென உறவினர் ஒருவரால் பின்னர்த் துணுக்குறக் கேட்டறிந்தும், அப்புறப்பாட்டு வரையில் அதைப்பற்றிக் கருதவேயில்லை. வீட்டிலிருந்த பெரிய புராணவசனப் புத்தகத்தைத் தற்செயலாகப் படித்துப் பார்க்க நேர்ந்ததன் பயனாகத் தினந்தோறும் கோயிலுக்குச் சென்று, வெள்ளியம்பல நடராஜர் முன்பும் அறுபத்துமூவர் முன்பும் நின்று, அவரோடு தம்மையும் ஒருவராகக் கூட்டிக் கொள்ளும்படி பக்திபரவசப்படச் சிலகாலம் தொழுதுவந்தார். இந்நிலையில் ஒருநாள், அரோகதிடகாத்திரமாயிருக்கையி லேயே, திடீரெனக் காரணமின்றியே, மனத்திலெழுந்த மரணபயத்தால் தாக்கலுற்று, மரணத்தினுண்மையை அனு பவத்திற் கண்டறியத் தலைப்பட்டவராய், தம்முடலைப் பேச்சு மூச்சறப் பிணம்போலக் கிடத்தி, உடலோடியைந்த 'நான்' என்னும் அகந்தையுணர்ச்சியை உள்ளே முற்றுமொடுக் கலும், அது அவ்வாறொடுங்கப் பெற்ற மூலகேந்திரஸ்தான மான இதயத்தினின்று, எதனோடும் யாதொரியைபற்ற தம் பரமார்த்தசொரூபவுண்மையுணர்ச்சி 'நான், நான்' என்று தன்னில் தானாக மிகத்தெளிவாக விளங்கவே, அதனோடு மரணசிந்தை அறவே ஒழிவுற்றார். இந்த மாறுதலால், படிப்பில் முன்னிருந்த அற்பக்கவனமும் அகன்றது. படிக்கவேண்டிய நேரத்தில் கண்மூடி மௌனியாகி நிஷ்டைகூடினார். படியாத பாடத்தைத் தண்டனையாக ஒருநாள் எழுதிக் கொண்டி ருக்குமிடையில் இவ்வாறு செய்யவே, அதைக்கண்ட தமையன் அவரைத் திருத்தக்கருதி "இப்படியெல்லாம் இருப்பவனுக்கு இங்கென்ன வேலை?" என்று கடிந்துரைத்தலும், அதுவே அவர் வெளியேற்றத்துக் கேதுவாயிற்று. அதையே ஆப்தவாக்கிய மாகக் கொண்டு, வீட்டைத்துறந்து வெளிப்பட்டுவிடுவதெனத் தீர்மானித்தலும், அதுகாறும் மறந்திருந்த திருவண்ணாமலை ஞாபகம் அந்தர்யாமியான ஆண்டவனால் உந்தப்பட்டு மனத்தி லுதித்தது. உடனே, தம்மிடமிருந்த பழைய தேசப்பட (அட்லாஸ்)த்தில் சென்னை மாகாணப் படத்தைத் திருப்பி, திண்டிவனமே திருவண்ணாமலைக் கருகேயுள்ள வண்டிநிலைய மெனவும் அதையடைய மூன்று ரூபாய் போதுமெனவும் எண்ணியவாறே, தாம் தம் தந்தையைத் தேடிக்கொண்டு அவருத்தரவுப்படி அவ்விடத்தை விட்டுக் கிளம்பிவிட்டதாகவும்,

தாம் நல்ல காரியத்தில்தான் பிரவேசித்திருப்பதால் அக் காரியத்திற் கொருவரும் விசனப்படவும் தம்மைத் தேடப் பணச்செலவு செய்யவும் வேண்டாமென்றும் ஒரு குறிப் பெழுதிப் பெட்டியில் வைந்துவிட்டு. அதிலிருந்து, தன் பள்ளிச்சம்பளம் செலுத்துவதற்காகத் தமையன் எடுத்துக் கொள்ளச் சொன்ன ஐந்து ரூபாய் பணத்தில் தம் பிரயாணச் செலவுக்கான அம்மூன்று ரூபாய் மட்டும் எடுத்துக் கொண்டு 'ரயி'லேறினர். இடையில் விழுப்புரத்தில் வண்டி மாறவேண்டு மென்று தற்செயலாக அறிந்தவாறே, அங்கேயிறங்கி, அங் கிருந்து ரயில் பிரயாணமாகவும் சிறிது நடையாகவும், புறப் பட்ட நாலாம் நாள் (1—9—1896) காலை திருவண்ணாமலை சேர்ந்தார். அந்நேரத்தில் வழக்கத்துக்கு மாறாகக் கதவு களெல்லாம் ஒருங்கே திறக்கப் பெற்று ஏகாந்தமாயிருந்த கோயிலில் கர்ப்பக்கிருகம்வரை நேரே சென்று ஆருயிர்த் தந்தையான அண்ணாமலையாரை யடுத்து "அப்பனே! உன்னாணைப்படி வந்து உன்னடி யடைந்தேன்; இனி உன் னிஷ்டம் என்னிஷ்டம்" என்று தம்மைத் தலைவனிடம் அறவே ஒப்புக்கொடுத்தலும், அதற்குச் சிலகாலம் முன்பே மதுரையில், தம் உடலையும் மனத்தையும் ஒருங்கே பற்றி யிருந்த தாபம் தண்ணெனக் குளிர்ந்து தணிந்தது.

அம்புவி லாலிபோ லன்புரு வுனிலெனை
அன்பாக் கரைத்தரு ளருணாசலா.

என்பதே ஆண்டவன்பால், அவர் பேரார்வத்தோடு செய்து கொண்ட ஒரே பிரார்த்தனை. பின்பு கோயிலின் வெளிச் சென்று, ஆடை குடுமி பூணூல் மீதப்பணம் யாவும் ஒரு குளக்கரையில் களைந்தெறிந்து, ஒரு கோவணமட்டும் இடையிற் பூண்டு, கோயிலில் ஆயிரக்கால் மண்டபத்தை அடைந்து, அண்ணாமலையைக் கண்ட 'நான்யார்' என ஆராய்ச்சியைத் தம் ஆன்மசொரூபத்தில் அகமுகமாகத் திருப்பி இதயத்திலாழ்ந்து இன்பநிஷ்டை கூடப்பெற்றவர், தம்முடலைப் பூச்சி புழு அரித்ததும் தெரியாமல் கோயிலுக் குள்ளே தானே பாதாளலிங்கம் முதலிய பல்வேறிடங்களில் மாறிமாறிப் பல மாதமும், ஊருக்கு வெளியே குருமூர்த்தத் திலும் பக்கத்து மாந்தோப்பிலும் இரண்டாண்டும் தைல தாரை போன்ற நிரந்தரசமாதியில் வீற்றிருந்தார். [காலக் கிரமத்தில் அவரிருப்பிடம் பந்துக்களுக்குத் தெரியவே, அவர்

சிறியதந்தை தாமே அருணைக்கு வந்து, அவரை ஊருக்கு மீட்டுச் செல்ல முயன்றும், அவரை அசைக்கமாட்டாது திரும்பினர்.] பல்வேறு சோதனைகளையும் சிறுவரும் வெறியரும் செய்த சிறுமைச் செயல்களையும் பொறுமைக்கவசம் பூண்டு தாங்கிநின்றவர் அங்கிருந்து பவளக்குன்றுக்கு மாறித் தங்கருமமான தவவாழ்க்கையைத் தொடர்ந்து நடத்திவந் தார். தாயும் தமையனும் ஈங்கெய்திப் பதறிக்கதறிப் பிறவிப் பாசத்தாற் பிணித்திழுக்கவும் மலையேபோல நிலையிற் கலங் காராய் மௌனமாயிருந்தவர், பக்கத்திலிருந்தவர் வற்புறுத் தலின்மேல் அவர்தாமே கொடுத்த காயிதத்தில், "அவரவர் பிராரப்தப்பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந் தாட்டு விப்பன், என்றும், நடவாதது என்முயற்சிக்கினும் நடவாது; நடப்பது என்தடை செய்யினும் நில்லாது இதுவே திண்ணம் ஆகலின் மௌனமாயிருக்கை நன்று" என்றெழுதிக் காட்டி அத்துடனமைந்தார். [வந்தவர் இருவரும் மனந்தடுமாறி வாளா மீண்டனர்.] பின்பு மலைமேல் வாசம் தொடங்கியவர், பெரும்பாலும் வேனிற்காலந்தோறும் தண்ணீர் வசதிக்காகத் திருமுலைப்பால் தீர்த்தக் கரையிலுள்ள மாமரக்குகைக்கு மாறிக்கொண்டு, மெய்ஞ்ஞானத் தவராஜசிங்கமாக மிக்க தேஜோவீரியத்தோடு தமது சகஜசமாதித்திறத்தால் பல்வேறு பணிகளும் செய்துகொண்டே அன்பர்குழாத்து நடுவில் விருபாக்ஷகுகையில் பல்லாண்டுகள் வாழ்ந்துவந்தார் [தன்னைப் பாதுகாத்துவந்த மூத்தகுமாரனிறந்து தாயும், தன் மனைவி யிழந்து தம்பியும் இந்நிலையிற் சார்ந்து துறவுபூண்டு அவர் முன்பே வசிக்கலாயினர். அம்மையார் ஆசிரமவாசிகளுக் கான சமையல் முதலிய பணிகளை மிக்க சிரத்தையாகப் புரிந்து உண்மைத்தாயாகவே அவ்வெல்லோரையும் ஊட்டி வந்ததோடு, அமிழ்தினுமினிய தமது வேதாந்தப்பாடல்களால் அவர்களை மகிழ்வித்தும் வந்தனர்.] பிராமணசுவாமி என்ற பெயரே ஊரில் இதுவரை வழங்கிவந்ததாயினும், அவர்பால் உபதேசமாகத் தவத்திலக்கணம் கேட்டுணர்ந்த கணபதி முனிவரால், பகவான் ஸ்ரீ ரமணமஹர்ஷி என்ற பெயர் நாடெங்கும் நாளடைவில் பிரசித்தமாயிற்று. பின்பு அக் குகையினும் உன்னதமானதோரிடத்தில் தொண்டர்சிலரால் புதிதாகத் தமக்கென்றே நிருமிக்கப்பெற்ற கந்தாசிரமத்தை அலங்கரித்து வாழ்ந்துவந்தார். துந்துபி ஹூ வைகாசிமீ (1922-மே மாதம்) நோய்வாய்ப்பட்டுக் கிடந்த தம் அன்னை

யார்க்கு இறுதிக்காலம் குறுகியதறிந்து, தம் வலக்கரத்தை அன்னார் மார்பிலும், இடக்கரத்தைத் தலையிலும் வைத்துச் செய்த திருக்கரதீக்ஷையால் அன்னார் பிராணனை வெளிச் சென்றுழலாமல் உள்ளத்திலொடுக்கி விதேககைவல்யபதம் அளித்தருளினார்.

முற்கூட்டிய எண்ணமெதுவு மின்றியே வழக்கம்போல் ஒருநாள் சிறிதுலாவி வரப்போனவர், மலைத்தென்பாரிசத்துப் பாலிதீர்த்தக்கரையில் அமைந்துள்ள தம் தாயின் சமாதியருகில் ஈசுவரநியதியால் எப்படியோ தங்கிவிட்டார். அற்பக் கூரைக் கட்டடமாயிருந்த ஆசிரமத்தில் துணிந்து பிரவேசித்து, அன்புருவான தம்மோடு தம்மவரையும் கோல்கொண்டு புடைத்த வன்கணரான கள்வரை நோக்கி, "ஒரு காலில் அடித்தது போதாதெனில் இன்னொரு காலிலும் அடியுங்கள்" என்று பெருமிதமாகக் கூறியதோடு, கள்வரை எதிர்த்துத் தாக்க துணிந்த ஆசிரமவாசி ஒருவரை நோக்கி, "அவர்கள் தங்கள் தருமத்தைச் செய்தார்கள்; சாதுக்களான நாம் நம் தருமத்தைக் கடைப்பிடிக்கவேண்டும்" என்று தடுத்தமை வித்தவாற்றால், உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு—என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கு இலக்காய்த் தவராஜராகப் பிரக்கியாதி பெற்றார். [ஆதியில் வெறுஞ் சப்பாத்திக்காடாயிருந்த அப் பிரதேசம், இப்பொழுது, அன்பரான செல்வர் பலர் முயற்சியால், வருவார்க்கு வேண்டிய வசதிகள் வைத்தியசாலையுட்பட, வேதபாடசாலை கோசாலை முதலிய பல்வகை அங்கங்களோடுங்கூடிப் பெரியதோர் ஆஸ்தானமாக விளங்குகின்றது. தாயார் சமாதியான மாத்ருபூதேசுவராலயம், தாயோடுவந்து முன்பு துறவுபூண்ட தம்பி நிரஞ்ஜனானந்த சுவாமி நிர்வாகத்தில் நூதனமாகத் திருப்பணியும் கும்பாபிஷேகமும் நிறைவெய்தி அவ்வாஸ்தானத்தை அலங்கரித்து நிற்கின்றது.] சக்திவிலாசங்களான எல்லா நிகழ்ச்சிகளிலும் ஒருவாறியைந்தாற் போலப் புறத்துத் தோன்றினும் அவர், தமது சகஜசொரூபானுபூதியாம் உண்மைத் திறத்தால் ஒன்றோடும் இயைபின்றியே, உயிர்த்திருக்கையிலேயே கேவலம் சுத்தசிவத்தோடு இரண்டறக் கலந்த பரிபூரண ஜீவன்முக்தராக, அன்போடு அடிச்சார்ந்தார்க்கு அருள்பாலித்து வாழ்ந்து வருகின்றார்.

[நம் பாரததேசத்தில் மட்டுமன்றிப் பிற தேசங்களிலும் பல்வேறு பாஷைகளில் அவர் சரித்திரமும் உபதேசங்களும் வெளியிடப்பெற்றுப் பரவியுள்ளதோடு, அவர்மீது கணக்கிலாத் துதிமாலைகளும் குன்றுபோற் குவிந்துள்ளன. தற்கால முறையில் உலகநலத்துக்காகத் தூலத்தில் அவர் யாதே செய்யினும் செய்யாதொழியினும், அவர்போன்ற மகாபுருஷரான ஜீவன்முக்தர் சும்மா உடலோடுயிர்த்திருக்கின்றதே உண்மையில் உலகக்ஷேமம் பயப்பதாம். எனவே, உலகோர் செய்த புண்ணியத்தால் அன்னார் திருமேனி திடமும் நலமும் பெற்று இன்னும் பலகாலம் இனிதுவாழ எல்லாம் வல்ல இறைவன் அருள் சுரப்பானாக

அருணாசலஸ்துதி பஞ்சகம், உபதேசவுந்தியார், உள்ளது நாற்பது, முதலிய சொந்தப்பனுவல்களும், தேவிகாலோத்தரம், விவேகசூடாமணி முதலிய அனுவாதங்களும் அவரால் அருளப் பெற்றவை ஸ்ரீரமண நூற்றிரட்டு என்னும் பெயரால் ஒரே புத்தகமாகத் தொகுத்து வெளியிடப் பெற்றுள்ளன. தத்தமக்கான பல்வேறு வகைகளிலும் துறைகளிலும் அவர்பால் ஈடுபட்டுத் தொண்டாற்றிவரும் பக்த சிஷ்ய கணங்களுள் யாரைச் சொல்வது, யாரை விடுவது? எவ்வாற்றாலேனும் அவரருளாற் கவரப்பெற்று அன்புபூண்டொழுகுவோர் மிகவும் தன்யரே!

## 2. உபதேச வுந்தியார்—வசனமொழி

பலதிறப்பட்ட பக்குவமுள்ளோர்க்கும் பயன்படத்தக்க வகையில் சாதனக்கிரமம் முழுமையும் அடங்க பகவான் மஹர்ஷி சுருக்கமாக அருளிய உபதேசசாரம் இதுவாம்:

ஜீவகோடிகளுள் வளம்பட வேண்டாதார் யார்யாருமில்லை. அவருட்பெரும்பாலோரான உலகியலோர், தமக்கு வேண்டிய பயன்களான அவ்வளங்களைத் தமது கன்மமேதர வல்லதாதலின் அதுவே பரம்போலத் தவறாகக் கருதுகின்றனர். அன்னார், பல பசுக்களடங்கியதோர் பெருமந்தையிற் கொண்டுபோய்விட்டாலும் கன்று தன் தாயை நாடியடைதல் போன்றே, கன்மமும் தன் கர்த்தாவைத் தேடியடைந்து பயனளிக்குமெனத் திடமாக நம்பிக் குதர்க்க வாதஞ் செய்கின்றனர். கன்று சேதனமும் கன்மம் அசே

தனமு மாகலான் அவர்வாதம் பொருந்தாது. ஜடமான கன்மம் செய்தார்க்குப் பயனளித்தல் சுத்தஞானசொரூபி யான கடவுள் கட்டளையாம். எனவே, சர்வகர்த்தாவும் சர்வ நியந்தாவுமான அவனே பரம். கன்மம் அதன் போக நுகர்ச்சியால் ஒரு விதத்தில் அழியினும், மற்றொரு விதத்தில் அதுவே கன்மபீஜமான வாசனை வடிவில் உயிரோடுள்ளத்திற் பதிந்துகிடந்து மேன்மேலும் கன்மக்கடலில் தள்ளுவதல்லது கன்மவிடுதலையான சற்கதி கூட்டுவதன்றாம். எனினும், நிட்காமியமாய் ஈச்வரார்ப்பணமாகச் செய்யப்படின் அதுவே சித்தசுத்தியுண்டாக்கும்வாயிலாக முக்திவழியும் காண்பிக்கும். முறையே உடல்வாக்குஉள்ளத் தொழில்களான பூஜை ஜபம் தியானங்கள் ஒன்றினொன்று நுட்பமாய் ஏற்ற முடைத் தாம். காணப்படுமெல்லாம் கடவுள்வமவாகக் கருதி அவ் வவற்றுக் கேற்பத் தொண்டுசெய் தொழுகல் மகத்தான கடவுட் பூஜையாம். வாசிகத்தில், துதியைக்காட்டிலும் ஜபமும், அந்த ஜபத்திலும் வாய்விட்டுச் செய்வதைக் காட்டிலும் வாய்க் குட் செய்வதும் விசேடமாம். அவ்விருவகைப்பட்ட ஜபத்தினும் மாண்புடைத்தான மானசிகஜபமே தியானமெனப்படும். அந்தத்தியானத்தில், விட்டு விட்டுச் செய்வதைக் காட்டிலும், ஆற்றொழுக்குப்போலவும் தைலதாரைபோலவும் ஒரே தொடர்ச் சியாகச் செய்யப்படுவது மஹோபலத்தால் மாட்சிமைப்படு வதாம். பேதபாவனையினும் கடவுளைத் தன் ஆன்ம சொரூபமாகவே கருதுவதான அபேதபாவனையே பாவனை களின் மிக்கதாம். அத்தகைய பாவனாபலத்தால், பாவனை கடந்த சுபாவமான உண்மைநிலையில் ஊன்றியுறைதலே பரபக்தியின் உண்மை. மனம் உதித்தவிடத்தில் ஒடுங்கி யிருத்தலே கன்மம்பக்தியோகம்ஞானம் அனைத்துக்கும் பொது வாக முடிந்த கருத்தாம். விரிந்த மனத்தை ஒடுக்கும் உபாயம் பிராணாயாமம்; அதனால், வலையிலகப்பட்ட பறவை போல மனமொடுங்கும். பிராணாயாமத்தால் மனமொடுங்கு வதன் காரணம், முறையே அறிவு ஆற்றல்களோடு கூடிய அம்மனமும் பிராணனும் ஒரே மூலத்தினின்று கிளைத் தலாம். மனம் தாற்காலிகமாய் அடங்கியிருந்து மீண் டெழுவதான லயமும், தன்னுரு வழிந்ததால் என்றுமே எழாததான நாசமும் என மனவொடுக்கம் இரண்டாம். பிராணாயாமசாதனத்தால் ஒடுங்கப்பெற்ற மனத்தை ஒரே பொருள்மேல் அகமுகமான ஒருவழியிற் செலுத்தும் தீவிரத்

தியானத்தால் மனம் உருவழிவதாம். மனம் உருவழிவதால் அருவமாமுண்மையில் நிலைத்த யோகி பரமார்த்தமான சொருப வியல் சார்ந்தோனாய்ச் செய்வதற்கொன்றுமிலாக் கிருதகிருத் தியனாம். இம்மட்டும் பக்திசாரமான தியானப்பிரதான யோக மார்க்கம். இனி வருவது, கிருதோபாசகராய்ப் போதியபக்குவ முள்ளோர்க்கான ஞானவிசாரம்.

அன்னியவிடயங்களை யகன்று அவற்றையறியும் முதலான தன் அறிவுருவை ஆராய்ந்தறிதலே உண்மையுணர்ச்சியாம். மறதியற்று மனத்தின் சொருபத்தை மௌனமாக ஆராயின் மனமெனக் கூறுவதோர் பொருளே இன்றாக முடிதலின் இதுவே நேரான முக்திநெறியாம். பலதிறப்பட்ட எண்ணங் களே மனமெனப்படுவது. 'நான்' என்னும் எண்ணமே ஏனை எண்ணங்களுக்கெல்லாம் மூலமாகலான் அவ்வெண்ண மொன்றே மனம் எனச் சுருங்க உரைக்கத்தகும். யாதானும் ஒருருப்பற்றி 'நான்' என்றுதிக்கும் மனத்தின் மூலத்தானம் எதுவென அம்மனத்தால் அகத்தே மௌனமாக ஆராயின், அந்த 'நான்' என்னும் அகந்தை தலைசாய்ந்தழியும். இதுவே ஞானவிசாரம். 'நான்' என்றுதித்த அகந்தை அவ்வா ராய்ச்சியின் பயனாக மீண்டொடுங்கப் பெற்ற இதயத்தினின்று வேறெதுவோ ஒன்று 'நான், நான்' என்று, சுத்தஞான சொருபவுணர்ச்சியோடு தானாகவே மேற்கிளர்வதாம் இவ் வாறு பொங்கியெழுந்த சுத்தான்மசொருபமாம் அது, போலி யாயக் குறுகிய முன்னையகந்தை 'நான்' போலன்றி உண்மைப் பரிபூரணமாம். 'நான்' என்னும் அகந்தையுணர்ச்சி அற் றொழிந்த தூக்கத்திலும் நாம் இன்றியொழியாது நிச்சயமா யிருக்கின்றேமாக நித்தம் இயல்கின்ற நம்மெல்லோர் அனு பவத்தாலும், பேதைமையால் உடலைப்பற்றி வழங்கிவரும் 'நான்' என்னுஞ் சொல்லின் முடிவான பொருள் அதுவேயாக அறியத்தக்கதாம். தேகம், கன்மேந்திரியம், ஞானேந்திரியம், பிராணன், மனம், அறியாமையான சூனியம்—இவையாவும் ஜடமாகலின் அசத்தா யொழிதலால் சத்தான நம் ஆன்ம சொருபம் ஆகாவாம். உள்ளபொருளான அவ்வான்மசொரு பத்தை உணர அதற்கயலான உணர்வொன்று இன்றாகவும் 'நான் இருக்கின்றேன்' எனத் தான்தானே இருந்தொளிர் வதால், உள்ளதாம் அது உணர்வுருவேயாம்; அவ்வுணர் வுருவே உண்மை நாமாக இயல்வதாம். இருப்புமாத்திரமான

உண்மைத்திறத்தால், ஈசஜீவர் இருவரும் ஒரு பொருளே யாவர்; அப் பரமார்த்தவுண்மைக்கண் மனோமாயா கற்பனை களான உபாதி (உடலை)யும் அதுபற்றிய சுட்டுணர்வுமே அவர் தம்முள் வேறுபடுவன. எனவே, ஈசன் நிருபாதிகமான நிஜான்மசொருபமாகவே நின்றொளிர்தலால், தன் சொந்த சொருபத்தை அதன்கட் கற்பிதமான அகந்தைவடிவ உபாதி நோக்க மகற்றி உள்ளவா றுணர்தலே தன் தலைவனை ஈசனையுணர்தலாம். ஆன்மசொருபமான தான் இரண்டற்ற ஒரே பொருளாகச் சுட்டறிவுக்கிடமின்றி யுள்ளதால், தான் தானாகச் சும்மாவிருத்தலே தன்னை யறிதலாம்; இதுவே தன்மய நிஷ்டை. அத்துவித வுண்மையான தனக்கு அயலாக அறிவதற்கு விடயமொன் றின்மையால், அறியாமையேயன்றி அறிதலுமற்ற வெறும் அறிவே (இதுவே கடவுளுண்மையான உண்மையறிவாலறிவென்று வள்ளுவராற் கூறப்படுவது) சொருபவியல் எத்தகையதென்று வாம். பரமார்த்தமான அனுபவத்தால் ஆராயின் ஆதியந்தமற்ற அகண்டபரிபூரண சச்சிதானந்தமாம். பந்தமோக்ஷசிந்தையற்ற பரமோபசாந்த வடிவான நிரதிசயானந்தம் அடைந்தவாறே, அத்தகைய தன்னுண்மைநிலையில் நிலைத்து நிற்றலே இறைபணி நிற்றல் என்ற ஜீவன்முக்திபதமாம். முடிவாக ஆராயின், 'யான்' என்னும் அகந்தைவாசனையே யின்றித் தன்னியல்பாகப் பொங் கும் சற்போதானுபூதிதானே சிறப்புமிக்க உண்மைத்தவமாம். சகலவேதாந்த சித்தாந்த சாரமாகத் தம் அனுபவத்தாற் கடைந்தெடுத்த உண்மையை வெண்ணெய்போலத் திரட்டி இரண்டே வரியில் முடிவாகச் சுருக்கி அருளுகின்றார்:

—அகஞ் செத்

தகமது வாகி லறிவுரு வாமவ்
வகமதே மிச்ச மறி.

## 3. உள்ளது நாற்பது

### முதல் மங்கலம்—உரை

(வெண்பா)

உள்ளதல துள்ளவுணர் வுள்ளதோ வுள்ளபொரு
ளுள்ளலற வுள்ளத்தே யுள்ளதா—லுள்ளமெனு
முள்ளபொரு ளுள்ளலெவ னுள்ளத்தே யுள்ளபடி
யுள்ளதே யுள்ள லுணர்.

**இதன் பொருள் :** உள்ள பொருளைத் தவிர்த்து உள்ள உணர்வு உண்டாமோ? அப்பொருடான் எண்ணமற்று இதயத்தில் இருக்கின்றபடியால் 'இதய'மெனப் பெயர்பெறும் அப்பொருளை எண்ணுவோன் யாவன்? அப்பொருடான் இதயத்து எவ்வாறிருக்கின்றது தானும் அவ்வாறிருக்கப் பெறுதலே அதனை யெண்ணலாம். இதனை யுணர்வாயாக என்றவாறு.

**விசேடவுரை :** உள்ளவுணர்வென்பது இருவகையிற் பொருள் பட்டு நிற்கும்.

1 அப்பொருடான் உள்ளதா வுணரும் உணர்வு என்பது ஒரு பொருள். இப்பொருளில் அம்மெய்யுணர்வுப் பொருடான் இதயத்தில் எண்ணற வெற்று ஸ்வருபமாயிருப்பதாம்.

2 உலகுயிர்கள் உள்ளன போலத் தோற்றும் உணர்வென்பது மற்றைப் பொருள். உள்ளன போலத் தோற்றும் உணர்வை உள்ள உணர்வென்றே கூறினும். அத்தோற்றத்தினூற்றம் பற்றி (ஊற்றம் - அழுத்தம்). ஜாக்ர ஸ்வப்நவஸ்தைகளில் காணலுற்றும் சுழுத்தியிற் காணு தொழிதலால் நாமருபான்மகமாய் பொய்யாம் உலகுயிர்கள் உள்ளனவாகத் தோற்றல் அவற்றுக் காதாரமா பொருளின் உண்மையறிவுத் திறங்களாலாம். அப் பொய்யுணர்வுதான் தோற்றுங்கால் எண்ணவுருவாய் அதன் முன்னும் பின்னும் உண்மை மாத்திரமாய் இதயத் திருப்பதாம். அவ்வுணர்வைப் பொய்யென்ற தென்னை? அதுதான் அறியுந் தொழிலொடு கூடி முப்புடிகட்கிடனுதலா லென்க. அதனை 'அறியுமதுண்மையறி வாகாது.' (உள்ளது நாற்பது–12) என்பதனுனறிக. பொய்யே யாயினும் அவ்வுணர்வுதான் நாமருப மாத்திரமா யுண்மையாற் பொய்யாகிய அணிவகையும் மெய்ப்பொருளாகிய பொன்னைத் தவிர்த்தின்றுமாறு போல் மெய்யுணர் வுருவாகிய அப்பொருளைத்தவிர்த் தின்றும்

ஆதலின் 'உள்ளதலதுள்ளவுணர் வுள்ளதோ' என்றார். இதனை, ஞானமாந் தானே மெய் நானுவா ஞானமஞ், ஞானமாம் பொய்யாமஞ் ஞானமுமே – ஞானமாந் தன்னையன்றி யின்றணி கடாம்பலவும் பொய்மெய்யாம், பொன்னையன்றி யுண்டோ புகல் (உள்ளது நாற்பது—13) என்பதனுணறிக.

உணர்வு, உள்ளதையன்றி வேறுளதா மெனத்தடை செய்யின் அதுதான் மலடிமகன் போலில்லிலதாய் அதனாற் செயற்குத வாதாய்ச் சிறிதும் பயனின்றாய் முடியும் என்க. அன்றியும் மனமுதலாயின் துணை கொண்டல்லது மற்றைப் பொருள்கள் யாவும் அறிபடாதனவாக, அவ்வாறின்றி எவனும், அவற்றுள் யாதனுதவியுஞ் சிறிதுமின்றித் தனதுண்மையைத் தன்னனுபவ மாத்திரத்தா லறிதலால், உள்ள துணர வுணர்வு வேறு வேண்டப் படுவதின்றாம். அதனால் யாதொன் றுள்ளது, அஃதே யுணர்வு; அஃதன்றி உணர்வு வேறின்றாம் எனத் தடைக்கு விடையாம்.

உள்ளன போற்றோற் றுயிருல கீச்சுர
ருள்ள வுருவென் றுரைத்தாய் போற்றி
உள்ள லெழீஇ யொடுங்கு மிடந்தா
னுள்ளமென் றுளப்பொரு ளுரைத்தாய் போற்றி
உள்ளதவ் வுளத்துள தாகலி னுள்ளது
முள்ளமென் றுமென் றுரைத்தாய் போற்றி
உள்ள மெனுமனு பூதி யுண்மையி
னுள்ளமா மென்று முரைத்தாய் போற்றி
உள்ள வுருவன் றுளப்பெயர் பெறுமவ்
வுள்ள பொருளென் றுரைத்தாய் போற்றி
உள்ளத னுணர்வோ டுவற்றி னுணர்வுமவ்
வுள்ளதை யன்றியின் றென்றாய் போற்றி, அதனால்
உள்ளவவ் வெல்லா முளவா மிடமவ்
வுள்ளமே யென்ன வுரைத்தாய் போற்றி
கண்டவர் தாமலாற் கண்டிலா ரியாவது
மெண்ண லசங்கத மென்றாய் போற்றி
உள்ளத் தவிசுறி னல்லதவ் வுள்ளத
னொள்ளொளி காண்பரி தென்றாய் போற்றி
உள்ளாழ்ந் துதித்தல முறினுயி ருருவா
முள்ள லறுமென் றுரைத்தாய் போற்றி, அதனால்

உள்ள வுருவல துருவிலா வுயிர்தா
முள்ள வுருவற் றுளவப் பொருளைக்
கள்ள மனக்கற் பனையா லன்றிமெய்
யுள்ள வுருவா வுள்ளவொண் ணுமையின்
உள்ள பொருளவ் வுள்ளத் தலத்திடை
யுள்ள வுருவற் றுள்ளவவ் வாறே
யுள்ள வுருவற் றுயிருமவ் வுளத்தே
யுள்ளதே யுள்ளலென் றுணர்த்தாய் போற்றி.

ஸ்ரீ ரமணார்ப்பணமஸ்து

---

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# பிழைத் திருத்தம்

| பக்கம் எண் | பாட்டு எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| vii | 1148 | அயர்தியுற் | அயர்தியற் |
| 97 | 970 | லவ்வுகலந் | லவ்வுலகந் |
| 109 | 1125 | காண்புதுதன் | காண்பதுதன் |
| 109 | 1130 | சத்தமுறை | சததமுறை |
| 129 | 1388 | வின்பதிட்டை | வின்பநிட்டை |
| 129 | 1389 | சேர் தசிவ | சேர்ந்தசிவ |
| 130 | 1398 | புன்மைபெனும் | புன்மையெனும் |
| 131 | 1423 | டென்குநகை | டென்குநகை |
| 133 | 1446 | ருன்மநிட்டை | ஞன்மநிட்டை |
| 133 | 1448 | லணர்ததமெனும் | லனர்த்தமெனும் |
| 135 | 1471 | முதாஈவொளிப் | முதாரவொளிப் |
| 137 | 1494 | கற்கிணுமென் | கற்கினுமென் |
| 137 | 1496 | நியாமாய | நியாயமா |
| 137 | 1501 | லவசரபே | லவசரபே |
| 146 | 1606 | சிந்தாந் | சித்தாந் |
| 180 | 2064 | வருணஞான | வருண்ஞான |
| 226 | 2690 | சாதுக்குள் | சாதுக்கள் |
| 264 | 247 | ரிருவிஸன் | ரிருவினை |
| 264 | 252 | திருவருணே | திருவருண் |
| 272 | 553 | பந்தியுட் | புந்தியுட் |
| 282 | 901 | வறவா | வுறவா |
| 290 | 1178 | நோற்றம் | தோற்றம் |
| 304 | தலைப்பு | திரிவகவற் | திருவகவற் |
| 306 | 5 | தலைப்டத் | தலைப்படத் |